சிவமயம்

ஸ்ரீ விசுவேசர் துணை

# ஸ்ரீ காசி நாட்டுக்கோட்டை நகரச்சத்திரம்

## நூற்றாண்டு விழா மலர்

(1863-1963)




ஸ்ரீ காசி நாட்டுக்கோட்டை நகரச்சத்திரம் மானேஜிங் சொசைட்டி.
116, ஷுவேபொவுந்தா (முகல்) வீதி, இரங்கூன்.

உ
சிவமயம்
விசுவேசர் துணை



# ஸ்ரீ காசி நாட்டுக்கோட்டை நகரச்சத்திரம்

# நூற்றாண்டு விழா மலர்

# 1863-1963



சோபகிருது ஆண்டு ஆவணித் திங்கள் 29-ஆம் நாள்

**14-9-1963**



ஸ்ரீ காசி நாட்டுக்கோட்டை நகரச்சத்திரம் மானேஜிங் சொசைட்டி

116, ஷுவேபொவுந்தா (முகல்) வீதி

இரங்கூன்

## நூற்றாண்டு விழா மலர் வெளியீட்டுக் குழு

| | | | |
|---|---|---|---|
| 1. முருகப்பா அன் சன்ஸ் மு. பழ. நடராஜன் செட்டியார் தலைவர், | 115, | ஷுவேபோந்தா வீதி, | இரங்கூன் |
| 2. அருசு. சுப்பிரமணியம் செட்டியார், காரியதரிசி | 105, | ,, | ,, |
| 3, நா. லெ. ராமநாதன் செட்டியார் | 57, | ,, | ,, |
| 4. கண. மெ. நா. சொக்கலிங்கம் செட்டியார் | 61, | ,, | ,, |
| 5. பழ. ஷண்முகம் செட்டியார் | இராமச்சந்திரபுரம் | | |
| 6. சொ. சுப. சுப்பிரமணியன் செட்டியார் | கீமந்தான் | | ,, |

## BIBLIOGRAPHICAL DATA


AUTHOR'S NAME : S. M. L. Lakshmanan Chettiar,
(Somalay, pseud.) b, 1921 (Ed.)

TITLE :

Souvenir to commemorate the centenary of the Founding of the Nattukkottai Chettiar Pilgrims Rest House at Banares.

LANGUAGES : Tamil, English and Hindi.

EDITION : First.

Place of Publication : Madras.

Published By : The Secretary, Centenary Souvenir Committee,
Sri Kasi Nattukkottai Nagara Chatram Managing Society,
116, Shwebontha Street, Rangoon, Burma.

Pages : 312 plus 14 pages of pictures and 3 pages of colour plates.

Size of the Publication : Crown 1 × 4.

Month of Publication : September, 1963.


Brief Indication of Contents : This is a souvenir volume containing messages, history of the growth and development of the Nattukkottai Chettiar Pilgrim Rest House at Banaras and its branches. Articles on Varanasi, Ganges, Tamil Literature, Indo-Burma Relations, Chettiar's contribution to the revival of Hinduism in South India, North India and South East Asian countries are appended. The Souvenir also carries articles on Saiva Siddanta and allied subjects.


Library Classification No.

COLON Q2: 4198. 4452. 3 B, d, N.

DEWEY 294.538.

# பதிப்புரை

ஸ்ரீசி நாட்டுக்கோட்டை நகரச்சத்திரத்தின் நூற்றாண்டு விழா நினைவாக இம்மலர் வெளிவருகிறது. சத்திரத்தைப் பற்றியும் அதன் ஆட்சியைப் பற்றியும் அதனோடு தொடர்புகொண்ட ஏனைய அமைப்புக்களைப் பற்றியும் விரிவான வரலாறுகள் இதில் வெளியிடப் பெறுகின்றன.

இப் பெரு நிறுவனங்களைச் சீருடனும் சிறப்புடனும் நடத்திவரும் நகரத்தார்கள், தமிழ் மரபு சைவ மரபு கைவந்த பழந்தமிழ்க் குடியினர். இவர்களுக்கு அம் மரபுகள் தொன்றுதொட்டு இருந்துவரும் சொத்துக்கள். சைவ சமய மறுமலர்ச்சிக்குப் பேருதவி புரிந்து பொன்றாப் புகழும் நல்லருளும் பெற்றுள்ளனர். இவர்களது செயற்கரிய செயல்கள் சிலவற்றை இம்மலரில் ஆங்காங்கே சுட்டிக் காட்டியுள்ளோம்.

சைவ சித்தாந்தத்தைப் பற்றிய கட்டுரைகளும், காசி கங்கை பற்றிய பல குறிப்புக்களும் இம் மலருக்கு மணம் தருகின்றன.

ஆன்மீகத் தலைவர்களும் அரசியல் அறிஞர்களும், வணிகக் கோமான்களும் வாழ்த்துச் செய்திகள் வழங்கியுள்ளனர். துறவிகளும் தலைசிறந்த கவிஞர்களும் எழுத்தாளர்களும் பத்துப் பல்கலைக்கழகத்தைச் சேர்ந்த பேராசிரியர்களும், கவிதைகள் கட்டுரைகள் நல்கியுள்ளனர். இவர்கள் யாவரும் நமது பாராட்டுக்கு உரியவர்கள்.

இவ் வெளியீட்டில் காணப்பெறும் வண்ணப் படங்களை வரைந்து தந்த ஓவியர் ஆனந்தன், ஏனைய படங்களை எழுதிய ஓவியர்கள் கண்ணுச்சாமி, நந்தி ஆகியோருக்கும் நமது நன்றி உரியது.

கலைக் களஞ்சியத்திலிருந்து சில பகுதிகளை வெளியிட்டுக்கொள்ள ஆசிரியர் திரு. பெரியசாமித்தூரன் அவர்கள் அன்புடன் இசைந்தார்கள்.

இம் மலரை, கண்ணைக்கவரும் வண்ணம் வனப்புற அச்சிட்டுக் கொடுத்தவர்கள், 'ஐடியல் பிரிண்டர்ஸ்'. அந் நிறுவனத்தைச் சேர்ந்த திருவாளர்கள் அரு. பெரியண்ணன், கவிஞர் நாரா. நாச்சியப்பன், வீர. சுப்பிரமணியன் ஆகியோரின் ஒத்துழைப்பும் அல்லென்றும் பகலென்றும் பாராத உழைப்பும் ஈடுபாடும் அச்சக ஊழியர்களின் திறமையும் பொறுப்புணர்ச்சியும் குறிப்பிடத்தக்கது.

அச்சு நகல்களைத் திருத்துவதில் துணைபுரிந்த காரைக்குடி வெ. குழந்தைவேலன் M. SC., (Tech.), அவர்களுக்கும், மலர் வெளியீட்டுத் தொடர்பான ஆட்சிப் பொறுப்பனைத்தையும் நன்கு நிறைவேற்றிய இரங்கூன் நகரவிடுதி மேலாளர் மாநகரி அ. முருகப்ப செட்டியார் அவர்களுக்கும், காரைக்குடி மெ. தியாகராசன் அவர்களுக்கும் சிறப்பான முறையில் நன்றி கூறுவது என் கடமை ஆகும். வெளியீட்டுத் துறையில் பழுத்த அனுபவமுடைய பாரி நிலைய உரிமையாளர் க. அ. செல்லப்பன் அவர்கள் தக்க ஆலோசனைகள் கூறி உதவினார்கள்.

யான் விரும்பியவாறு வரலாற்றுக் குறிப்புகள் பலவற்றை அன்புடன் தெரிவித்து எனக்கு உதவி செய்தவர்கள், காசி நகரச் சத்திரத்தின் மேலாளர்களாக இருந்த காரைக்குடி பெரியகருப்பன் செட்டியார் அவர்கள், நாட்டரசன் கோட்டை அ. பெரி. கண்ணப்ப செட்டியார் அவர்கள், இப்போது காசியில் மேலாளராகப் பணியாற்றிவரும் நாட்டரசன்கோட்டை சு. ப. அ. வெ. சிதம்பரம் செட்டியார் அவர்கள், கல்கத்தா நகரத்தார் ஹவுஸ் மேலாளர் காரைக்குடி அண்ணாமலைச் செட்டியார் அவர்கள், கல்கத்தா தமிழன்பர் முறையூர் அரு. சொ. சொக்கலிங்கம் செட்டியார் அவர்கள் ஆகியோர் ஆவர்.

சத்திரத்தின் வரலாறு இந்தி மொழியிலும் வெளியிடப்பெற்றிருக்கிறது. இதனை மொழிபெயர்த்து உதவியவர்கள் இந்திய அரசாங்கத்து இந்திப் பேராசிரியர் திரு. சந்திரகாந்த முதலியார் அவர்களும் சென்னைப் பல்கலைக் கழகத்து இந்திப் பேராசிரியர் திரு. சங்கரராஜுலு நாயுடு அவர்களும் ஆவார்கள். அச்சு நகல் திருத்தி உதவியவர்கள் விரிவுரையாளர் திரு. கணேஷ் அவர்களும் மு. சித. முத்தையாச் செட்டியார் உயர்நிலைப்பள்ளி ஆசிரியர் திரு. வாசோஜி ராவ் அவர்களும் ஆவார்கள். திரு. V. சிதம்பரம் அவர்கட்கும் எங்கள் நன்றி உரியது.

இம்மலரைப் பதிப்பிக்கவும் இதையொட்டிக் காசியாத்திரை செல்லவும் எனக்கு வாய்ப்பளித்த காசி நாட்டுக்கோட்டை நகரச் சத்திர மானேஜிங் சொசைட்டியாருக்கு வணக்கம் செலுத்திக்கொள்கிறேன். 'என்ன புண்ணியம் செய்தனை நெஞ்சமே' என்றும் 'என்ன மாதவம் செய்தனை நெஞ்சமே' என்றும் எண்ணி இறும்பூதெய்துகிறேன்.

நகரத்தார்கள் மேலும் வளம்பெற்றோங்கி, தெய்வத் திருப்பணிகளை இடையறாது செய்துவர எல்லாம் வல்ல காசி விசாலாட்சி விசுவேசுவரப் பெருமான் தண்ணருள் பொழிவாராக.

சென்னை,
9—9—1963.

'சோமலே'

# உள்ளுறை

பக்கம்

பக்கம்

## இந்திப் பகுதி



## ஆங்கிலப் பகுதி



## வாழ்த்துச் செய்திகள்

# Index to Advertisers



காசி விசுவேசர் கோயில் கோபுரம்
Golden Tower of Visvanath Temple, Varanasi
विश्वनाथ के मंदिर का स्वर्ण-विमान



The holy Varanasi has been a cosmopolitan city where people from different parts of India have come and built up Institutions of public good. The Kasi Nattukkottai Nagara Chatram, Varanasi has been one of the oldest Institutions established by the Chettiars of Madras State. The Institution has been rendering very useful service for about 150 years. They are going to celebrate the Centenary of the Chatram Bhavan built in August 1863. I convey my good wishes and blessings to the Institution for its ever prosperity.

Vibhuti Narain Singh
Maharaja Banaras

Fort Ramnagar, (Varanasi)
April 25, 1963.

F




RAJ BHAVAN
JAIPUR

Camp Mount Abu
Dated June 1,1963

MESSAGE

As a resident of Kashi, I am aware of the activities of the Kashi Nattukkottai Nagara Chatram. This Institution has been taking an active hand in the worship of Bhagvan Vishwanath at Varanasi and the Puja performed by its representatives is a regular daily feature of great solemnity. I wish the Chatram all propperity and trust that it will continue, as it has been doing for the last 100 years, to perform Puja at the Temple . The Chettiars of Nattukkottai are a community which deserves the good wishes of all Hindus for their devotion to Lord Vishwanath.

Sampurnanand

(Sampurnanand)
Governor, Rajasthan

K. KAMARAJ
CHIEF MINISTER OF MADRAS




FORT ST. GEORGE
MADRAS

31-5-1963.

ஆலயத் திருப்பணிகள் செய்வதை சிறந்த கடமையாக நம் முன்னோர் கருதி வந்துள்ளனர். ஆண்டவனை அன்போடு நினைந்து வழிபட்டு அனைவரும் பயனடையும் வகையில் தெய்வக் கைங்கரியங்களைப் பெரியவர்கள் செய்து வந்திருக்கிறார்கள். அந்த வகையில் நாட்டுக்கோட்டைச் செட்டியார்கள் காசியில் கடந்த நூற்று ஐம்பத்திரண்டு ஆண்டுகளாகச் செய்து வரும் திருப்பணிகளைப் போற்றாமல் இருக்கமுடியாது. நகரச் சத்திரத்தை ஏற்படுத்த பூஜா கைங்கரியங்களை முறைப்படி ஆற்றத் தொடங்கி, நூறு ஆண்டுகள் முடிந்துவிட்டன. கோடிக் கணக்கான பக்தர்களின் ஆத்ம திருப்தயைப் பெற்றிருக்கும் நகரச் சத்திர அறநிலையத்தார் நூற்றாண்டு விழா கொண்டாடுவதை அறிய மிக்க மகிழ்ச்சி அடைகிறேன்.

அவர்களின் தொண்டு மேலும் சிறக்க என் இதயங் கனிந்த நல்வாழ்த்துக்கள்.

காமராஜ்

திரு. சோம. லெட்சுமணன் செட்டியார்,
ரெங்கோன் நகர விடுதி,
3-4, பவளக்காரத் தெரு,
சென்னை. 1.



# நூற்றுண்டு விழா வாழ்த்துச் செய்தி

திருமிகு. எம். பக்தவத்சலம் அவர்கள்,
பி.ஏ., பி.எல்.,
அறநிலையத் துறை அமைச்சர்,
சென்னை அரசு.

" புயலார் பொழிற்காசிப் பூங்கோயில் மேய
கயலார் தடங்கணுள் காந்தன்—செயல், ஆவி
உய்யத் துதியார் உதிப்பார் துதிப்பாரேல்
வையத்(து) உதியார் மறுத்து,"

—காசிக் கலம்பகம்,
ஸ்ரீ குமர குருபர சுவாமிகள்.

ஸ்ரீ காசியம்பதியில் நாட்டுக்கோட்டை நகரச் சத்திரத்தின் நூற்றுண்டு விழா, அண்மையில் நடைபெற இருக்கும் செய்தி அறிந்து மிகவும் மகிழ்ச்சி அடைகின்றேன்.

'திரைகடல் ஓடியும் திரவியம் தேடும்' நாட்டுக்கோட்டை நகரத்துப் பெருமக்கள், எங்கெங்குச் சென்றாலும் அங்கங்கெல்லாம் தரும கைங்கரியங்களை மிகுதியாகச் செய்து, நமது தமிழ்ப் பண்பாட்டையும் இந்து சமயத்தையும் வளர்த்துப் போற்றி வரும் சிறப்பியல்பு பெரிதும் உடையவர்களாகத் தொன்று தொட்டுத் திகழ்ந்து வருகின்றனர்.

அவர்கள் செய்துள்ள கோயில் திருப்பணிகளும், ஏற்படுத்தியுள்ள எத்தனையோ பல அறக் கட்டளைகளும் எண்ணில் அடங்காதவையாகும்.

" ஒல்லும் வகையான் அறவினை ஓவாதே
செல்லும்வாய் எல்லாம் செயல் "

எனத் திருவள்ளுவர் கூறியதற்கு ஏற்ப, ஒல்லும் வகையானெல்லாம் அறவினைகள் செய்து மகிழும் நல்லியல்பும் மாட்சிமையும், நகரத்தார்கள் பால் சிறந்து காணப்படுகின்றன.

நம் இந்திய தேசத்தின் தலைசிறந்த புகழ்பெற்ற புண்ணிய க்ஷேத்திரம் ஆகிய ஸ்ரீ காசித் தலத்தில், கடந்த 152 ஆண்டுகளாக ஸ்ரீ விசாலாட்சி யம்பாள் சமேத ஸ்ரீ விஸ்வேஸ்வரப் பெருமானுக்குப் பூஜா கைங்கர்யங்களைத் தொடர்ந்து செய்துவரும் நகரத்தார்களின் செயல் மிகவும் போற்றத் தக்கதாகும்.

ஸ்ரீ விஸ்வேஸ்வரப் பெருமானுக்குத் திருவனந்தல் உச்சிக்காலம் அர்த்தசாமம் ஆகிய முக்காலங்களின் பூஜைகளையும் சுதந்திரமாக என்றும் நடத்திவரும் பூரண அனுமதி பெற்று, அவற்றைச் சாஸ்திர விதிப்படியும் சிறப்பாகவும் நடத்திவரும் தொண்டு, பெரிதும் பாராட்டுதற்குரியது.

1863-ஆம் வருஷம் ஆவணி மாதம் 10-ஆம் தேதி தொடங்கப் பெற்ற ஸ்ரீ காசி நாட்டுக்கோட்டைச் சத்திரம், ஸ்ரீ விஸ்வேஸ்வரர் விசாலாட்சி அன்னபூரணி துண்டி விநாயகர் காலபைரவர் பாதாளேஸ்வரர் நகரேஸ்வரர் நகரேஸ்வரி முதலிய மூர்த்திகளுக்குப் பல திருப்பணிகளும் பூஜா கைங்கர்யங்களும் சிறப்புற நடத்தி வருவதுடன், பிரயாகை அயோத்தி தாடகேஸ்வரம் கயா கோதாவரி பஞ்சவடி முதலிய இடங்களிலும் பல நூறாயிரம் ரூபா மதிப்புள்ள கட்டிடங்களை விலைக்கு வாங்கிச் சாதுக்கள் பிராம்மணர்கள் மாணவர்கள் ஏழைகள் நோயாளிகள் யாத்ரீகர்கள் முதலானவர்களுக்கு உணவளித்து உதவி புரிந்து வரும் தொண்டு, "நீளும் இத் தொண்டின் நீர்மை நினைக்கில் யார் அளக்க வல்லார்?" எனச் சேக்கிழார் சுவாமிகள் பாடுவது போல, மிகவும் வியந்து போற்றிப் புகழத் தகுந்ததாகும்!

"கேயூரம் ஊரக் கிளர்தோள் அகிலேசர்
மாயூரம் ஊரும் ஒரு மைந்தற்குத்—தீயூரும்
அவ்வேலை ஈந்தார்! அடித் தொழும்பு செய்தொழுகும்
இவ்வேலை ஈந்தார் எமக்கு"

எனக் காசிக் கலம்பகத்திற் குமரகுருபர சுவாமிகள் பாடுவது போல, ஸ்ரீ விஸ்வேஸ்வரருக்கு அடித்தொழும்பு பூண்டொழுகும் வேலையாகிய இத் திருத்தொண்டில், இந்தியா பர்மா இலங்கை மலேயா செய்கோன் முதலிய பல பகுதிகளில் வாழும் நகரத்துப் பெருமக்கள் அனைவரும், ஒரு மனப்பட்டும் அன்புடனும் செயலாற்றி வரும் திறனும் மிக்க மகிழ்ச்சியை விளைவிக்கின்றது.

ஸ்ரீ காசி நாட்டுக்கோட்டை நகரச் சத்திரம் இன்னும் பன்னூற்றாண்டுகள் வளர்ந்தோங்கி இனிது நிலைபெற்றுச் சிறப்பதாக! நகரத்துப் பெருமக்களின் சமயத்தொண்டுகளும் தர்ம கைங்கர்யங்களும் மேன்மேற் பெருகி வளர்வனவாக! என எல்லாம் வல்ல ஸ்ரீ விசாலாட்சியம்மை சமேத ஸ்ரீ விஸ்வேஸ்வரப் பெருமானை மனமொழி மெய்களாற் சிந்தித்து வந்தித்து வாழ்த்துகின்றேன்.

"வேதத் துரகர் விரகர் அகிலேசர்
பாதத்(து) உரகப் பரிபுரத்தார்—நாதர் இவர்
சேவடிக் கண்டாரே, திறம்பிழைத்துத் தென்புலத்தார்
கோ, அடிக்கு அண் டாரே குலைந்து"

—காசிக் கலம்பகம்.

உ

# ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு
# ஸ்ரீ சங்கராசார்ய ஸ்வாமிகள் ஸ்ரீமடம்

காஞ்சீபுரம்.

முகாம் இராமேச்வரம் தேதி **24-5-1963**

குழந்தைகளுக்குத் தாய் உணவு அளிப்பாள். உலகு அனைத்திற்கும் தாயாகவும் தந்தையாகவும் விளங்கி குழந்தைகளாகிற எல்லாப் பிராணிகளுக்கும் பரிபூர்ண உணவை ஊட்டிக்கொண்டு அருள் பாலித்து வரும் அன்னபூர்ணியின் அருளால் பரிசுத்தமான கங்கையில் நீராடி புண்ணியத்தை அடைந்து உள்ளம் பூரித்துவரும் பக்தகோடிகளுக்கு உணவு அளித்து வருவது நகரத்தார் செய்துவரும் புண்ணியங்களில் பெரும்புண்ணியமாகும். நகரத்தார்கள் இயற்கையாகவே அறத்தில் ஈடுபட்டு வருகின்றனர். மேன்மேலும் அவர்கள் புண்ணியத்தைப் பெற சிவத் தொண்டிலும் அற வளர்ச்சியிலும் நகரத்தார் சமூகம் பரிபூரணமாக ஈடுபட்டு அம்மையும் அப்பனுமான ஸ்ரீ விசாலாக்ஷி சமேத ஸ்ரீ விச்வநாதர், ஸ்ரீ அன்னபூர்ணி இவர்களது அருளுக்குப் பாத்திரமாகட்டும்.

Dr. C. P. Ramaswami Aiyar
VICE CHANCELLOR
ANNAMALAI UNIVERSITY




" DELISLE "
OOTACAMUND

May 31, 1963

I am glad to learn that in commemoration of the Centenary of the Sri Kasi Nattukkottai Nagara Chatram, a souvenir is being published.

Having visited the Chatram more than once when I was Vice Chancellor of the Banaras Hindu University and having known personally the very useful work that is done by the institution in the way of housing the vast number of pilgrims that visit the holy city and the performance of the Trikala Pooja and other services in the temples, I wish the Chatram all prosperity and the publication of the souvenir all success.

C P Ramaswami Aiyar

C. RAJAGOPALACHARI

60, BAZLULLAH ROAD
TYAGARAYANAGAR
MADRAS-17

29-5-63

நூற்றைம்பத்திரண்டு வருஷங்களுக்கு முன் செல்வம் நிறைந்த காலத்தில் ஆரம்பிக்கப்பட்ட நாட்டுக் கோட்டை நகரச் சத்திரம் காசி க்ஷேத்திரத்தில் இன்றும் நன்றாக நடைபெற்று வருவது பெருமைப் படத் தக்க விஷயம். என்னுடைய மனமார்ந்த ஆசிகள்.

(signature)

உ

சிவமயம்

# முன்னுரை

ஸ்ரீ காசி விசுவேசுவரர்க்குப் பணிபுரிவதற்குத் தோன்றிய ஸ்ரீகாசி நாட்டுக் கோட்டை நகரச்சத்திரம் கட்டப்பெற்று இன்றுடன் ஒரு நூற்ருண்டு முடிவு எய்துகிறது; இரண்டாம் நூற்ருண்டு தொடங்குகிறது.

முதல் நூற்ருண்டின் நினைவாக வெளியிடப்பெறும் இந்த மலரைப் பொது மக்களுக்கு வழங்குவதிலும், காசி விசுவேசுவரர்க்குப் படைப்பதிலும் நாங்கள் பெருமகிழ்ச்சியடைகிருேம்.

சிறப்பு மிக்கதான ஒரு மலரை வெளியிடுவ தென்று 9-4-1962-ல் நமது பொதுச்சபை முடிவு செய்தது. அந்த எண்ணத்தை நிறைவேற்ற அவ்வமயம் கீழ்க்கண்டவர்கள் அடங்கிய மலர்க்குழு தேர்ந்தெடுக்கப் பெற்றது:

1. திருவாளர். முருகப்பா அண்டு சன்ஸ்.
   மு. பழ. நடராஜன் செட்டியார் (தலைவர்)
2. ,, அரு. சு. சுப்பிரமணியன் செட்டியார் (காரியதரிசி)
3. ,, நா. லெ. இராமநாதன்செட்டியார்
4. ,, கண. மெ. நா. சொக்கலிங்கம் செட்டியார்
5. ,, பழ. சண்முகம் செட்டியார்
6. ,, சொ. சுப. சுப்பிரமணியன் செட்டியார்

இந்த நிறுவனத்தார் பல இடங்களில் நடத்திவரும் சத்திரங்களின் வரலாறு களைத் தமிழில் விரிவாகவும், ஆங்கிலத்திலும், இந்தியிலும் சுருக்கமாகவும் வெளியிடலாமென்று மலர்க்குழு கருதியது. இந்தியாவிலும் வெளிநாடுகளிலும் தக்கவர் களிடமிருந்து கட்டுரைகள் பெற ஏற்பாடு தொடங்கப் பெற்றது.

கிளைச்சத்திரங்கள் எல்லாவற்றிற்கும் சென்று அங்குள்ள ஆதாரங் களையும் கணக்குகளையும் பார்த்தும், அத்தலங்களிலுள்ள பெரியவர்களையும் நம் சத்திரத்துடன் தொடர்புள்ளவர்களையும் சந்தித்தும் விவரங்கள் சேகரிக்க வேண்டியிருந்தது. நேரில் சென்று பல குறிப்புகள் திரட்டி, வரலாறுகளை உருவாக்கி, மலரையும் பதிப்பித்துத்தர இத்துறைகளில் பயிற்சியுடைய ஒரு வரைக் கேட்டுக்கொள்வது நலமென்று நினைத்தோம்.

நகரத்தாருடைய நல்வாழ்வில் அக்கறையும், சைவசமயத்தில் மிகுந்த ஈடுபாடும் உடையவரும், "செட்டிநாடும் தமிழும்" முதலிய பல நூல்களை எழுதிப் புகழ்பெற்ற எழுத்தாளருமான "சோமலெ" அவர்களை இந்தப் பொறுப்புகளை ஏற்றுக்கொள்ளுமாறு வேண்டினேம். அவர்களுடைய அரிய உதவி எங்களுக்குக் கிடைத்தது. நாங்கள் விரும்பியவாறே அவர்கள் வடஇந்தியத் தலங்களில் இரண்டு

மாதகாலம் சுற்றுப்பயணம் செய்து, வேண்டும் செய்திகளைக் குறித்து அனுப்பி ஞர்கள். கட்டிடங்களின் படங்களையும் எடுத்து எங்களுக்கு அனுப்பி வைத்தார்கள்.

மலர், மாண்பும் பொலிவும் பெற வாழ்த்துச் செய்தி, கட்டுரை, கவிதை ஆகியவை கிடைப்பதற்கும் விளம்பரங்கள் சேகரிப்பதற்கும் 'சோமலெ' அவர் களும், சென்னை, இரங்கூன் நகரவிடுதி மேலாளரான அ. முருகப்ப செட்டியார் அவர்களும், நாட்டரசன் கோட்டை அ. பெரி. கண. கண்ணப்ப செட்டியார் அவர்களும் பலரை நேரில் சந்தித்தார்கள். கண்ணையும் கருத்தையும் கவரும் வண்ணம் இந்தக் கவினுறு மலர் குறுகிய காலத்தில் வெளிவர எங்களுடன் ஒத்துழைத்த அம்மூவருக்கும், அவர்களுடன் இருந்து வேண்டிய உதவிகளைச் செய்த ஏனையோருக்கும் எங்கள் நன்றி உரியது.

சென்னையில் உள்ள இரங்கூன் நகர விடுதியை நமது மலர்க்குழுவின் அலுவலகமாகப் பயன்படுத்திக் கொள்ளவும், அங்குள்ள பணியாட்களை மலர் வேலையில் ஈடுபடுத்திக் கொள்ளவும் இசைவு நல்கிய இரங்கூன் நாட்டுக்கோட் டைச் செட்டியார்களின் கோவில்கள் தரும பரிபாலன சபையாருக்கு நாங்கள் மிகவும் கடப்பாடுடையோம்.

வாழ்த்துரைகள் வழங்கி எங்கள் பணியை ஊக்குவிக்கும் பெரியார்களுக்கு எங்கள் வணக்கத்தைப் புலப்படுத்திக் கொள்கின்றோம். அப்பெருமக்களுடைய ஆதரவை என்றும் வேண்டுவோம்.

கவிதை, கட்டுரைகள் அனுப்பி இம்மலருக்கு மணம் ஊட்டியுள்ள அறிஞர் களுக்கும், விளம்பரம் தந்து உதவியுள்ள வணிக நிறுவனங்களுக்கும் எங்கள் நன்றி கலந்த வாழ்த்தைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

இந்த வெளியீட்டின் வாயிலாகக் காசித் தலத்தின் பெருமையையும், நகரத்தார்கள் செய்துவரும் சிவத்தொண்டின் சிறப்பையும் அறியும் அன்பர்கள் காசியாத்திரையை மேற்கொண்டு காசி விசுவேசர் திருவருளைப் பெற்று உய்வார் களாக.

தம் முன்னோர்கள் அரிதின் முயன்று தொடங்கியுள்ள தருமங்கள் தழைத் தோங்க, தங்களால் இயன்ற எல்லா உதவிகளையும் செய்யுமாறு நகரத்தார் குலத்துப் பெருமக்களைப் பணிவன்புடன் வேண்டுகிறோம்.

இரங்கூன்,
26-8-1963

மு. பழ. நடராசன் செட்டியார்,
தலைவர்,
மலர் வெளியீட்டுக் குழு.







“ புத்தமுதாம் ஹிந்துமதப் பெருமைதனைப்
பாரறியப் புகட்டும் வண்ணம்,
தத்துபுகழ் வளப்பாண்டி நாட்டினிற்
காரைக்குடியூர் தனிலே சால
உத்தமராந் தனவணிகர் குலத்துதித்த
இளைஞர்பலர் ஊக்கம் மிக்கார்,
உண்மையே தாரகமென் றுணர்ந்திட்டார்
அன்பொன்றே உறுதி யென்பார்
வண்மையே குலதர்ம மெனக்கொண்டார்
தொண்டொன்றே வழியாக் கொண்டார்
ஒண்மையுயர் கடவுளிடத் தன்புடையார்.”

— கவியரசர் சுப்பிரமணிய பாரதியார்.

(“ ஹிந்து மதாபிமான சங்கத்தார் வாழ்த்து ” என்ற பாடலில் )

# இன்று விழித்துவிட்டோம்!

**கவிஞர் கண்ணதாசன்**

ஆன்ற தமிழர் அருங்குணத்தி லேமிதந்து
தோன்றுந் திசையெங்கும் தொழில்புரிந்த காலமுதல்
ஈன்ற மனையரசு, இல்லத்தாள், பெற்றபிள்ளை
யாவும் மறந்து அயலகத்தே தமிழ்வளர்த்தோம்
வண்ணக் கலைவளர்த்தோம்; வரலாறே நாம்சமைத்தோம்;
எண்ணத் தொலையாத எத்தனையோ கோவில்களை(க்)
கண்ணில் இருத்திக் கலையோடு காத்துவந்தோம்.
காசி நகரத்துக் கடவுளரைப் பேசவைத்தால்
காவிரிப்பூம் பட்டினத்தார் கலையுணர்ச்சி தோன்றவரும்!
மாசற்ற பொன்னும் மணிவயிரம் இரத்தினமும்
தூசென்று எண்ணித் தூக்கிக் கொடுத்துவந்தோம்
பண்டைத் தமிழ்மரபைப் பண்போடு காத்துவந்தோம்
அண்டை நிலங்களில்நம் ஆண்டவனை ஊன்றிவைத்தோம்
காசி விசாலாட்சி கவிமதுரை மீனாட்சி
கட்டியுள்ள ஆடைகளும் கழுத்திலுள்ள பொன்னகையும்
சுற்றியுள்ள மண்டபமும் தூக்கிவரும் வாகனமும்
முற்றும் அழியாத மொட்டைக்கோ புரத்தழகும்
அண்ணா மலையில் அமர்ந்திருக்கும் பேரழகும்
ஆக்கிக் கொடுத்தவர்கள் அமர்ந்திருந்து காத்தவர்கள்
நாட்டுக்கோட் டைவளர்த்த நகரத்தார் அல்லேமோ!
பக்திக்குத் தானா பணத்தைச் செலவழித்தோம்
பகுத்தறிவுக் கோவில்களாம் பள்ளிகளும் நாம்சமைத்தோம்!

பல்கலையும் ஆற்றிவரும் வண்ணப்பல் கலைக்கழகம்
செல்வம் வளர்த்துவரும் செட்டிமார் வண்ணமன்றோ ?
வட்டி வணிகன் வளமார் தமிழகத்தில்
கொட்டிக் குவித்ததொரு கோடியிலும் மேலாகும்
அன்று பிறகலைகள் அறியா திருந்தவர்கள்
இன்று புவிமுழுதும் எத்தனையோ தொழில்புரிவார்
பழந்தமிழின் இலக்கியமும், பண்புமிகும் நூலினமும்
இழந்துவிடா திருப்பதற்கு எத்தனையோ நூல்நிலையம்
நாமே நடத்துகின்றோம்! நாட்டறிவை ஏற்றுகின்றோம்
வழக்கறிஞர் நூறு, மருத்துவரோ இருநூறு
வளரும் பொறிஇயலில் மலர்ந்தவரோ நானூறு
கிழக்கும்மேற் கும்அறிந்து, கேட்போர்க்குப் பதிலுரைக்கும்
தத்துவமும் நம்மக்கள் சமுதாயம் கண்டதுண்டு!
பர்மா நிலத்தில் பச்சைவயல் முகங்காட்ட
பச்சை வயலிடையே பச்சரிசி சிரித்திருக்க
அத்தனையும் பொன்னாக ஆக்கிப் படைத்தவர்கள்
நம்மவரே என்றால் நாட்டோர் மறுப்பதில்லை.
ஆனாலும் நம்மவர்கள் அடக்கத்தால் இன்றுவரை
தாமாகத் தம்மைத் தலைதூக்கிக் கொண்டதில்லை.
இன்று விழித்துவிட்டோம்! எல்லோரும் ஒன்றுபட்டோம்
ஒன்று சமுதாயம் என்றுவரும் நாள்வரையும்
தத்தமது சாதியினைச் சாதியினர் போற்றுமட்டும்
சபையில் முழக்கிடுவோர் சாதிக்கே வாழுமட்டும்
நாமும் நமதுகுலம் நலங்காணப் போரிடுவோம்,
நகரத்தார் நலஉலகை நாளைக்கே நாம்சமைப்போம்!

---


ஸ்ரீ காசி நகரச் சத்திரம்
நூற்றாண்டு மலர்
ஹரித்துவார்
புதுடில்லி.
அயோத்தி
பிரயாகை
வாரணாசி
கயா
தாடகேஸ்வரம்
காளிகாட்
கல்கத்தா
நாசிக்பஞ்சவடி
பம்பாய்
கோதாவரி
சென்னை
காசி நகரச் சத்திரத்தின்
கிளைகள்

# காசி முதலிய தலங்களிலுள்ள நகரச் சத்திரங்களின் வரலாறு

தாளாண்மை என்னும் தகைமையால் தழைத்து விளங்கும் இனம் நகரத்தார் இனமாகும். "செட்டி கப்பலுக்குச் செந்தூரான் துணை" என்று நம்பி அலைகடல் கடந்து, அல்லல்களைப் பொருட்படுத்தாது, அரும் பொருள் தேடுவது இவர்களது இயல்பு.

"ஆகா றளவிட்டி தாயினுங் கேடில்லை
போகா றகலாக் கடை"

என்னும் திருவள்ளுவர் வாக்கைப் பின்பற்றி, பொருள்தனைப் போற்றி வாழ்வர்.

வீட்டினிற் செட்டாக வாழ்ந்திடினும், திருப்பணிகளில் அளவு கடந்து செலவு செய்யும் தன்மை நகரத்தாரிடம் நிலவி வருகிறது. 'செல்வன் கழலேத்தும் செல்வமே செல்வம்' என்னும் அருள் மொழியின் பொருளை யுணர்ந்து நகரத்தார் பெருமக்கள் அறப்பணி ஆற்றி அனைவரின் போற்றுதலுக்கும்உரியராக இருந்து வருகின்றனர். இதனாலேயே, 'குல முயர, நகருயர, நாடுயர உழைக்கின்றார்' என்று இவர்களைப் பாட்டுக்கொரு புலவன் பாரதி பாடியுள்ளான்.




நகரத்தார்களின் அறச் செயல்களுக்கு மணிமுடியாய் விளங்குவது காசியில் அவர்கள் சிறப்பாயும் செம்மையாயும் செய்து வரும் தெய்வப் பணியாகும். வட இந்தியாவில் பிற தலங்களிலுள்ள அறநிலையங்களும் காசி நகரச் சத்திரமும் ஒரே ஆட்சியின் கீழ் இருந்து வருகின்றன. காசி யாத்திரையாக வலம் வரும்பொழுது இத் தலங்கள் அமைந்துள்ள முறைப்படி வரிசைப்படுத்தி ஆங்காங்குள்ள நிலையங்களின் வரலாறுகளைக் கூறுவோம்.

## நாசிக்-பஞ்சவடி

நாசிக்கும் பஞ்சவடியும், திருச்சியும் திருவரங்கமும் போல ஓராற்றின் இரு கரைகளில் அமைந்தவை. நாசிக் ஒரு மாவட்டத்தின் தலை நகரம்; மகாராஷ்டிரத்தின் இதயம் போன்ற நகரம்; வீர மராத்தியர்கள் இந்நகரைத் தங்களுடைய பழமைக்குச் சான்றாகக் கொள்ளுகின்றனர்.

நாசிக்குக்கு எதிர்க் கரையில் உள்ளது பஞ்சவடி. பஞ்சவடி என்ற சொற்றொடருக்கு ஐந்து ஆலமரங்கள் என்று பொருள். இந்த ஆலமரங்கள் இராமாயண வரலாற்றுத் தொடர்பு உடையவை.

நகரத்தார்கள் 100 ஆண்டுகளுக்கு மேலாக இந்தத் தலத்துடன் தொடர்புகொண்டிருக்கிறார்கள். இங்கு ஒரு சத்திரம் கட்ட



உ

**A. M. M. MURUGAPPA CHETTIAR**

52/53, Jehangir Street
Madras-1.

ஹிந்து தர்மத்தின் நிலைக்களனாய், புனித க்ஷேத்திரமாக விளங்கும் காசியம்பதியில் ஸ்ரீ விச்வேஸ்வரருக்கு தென்னாட்டு சம்பிரதாய விதிப்படி பூஜா கைங்கரியம் செய்யும் சிவத்தொண்டை நாட்டுக்கோட்டை நகரத்தார் மக்கள் 152 ஆண்டுகளாகச் செய்துவருகின்றனர் என்பதை எண்ணிப் பார்க்கும்போது மனம் பூரிப்படைகிறது. சாமானிய முறையில் ஆதியில் ஆரம்பிக்கப்பட்ட இத்தொண்டு காலப்போக்கில் விரிவடைந்து காசியம் பதியைத் தவிர பிரயாகை, அயோத்தியா, பஞ்சவடி முதலிய பல க்ஷேத்திரங் களில் யாத்ரிகர்கள் தங்க வசதிகளுடனும் ஏற்பாடுகள் அமைத்து, பூஜை திருப்பணிகளுக்கும் வகை செய்து ஈசன் அருளால் எவ்விதக் குறைவும் இன்றி நடைபெற்று வருவது மகிழ்ச்சிக்குரியது. இவ் விரிவான ஏற்பாடுகள் சீரிய முறையில் ஆரம்பிக்கப்பட்டு ஒரு நூற்றாண்டு காலம் ஆகிறது என்பதை நினைத்தால் மனம் களிப்பெய்துகிறது. இதையொட்டி ஒரு சிறப்பு மலர் வெளிவருவதைக் கேட்டு மகிழ்ச்சியடைகிறேன்.

தெய்வ வழிபாட்டில் நமது சமூகத்தினருக்குள்ள ஆழ்ந்த பற்று இயற்கையானது. சிவபூஜை மூலமும், ஆலயத் திருப்பணிகள் மூலமும், நாம் ஒப்பற்ற மகிழ்ச்சிகொண்டு ஆத்ம திருப்திபெற்று சாந்தியடைகிறோம். ஏற்கனவே நிறுவியுள்ள கட்டளைகளைப் பராமரிப்பதுடன் புதுப்புதுக் கட்டளை களையும் அமைத்து வருகிறோம். தெய்வத் தொண்டுடன் சமூகத் தொண்டையும் நமது சமூகம் ஆற்றிவருகிறது.

ஒரு நூற்றாண்டு கால அளவில் நகரத்தார் மக்களின் சரித்திரம் பெரிய பெரிய மாறுதல்களை அடைந்துள்ளது. வெளிநாடுகளில் அவர்களுக்கிருந்த வாணிபத் தொடர்புகளும் செல்வாக்கும் வசதிகளும் பெருகி வளர்ந்த காலம் இருந்தது. திருப்பணிகளும் விரிவடைந்து வளம்பெற்று நடத்தப்பட்டன. பிற்காலத்தில் ஏற்பட்ட சூழலில் வாய்ப்புகள் குறைந்து வசதிகளும் சுணங்கத் தொடங்கின. எனினும் மாறுபட்ட சூழ்நிலையில் அவ்வப்போது தோன்றிவரும் புதிய வாய்ப்புக்களைப் பயன்படுத்திக்கொண்டு நமது சமூகத்தினர் தங்கள் உயர்பணியைத் தொடர்ந்து நடத்திவருகின்றனர் என்பது பெருமைப்பட வேண்டிய நிலைமையே ஆகும். நமது நாட்டில் இப்போதுள்ள சமூக வளர்ச்சிக் கட்டத்தில் தருமக் கட்டளைகளை முக்கியமாகக் கவனித்துப் பேணுதல் மிகவும் அவசியம். குறைகளுக்கு இடங்கொடாது, பரிபாலன நடைமுறைகளில் எவ்வித வழுக்களும் புகாமலும் விழிப்புடன் பராமரித்தல் அவசியம். சமூகத் தேவைகளுக்கேற்ப திருப்பணிகளுக்கு இணங்கிச் சம்பந்தப்பட்ட புதிய நற்பணிகளையும் சந்தர்ப்பங்களுக்கும் வசதிகளுக்கும் ஏற்றவாறு மேற் கொள்ளல் நலன்தரும்.

பொருளீட்டல் எவ்வாறு முக்கியமோ அவ்வாறுதான் அதை நல்வழி களில் சமூக முன்னேற்றத்திற்காகச் செலவழிப்பதும். அறப்பணிகளும் அப்படியே. நமது நகரத்தார் சமூகத்தினருக்கு சிவப்பணியிலுள்ள பக்தியும் சிரத்தையும் நிரந்தரமானதாகையால் அவர்களுக்கு எவ்விதக் குறைவும் வராது என்பது என்னுடைய திடமான நம்பிக்கை. திருப்பணிகளைக் குறைவின்றி நடத்திவரும் ஸ்ரீகாசி நாட்டுக்கோட்டை நகரச்சத்திரம் மானேஜிங் சொஸைட் டிக்கு என்னுடைய மனமார்ந்த பாராட்டுதலைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன். இத்தெய்வத்தொண்டு நீடூழி சிறப்புடன் வளம்பெற்று நடைபெற்றுக்கொண்டு வர ஸ்ரீ காசி விச்வேஸ்வரர் அருள்புரிவாராக.

அ. மு. மு. முருகப்ப செட்டியார்.



அன்னபூரணி கோயில், காசி.

Annapurana Temple, Varanasi.

**अन्नपूर्णि मंदिर, काशी**



விசாலாட்சி கோயில், காசி.

Visalakshi Temple, Varanasi. (Built by Nattukkottai Chettiars)

**विशालाक्षी मंदिर, काशी**



வேண்டும் என்ற கருத்து, பம்பாயில் வியாபாரம் செய்துவந்த நகரத்தார்களுக்கு ஏற்பட்டதாகவும், 1863 அளவில் சிலர் இங்கு வந்ததாகவும், மராத்தியர்களில் வயதானவர்கள் சொல்லக் கேள்விப்பட்டதாக, நாராயண அந்த்ருட்கர் என்ற நகரத்தார் பண்டா என்னிடம் கூறினார். இவருக்கு வயது 72. இவருடைய தகப்பனார் பாலாஜிசங்கர் (1848-1913) என்பவரும் நகரத்தாரின் பண்டாவாக இருந்திருக்கிறார்.

நகரச்சத்திரம் பஞ்சவடியில் பஞ்சவடித் தெருவில் மேற்குப் பார்த்த கட்டடம். இது ஆற்றிலிருந்து ஒரு பர்லாங்குக்கு மேல் ஒன்றரை பர்லாங்குக்குள்ளும், இராமர் கோயிலுக்குச் சமீபத்திலும் அமைந்தது. சீதா குகை, பஞ்சவடி இரண்டும் சத்திரத்துக்குச் சமீபமாக உள்ளன. இவ்வளவு பொருத்தமான இடத்தைத் தேடி வாங்கினவர்களை எவ்வளவு பாராட்டினாலும் பொருந்தும். கோதாவிரியில் வெள்ளம் சில சமயங்களில் வருவது உண்டு. அப்போது சிருங்கேரி சங்கர மடம் முதலிய பல சத்திரங்களில் கோதாவிரி நீர் உட்புகும். ஆனால் நகரச்சத்திரம் ஒருகாலும் பாதிக்கப் படுததில்லை. காரணம், இது மேடான இடத்தில் இருப்பதாகும்.

நகரச்சத்திரம் உள்ள கட்டடம் சுமார் 1865 அளவில் தீக்சித் பண்டா என்பவரிடமிருந்து 800 ரூபாய்க்குப் பம்பாய் நகரத்தார்களால் வாங்கப்பட்டதாகத் தெரிகிறது. பிறகு, ஏறத்தாழ 8,000 ரூபாய் செலவில் அந்தக் கட்டடம் புதுப்பிக்கப்பட்டது. அதற்காகச் செட்டிநாட்டிலிருந்து கொத்தர், தச்சர், கொல்லர் வரவழைக்கப்பட்டதாகவும் கேள்விப்பட்டேன். 1867 ஜனவரி 21உ சத்திரம் இக் கட்டடத்தில் பணியாற்றத் துவங்கியது. இது, இந்தக் கட்டட வாசலில் நிலைக்கதவுக்கு மேல் உள்ள கல்வெட்டில் குசராத்தியிலும் மராத்தியிலும் பொறிக்கப்பட்டிருப்பதிலிருந்து தெரிகிறது. தமிழில் “நகர மடம்” என்று இந்தக் கல்வெட்டில் எழுதப்பட்டிருக்கிறது. இந்தக் கல்வெட்டுக்கு மேற்கே, சுவரில் பதித்த பளிங்குக்கல்லில் இந்தியில் “ஸ்ரீ தண்டாயுதபாணி சுவாமி மந்திர்” என்றும் தமிழில் “நாட்டுக் கோட்டை நகரச்சத்திரம்” என்றும் எழுதப் பட்டிருக்கின்றன.

இந்தக் கட்டடம் முதலில் கோயில் வீடாக மட்டுமே இருந்து வந்தது. இப்போது கோயில் வீடாகவும் நகரவிடுதியாகவும் இருந்து வருகிறது. இது காலி இடமும் மண்டபங்களும் உடையது. இந்தக் கட்டடத்தின் இன்றைய மதிப்பு, இடம் உள்பட, ரூ. 30,000.

இதில் தண்டாயுதபாணி சுவாமி கோயில் இருக்கிறது. இங்கு பழநியாண்டவர், இடும்பன் திருவுருவங்களும் அவற்றுக்கு எதிரில் மயில் திருவுருவங்கள் இரண்டு பிரதிட்டை செய்யப்பட்டிருக்கின்றன. இந்தக் கோயிலுக்குச் சுற்று மதில் உண்டு. எனவே பிரகார



## பஞ்சவடிக்கு அருகே

பஞ்சவடிக்கும் நாசிக் இரயில் நிலையத்துக்கும் இடையே காந்தி நகர் என்ற பகுதியில் இந்திய அரசாங்கத்தின் மிகப்பெரிய அச்சகம் சில ஆண்டுகளாக இயங்கி வருகிறது. இதைத் தவிர, ‘செக்யூரிட்டி பிரஸ்’ என்ற அச்சகமும் இருக்கிறது; இதில்தான் இந்தியாவில் செலாவணியாகும் நோட்டுக்கள் யாவும் அச்சிடப்படுகின்றன.

ஜோதிலிங்கத் தலங்களுள் ஒன்றுன திரியம்பகம், பஞ்சவடிக்கு அருகே இருக்கிறது. இங்கு, மகாசிவராத்திரியன்று தேவகோட்டை அரு. அரு. குடும்பத்தார் லகுருத்ர அபிஷேகம் செய்து வருகிறார்கள்.

திரியம்பகத்தில்தான் கோதாவிரி ஆறு தோன்றுகிறது.

நாசிக்கின் உற்பத்திகள் சுவை மிகுந்த திராட்சையும் மணம் நிறைந்த வெங்காயமும்.

மாக வந்து வழிபட வசதியாக இருக்கிறது. இதற்கு அருகே பஞ்சலோக விநாயகர் திருவுருவம் இருக்கிறது. இந்த விக்கிரகம் செட்டி நாட்டில் செய்து இங்கு கொண்டுவரப்பட்டது. வள்ளி தெய்வானையோடு கூடிய சுப்பிரமணியர் படமும், நவக்கிரகப் படமும் இந்த விநாயகருக்குப் பக்கத்தில் இருக்கின்றன. தண்டாயுதபாணிக்கு கந்தர் சஷ்டி, திருக்கார்த்திகை, தைப்பூசம் ஆகிய மூன்று திருவிழாக்கள் நடைபெறுகின்றன. இவற்றுள் தைப்பூசம்தான் சிறப்பாகக் கொண்டாடப்படுகிறது. தைப்பூசச் செலவு பம்பாய் நகரத்தார் சமூகத்தால் ஏற்றுக்கொள்ளப்படுகிறது. நாள்தோறும் காலை 9-30க்கும் மாலை 7-30க்கும் பூசை நடைபெறுகிறது. காலையில் கோதாவிரி தீர்த்த அபிஷேகம், பால் அபிஷேகம், அன்ன நைவேத்தியம், கற்பூர நைவேத்தியம் நடைபெறுகின்றன. மாலையில் பால் நைவேத்தியமும் தீபாராதனையும் உண்டு. பழநியாண்டவர் விக்கிரகத்தைப் பிரதிட்டை செய்தபோது அதை ஸ்தாபிக்க, திருவண்ணாமலைப் பெரிய குருக்கள் இங்கு வந்ததாகக் கேள்வி.

தைப்பூசத் திருவிழாவில் பூசத்தன்று பிராமணர் சுமார் 1 0 பேருக்கும் மறுநாள் சுமார் 100 பேருக்கும் சாப்பாடு செய்விக்கப்படுகிறது.

தைப்பூசத்துக்கு இந்தக் கோயில் நகைகள் காசியிலிருந்து கொண்டுவந்து தண்டாயுதபாணிக்கு அணிவிக்கப்படுகின்றன.

எந்த நாளிலும் எந்த நேரத்திலும் மராத்தியரும் ஏனைய மொழியினரும் இங்கு வந்து தண்டாயுதபாணியையும் விநாயகரையும் வழிபட்டு மணியடித்துச் செல்லுகின்றனர்.



ooooooooooooooooooooooooooooooooo

பார்புகழும் காசிவளர் விசுவ நாதன்
பங்கயச்செங் திருவடிகள் போற்றி ஏத்திச்
சீர்பெருக விசாலாட்சி யருளைப் பெற்று
சிந்தையினி லென்னாளும் மகிழ்வு கொள்ள
நேர்நின்று காக்குமன்ன பூரணித்தாய்
நெஞ்சில்நிலை பெறுதுண்டி விநாயகர்; பேர்
ஆர்வமொடு துதிக்கவருள் வயிரவர்நம்
அனைவரையும் காக்கவெனப்
பணிந்துவாழ்வோம்.

**மு. நம்பெருமாள்**

ooooooooooooooooooooooooooooooooo

சுப்பிரமணியசுவாமி என்றும் முருகன் என்றும் தண்டாயுதபாணி என்றும் தமிழ் மக்கள் வழிபடும் இறைவனுக்குக் கார்த்திகை நாட்களில் சிறப்பான விழாக்கள் நடைபெறுவதால் வட இந்தியர்கள் இந்த இறைவனை கார்த்திகேயர், கார்த்திக் ஸ்வாமி என்று சொல்லுகிறார்கள். பஞ்சவடியில் இந்தக் கோயிலையும் சத்திரத்தையும் கார்த்திக் சுவாமி மந்திர் என்ற பெயரால்தான் எல்லோரும் குறிப்பிடுகிறார்கள். அப்படிச் சொன்னால்தான், இடத்தை அடையாளம் காண்பிப்பார்கள்.

## புது மடம்

இதற்கு நயாமட் என்றும், செட்டி தர்ம சாலை என்றும் பெயர். இது நகரச்சத்திரம் உள்ள தெருவிலேயே எதிர் வரிசையில் நான்கு கட்டடங்களுக்கு அப்பால் இருக்கிறது.

இப்பொழுது சத்திரம் உள்ள வீடு கோயில் வீடாக இருந்ததால் நகரத்தார் யாத்ரீகர்கள் இறங்குவதற்கும் தைப்பூசத்தில் பிராமணர்களுக்கும் ஏழைகளுக்கும் சாப்பாடு போடவும் வசதியாக, பம்பாய் நகரத்தார்கள் புது மடத்தை ஏற்படுத்தினர். அந்தக் கட்டடத்தை 1905இல் ஒரு வண்ணானிடமிருந்து ரூ. 1,500 வாங்கி, சீர்திருத்தங்கள் செய்தார்கள். இதில் பஞ்சமுகலிங்கம் ஒன்று இருக்கிறது.

இந்த லிங்கத்துக்குத் தினமும் காலை 9-30 மணி அளவில் ஒரு காலப்பூசை நடைபெறுகிறது. மகா சிவராத்திரி அன்று லகு ருத்ராபிஷேகம் செய்யப்படுகிறது.

இக் கட்டிடத்தின் மதிப்பு ரூ. 50,000. இதில், ஒரு பகுதி போஸ்ட் ஆபீசுக்கு வாடகைக்கு விடப்பட்டிருக்கிறது.

இந்தக் கட்டடத்தின் ஓரத்திலுள்ள சந்து யாரைச் சேர்ந்தது என்று பக்கத்து வீட்டுக்காரர்களுக்கும் நகரத்தார்க்கும் நாசிக் ஜூனியர் டிவிஷன் ஜாயின்டு சிவில் ஜட்ஜ் கோர்ட்டில் ரெகுலர் சிவில் நம்பர் 335-57 நம்பர் வழக்கும் அதன் பேரில் நாசிக் எக்ஸ்ட்ரா அசிஸ்டண்டு ஜட்ஜ் கோர்ட்டில் அப்பீலும் நடைபெற்றன. இவற்றில் 19-10-1959-இல் கீழ்க் கோர்ட்டிலும் 28-8-1961இல் அப்பீல் கோர்ட்டிலும் முடிவு கூறப்பெற்றன. 2 தீர்ப்புக்களும் நகரத்தார்களுக்கே சாதகமாகச் சொல்லப்பட்டன. நகரத்தார்களின் சார்பாகச் சாட்சி சொன்னவர்களை நம்புவதாகவும் அந்தத் தீர்ப்புக்களில் கண்டிருக்கிறது.

நகரத்தார்களுக்காக 2 பண்டாக்கள் இருக்கிறார்கள். இவர்கள் பெயர் 1. நாராயண பாலம்பட் அந்த்ருட்கர், 2. பாபு சவுத்தே.

இவர்கள் நகரத்தார்களுக்கு சங்கல்பம், சிரார்த்தம் முதலியன செய்துவைக்கின்றனர்.

பஞ்சவடி இராமர் கோயிலில் 1942 வரை நகரத்தார்கள் அகண்ட தீபம் போட்டு வந்தனர். அதற்கு நாள்தோறும் எண்ணெய் கொடுத்து வந்தனர்.

1942க்கு முன் பஞ்சவடி கபாலீசுவரர் கோயிலில் பால் அபிஷேகத்துக்கு தினசரி பால் கொடுத்து வந்திருக்கிறார்கள். தீபம் போட்டு வருகிறார்கள்.

உ
முருகா

பஞ்சவடி
பிலவ, ஆவணி 6.
22—8—1961

இளம்பூரணன் இன்னருளால் இன்று இங்குவந்து நகரமடாலயத்தில் தங்கினேன். பூஜை உணவு முதலிய சகலவகைக்கும் அனுகூலமாக இருந்தது. "சான்றோர் கவியெனக் கிடந்த கோதாவிரியினை வீரர் கண்டார்" என்று கம்பநாடர் பாடியருளிய கோதாவிரியை அடியேனும் கண்டு களித்தேன்.

மடம் யாத்ரீகர்கட்கு மிக்க வசதியாக அமைந்துளது. தரும குணசீலர்களான நகர தணவணிகர்களுடைய அறம் போற்றுதற்குரியது.

மடாலயத்தில் திரு. கோபாலசாமி அவர்கள் நல்ல முறையில் கவனித்து மடத்தின் வளர்ச்சியில் கண்ணும் கருத்துமாக இருப்பது பாராட்டுதற் குரியது. வாழி மடாலயம்.

அன்பன்,
**கிருபானந்தவாரி.**
ஆசிரியர்,
"திருப்புகழமிர்தம்"
சென்னை.



## பிரயாகை

அலகாபாத் இரயில் சந்திப்பிலிருந்து 4 மைல் தொலைவிலும் அலகாபாத் சிட்டிக்கும் காசிக்கும் இடையே செல்லும் சிறிய (மீட்டர் கேஜ்) இரயில் பாதையில் உள்ள தாராகஞ்சு இரயில் நிலயத்திற்குச் சமீபத்திலும் தாராகஞ்சு மோரியில் நகரச் சத்திரம் கட்டப்பட்டிருக்கிறது. கங்கை, யமுனை, சரசுவதி ஆகிய மூன்று ஆறுகளும் கூடும் திருவேணி சங்கமத்துக்கு அண்மையில் இருப்பதால் இந்த இடத்தில் சத்திரம் ஏற்பட்டிருக்கிறது. இந்தச் சத்திரத்துக்குரிய வீடும் இடங்களும் 22-7-1891, 4-4-1901, 19-3-1913 ஆகிய தேதிகளில் மொத்தம் ரூ. 5,825-க்கு வாங்கப் பெற்றன. இவற்றுள் 1825 ரூபாய்க்கு வாங்கிய ஒரு வீடு 1960-ல் ரூ. 5,000-க்கு விற்கப்பட்டது. பிற இரண்டு இடங்களில் தேவைக்கு ஏற்ப மாற்றியமைத்துக் கட்டப்பட்டு சத்திரம் இரு பகுதிகளாக இருக்கிறது. நந்தவனம் பெரும்பாலும் அழிந்துவிட்டது.

கோயில் என்பதே சிதம்பரம். அங்கு குடிகொண்ட இறைவன் அம்பலக்கூத்தன். தமிழகத்துக்குப் பெருமை தரும் இந்த நடராச மூர்த்தியின் திருவுருவத்தை நகரத்தார்கள் பிரயாகையில் நிறுவியுள்ளனர்.

இந்தச் சத்திரத்தில் விகாரி ஆண்டு தை மாதம் முதல் தேதி இரங்கூன் நகரத்தார்கள் நடராசர், சிவகாமி அம்மன், மாணிக்க வாசகர் விக்கிரகங்களை எழுந்தருளச் செய்திருக்கின்றனர். இரண்டு வேளைப் பூசை உண்டு. வெள்ளிக்கிழமைகளிலும் திங்கட்கிழமைகளிலும் நகரத்தார் பெயருக்கு அஷ்டோத்ர அர்ச்சனை செய்யப்பெறுகிறது.

பல்வேறு நிலையிலுள்ள மக்களும் கங்கையில் நீராட வருகிறார்கள். அவ்வாறு, வர இயலாதவர்கட்கு ஏனையோர் கங்கை நீரைக் குடங்களிலும் செம்புகளிலும் எடுத்துச் செல்லுகின்றனர். மரணத்தின் எல்லையிலும் மனிதனின் கண்ணிமைகளிலும் நாவிலும் ஒரு துளி கங்கை நீரை ஊற்றும் வழக்கம் பல பகுதிகளில் உண்டு.



காசி நகரச் சத்திரத்துக்கும் நகரத்தார்கள் வேண்டுகோளுக்கிணங்க இராமேசுவரம் முதலிய தலங்களுக்கும் இங்கிருந்து பிரயாகைத் தீர்த்தம் அனுப்பப்பட்டு வருகிறது.

## தொல்லை தீர்ந்தது!

காசியில் நகரத்தார் கட்டியுள்ள நகரேசுவரர் கோவிலுக்கு அருகே ஒரு வங்காளியின் வீடு இருந்தது.

வங்காளிகளுக்கு மீன் என்றால் 'உயிர்'. பருப்பில்லாத் திருமணம் தமிழ்நாட்டில் இல்லை; மீனில்லாத் திருமணம் வங்காளத்தில் இல்லை.

நாள்தோறும் வங்காளி மீனை உண்டு, மீன் எலும்புகளை வீதியில் எறிந்து வந்தார். சிவன் கோயில் வாயிலில் மீன் துண்டுகள் கிடப்பதைக் கண்டு நகரத்தார் மனம் வருந்தினர். எவ்வளவோ முயன்றும் அதை அவர்களால் தடுக்க இயலவில்லை.

இறுதியாக, வங்காளியின் வீட்டை நகரத்தார் விலைக்கு வாங்கி அதைக் காசி நகரச் சத்திரத்தின் உடைமையாக்கினர். வங்காளி வீட்டை விட்டு அப்புறப்படுத்தப்பட்டார். மீன் தொல்லையும் தீர்ந்தது!



நகரேசுவரர் கோயில், காசி. கும்பாபிஷேகத்தன்று எடுத்த படம்.
Scene at Nagareswar Temple, Nattukkottai Chatram, Varanasi taken during Kumbabishekam.
काशी में कुम्भाभिषेक के समय नागेश्वर मंदिर के नाट्टुक्कोट्टै सगाय का दृश्य



காசி நகரச்சத்திரம், வெளித்தோற்றம்.

Front View of the Nattukkottai Nagara Chatram, Gudolia, Varanasi.

नाट्टुक्कोट्टै नगर सराय, काशी



## அயோத்தி

இராமர் பிறந்த தலமாதலால் அயோத்தி புனிதமாகக் கருதப்படுகிறது. அயோத்தி இரயில் நிலையத்திலிருந்து இரண்டு மைல் தொலைவில் நகரச் சத்திரம் இருக்கிறது. இது பைசாபாத் நகரிலிருந்து சரயு ஆற்றங்கரைக்குச் செல்லும் பெரியசாலையில் துளசிதாஸ்பூங்காவுக்கு அருகே இருக்கிறது. கட்டிடம் பெரிது. இரண்டு யாத்திரைக்கட்டுகளுடன் கூடியது. உறுதியாகவும் கட்டப்பட்டது, சத்திரம் நல்ல முறையில் இருந்து வருகிறது. நந்தவனமும் இருக்கிறது. சத்திரத்தின் வெளிப் பகுதி சில கடைகளுக்கு வாடகைக்கு விடப்பட்டிருக்கிறது.

1883 முதல் 1942 வரை இங்கு அன்ன தானம் நடைபெற்று வந்தது.

சத்திரத்தில் இராமர் கோவில் இருக்கிறது இதற்கு நாள்தோறும் இரண்டு காலப் பூசை உண்டு. அயோத்தியில் நூற்றுக்கணக்கான இராமர் கோவில்கள் இருந்தாலும் இந்த விக்கிரகம்தான் மிக அழகாக வடிக்கப்பெற்றிருக்கிறது. இங்கு கோவில் கொண்டுள்ள இராமர், தம் கையில் கோதண்டம் வைத்திருப்பதால் இங்குள்ள மக்கள் இவ்விக்கிரகத்தை, கோதண்டராமர் என்று அழைக்கிறார்கள். இராமர், சீதை, இலக்குமணர், பரதர், சத்துருக்கர், அநுமன் திருவுருவங்களும் உள்ளன. நகரத்தார்கள் பல ஆண்டுகள் இவ்வூரில் திருவிழாக்களை நடத்தி வந்தனர். அதற்காகச் செய்யப்பெற்ற தேர் இன்றும் உள்ளது. இராமநவமி 9 நாட்களிலும் சத்திரத்திலிருந்து நாகநாதர் கோயிலுக்கு பூசை, அபிடேக, நைவேத்தியப் பொருள்கள் அனுப்பி வருகின்றனர். அந்நாட்களில் அம்மாஞ்சி கோயில் இறைவன் எழுந்தருளி வரும்போது நம் சத்திரத்தின் முன்பாக இன்றும் தீபாராதனை செய்யப்பெறுகிறது.

## வாழ்த்துச் செய்தி

நாட்டையும் காத்து நன்னகரங்களையும் ஆக்கிக் காக்கும் நம் மரபினரின் நல்லதோர் எண்ணத்தால் அன்றுதொட்டு இன்றுகாறும் பழம் பெருமைகொண்ட நம் பாரத நாட்டின் முத்தி நகரங்களிலும் மற்றும் சீர்சால் நகரங்களிலும் அளவிட முடியா அறநிலையங்கள் தோன்றி நலம் பல நல்கிவருவது நாமறிந்ததே. அத்தகைய நலம் பல நல்கும் காசிமா நகரில் முத்தென ஒளிரும் நம் சத்திரமே முதன்மையானது எனின் மிகையாகாது. அச் சத்திரம் நாட்டுக்கும் நமக்கும் ஒரு நூற்றாண்டு காலமாகத் தான் ஆற்றிய செயலை அறிவுறுத்தும்போது நம்மை அறியாமலே பூரிப்பும் பெருமதிப்பும் எழுகின்றன. அந்நேரத்தில் இச் சத்திரத்தை உருவாக்கிய உத்தம குணஞ்சேர் உயர் பெருஞ் செல்வர்களை மனம் வாழ்த்தத் துடிக்கின்றது. இவ்வுலகம் நிலைபெறுவதே அத்தகைய தனக்கென வாழாப் பிறர்க்குரியாளரால்தான். ஆகவே அத்தகைய அறம்புரி நெஞ்சினராகிய நாட்டுக்கோட்டை நகரத்தார் புகழ் வாழ்க! அவர்கள் அன்பால் பிறந்த காசிமா நகர் நாட்டுக்கோட்டை நகரத்தார் சத்திரம் புகழ் மணக்க நலம் பயக்க விசுவநாதரின் மாசிலாக் கருணையால் உலகுள்ளளவும் நின்று நிலவுவதாகுக என வேண்டி வாழ்த்துகின்றேன்.

சென்னை
30-8-63

மு. சித. முத்தையா



## அரித்துவாரம்

புண்ணிய ஆருகிய கங்கை, இமயமலையி லிருந்து தவழ்ந்து பூமியைத் தொடும் இடம் அரித்துவாரம் எனப்படும் எழில்மிக்க நகரம் ஆகும். இது உத்தரப்பிரதேசத்தின் வட கோடியில் அமைந்தது. கும்பமேளா எனப் படும் திருவிழா இங்கு 12 ஆண்டுகளுக்கு ஒரு முறை 40 இலட்சம் மக்கள் கூட்டம் கூடிக் காணும் வகையில் நிகழ்கிறது.

நூற்றுக்கு மேற்பட்ட சத்திரங்கள் மார்வாரிகளால் கட்டப்பட்ட மாட மாளிகை களில் நடைபெற்று வருகின்றன. பெருமாள் செட்டி சத்திரம் கங்கைக் கரையில் அழகுற அமைந்திருக்கிறது. அரித்துவாரத்தில் கங்கை நீர் குளுமையாயும் மிகத் தூய்மையாயும் இருக் கிறது. இரு கரைகளும் நன்கு கட்டப்பட்டு, கால்வாய் போன்ற காட்சியை, கங்கை நல்குகிறது.

கங்கையில் ஆயிரக்கணக்கான இலைப் படகுகள் (தொன்னைகள்) மிதக்கின்றன. இவை ஒவ்வொன்றிலும் ஒரு சுடர் விளக்கு மின்னுகிறது. நம்பிக்கைக்கும் நன்றிக்கும் இவை அடையாளமாக விளங்குகின்றன. ஒவ்வோர் இலைப் படகிலும் செவ்வந்தியும் மல்லிகையும் ரோசாப் பூக்களும் நிரம்பி யுள்ளன. அகல் விளக்குப்போன்று இவை மிதந்து செல்லும் காட்சி இனிய காட்சியாகும்.

1932-இல் இங்குள்ள பாய் நாதாசிங் தர்ம சாலையின் சில பகுதிகளை வாடகைக்குப் பிடித்து, நகரச் சத்திரம் நடைபெற்று வந்தது. அரித்துவாரம், ரிஷிகேஷ், பத்ரிநாத், கேதார் நாத் யாத்திரைகளுக்குச் செல்லுபவர்களுக்கு இந்தச் சத்திரம் மிகவும் பயன்பட்டு வந்தது. 1942-இல் பர்மாவிலிருந்து பணம் வருவது தடைப்பட்டதும், வாடகைக் கட்டிடம் காலி செய்யப்பட்டது.

அரித்துவாரத்தில் சொந்தக் கட்டிடம் கட்டுவதற்கு மனையிடம் வாங்குவதென்று முடிவு செய்ததாகவும் இரங்கூனில் கட்டிடம் கட்ட நகரத்தார் சிலர் பண உதவி செய்ய வாக்களித்திருப்பதாயும் ஸ்ரீ காசி நாட்டுக் கோட்டை நகரச்சத்திர மானேஜிங் சொசைட்டி யின் பவ ஆண்டு (1936-37) அறிக்கையில் 5-ம் பக்கத்தில் குறிப்பிடப்பட்டிருக்கிறது. இந்தத் தீர்மானத்தை நிறைவேற்றிவைப்பதற்குள் ஜப்பான் படையெடுப்பு ஏற்பட்டு, இந்தியா—பர்மா போக்குவரத்துத் துண்டிக்கப்பட்டது.



## அரித்துவாருக்கு அருகே

அரித்துவாரிலிருந்து ஏறத்தாழ 15 மைல் தொலைவில் இருக்கிறது ரிஷிகேஷ். இங்கே தான் மலைப்பிளவுகள் வழியாகக் கங்கையாறு சமவெளியை அடைந்து லட்சுமண ஜூலா என்ற ஊஞ்சல் பாலத்தின் அருகே அகன்ற பேராறுகக் காட்சி தருகிறது. தொன்று தொட்டுத் துறவிகள் வாழ்ந்த ரிஷிகேசில் தான் சுவாமி சிவானந்தர் அமைத்த ஆசிரமம் இருக்கிறது. எதிர்க்கரையில் கீதா பவனம் என்ற மாளிகை உளது. பிரார்த்தனை, யோகம், பூசை, பசனை, தியானம் ஆகியவை நிகழ்கின்றன. குன்றுகள் சூழ்ந்து நீரோட்டமும் மிகுந்து இயற்கை யெழில் நிறைந்த பகுதி ரிஷிகேஷ்.

# நூற்றாண்டு விழா ஆண்டில் காசி நகரச் சத்திரத்தில் அன்றாடச் செயல்கள்



காலை

5-00 விசுவேசர் கோயிலில் இருந்து அலங்காரப் பொருள்களை வாங்கி வருவது.

,, நகரேசுவரர் கோவிலில் சங்கு ஊதி, நடை திறக்கிறது.

6-30 ,, ,, கொலு மேளம் வாசிப்பது.

6-30 பெட்டியடி முன்பாக சாஸ்திரியார் வந்திருந்து பஞ்சாங்கம் படிப்பது.

10-30 நகரேசுவரர் கோவிலில் காலைச்சந்தி

11-00 விசுவேசர் கோவிலுக்குச் சம்போ புறப்பாடு

11-15 சத்திரத்தில் அன்னதானம்

12-30 சம்போ, விசுவேசர் கோவிலிலிருந்து திரும்பி வருதல்

மாலை

4-00 வேதாந்த ஆச்சாரியா யோகானந்த கிரி அவர்கள் வியாச பாரத உபன்னியாசம் (சில சமயம் ஹிந்தி பாடம், பிரம சூத்திர வியாக்கியானம், பகவத் கீதை முதலிய நிகழ்ச்சிகள் நடைபெறுகின்றன)

7-30 நகரேசுவரர் கோவிலில் சாயங்கால அல்லது பிரதோஷ பூசை

8-00 முதல் 9 வரை பஜனை, தேவார திருவாசகப் பாடல்கள் படித்தல்

8-00 விசுவேசர் கோவிலுக்குச் சம்போ புறப்பாடு

9-00 நகரேசுவரருக்கு அர்த்தசாமப் பூசை முடிந்து, சங்கு ஊதி நடை சாத்துகிறது.

10-30 விசுவேசர் கோவிலிலிருந்து சம்போ திரும்பி வருவது.

குறிப்பு :

மேலே குறிப்பிட்டவை வேனிற் கால நேரங்கள். குளிர்காலம், பனிக்காலம் முதலிய காலங்களில் அரை மணி அல்லது ஒரு மணி தாழ்த்தி எல்லா நிகழ்ச்சிகளும் நடைபெறும்.





# காசி (வாரணசி) நகரம்


சாரநாத்

புத்தர் கோயில்கள்
காஸிப்பூர்ப் பாதை
காஸிப்பூர்ச் சாலை
வருணை ஆறு
காசிநகர் ரயில் நிலையம்
கண்டோன்மண்ட்
வடமொழிப் பல்கலைக்கழகம்
கண்டோன்மெண்ட் ரயில்வே ஸ்டேஷன்
நகரச்சத்திர நந்தவனம்
ராஜ் கட்டம்
மாளவியா பாலம்
அலகாபாத் சாலை
காசிவித்யாபீடம்
பாரதமாதா கோயில்
காசிவிசுவநாதர் கோயில்
கௌதோலியாசந்திப்பு
பஞ்சகங்கை கட்டம்
விசாலாட்சி கோயில்
மணிகர்ணிகைக்கட்டம்
நகரச்சத்திரம்
அசுவமேதயாக கட்டம்
அரிச்சந்திரக் கட்டம்
கிராண்ட் டிரங்க் ரோடு
அசி ஆறு
கங்கை ஆறு
ராம்நகர் கோட்டை
காசி இந்துப் பல்கலைக்கழகம்
பிர்லா கட்டிய விசுவநாதர் கோயில்

# காசி

சிவத் தலங்களிலெல்லாம் நிகரற்று விளங்கும் காசியம்பதியில் கங்கைக் கரையிலும் சரி, நகரெங்கிலும் சரி ஆயிரக்கணக்கான சிவலிங்கங்கள் உள்ளன. கண் பார்வை படுமிடமெங்கும், ஒரு சிவலிங்கத்தைக் காணலாம். புதிய சிவன்கோயில் அமைக்கக் காசி லிங்கம் வரவழைப்பது மரபு.

இவ்வாறு சிவலிங்க வடிவமாய்த் திகழும் காசியில் கோயில் கொண்டுள்ள விசுவேசர்க்கு நாளும் பூசை செய்யும் பேறு பெற்ற ஒப்பற்ற நிறுவனம் காசி நகரச் சத்திரம்.

காசிமா நகரின் வாழ்விலும் வரலாற்றிலும் இச் சத்திரம் முக்கியமான பங்கு கொண்டிருக்கிறது.

நகரச் சத்திரம், விசுவேசர் கோயிலுக்கு அருகேயுள்ள குதோலியா சந்திப்பையடுத்து அமைந்த கற் கட்டிடமாகும்.

5-8-1863இல் கோஜாயி ஹரிதயான்கிரி, 1866-இல் கிருஷ்ணய்ய சாஸ்திரி, 1873-இல் ஈரலால், 1874-இல் கின்னுகிரி கொசாயி, காந்தாகிரி கொசாயி, 1877-இல் பாபுமியா, 1884-இல் பத்திக்கீநாத் கோசுவாமி, 1894-இல் விசுவநாத கோசுவாமி, துர்க்க பிரசாத், 1895-இல் மன்னுபட்டு பிராமண என்பவர்களிடம் இடங்களும் கட்டிடங்களும் வாங்கப்பெற்றன. இவற்றை, தக்கவாறு புதுப்பித்து, பெரியதொரு மாளிகையாக நகரத்தார் அமைத்துள்ளனர். இன்று, இம்மாளிகையின் மதிப்பு நான்கு இலட்சம் ரூபாய்க்கு மேற்பட்டதாகும்.

இது தவிர, பசுமடமும் நந்தவனமும், 8—12—1924-இல் காசிநாத பட்டாச்சாரி என்ற வங்காளியிடம் வாங்கிய (இப்போது இடிந்துவிட்ட) வீடும் நகரச்சத்திரத்துக்கு உடைமையாக உள்ளன.

இச் சத்திரம் நெடுங்காலம் கல்கத்தா நகரத்தார்களின் மேற்பார்வையிலும், 1925 முதல் இரங்கூன் நகரத்தார்களின் மேற்பார்வையிலும், 1934 முதல் மானேஜிங் சொசைட்டியின் ஆட்சியிலும் நடைபெற்று வருகிறது.

சத்திரம் 1941 வரை மிகச் சிறப்பாக நடைபெற்றது. சில சமயம் நாள்தோறும் 300 பேருக்கு அன்னதானம் அளிக்கப்பெற்றது. அபிடேகத்துக்குப் பல குடங்கள் பால் அனுப்பப்பெற்றன. விசாலாட்சி கோயில் திருவிழாக்களுக்கு இறைவியைக் காசிநகரின் சில தெருக்களில் நகரத்தார் ஊர்வலமாக எடுத்துச் சென்றனர். இதற்கென, அரசாங்கத்தார் சிறப்பான முறையில் பல ஏற்பாடுகளைச் செய்தனர்.

1942-இல் பர்மாவிலிருந்து பணம் வருவது தடைப்பட்டது. இருப்பினும், அறச் செயல்கள் நின்றுவிடவில்லை. அன்னதானத்தின் அளவு மட்டும் சுருக்கப்பெற்றது. பூசைகளும் ஏனைய செயல்களும் செம்மையாக நடைபெற 1943-இல் நன்கொடை வசூலிக்க ஒரு குழு அமைக்கப்பெற்றது.

சுபானு ஆவணி 24-இல் 9-9-1943-இல் காரைக்குடி அறுபத்துமூவர் குருபூசை மடத்தில் நகரத்தார்கள் கூடி, காசி நகரச் சத்திரத்தின் தற்காலிக நிர்வாகத்துக்கு ஒரு குழுவை அமைத்தனர்.

தேவகோட்டை அள. சுப. பழ. சுப்பிரமணியன் செட்டியார் அவர்கள் இக் குழுவின் தலைவராயும் காரைக்குடி மெ. செ. ச. சிதம்பரம் செட்டியார் அவர்கள் செயலாளராகவும் கானாடுகாத்தான் மு. சித. மு. சிதம்பரம் செட்டியார் அவர்கள் பொருளாளராகவும் இருந்து சத்திரம் தொடர்ந்து பணியாற்ற உதவினர்.

இந்த 100 ஆண்டுகளில் பல்லாயிரக்கணக்கான நகரத்தார்களும் ஏனைய சமூகத்தினரும் இச் சத்திரத்தில் தங்கியுள்ளனர். சத்திரத்தில் தங்கியவர்களுள், தமிழ்நாட்டு முதலமைச்சர் காமராசர் அவர்களும் ஒருவர் ஆவார். சத்திரத்துக்கு அடிக்கடி வருகை புரிந்து, அதன் ஆட்சியைப் போற்றிய பெருமக்கள் மிகப் பலர்; இவர்களுள் குறிப்பிடத்தக்கவர் இப்போதைய இந்தியக் குடியரசின் தலைவர் டாக்டர் இராதா கிருஷ்ணன் அவர்கள்.

நகரத்தார்கள் காசிச்சத்திரத்துக்காகவும் அதன் கிளைகளுக்காகவும் இதுவரை மூலதனச் செலவாகவும் நடைமுறைச் செலவாகவும் ஐம்பது இலட்சம் ரூபாயை வாரி வழங்கியுள்ளனர். இந்தத் தொகை முழுவதும் நகரத்தார்களால் மட்டுமே கொடுக்கப்பெற்றது. காசி நகரச்சத்திரத்துக்கும் அதனோடு இணைந்த நிறுவனங்களுக்கும், நகரத்தார் அல்லாதாரிடமிருந்து நன்கொடை பெறுவது கிடையாது.

நகரச்சத்திரத்தின் ஆட்சியில் அவ்வப்போது ஏற்படும் சிக்கல்கள் பலவாகும். குறிப்பாக 1942-43-இல் பொருளாதார நெருக்கடியும் இருந்தது. ஆயினும், ஒரு வேளைகூட, சத்திரத்தின் ஆக்க வேலைகள் தடைப்பட்டதில்லை. நகரத்தார் தம் கடமையில் தவறவும் இல்லை. காசி விசுவேசர் திருவருளே இதற்குக் காரணம் ஆகும். இதுவரை இச் சத்திரம், 'அவன்' அருளாலேயே இனிது நடைபெற்று வந்திருக்கிறது. வருங்காலத்திலும் இறைவன் திருவருளை நம்பியே நகரத்தார்கள் தொடர்ந்து இந்த அறங்களை மேற்கொண்டு வருகின்றனர்.



துண்டி விநாயகர்

## பசுமடம்

விசுவேசருக்கு அபிடேகம் செய்ய தூய்மையான பால் குறித்த நேரங்களில் கிடைப்பதற்கான ஓர் ஏற்பாட்டையும் நகரத்தார்கள் செய்திருக்கிறார்கள். சொந்தமாகவே பசுமடம் தொடங்கினர். அதற்குரிய இடத்தை நகரச் சத்திரத்திற்கு அருகேயே வாங்கி 15-1-1897 இல் கட்டிடம் கட்டி முடித்தனர். இதில், சொந்தமாகப் பசுக்களை வைத்துப் பால் கறந்து அபிடேகம் நடத்தி வந்தனர்.

இரண்டாம் உலகப் போரின் விளைவாக, சத்திரத்தின் ஆட்சி முறையிலும் நடைமுறையிலும் வரவு செலவிலும் பல மாறுதல்கள் ஏற்பட்டன. இவற்றால், விலைப்பால் வாங்கி, அபிடேகத்துக்கு அனுப்பப் பெறுகிறது. சத்திரத்துக்குப் பால் விற்பனை செய்யும் வணிகர் தங்கள் பசுக்களைக் கட்டிக்கொள்ள, பசுமடத்தைப் பயன்படுத்தி வருகின்றனர்.

## நந்தவனம்

காசி விசுவேசருக்கு நாளும் நறுமலர்கள் அனுப்ப நந்தவனம் ஒன்றை நகரத்தார்கள் நடத்திவருகின்றனர். 1894-ஆம் ஆண்டில், சிக்ரா பகுதியில் பெரியதோர் இடம் வாங்கி நந்தவனம் அமைக்கப்பெற்றது. மீண்டும் 1902-லும் 1905-லும் புதிதாக இடங்கள் வாங்கி நந்தவனம் விரிவாக்கப்பெற்றது. நந்தவன வேலைக்கெனத் தனியே ஆட்கள் நியமிக்கப் பெற்றுள்ளனர். குறித்த நேரங்களில் மலர்கள் அங்கிருந்து அனுப்பப்பெறுகின்றன.

இரங்கூன் நாலறை நகரத்தார்கள் அந்நகரில் நடத்திய நந்தவனத்துக்குரிய நிதியை, 1955-இல் காசிநகரச் சத்திரத்துக்குக் கொடுத்து உதவினர்.

## காசி விசுவநாதர் கோயில்

இங்கு உச்சிக்காலத்திலும் அர்த்தசாமத்திலும் நகரத்தார்கள் பெயருக்கு ஒவ்வொரு நாளும் அஷ்டோத்ர அர்ச்சனை நிகழ்கிறது.

விசுவேசருக்கு உஷத் காலத்தில் பத்தாஸ் மிட்டாயும், உச்சிக் காலத்தில் பருப்புப் பொங்கலும், அர்த்தசாமத்தில் சர்க்கரைப் பொங்கலும் நகரச்சத்திரத்திலிருந்து அனுப்பப்பெறும் பொருள்களைக்கொண்டு கோயில் மடைப்பள்ளியில் செய்து நைவேத்யமாகச் செய்யப்படுகின்றன. இவ்வாறே ஏகாதசி நாளில் அல்வாவும் சோமவார உச்சிக்காலத்தில் பூரியும் நகரத்தார் உபயமாக உள்ளன.

நகரச் சத்திரத்து மகமையிலிருந்து விசுவேசர் கோயில் பண்டாக்களுக்கு ரூபாய்க்கு ஒரு அணாவும், விசாலாட்சி கோயில் பண்டாக்களுக்கு ரூபாய்க்கு ஒரு அணாவும் கொடுக்கப்பட்டு வருகிறது.

உஷத்கால பூசை, பண்டாக்கள் மட்டுமே இருந்து நடத்தப்படுகிறது. அவர்களுடைய இசைவு பெற்றே, பொதுமக்கள் உஷத்கால பூசையைக் காண இயலும். இந்த இசைவு, நகரச்சத்திரத்தின் வாயிலாக முன்னரே அறிவிக்கும் நகரத்தார்களுக்குப் பண்டாக்களால் எளிதில் வழங்கப்பெறுகிறது. இது, நகரத்தார்க்குரிய தனிச் சிறப்புக்களில் ஒன்றாகும்.


காலபைரவர்

## சம்போ

சம்போ என்பது சமஸ்கிருதச் சொல். இச்சொல் சிவபெருமானைக் குறிக்கும்.

காசிவிசுவநாதர் கோயிலுக்கு நாள்தோறும் 2 முறை பூசை, அபிஷேக, அலங்காரப் பொருள்கள் நகரச் சத்திரத்திலிருந்து அனுப்பப்படுகின்றன.

காலை 10-45க்கும் இரவு 8-30க்கும் இப்பொருள்கள் சத்திரத்திலிருந்து முறைப்படி எடுத்துச் செல்லப்படுகின்றன. "சம்போ சம்போ சங்கர மகாதேவா" என்று சொல்லிக்கொண்டு, நகரச்சத்திரத்து வேலையாட்கள் அவற்றைக் கோவிலுக்குக் கொண்டுபோகின்றனர். அப்போது வழியிலுள்ள மக்கள், கடைக்காரர்கள் ஆகியோர் சம்போவைப் பார்த்துத் தலைவணங்குகின்றனர்.

நகரச் சத்திரத்தின் மாடியிலுள்ள சுப்பிரமணியர் படத்தின் முன்பாகச் சாம்பிராணிக் கலசத்தை வைத்துப் பிறகு கீழே பாதாள ஈசுவரர் கோவிலில் இருந்து தசாங்கம் போட்டு நகரேசுவரர் கோவிலை வலம் வந்து, சம்போ புறப்படும். இக்கோலம் கண்டார் அனைவரும் பக்தியுடன் வழிபடக்கூடிய காட்சியாகும்.

உச்சிக்காலப் பூசைக்குக் கொண்டுபோகப் பெறும் பொருள்களாவன :

வாசனைத் தைலம்
தேன்
பன்னீர்
ஊதுபத்தி
சூடம்
அத்தர்
தேசிச்சீனி (பழுப்புச் சர்க்கரை)
திருநீறு
சந்தனம்
முக்களை வில்வம் 16
அறுகம்புல்
பூ மாலை—3
பால் (ஆறேகால் படி)
தயிர்
பஞ்சாமிர்தம்

பிரயாகைக் கங்கை
பூணூல் (யக்ஞோபீதம்)
அரிசி (மங்கள அட்சதை)

அர்த்தசாமப் பூசைக்கு மேற்கண்ட பொருள்களுடன் முக்கனி வில்வம் 108-ம் சவ்வாது, பட்டு, நாகஆபரணம், பால் அண்டா, பூக்கூடை, வெண்சாமரை, சோடச உபசார ஆரத்திப் பொருள்கள் ஆகியவை வெள்ளிப் பாத்திரங்களில் கொண்டுபோகப்படுகின்றன. அவ்வமயம், இரவு 8 மணிக்கு நிகழும் அபிஷேக மான உஷத் காலம் என்னும் திருவனந்தலுக்கு வேண்டிய பொருள்களும் கொண்டுபோய்க் கொடுக்கப்படுகின்றன.

அன்னபூரணி கோயிலுக்கு அபிஷேகப் பொருள்களும் குங்குமமும் ஒரு டலியாவில் வைத்துக் கொண்டுபோய்க் கொடுக்கப்படு கின்றன. (டலியா—வட்டமான தூக்குச்சட்டி)

அபிடேக, பூசைப் பொருள்களை இந்துஸ் தானி பிராமணர்கள்தான் தூக்கிக்கொண்டு போவது வழக்கம். அதற்காக, அவர்கள் நால்வரை நகரச் சத்திரத்தில் சம்பளச் சிப்பந்திகளாக நியமித்திருக்கிறார்கள்.

இவர்கள் தவிர, உச்சிக்காலத்தில் ஓர் ஆளும், அர்த்தசாமத்தில் ஆறுபேரும் உடன் போய் உபரிப் பொருள்களை எடுத்துச் செல்லு கின்றனர்.

யாழின் இனிமையில் தானே மயங்கிக் கிடந்தவர் திருநீலகண்ட யாழ்ப்பாணர்; அச் சீரிய இசைக் கருவியைப்பற்றி ஆராய விபுலானந்த அடிகளுக்கு உறுதுணையாய் இருந்தவர்கள் நகரத்தார்கள். தமிழருக்குச் சிறப்பாக உள்ள பிறிதோர் இசைக் கருவி நாதசுரம். ஷனாய் வாத்தியமே மங்கள வாத்தியமாகத் திகழும் வட இந்தியாவில் நாதசுரத்தின் புகழை நிலைநாட்டியிருப்பவர்கள் நகரத்தார்கள் ஆவர். உச்சிக்காலம், அர்த்த சாமம் ஆகிய நகரத்தார்கள் அபிடேகம் செய்யும் இந்த இரண்டு வேளைகளில் மட்டும் நகரச்சத்திரத்து மேளகாரர்கள் மேளம் வாசித்து வருகிறார்கள்.


அன்னபூரணி

இந்த அபிடேகக் காலங்களில் நகரத்தார் களுக்கு அர்ச்சனை செய்வதற்கு ஒரு அத்தியான பட்டரை நகரச்சத்திர அலுவலர் நியமித்திருக் கிறார்கள். அவர், பூசை வேளைகளில் காசி விசுவநாதர் கோவிலுக்கு வந்து தயாராக இருப்பது வழக்கம். எவ்வளவு பேர் வழிபட வந்திருந்தாலும் நகரத்தார்களுக்குச் சிறப்பான முறையில் மரியாதை செய்வது கோவில் பண்டாக்களின் பழக்கம் ஆகும். அர்த்தசாமப் பூசைக்குச் சிங்கார பூசை என்று பெயர். காசி விசுவநாதரை வழிபடும் மக்கள் எல்லோரும் இந்தப் பூசையைக் காண்பதையே முக்கிய மான கடமையாகவும் பெறற்கரிய பேருகவும் கொண்டிருக்கின்றனர்.

கடைகள் வழியாகச் சம்போ அர்த்தசாமத் திற்குச் சென்று திரும்பியதும் வேனிற் காலத் தில் கடைகளை அடைப்பதும், குளிர்காலம் பனிக்காலங்களில் சம்போ கோவிலுக்குச் செல்லும்போது கடைகளை அடைப்பதும் நடை முறையாக இருந்து வருகிறது. இவ்வகையில் பார்க்கும்போது, காசிநகர் வணிகர் தம் வாழ்வை வகைப்படுத்துவது நகரத்தார்களின் சம்போவேயாகும்.

இதிலிருந்து குறித்த நேரத்தில் சம்போ அனுப்பப்படுவதும் தெரியவரும். பஞ்சாப் மெயில் தவறினாலும்கூட, நகரத்தார் சம்போ நேரப்படி வரத்தவறுவதில்லை என்பது பழமொழி. 1942-ஆம் ஆண்டில் வெள்ளை யனே வெளியேறு என்ற இயக்கம் நடை பெற்று, காசிமாநகரில் கலகங்கள் நிகழ்ந்தன. ஊரடங்குச் சட்டம் போடப்பெற்றது. அப் போதும்கூட, விதிவிலக்குப்பெற்று, சம்போ உரிய நேரத்தில் சென்றுவந்தது; இது வரலாற்றில் குறிப்பிடத்தக்கது.

## குளிர்காலச் சட்டை

ஐப்பசி மாதம் வசந்த பஞ்சமியிலிருந்து மாசி மாதம் சிவன் இராத்திரி வரை, குளிர் காலமாக இருப்பதால் விசுவேசருக்குக் குளிர் காலச் சட்டை (மக்மல் பட்டு) அணிவிக்க நகரத்தார்கள் கட்டளை ஏற்படுத்தி அவ்வாறு நடைபெற்று வருகிறது.

## மடைப்பள்ளி

விசுவேசர்க்கு நாக ஆபரணம், மேற்படி சொர்ணக்கிரீடம், பள்ளியறைக்கு வெள்ளிக் கட்டில் ஆகியவை நகரத்தார்களால் செய்யப் பெற்றிருக்கின்றன. விசுவேசர் கோவில் மடைப் பள்ளியும் நகரத்தார்களால் கட்டிக்கொடுக்கப் பெற்றதே ஆகும். நைவேத்தியம் வைப்பதற்கு உள்ள நாற்காலிகள், கருவறையைச் சுற்றி நான்கு திக்குகளிலும் போடப்படும் திரைகள் ஆகியவையும் நகரத்தார்களின் உபயமே. நைவேத்தியத்துக்கும் தீபத்துக்கும் வேண்டும் பொருள்கள் யாவும் ஒவ்வொரு நாளும் நகரச்சத்திரத்திலிருந்து விசுவேசர் கோவிலுக்கு அனுப்பப்பெறுகின்றன. அபிடே கத்திற்குரிய கங்கை நீர் வைப்பதற்குத் தாமிர அண்டா, கோபுரத்தின்மீது மெர்க்குரி விளக்கு ஆகியவையும் நகரத்தார்கள் திருப்பணிகளே.

பிரதோஷ நாட்களில் விசுவேசர் கோயிலில் மாலை 5 மணிக்குப் பிரதோஷ பூசை நடைபெறும். அந்தப்பூசைக் காக, பூ பால் நீங்கலாக ஏனைய பூசைப் பொருள்கள் யாவும் கொண்டுபோகப்படு கின்றன. இவை தவிர காப்பரிசி செய்வதற்காக அரிசியும் வெல்லமும் நகரச் சத்திரத்திலிருந்து அனுப்பப் பெறுகின்றன.

பள்ளியறைக் கட்டில் அங்குள்ள ஏனைய வெள்ளிச் சாமான்கள் யாவும் நகரத் தார்களால் மகாவீர் பிரசாத் பண்டாவிடம் ஒப்புவிக்கப் பெற்று விசுவேசர் கோயி லில் இருந்து வருகின்றன.



விசாலாட்சி

# விசாலாட்சி கோயில்

ஸ்ரீ காசி விசாலாட்சி அம்மன் கோயில் நகரத்தார்களால் கட்டப் பெற்று அவர்க ளுடைய நிர்வாகத்திலேயே இருந்துவருகிறது. இக்கோயில் கட்டப்பெற்றது 1893ஆம் ஆண்டு அளவில் என்று தெரிகிறது. இக்கோயிலுக்கு 1908இல் பிலவ ஆண்டு தை 25இல் கும்பாபி டேகம் செய்து வைக்கப்பெற்றது. விசாலாட்சி அம்மனுக்குத் தங்க விக்கிரகமும் வெள்ளித் திருவாசியும் செய்யப்பெற்றுள்ளன. இந்த அம்மன் மிகுதியான ஆற்றல் பெற்றது.

இக்கோயிலில் உள்ள பிற திருவுருவங்க ளாவன—சிவலிங்கம், தண்டாயுதபாணி, விநாயகர், சண்டிகேசுவரர், நவக்கிரகங்கள்.

உற்சவம்—நவராத்திரி.

மகாசிவராத்திரியன்று 4 கால அபிடேகம் உண்டு.

உற்சவ விக்கிரகர்—விசாலாட்சி அம்மன். இந்த மூர்த்திக்குப் பௌர்ணமிதோறும் அபி டேகம் உண்டு. நவராத்திரியில் வெள்ளி அங்கியும் தங்கக் கவசமும் அணிவிக்கப்பெறும். நவராத்திரி கடைசி நாளில் அதாவது மகார் நோன்பு (விஜயதசமி) அன்று, மூலத் தானத்தில் தங்க விசாலாட்சி எழுந்தருளி யிருக்க, உற்சவமூர்த்தியாகிய விசாலாட்சி அம்மன் குதிரைவாகனத்தில் கோவிலுக்குள் வலம்வந்து அம்பு விடும்.

## நாடோறும் நடைபெறும் பூசை

காலை 10-30 மணிக்கு காலசந்தி, மாலை 6 மணிக்கு சாயரட்சை. உச்சிக்காலத்துக்கு நகரச்சத்திரத்திலிருந்து பால், தயிர், தேன், பஞ்சாமிர்தம், பன்னீர், பழுப்புச்சீனி, சந்தனம் விபூதி, குங்குமம், அத்தர், பூ, நெய்விளக்கு ஆகியவை அனுப்பப்பெறுகின்றன.

தேவி மகாத்மியப் பாராயணம் ஒரு சாஸ்திரியாரால் நாள்தோறும் மாலை 5 மணி அளவில் செய்யப்படுகிறது.

செவ்வாய்க் கிழமைகளிலும் வெள்ளிக் கிழமைகளிலும் சாயரட்சையில் மேளம் வாசிக் கப்படுகிறது. விசாலாட்சி கோயில் திருப் பணிக்காகச் சுபகிருது ஆண்டு தை, மாசி, பங்குனி சோபகிருது ஆண்டு சித்திரை மாதங் களில் இரங்கோனிலும், பர்மாவின் பிற பகுதி களிலும் நன்கொடை வசூலிக்கப் பெற்றது.

# காசி நகரச்சத்திரத்திலுள்ள கோவில்கள்

## 1. பாதாள ஈசுவரர் கோயில்

இந்தக் கோவிலில் 4 சிவலிங்கங்களும் ஒரு நந்தியும் ஒரு பாவை விளக்கும் உள்ளன.

சத்திரத்தின் ஒரு பகுதி நகரத்தார்கள் விலைக்கு வாங்குமுன் ஹிந்துஸ்தானி கோஷாயி சாதுக்கள் மடமாக இருந்தது. அந்த மடத்தில், பெருமதிப்பிற்குரிய துறவி ஒருவர் சமாதியடைந்தார். அவ்விடத்தில், சிவலிங்கங்கள் பிரதிட்டை செய்யப்பெற்றன. இந்த லிங்கங்களுக்குப் 'பாதாள ஈசுவரர்' என்ற பெயர் நிலவிவருகிறது. பாதாள ஈசுவரரின் பெருமையே, நகரச் சத்திரம் அடைந்துள்ள பெருமுன்னேற்றத்திற்குக் காரணம் என்று நகரத்தார்கள் நம்புகிருர்கள்.

காசி யாத்திரை மேற்கொள்வோர் அறிந்தோ அறியாமலோ செய்திருக்கக்கூடிய தவருன செயல்களுக்குப் பிராயச்சித்தமாக, காசியைவிட்டுப் புறப்படுமுன், பாதாள ஈசுவரர்க்கு அபிடேகம் செய்வது வழக்கம்.

## 2. அன்னபூரணி கோவில்

அன்னம் பாலிக்கும் மண்டபத்தில் கருங்கல் திருவுருவம் நிறுவப் பெற்றிருக்கிறது.

**3.** மானேஜர் பெட்டியடிக்கு அருகே சுப்பிரமணியர், நடராசர், பரமசிவன்–பார்வதி படங்கள் உள்ளன. கோயில்களில் பூசை நடக்கும் நேரங்களில் இந்தப் படங்களுக்கும் தீப் ஆராதனை செய்யப்பெறுகிறது.

## 4. நகரேசுவரர் கோயில்

இந்தக் கோயிலில் உள்ள சிவபெருமானுக்கு நகரேசுவரர் என்றும், இறைவிக்கு நகரேசுவரி என்றும் பெயர். கோயிலின் வெளி வாயிலுக்கு வெளியே மேற்குப்பக்கத்தில் கிழக்குப் பார்த்தமுகமாக ஒரு விநாயகர் திருவுருவம் இருக்கிறது. நகரேசுவரருக்கு திருவாசி உண்டு. இது கல்கத்தா தண்டாயுதபாணி கோயிலில் இருந்து கொண்டுவரப் பெற்றது. நகரேசுவரருக்கு எதிரில் நந்தியும் கருவறையின் வாயிலில் பிள்ளையார் தண்டாயுதபாணி திருவுருவங்களும் அமைந்துள்ளன. சுற்றுப்பிரகாரத்தில் கருவறை மதிலில் தட்சிணமூர்த்தி, அண்ணுமலையார், பிரம்மா திருவுருவங்களும் பிரம்மாவுக்கு எதிரில் சண்டிகேசுவரர் திருவுருவமும் காணப்பெறுகின்றன.

கருவறை மதிலுக்கு எதிரில் சுற்றுப் பிரகாரத்தில் நந்தியுடன் கூடிய 50 சிவலிங்கங்கள் நிறுவப்பெற்றுள்ளன. தென்மேற்கு மூலையில் விநாயகரும் வடமேற்கு மூலையில் வள்ளி தெய்வானையுடன் கூடிய சுப்பிரமணியரும் காட்சி கொடுக்கின்றனர். இவ்விரு திருவுருவங்களுக்கும் நடுவே உற்சவ விநாயகரும், 2 வேல், இடும்பன் ஆகியவையும் இருக்கின்றன. கல்கத்தாவிலிருந்து சின்ன வீட்டுக்காரர்களால் இவை கொண்டுவரப்பெற்றன. சுற்றுப்பிரகாரத்தின் வட பகுதியில் நகரேசுவரிக்கு உட்கோயில் உளது. அதையடுத்து (1) மாணிக்கவாசகர் (2) நடராசர் (3) சிவகாமி அம்மன் (4) வள்ளி தெய்வானையுடன் கூடிய சுப்பிரமணியர் ஆகிய நான்கு உற்சவ விக்கிரகங்கள் உள்ளன. வடகிழக்கு மூலையில், வயிரவர் விக்கிரகம் காணப்படுகிறது.

### வழக்கமான பூசை

காலை 10-30 கால சந்தி. காசி கங்கை அபிஷேகம், பால் அபிஷேகம், சுத்தான்னம் நைவேத்தியம். மாலை 7 மணிக்கு சாயரிட்சை. சுத்தான்னம் சுண்டல், காசி கங்கை, பால் அபிஷேகங்கள். இரவு 9 மணிக்கு அர்த்த சாமம். பாசிப் பருப்புப் பாயசம்.

தமிழ்ப் புத்தாண்டு அன்று புண்ணிய வாசனம் செய்து 2 கலசங்கள் வைத்துப் பூசை செய்து நகரேசுவரர் சந்நிதியில் பஞ்சாங்கம் படிக்கப்பெறுகிறது.

சோமவாரத்திலும் சுக்கிரவாரத்திலும் நகரத்தார் பெயருக்கு அர்ச்சனை செய்யப்படுகிறது. பிரதோச நாட்களில் பிரதோசப் பூசை நடைபெறுகிறது.

கார்த்திகைதோறும் சுப்பிரமணியருக்கு பால், தயிர், பஞ்சாமிர்த, விபூதி, சந்தன அபிஷேகம் உண்டு. வெள்ளி மயில்வாகனத்தில் சுப்பிரமணியர் புறப்பாடு நிகழும். திருக்கார்த்திகையன்று கோயில் முழுதும் தீபம் போடப் பெறுகிறது.

பிள்ளையார் சதுர்த்தியன்று பிள்ளையாருக்கு அபிஷேகம் அலங்காரம் நடைபெறுகின்றன. மார்கழித் திருவாதிரை உட்பட ஓர் ஆண்டுக்கு 6 நாட்களில் *நடராசருக்கும் மாணிக்கவாசகருக்கும் *ருத்ர ஜெபம் செய்து அபிஷேகங்கள் நடைபெறுகின்றன.

தீபாவளி, மகாசிவராத்திரி முதலிய காலங்களில் யாத்ரீகர் தனி இரயில் வரும் சமயம் தங்க விசாலாட்சியம்மனை நகரேசுவரர் கோயிலில் வைத்துப் பூசை செய்யப்பெறுகிறது. ஏனைய நாட்களில் 51 ரூபாய் கட்டினுல், இந்தக் காட்சியை யாவரும் கண்டுகளிக்கலாம்.

நகரேசுவரருக்கு வெள்ளி நாகாபரணமும் நகரேசுவரிக்கு வெள்ளி அங்கியும் உண்டு. ஒவ்வொரு நாளும் இரவு 8 மணி முதல் 9 மணி வரை பஜனை, தேவார திருவாசகப் பாராயணம் நடைபெற்றுவருகிறது. மார்கழி மாதம் திருப்பள்ளி எழுச்சி 30 நாட்களும் சித்திரான்ன நைவேத்தியத்துடன் நடைபெறுகிறது.

---

* சித்திரை திருவோணம், ஆனி உத்தரம், ஆவணி பூர்வபட்ச சதுர்த்தசி, புரட்டாசி பூர்வபட்ச சதுர்த்தசி, மார்கழி திருவாதிரை, மாசி பூர்வபட்ச சதுர்த்தசி.

## காசியில் நகரத்தார்கள் ஏற்படுத்தியுள்ள கட்டளைகள்

பால் கட்டளை

பசுமடக் கட்டளை

நந்தவனக் கட்டளை

வில்வம் அட்சதை அறுகம்புல் கட்டளை

புனுகு சட்டக் கட்டளை

கற்பூரக் கட்டளை

அத்தர்க் கட்டளை

விசாலாட்சி அம்பாள் திருப்பள்ளி எழுச்சிக் கட்டளை

விசாலாட்சி அம்பாள் பால் அபிஷேகக் கட்டளை

அன்னபூரணி அம்பாள் பால் அபிஷேகக் கட்டளை.

உபதான அரிசிக் கட்டளை

சாதுக்கள் போஜனக் கட்டளை

பிராமண போஜனக் கட்டளை (இது 1863 இல், அதாவது ருத்ரோத்காரி தை 12 வங்காள நகரத்தார் சனம் 18க்கு வர வான ரூபாய் 9,000ஐக் கொண்டு ஆரம் பிக்கப்பட்டது)

சில்லறை பிராமண போஜனக் கட்டளை

வெள்ளிச் சாமான்களை நல்முறையில் வைத்துப் பாதுகாப்பதற்குப் பண்டு முதல் கட்டளை

சாதுக்கள் ஏழைகளுக்கு நித்தியப்படி கட்டளை

சோமவாரக் கட்டளை

கியாஸ் லைட்டுக் கட்டளை (மின்சார விளக்கு ஏற்படும் வரை இந்தக் கட்டளை இருந்து வந்தது)

அன்னதானக் கட்டளை

நகரேசுவரர் கோவில் சிவலிங்கப் பிரதிஷ்டைக் கட்டளை

நைவேத்தியக் கட்டளை

வயிரவர் தீபக் கட்டளை

முத்திமண்டப தீபக் கட்டளை

திருவனந்தல் கட்டளை

வில்வ ஆரக் கட்டளை

சாம்பிராணிக் கட்டளை

கங்கை அபிஷேகக் கட்டளை

அன்னதான அகண்ட தீபக் கட்டளை முதலிய பல கட்டளைகள்.




## காசிக்கு அருகே

காசிமாநகரின் வடகிழக்கு மூலையில் சாரநாத் என்னும் சிற்றூர் இருக்கிறது. சாரநாத்தில்தான் பௌத்தமதம் தோன்றிற்று என்று கூறலாம். புத்தர்க்கே உரிய அமைதி தவழும் புனித இடம் சாரநாத்.

இந்திய அரசாங்கத்தின் சின்னமாக விளங்கும் 'சிங்கமும் தர்ம சக்கரமும்' சாரநாத்திலுள்ள அசோகத் தூணிலிருக்கும் வடிவத்தைப் பின்பற்றி அமைக்கப்பட்டவை தான். புத்தர் பெருமான் அரிய அறவுரைகள் அருளிச் செய்து அறச் சக்கரத்தை இயக்கிய புனித இடம இதுவே.

எண்கோணக் கோபுரத்தை உச்சியில் கொண்ட பெரிய செங்கற் கட்டிடக் குன்றும், மகாபோதி சங்கம் உருவாக்கியுள்ள மூல–கந்தகுடி பௌத்தர் ஆலயமும், சீனர் அமைத்துள்ள பௌத்தர் கோயிலும், சமணர் கோயிலும், பௌத்தமதத்தின் சின்னங்கள் அடங்கிய கலைக் கருவூலமாய் விளங்கும் காட்சிக்கூடமும் உள்ள சாரநாத் பௌத்தம் வளர்த்த பண்ணையாகும். இதைக் காணுத கண் என்ன கண்ணே!

## கயை

கயை, பீகார் இராச்சியத்திலுள்ள புனிதத் தலம். பல்குனி ஆற்றின் கரையில் அமைந்த கோவிலில் விஷ்ணு பாதம் இருக்கிறது. இப் பாதத்தில், முன்னோர்களுக்காகப் பிண்டம் போடுவதை இந்துக்கள் புனிதமான கடமை யாகக் கொண்டிருக்கிறார்கள். காசிக்குப் போகத் தொடங்கியது முதலே நகரத்தார்கள் கயைக்கும் போய், தல சிரார்த்தம் செய்து பிண்டம் போட்டு வந்திருக்கிறார்கள். மனிதன் பற்றற்றவனாக இருக்க வேண்டும் என்ற எண்ணத்தினால் விருப்பமான பழம் காய் இலை முதலிய மூன்றிலும் ஒவ்வொன்றை இனிக் கைவிடுவதாக வட பால விருட்சத்தில் உறுதி செய்துகொடுப்பது இந்தத் தலத்தில் வழக்க மாகும்.

பல்லாண்டுகள் வாடகைக் கட்டிடத்தில் கயை நகரச் சத்திரம் நடைபெற்றுவந்தது. 1884-ல் ரூ. 2,500-க்கு ஒரு இடம் சான் சவுரா என்னும் பகுதியில் விலைக்கு வாங்கப்பெற்றது. 1911-இல் ரூ. 2,500-க்கும் 1928-இல் ரூ. 1,800-க்கும் இடங்கள் வாங்கப்பெற்றன. இவற்றில் நகரச் சத்திரம் கட்டப்பட்டு நந்தவனம் உண்டாக்கப்பட்டது. நகரச் சத்திரம் செட்டிநாட்டுப் பாணியில் நன்றாகக் கட்டப்பட்டிருக்கிறது. இங்கு நடராசர் திரு வுருவம் பிரதிட்டை செய்யப்பெற்றிருக்கிறது. இரண்டு காலப் பூசை உண்டு. நாள்தோறும் 5 பிராமணர்களுக்கும் 10 சாதுக்களுக்கும் அன்னதானம் 1942 வரை போடப்பட்டது. நந்தவனம் இப்போது பெரும்பாலும் அழிந்து விட்டது.

விஷ்ணு பாதத்தில் ஏறத்தாழ நூறு ஆண்டுகளாக நகரத்தார்கள் பால் அபிடேகம் செய்தும் நெய் தீபம் போட்டும் வருகிறார்கள். விஷ்ணு பாதத்தருகே அந்த மண்டபத்திலேயே நகரத்தார்கள் ஒரு சிவலிங்கத்தையும் ஓர் அம்மனையும் பிரதிட்டை செய்திருக்கிறார்கள். 1926 முதல் 1942 வரை விஷ்ணு பாதத்தில் சந்தனக்காப்புச் சாத்திவந்தார்கள். நகரத்தார் களுக்கென்று இவ்வூரில் பண்டாவும் சாஸ்திரி களும் நியமிக்கப்பெற்றிருக்கிறார்கள்.

விஷ்ணு பாதத்திற்கு நகரத்தார்கள் நாள் தோறும் நெய் தீபம் பால் அபிடேகம் செய்து வருகிறார்கள். அதன்பிறகு நடக்கும் விஷ்ணு பாத அலங்கார சந்தன சாத்துப்படி நடத்திய வர்கள் அந்தத் திட்டத்தை ஒழுங்காக நடத்த வில்லை. ஆகையால் கயை வாசிகள் அட்சய ஆண்டு ஐப்பசி மாதம் 3உ 19-10-1926-இல் கூட்டம் கூட்டி அந்தக் கட்டளையை ரத்துச் செய்து சந்தன சாத்துப்படி நடத்திவருமாறு நகரத்தார்களைக் கேட்டுக்கொண்டு தீர்மானம் நிறைவேற்றினர். இந்த வேண்டுகோளை நகரத்தார்களுக்கு அனுப்பியிருக்கிறார்கள். இதில் நீதிபதியும் மற்ற கனவான்களும் பெரிய மனிதர்களும் பண்டாக்களும் கையெழுத்துப் போட்டிருக்கிறார்கள். இதிலிருந்து நெடுங் காலமாகக் கயைவாழ் பெருமக்கள் நகரத்தார் களின்பால் கொண்டிருந்த பேரன்பு வெளிப்படு கிறது.



## கயைக்கு அருகே

இந்துக்களின் புனித நகரமாய கயைக்கு 10 கி. மீ. தெற்கே புத்தகயை என்னும் பௌத்த தலம் இருக்கிறது.

இது, புத்தர்பிரான் ஞான ஒளி பெற்ற சிறப்பினை உடையது. இங்குள்ள மகாபோதிக் கோயிலில் புத்தரின் பொற்சிலை பொலிவுடன் காட்சி தருகிறது. புத்தர் ஞானம் பெற்ற பின் உலவிவந்த நடைபாதை ஒன்று சிற்ப வேலைப்பாடுகளுடன் ஒரு மேடை போலக் கட்டப்பெற்றிருக்கிறது. ஞானம் பெறும்போது புத்தர் வீற்றிருந்த வஜ்ராசனமும், அவர்க்கு நிழல் தந்த போதிமரமும் பர்மியர், திபேத்தியர், ஜப்பானியர், தாய்லாந்து நாட்டினர் ஆகியோர் அமைத்துள்ள பௌத்த கோயில்களும் புத்த கயையில் காணத்தக்கன.



# கல்கத்தா

நகரத்தார்கள் ஏற்றுமதி இறக்குமதி வியாபாரம் செய்த துறைமுகப் பட்டினங்களில் கல்கத்தா முக்கியமானது. கி. பி. 1800 அளவில் இவர்கள் கல்கத்தாவுக்கு வந்ததாகத் தெரிகிறது. கல்கத்தாவிலிருந்து பர்மாவுக்கும் இலங்கைக்கும் அரிசி நவதானியம் முதலிய வற்றை ஏற்றுமதி செய்து வந்தார்கள். ஏறத் தாழ 120 கடைகள் இருந்து வந்தன.

நகரத்தார்கள் நடத்திய கடைகள் அந்நிய நாட்டு வியாபாரச் சங்கங்களுடனும் ஆங்கிலேய கம்பெனிகளுடனும் வணிக உறவு கொண்டு அவர்களால் பெரிதும் மதிக்கப்பட்டன. எல்லாக் கடைகளிலிருந்தும் ஏற்றுமதி செய்த பொருள்களுக்கு, கப்பல் கட்டணத்துக்கு செலுத்திய தொகைகளில் 100 ரூபாய்க்கு 5 ரூபாய் வீதம் ஆண்டு இறுதியில் கப்பல் கம் பெனியிலிருந்து திருப்பி வாங்கப்பட்டது. இவ் வாறு கிடைத்த ரிபேட் தொகையை தருமப் பொதுப் பண்டு என்று வைத்திருந்தார்கள். இவ்வகையில் ஆண்டு தோறும் ரூபாய் 25,000 வரை வருவாய் வந்துகொண்டிருந்தது.

முர்க்கியாட்டாவில் கன்னிங் தெரு 40ஆம் வீட்டில் எல்லாக் கடைகளும் இருந்து வந்தன. அந்த வீட்டிலேயே வேல் ஒன்றைப் பிரதிட்டை செய்து வைத்தார்கள்.

1840 வரை கல்கத்தா நகரத்தார்கள் எல் லோரும் ஒற்றுமையாய் இருந்து வந்தனர். பிறகு சிறிது சிறிதாக ஒற்றுமை சீர் குலைந்தது. காரைக்குடி சேகரம், தேவகோட்டை சேகரம் என்று இரு கட்சிகள் ஏற்பட்டன. அப்போது இருந்தவர்களுக்குள் வயதானவர்கள் 4 பேரை மத்தியஸ்தராக வைத்து, வீட்டை ஒரு கட்சிக்கும் சுவாமியை இன்னொரு கட்சிக்கு மாகத் திருவுளச் சீட்டுப் போட்டனர். காரைக்குடியாருக்கு சுவாமியும் தேவகோட்டை யாருக்கு வீடும் விழுந்தன.

காரைக்குடியார் உடனே சுவாமியையும் பொருள்களையும் எடுத்துக்கொண்டு கன்னிங் தெரு 64ஆம் வீட்டுக்கு மாறினர். தேவ கோட்டையார் உடனே தேவகோட்டைக்கு எழுதி வேலாயுதம் செய்து வரவழைத்தனர். அந்த வேலாயுதத்துக்கு "சிங்கார முருகேசர்" என்றும் அந்த வீட்டுக்கு "பெரிய வீடு" என்றும் பெயரிட்டனர். அதுமுதல் தேவ கோட்டை சேகரத்துக்கு பெரிய வீடு என்றும் காரைக்குடி சேகரத்துக்குச் சின்ன வீடு என்றும் பெயர்கள் வழங்கி வரலாயின.

பெரிய வீட்டுக்காரர்கள் சில ஆண்டுகள் கழித்து எஸ்ரா தெரு 48ஆம் கட்டிடத்துக்கும் அதன் பிறகு அதே தெருவில் 54ஆம் கட்டிடத் துக்கும் மாறினர். அந்த வீட்டில் பூமியதிர்ச்சி ஏற்பட்டு, கன்னிங் தெரு 40ஆம் கட்டிடத் துக்குக் குடிபோய்அதில் 17 ஆண்டுகள் (1898 முதல் 1915 வரை) இருந்தார்கள். பிறகு லோயர் சித்பூர் ரோடு 180ஆம் கட்டிடத்தில் 1921 நவம்பர் வரை இருந்தனர்.

கோவில் வீடுகள் இரண்டு ஏற்பட்டமை யால் மகமைகள் தனித்தனியாக அந்தந்த வீட்டுக்காரர்களால் எழுதப்பெற்றன.

19-ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் 120 கடைகள் இருந்தன. ஆனால் அவை படிப் படியாகக் குறைந்தன. 1861ல் சூயஸ் கால்வாய் திறக்கப்பட்டதும் பர்மா அரிசிக்கு ஐரோப்பாவில் நிலையான மார்க்கட் ஏற்பட்டது. அதன் விளைவாகக் கல்கத்தா நகரத்தார்கள் சிலர் அரிக்கனில் நெல் அறைக்கும் இயந்திரங்

களை நிறுவினர். சிறிது சிறிதாக இரங்கூனில் நகரத்தார்களின் கடைகள் கூடிக்கொண்டு வந்தன. இவ்வாறு ஏற்பட்டபோது கல்கத்தா நகரத்தார்களும் இரங்கூனில் தொழில் தொடங்கினர். இரங்கூனில் தொழில் லாபகரமாக நடைபெற்று வந்ததும் கல்கத்தாவில் தொழில் சுருங்கிற்று. இரங்கோன் தொழிலுக்குக் குறைந்த வட்டிக்குக் கல்கத்தா வங்கிகளிலும் மார்வாரிகளிடமும் பணம் கடன் வாங்கி வேன் வட்டிக்கு இரங்கோனில் அடைப்பதே கல்கத்தா கடைகளின் முக்கியமான தொழிலாக இருந்து வந்தது. மார்வாரிகள் நாள்தோறும் பெரிய வீட்டுக்கும் சின்ன வீட்டுக்கும் வந்து தாங்கள் அடைக்க வேண்டிய பணத்தைச் செட்டிய வீட்டில், கூடுதலான வட்டிக்கு ஏலம் கேட்ட கடையில் பணத்தை அடைப்பது வழக்கமாக இருந்தது.

கடைகளின் எண்ணிக்கை 120-லிருந்து 43 ஆகக் குறைந்தது. அதன் பிறகு கடைகள் கூடியும் குறைந்தும் வந்தன. 1883-ஆம் ஆண்டில் வங்காள நகரத்தார்கள் ஒற்றுமையாக இருந்து கப்பல் கம்பெனிகளிடம் 100-க்கு ஒரு ரூபாய் வீதம் மட்டுமே கமிஷன் வாங்குவதென்றும் யாரும் கூட்டியோ குறைத்தோ கமிஷன் வாங்குவதில்லையென்றும் ஒப்பந்தம் செய்துகொண்டதிலிருந்து இந்த விவரம் தெரிகிறது. இந்த ஒப்பந்தத்தில் கீழ்க்கண்ட கடைகாரர்கள் கையொப்பம் இட்டிருக்கிறார்கள்.

| | | | |
|---|---|---|---|
| 1. | அரு. லெ. | 23. | சுப. வ. |
| 2 | வெ. அரு. | 24. | பழ. நா. |
| 3. | மெ. செ. | 25. | பெ. மெ. |
| 4. | வயி. நாக. ராம. | 26. | பழ. சு. அரு. |
| 5. | வீ. மு. | 27. | வீ. க. அ. |
| 6. | நாக. மு. ப. வ. | 28. | பழ. சுப. லெ. |
| 7. | அழ. ப. | 29. | நா. முரு. |
| 8. | அ. ருமு. | 30. | ராம. லெ. |
| 9. | வெ. வீர. அ. | 31. | முரு. மு. |
| 10. | அள. மெ. சு. | 32. | அ. ராம. |
| 11. | மெ. அரு. சித. | 33. | ராம. அரு. அரு. |
| 12. | ராம. மெ. | 34. | குழ. மெ. |
| 13. | பெரி. சுப. தெ. | 35. | பெரி. க. அரு. |
| 14. | சி. கரு. சி. | 36. | கு. பழ. சு. |
| 15. | அ. க. | 37. | ப. ராம. லெ. |
| 16. | மு. ராம. ப. | 38. | ம. பழ. |
| 17 | கும. பெரி. | 39. | ராம. ப. |
| 18. | ராம. சா. | 40. | சா. சா. |
| 19. | ந. பெரி. | 41. | அ. செ. சு. |
| 20. | க. ராம. ராம. கு. | 42. | சி. ராம. க. |
| 21. | மெ. ப. | 43. | நா. பழ. |
| 22. | சா. ராம. | | |

பெரிய வீட்டுக்காரர் என்பதை "பிக் செட்டி பிரதர்ஸ்" என்றும் சின்ன வீட்டுக்காரர் என்பதை "ஸ்மால் செட்டி பிரதர்ஸ்" என்றும் வெள்ளைக்காரர்கள் குறிப்பிட்டு வந்தார்கள்.

சிங்காரமுருகேசருக்கு உற்சவம் நடத்த வேண்டுமென்று இரண்டு வீட்டு நகரத்தார்களும் கூடிப் பேசுவதற்காக பார்த்திப ஆண்டு பங்குனி மாதத்தில் (1886ல்) கூட்டம் கூட்டினார்கள். ஆண்டுக்கு ஒரு வீட்டுச் சுவாமியாக மாறி மாறி காளிகாட்டுக்கு சித்ரா பவுர்ணமியன்று போய்வருவதென்று முடிவு செய்யப்பட்டது. திருவுளச்சீட்டு பெரிய வீட்டுக்காரருக்கு விழுந்ததால் முதல் ஆண்டில் பெரியவீட்டுச் சுவாமி காளிகாட்டுக்குப் போய் வந்தது. சித்ரா பவுர்ணமி காலத்தில் மழையும் காற்றும் மிகுதியாய் இருந்ததால் 1893 முதல் திருவிழாவைப் பங்குனி உத்திரத்துக்கு மாற்றிக்கொண்டார்கள். அந்த ஆண்டில் கல்கத்தாவில் இருந்துவருகிற சுவாமிக்கு 5 நாட்களுக்கு அபிஷேக ஆராதனையும், காளி காட்டுக்குப் பவனி செல்லும் சுவாமிக்கு சம்பிரதாய பூஜையும் ஆண்டுதோறும் நடைபெற்றது. இந்த இரண்டு வகைச் செலவுகளுமே காளிகாட் திருவிழாக் கணக்காகச் செய்யப்பெற்றன.

காளிகாட் திருவிழாவுக்கென்று வெள்ளித் தேர் செய்து வைக்கப்பட்டது. அந்த ரதத்தில் உற்சவ விக்கிரகத்தை வைத்துத் தங்க நகைகள் அணிவிக்கப்பட்டதைக் கண்டு வங்காளிகள் அளவுகடந்த மகிழ்ச்சியடைந்தார்கள். நமது உற்சவ மூர்த்திக்கு "சொன்னார் கார்த்திக்" என்று பெயர் இட்டு அதை வழிபட்டு வந்தனர். திருவிழாக் காலத்தில் உண்டியல்களில் வங்காளிகள் பணம் போட்டுக் காணிக்கை செலுத்தினர். வெள்ளித் தேர் செல்லுவதற்கு இடையூறு இல்லாதபடி டிராம் போக்குவரத்து, சிறிது நேரம் நிறுத்தி வைக்கப்பட்டது. டிராம் எலக்ட்ரிக் டெலிபோன் முதலிய கம்பிகள் தேரைத் தட்டாதவாறு தேர் செல்லும்போது அவை தூக்கி வைக்கப்பட்டன. இதற்குரிய வசதிகளை உரிய அலுவலர்கள் செய்துகொடுத்து வந்தனர்.

பாண்டு, மேள வாத்தியம் முதலியனவும் தேவாரக் குழுவும் திருவாசகப் பாராயணக் குழுவும் பவனியில் வந்தன. காளிகாட்டில் 5 நாட்கள் சிங்கார முருகேசர் தங்கியபோது நகரத்தார்களுக்கும் அவர்களைச் சார்ந்தவர்களுக்கும்

ஏழை மக்களுக்கும் உணவு வசதி செய்யப் பட்டது. சுவாமி சேர்க்கைக்கு வரும்போது ஆங்கிலேய கவர்னர் பவனியில் கலந்து கொண்டு நகரத்தார்கள் செய்த மரியாதை களைப் பெற்றுக்கொண்டார்.

காலம் செல்லச் செல்ல மீண்டும் நகரத் தார்களுக்குள் இரண்டு கட்சிகள் ஏற்பட்டன. பெரிய வீட்டுச் சுவாமி புறப்பாடு காலத்தில் சின்ன வீட்டார் காளிகாட் மடத்தைப் பூட்டி விட்டார்கள். கல்கத்தா உயர் நீதிமன்றத் தீர்ப்பு, பெரிய வீட்டாருக்கு அனுகூலமாக இருந்ததால் அவர்கள் பூட்டை உடைத்து மடத்தைத் திறந்து திருவிழா நடத்தினர். நகரத்தார் களுக்குள் ஒருவருக்கொருவர் செலவு தொகையை வசூலித்துக் கொள்ளக்கூடா தென்ற எண்ணம் நிலவியது. நீதிமன்றத்தாரின் ஆணை எவ்வாறிருப்பினும் சின்ன வீட்டாரிடம் செலவு தொகை வாங்குவதில்லையென்று பெரிய வீட்டுக்காரர் முடிவு செய்தனர். 1907-ம் ஆண்டு அளவில் தீபாராதனைச் சமயம் பெரிய வீட்டு நகரத்தார் ஒருவர் மீது முருகப் பெருமான் அருள் வந்தது. சின்ன வீட்டு நகரத்தாரையும் சேர்த்துக் கொண்டு பூசை நடத்தும்படி உத்தரவாயிற்று. வயது முதிர்ந்த வர்கள் நால்வர் வந்து அழைக்க, சின்ன வீட்டுக்காரர்களும் காளிகாட் பூசையில் கலந்து கொண்டனர்.

முதலாவது உலகப் போர் ஏற்பட்டதும் 1914ல் தொழில் நிலைமை மந்தமாகிவிட்டது. சின்ன வீட்டுக் கடைகள் பெரும்பாலும் ஒடுக் கப்பட்டன. கடைகளை ஒடுக்கியவர்களுக்கு வெள்ளிரதத்துக்காக அவர்கள் கொடுத்திருந்த ரூபாய் சத்திரத்துக் கணக்கிலிருந்து திருப்பிக் கொடுக்கப்பட்டது. சின்ன வீட்டிலிருந்து ஊருக்குப் போனவர்கள் தவிர எஞ்சியிருந்த தீ. சொ., பழ. கரு. ஆகிய இரண்டு கடை களும் பெரிய வீட்டுக்கு வந்தன.

கடைகள் தொகை குறையக் குறைய நிலைமை மாறிக்கொண்டே வந்தது. வெள்ளித் தேர் திருப்பாதிரிப்புலியூர்க் கோவிலுக்கு விற்கப்பட்டது.

நகரத்தார்கள் கல்கத்தாவுக்கு வந்தது முதல் வ. பெ. சி. மு. என்ற விலாசம் வைத்து ரூ. 1,17,000 மூலதனத்துடன் சுவாமிக்காக நடத்திவந்த தொழில் சீர்கெட்டு 1909ல் அந்தக் கடை நிறுத்தப்பட்டது.

1940ம் ஆண்டு வரை காளிகாட்டில் பங்குனி உத்திரம் சிறிய அளவில் நடைபெற்று வந்தது.

மகமை வசூலித்துத் திருவிழாக்களை நடத்தி வந்ததோடு இரண்டு வீட்டுக்காரர்களும் அவரவர் கோவில்களில் அன்றுடப் பூசைகளை நடத்தி வந்தனர். தொழில் பெருகி வந்த தாலும் கப்பல் கம்பெனியார் வாயிலாக ஆண்டு ஒன்றுக்கு ரூ 50,000 வரை ரிபேட் தொகை கிடைத்ததாலும் இன்னும் பல அறச் செயல் களைச் செய்யவேண்டுமென்ற எண்ணம் கல்கத்தா நகரத்தார்களுக்கு ஏற்பட்டது.

கல்கத்தாவுக்கு நகரத்தார்கள் வந்தது முதலே, தலைசிறந்த தலமாகிய காசிக்குப் போய் விசுவேசுவரரை வழிபட்டு வந்தனர்.

கல்கத்தாவில் தொழிலில்லாத ஏழைய நகரத்தார் களும் சிவபக்தி மேலீட்டால் சிலர் கல்கத்தா வுக்கு கப்பலில் வந்தும் சிலர் இராமேச்சுரத்தி லிருந்து காசி வரை நடந்து சென்றும் வந்தனர். இவ்வாறு காசி யாத்திரை சென்ற எல்லா நகரத்தார்களுமே காசி கேதார கட்டத்தில் குமரகுருபர சுவாமிகளால் 1720ல் கட்டப்பெற்ற குமாரசாமி மடத்தில் தங்கி வந்தனர். அந்த மடத்தில் நகரத்தார்கள் தங்கிய பகுதி செட்டி சத்திரம் என்ற பெயரில் இன்றும் வழங்கி வருகிறது. குமாரசாமி மடத்திற்குச் சிறிது தொலைவில் கங்கைக் கரையில் கேதார கட்டத்தில் அழகாக அமைக்கப்பட்டிருக்கிற கேதார ஈச்சுரர் கோவிலில் சுற்றுப் பிரகாரத்தில் காணப்படும் மீனுக்ஷி அம்மன் சொக்கலிங்கப் பெருமான் ஆகிய மூர்த்திகள் கல்கத்தா நகரத்தார்களால் பிரதிட்டை செய்யப்பட்டன. பூசைச் செலவுகள் நெடுங்காலம் அவர்களால் ஏற்றுக்கொள்ளப்பட்டன.

காசி யாத்திரை செல்லும் நகரத்தார்கள் தொகை பெருகிற்று. கல்கத்தா நகரத்தார் களிடம் தருமப் பண்டு தொகையும் பெருகிற்று. இந்த நிலைமையில் நகரத்தார்களுக்கென்று காசியில் ஒரு சத்திரம் கட்டவேண்டும் சிவராத்திரி போன்ற சிறப்பு நாட்களில் மட்டும் விச்வேசுவரருக்கு நடத்திவந்த அபிஷேகம், ஏழைகளுக்கு இட்டு வந்த அன்னதானம் ஆகியவற்றை ஒவ்வொரு நாளும் செய்யவேண்டும் என்ற கருத்துக்கள் கல்கத்தா நகரத்தார்களுக்கு ஏற்பட்டன. அதனுல் ஹிந்துஸ்தானி கோஷாயி சாதுக்கள் மடத்தை விலைக்கு வாங்கி புதுப்பித்து, 1863ல் ருத்ரோத்காரி ஆவணி 10ம் நாள் முதல் அந்த இடத்தில் கல்கத்தா நகரத்தார்கள் நகரச் சத்திரம் நிறுவினர்.

விசுவேசுவரருக்குப் பூசைகளை மிகச் சிறப்பாக செய்து வந்தனர். கல்கத்தா நகரத்தார்களுடைய மகமை வருவாயில் சின்ன வீட்டுக்காரர் பெரிய வீட்டுக்காரர் இருவருமே அவரவர் கோவிலுக்கு மகமைத் தொகையில் பாதியை மட்டும் வைத்துக்கொண்டு மற்ருெரு பாதியை, காசி நகரச் சத்திரத்துக்கு கொடுத்து வந்தனர். தருமப் பணங்கள் பெருகியதற்குத் தகுந்தபடி காசியில் சத்திரத்தை விரிவு படுத்தியும் புதிய சொத்துக்கள் வாங்கியும் அன்ன தானம் கோவில் கைங்கர்யம் முதலிய திட்டங்களை முன்னிலும் கூடுதலான முறையில் செய்தும் நகரேசுவரர் கோவில் கட்டியும் கல்கத்தா நகரத்தார்கள் அறச் செயல்களைச் செய்தனர்.

1909ல் சின்ன வீட்டிலுள்ள கடைகளை ஒடுக்கியபோது வேலாயுதம், இடும்பன், விநாயகர் விக்கிரகம் ஆகியவற்றைக் காசிக்குக் கொண்டுபோய் நகரேசுவரர் கோவிலில் பிரதிட்டை செய்தும் நகைகளை காசி நகரச் சத்திரத்தில் ஒப்புவித்தும் இருக்கிருர்கள். இவ்வாறே பெரிய வீட்டிலிருந்த ஏராளமான தங்க நகைகளும் 1935ல் காசி நகரச் சத்திரத்தில் ஒப்புவிக்கப்பெற்றன.

1924 வரை காசி நகரச் சத்திரம் கல்கத்தா நகரத்தார்களுடைய மேற்பார்வையில் இருந்து வந்தது. கயா, பிரயாகை, தாரகேசுவரம், கோதாவரி முதலிய இடங்களிலும் கல்கத்தா நகரத்தார்கள் சத்திரங்கள் நிறுவினர்.

காசி நகரச் சத்திரத்துக்கு இன்று முக்கியமான சொத்தாக இருந்து வருவது கல்கத்தா எஸ்ரா தெருவில் உள்ள 34ஆம் கட்டிடமாகும். 1918-ல் கல்கத்தாவில் நகரத்தார்களுக்கு 13 கடைகள் இருந்தன. அடிக்கடி பல வீடுகள் மாறி அல்லற்பட்டதால் 13 பெட்டியடிகளும் இருப்பதற்குச் சொந்தக் கட்டிடம் வேண்டுமென்று அவர்கள் நினைத்தார்கள். காசிச் சத்திரத்துக்கும் நகரத்தார்கள் மேற் கொண்டுள்ள இன்ன பிற சிவப் பணிகளுக்கும் ஆண்டு தோறும் வருமானம் வரக்கூடிய கட்டிடமாக இருக்கவேண்டுமென்று முடிவு செய்தனர்.

1918ம் ஆண்டு சூலை மாதம் 5ம் தேதி எஸ்ரா தெரு, 34ஆம் கட்டிடம் டேவிட் எஸ்ரா என்ற சீமானிடம் ரூ. 1,27,916/10/8க்கு வாங்கப்பட்டது. இந்தக் கிரயம் கல்கத்தா ரிஜிஸ்ட்ரார் ஆப் அஸ்யூரன்ஸஸ் அலுவலகத்தில் 1918ம் ஆண்டு 2846ஆம் கிரயமாக முதற் புத்தகம் 84வது வால்யூமில் 148 முதல் 167 பக்கம் வரை பதிந்திருக்கிறது. இவ்வாறு வாங்கிய கட்டிடத்தை முற்றிலும் பிரித்து பழைய அஸ்திவாரத்தை மட்டும்

வைத்துக்கொண்டு அதன் மீது (கீழ்த்தளம் உட்பட) மூன்று மாடிக் கட்டிடத்தைச் செட்டி நாட்டுக் கட்டிடங்களைப்போலக் கட்டுவதென்று நகரத்தார்கள் முடிவு செய்தார்கள். அத் தகைய பிளானை எட்வர்ட் ஹோப் ஜான்ஸ்டன் என்ற வெள்ளைக்கார என்ஜினியர் சில திருத்தங் களுடன் அங்கீகரித்து புதுக் கட்டிடம் கட்ட கார்ப்பரேஷனில் அனுமதி வாங்கி கொடுத்தார். கட்டிடம் கட்டுவதற்கு ரூ. 1,22,398/2/9க்கு அந்த என்ஜினியருடைய சிபாரிசுப்படி தினேஸ் சந்தர்செஸன் என்பவரிடம் 23-8-1920ல் நகரத்தார்கள் கன்டிராக்ட்செய்து கொண்டார்கள். மேற்படி கட்டிடத்தின் இடப் பரப்பு சுமார் 8.1/2 கட்டா. அதாவது ஏறத் தாழ 6120 சதுர அடி. 1921 நவம்பர் மாதம் 2-ந் தேதி இந்தக் கட்டிடத்தில் நகரத்தார் குடிபுகும் விழா சிறப்பாக நிகழ்ந்தது. இதில் நிறுவப்பட்ட சிங்கார முருகேசர் கோவிலுக்கு கும்பாபிஷேகம் செய்யப்பட்டது. இந்த நிகழ்ச்சி அக்காலத்தில் ஸ்டேட்ஸ்மென் பத்திரிகையில் குறிப்பிடப்பட்டிருக்கிறது.

1918-ல் கட்டிடம் அரு. அரு. சோம. ஏஜன்ட் சாமினாதன் செட்டியார் பெயரால் கிரயம் வாங்கப்பட்டது. அவர் 1921-ல் இந்த சொத்தை ஒரு டிரஸ்டு சொத்தாக ஏற்படுத்தி அரு. அரு. சோமசுந்தரம் செட்டியாரை டிரஸ்டியாக நியமித்து செட்டில்மெண்டு எழுதி வைத்தார்கள். 1934-ல் இந்தச் சொத்து இரங்கூனில் ஏற்பட்ட காசி நகரச் சத்திரத்தின் மானேஜிங் சொசைட்டியின் ஆளுகைக்கு

## New Business Premises

The firm of bankers and merchants known as Nattukkottai Vyshya Chetty Brothers and Badha Badi celebrated their removal to newly-built premises at 34, Ezra Street, Calcutta on Wednesday by an excellent entertainment. The firm have been over 150 years in Calcutta, and formerly carried on business at 180, Lower Chitpore Road.

—**THE STATESMAN**, Calcutta
*Thursday November 3, 1921*
*P. 5. Col. 6.*

வந்தது. 1955-ல் அரு. அரு. சோம. வுடைய வாரிசுகள் மானேஜிங் சொசைட்டிக்கு சகல அதிகாரங்களையும் வழங்கி பவர் ஆப் அட்டர்னி பதிந்து கொடுத்தனர். அவ்வாறே ஒரு அவிடிவிட் கையெழுத்திட்டு 5-4-1955-ல் கல்கத்தா கார்ப்பரேஷனுக்கு எழுதிக்கொடுத் தனர். 8-12-1955 முதல் கல்கத்தா கார்ப்ப ரேஷன் ரிகார்டுகளில் இந்தச் சொத்து மானேஜிங் சொசைட்டிக்கு மாற்றப்பட்டிருக் கிறது. 27-8-1958 முதல் இது நகரத்தார் ஹவுஸ் என்ற பெயரால் வழங்கி வருகிறது.

1942-இல் ஜப்பானியர் பர்மாவைப் பிடித்துக்கொண்டதும் நகரத்தார்களும் அவர் களைச் சார்ந்தவர்களும் ஆயிரக்கணக்கானவர் பர்மாவிலிருந்து கால்நடையாக அரிக்கன் சிட்டகாங் பாதை வழியாகவும், மணியுவா இம்பால் மணிப்பூர்ப் பாதை வழியாகவும் அகதிகளாக இந்தியாவுக்கு வந்தனர். அவர்கள் தங்குவதற்கும் சாப்பாடு வசதி செய் வதற்கும் அரசாங்கத்தார் செலவில் இரயில் டிக்கட்டும் மருத்துவ வசதியும் பெறவும் நகரத் தார் ஹவுசில் ஏற்பாடு செய்துகொடுக்கப் பட்டது. இது, இந்தச் சத்திரத்தின் வரலாற்றில் குறிப்பிடத்தக்க முக்கியமான நிகழ்ச்சியாகும்.

## நகரேசுவரர் கோவில், கல்கத்தா

இந்தக் கோவில் ஸ்ட்ராண்டு ரோடு 35 நிர். கட்டிடத்தில் இருக்கிறது. இங்கு ஏற்கெனவே ஒரு சிவலிங்கம் அரச மரத்தடியில் இருந்தது. இந்த இடத்தில் நகரத்தார்கள் ரூபாய் 80,000 செலவில் சிவாலயம் கட்டி கும்பாபிஷேகமும் நடத்தினர். இச்சிவலிங்கத் துக்கு நகரேசுவரர் என்று பெயர் வைத்து, நகரேசுவரி என்ற ஒரு அம்பாளையும் பிரதிட்டை செய்தனர். கோவில் இன்றளவும் நல்ல முறையில் நடைபெற்று வருகிறது. இரண்டு காலப்பூசை உண்டு. நகரத்தார்களால் நியமிக்கப்பட்ட ஒரு சாஸ்திரிகள் பூசைக் காரியங்களைக் கவனித்துவருகிறார். பூசைப் படித்திரச் செலவுகள் காசி நாட்டுக்கோட்டை நகரச்சத்திர மானேஜிங் சொசைட்டியாரால் செய்யப்பட்டு வருகின்றன.

பெரிய வீட்டிலிருந்த சிங்கார முருகேச ராகிய தண்டாயுதபாணி, இடும்பன், விநாயகர்

ஆகிய மூர்த்திகள் எஸ்ரா தெரு 34 நிர். வீட்டிலிருந்து 1930 அளவில் நகரேசுவரர் கோவிலில் கொண்டுபோய் வைக்கப்பட்டன. விக்கிரகங்கள் யாவும் கல் திருவுருவங்களாக உள்ளன. சிங்கார முருகேசர் முகம் செம்பால் செய்து தங்க முலாம் பூசப்பெற்றது; இந்த விக்கிரகத்தின் ஏனைய பகுதிகள் சந்தன மரத்தால் செய்யப்பெற்றன. வெள்ளியங்கி உண்டு. மர விக்கிரகம் பழுதடைந்திருப்பதால் கல்லில் சிங்கார முருகேசர் விக்கிரகம் செட்டிநாட்டில் கம்பனூரில் செய்யப்பெற்று அதற்கேற்ற புதிய வெள்ளியங்கியுடன் 1963-ல் கல்கத்தாவுக்கு கொண்டுவரப்பெற்றிருக்கிறது.

இந்தக் கோவில் கட்டிடத்துக்கும் இடத்துக்கும் யாதொரு வரியும் செலுத்த வேண்டியதில்லையென்றும் விதி விலக்குக் கொடுக்கப்பட்டிருக்கிறது. இந்த இடத்தின் பரப்பு ஒன்றே முக்கால் கட்டா அல்லது 1160 சதுர அடி.

கங்கைக் கரையில் அமைந்து கவர்ச்சியான காட்சி தருவதால் கங்கையில் நீராடுபவர்கள் பல நூறு பேர்கள் கங்கை நீரால் நகரேசுவரருக்கு அபிஷேகம் செய்கிருர்கள். அலுவலகங்களுக்குச் செல்லுபவர்களும் நூற்றுக்கணக்கான இந்துக்களும் இங்கு வந்து வழிபடுவது ஒவ்வொரு நாளும் காணக்கூடிய காட்சியாகும்.

## காளிகாட்

காளிகாட் என்பது கல்கத்தா நகரத்தார் ஹவுசிலிருந்து 5 மைல் தொலைவில் ஆதிகங்கை என வழங்கப்படும் காளிகாட் ஆற்றின் கீழ்க் கரையில் காளி கோவில் அருகே அமைந்த பகுதியாகும். கல்கத்தாவிலிருந்து சித்திரா பவுர்ணமித் திருவிழா நடத்தியபோது சிங்கார முருகேசரை கல்கத்தா நகரத்தார்கள் காளிகாட்டில் எழுந்தருளச் செய்தனர். அதற்காக 6—9—1878ல் இடம் வாங்கப்பட்டது. மற்ருெரு பகுதி 1885லும் மூன்ருவது பகுதி 1893லும் வாங்கப்பட்டன. மூன்று இடங்களும் ஒரு சேகரமாக வந்ததும் திருவிழாத் தேவைக்கேற்ப இரண்டு மாடிக் கட்டிடமாக மடம் கட்டப்பட்டது. விரிவான திண்ணையும் முகப்பில் நடை பாதையில் காங்கிரீட் தார்சும் கூடியது. இக்கட்டிடத்துக்கு அந்நாளிலேயே ரூ. 40,000க்கு மேல் செலவாகியிருக்க வேண்டும்.

திருவிழா நின்ற பிறகு, குடும்பத்துடன் வரும் யாத்ரீகர்கள் தங்குவதற்கு காளிகாட் மடம் பயன்படுத்தப்பட்டது. காளிகாட் மடத்துக்கென்று தனியாக மகமை வசூலிக்கப்பட்டது. அப்போது கல்கத்தா நகர விடுதியில் ஆண் பிள்ளைகள் மட்டுமே தங்கி வந்தனர்.

1945 முதல் காளிகாட்டுக்கு யாத்ரீகர்கள் வருவது பெரும்பாலும் நின்றுவிட்டது. இப்போது இந்தக் கட்டிடம் வாடகைக்கு விடப்பட்டிருக்கிறது. கட்டிடம் பழுதான நிலையில் இருந்து வருகிறது.

மேல் வீட்டில் தண்டாயுதபாணி சிலை இருக்கிறது. தினந்தோறும் பூசை நடைபெற்று வருகிறது.

காளிகாட் கோவிலின் நுழை வாயிலில் நகரத்தார்கள் சிறியதொரு விநாயகர் கோவிலைக் கட்டியுள்ளனர். இதன் நிர்வாகம் எப்போதுமே காளி கோவில் பண்டாக்களிடம் இருந்து வந்திருக்கிறது.

வெள்ளித் தேரை நிறுத்தி வைப்பதற்காக 1906ல் காளிகாட்டில் ஓர் இடத்தை கோர்ட்டு ஏலத்தில் நகரத்தார்கள் ரூ. 3150க்கு வாங்கி அதில் ரதக்கொட்டகை கட்டினர். பிற்காலத்தில் வெள்ளி ரதம் விற்கப்பட்டதால் கொட்டகை தேவைப்படவில்லை. கொட்டகையும் இடமும் 1939ல் காசி நகரச் சத்திர மானேஜரால் ரூ. 6,000க்கு விற்று முதல் செய்யப்பட்டன.





தாரகநாதர் கோயிலின் ஒரு தோற்றம்

படம் உதவியர் : சோம. சுப்பிரமணியன், கல்கத்தா

## தாரகேசுவரம்

தாரகேசுவரம் என்பது ஹவுராவிலிருந்து மின்சார ரயிலில் செல்லக்கூடிய ஊர். 36 மைல் தொலேவில் அமைந்தது. இது மகந்துப் பிரதேசம்.

இந்த சிவத்தலம் வங்காளிகளால் மிகப் புனிதமாகக் கருதப்படுகிறது. இங்கு கோவில் கொண்டுள்ள இறைவன் பெயர் தாரகநாதர். இது சுயம்பு லிங்கம் என்பர். இத்தலத்தைப் பற்றிய விரிவான கட்டுரை ஒன்று இந்த மலரில் வெளிவருகிறது.

காசி யாத்திரையாக வரும் நகரத்தார்கள் தாரகேசுவரத்துக்குப் போய் வந்தனர். அவ்வாறு போய் வருபவர்களின் வசதிக்காக, மகந்திடம் இடம் வாங்கி கல்கத்தா நகரத்தார்கள் ரூ. 10,000 செலவில் மடம் கட்டி ஆர்ச்சும் அமைத்தனர். இந்த மடம் அமைக்கப்பட்டது 1890ம் ஆண்டு வாக்கிலென்று ஊகிக்கவேண்டி இருக்கிறது.

மடத்துக்குச் சேகரமான ஓர் இடம் 1907ல் ரூ. 2000க்கு குத்தகைக்கு எடுக்கப்பட்டது. இந்த இடம் முன் எக்ரிமென்டின்படி 1952ம் ஆண்டு அளவில் மகந்து வயப்பட்டது.

தாரகேசுவரம் நகர மடத்திற்குள் ஒரு நந்தவனம் இருந்தது.

பல ஆண்டுகள் இந்தத் தலத்தில் அன்னதானம் செய்யப்பட்டது. 1941 வரை தாரகநாதருக்கு நகரத்தார்கள் பாலபிஷேகம் ஒவ்வொரு நாளும் செய்து வந்தார்கள். கல்கத்தா நகரம் ஜப்பானியருடைய குண்டு வீச்சுக்கு உள்ளானபோது கல்கத்தா நகரத்தார் சிலருக்கு தாரகேசுவரம் நகர மடம் தஞ்சம் தந்தது.

யாத்திரைக்காரர்கள் தாரகேசுவரத்துக்குப் போய் வருவதும் அருகிவிட்டது. மடம் ரயில் நிலேயத்திலிருந்து ஒரு மைல் தொலேவில் கோவிலுக்கு அண்மையிலும் கடைத் தெருவின் நடுவேயும் உள்ளது. வங்காளிகள் நமதுமடத்தை 'செட்டி பாடி' என்று குறிப்பிட்டு வருகிறுர்கள். மானேஜிங் சொசைட்டியின் சிப்பந்தியொருவர் மடத்திலுள்ள சுப்பிரமணியர் படத்துக்குத் தீபாராதனே செய்து வருகிறுர். மடத்தின் சில பகுதிகள் வாடகைக்கு விடப்பட்டிருக்கின்றன. செட்டியார்கள் வெட்டிய குளம் ஒன்று தாரகேசுவரத்தில் இருக்கிறது.



# கோதாவிரி

இராஜமகேந்திரபுரம் என்னும் பெருநகரின் ஒரு பகுதியான அரியபுரத்தில் நகரத்தார்களுடைய மடமும் மரகத விநாயகர் கோவிலும் உள்ளன. ஆந்திரப் பிரதேச மாநிலத்தில் நகரத்தார்களுடைய அறச்செயலாக விளங்குவது இது ஒன்று மட்டுமே ஆகும்.

கோதாவிரி ஆற்றிலிருந்து 2 பர்லாங்குத் தொலைவில் மடம் அமைந்துளது. இதற்குரிய கட்டிடம், கல்கத்தா நகரத்தார்களால், 25-8-1920-இல் ரூபாய் 19,775-க்கு வாங்கப்பட்டது. இடத்தின் பரப்பு 2,400 சதுர கெஜம். 1922-இல் மரகத விநாயகர் கோவில் கட்டி வாகனமும் செய்யப்பெற்றது. இவற்றுக்காகக் கல்கத்தா நகரத்தார்கள் செலவிட்ட தொகை பல்லாயிரம் ரூபாய் இருக்கலாம். 1939 வரை இங்கு நவராத்திரி விழா நடைபெற்றது. 1953-இல் ஏற்பட்ட வெள்ளத்தில் கட்டிடம் சிறிது விரிவுகண்டு வெடிப்பு ஏற்பட்டது. இரண்டு கூடங்கள் கீழே விழுந்துவிட்டன. எஞ்சிய மூன்று கூடங்கள் பழுதுபார்க்கப்பட்டிருக்கின்றன.

நகர மடமும் கோவிலும் பொதுச் சொத்து என்றும் ஆண்டுதோறும் ரூபாய் 30 வரியாகவும், இது தவிர ஆடிட் பீசும் கட்டவேண்டுமென்றும் ஆந்திர மாகாண இந்துமத பரிபாலன சபையார் ஆணையிட்டனர். இதைப்பற்றி 1948-இல் சென்னை சிட்டி சிவில் கோர்ட்டில் ஓ. எஸ். 164/48, கீழ்க் கோதாவரி டிஸ்ட்ரிக்ட் முன்சீப் கோர்ட்டில் ஓ. எஸ். 1/1953, இராஜமகேந்திரபுரம் சப்கோர்ட்டில் ஓ. எஸ். 82/1953, ஆகிய வழக்குகள் ஸ்ரீ காசி நாட்டுக்கோட்டை நகரச்சத்திரம் மானேஜிங் சொசைட்டியாரால் தொடரப்பட்டு, 29-10-1954-இல் தீர்ப்புக் கூறப் பட்டது. அதன்படி, கோவில் பொதுச் சொத்து என்றும், நகர மடம் தனிச்சொத்து என்றும் முடிவாகியிருக்கிறது.

1942-க்குப் பிறகு இங்கு யாத்திரீகர் வருவது மிகவும் குறைந்துவிட்டது. கட்டிடம் பழுதுபார்க்கப்பட்டிருக்கிறது. கட்டிடத்தின் சில பகுதிகள் வாடகைக்கு விடப்பட்டிருக்கின்றன.

சென்னையிலிருந்து இராஜமகேந்திரபுரத்துக்குச் செல்லும் வழியிலுள்ள கோதாவிரி என்ற இரயில் நிலையத்திலிருந்து நகரவிடுதி அரை மைல் தொலைவில் இருக்கிறது.

## கோதாவிரி

புவியினுக் கணியாய், ஆன்ற
பொருள்தந்து, புலத்திற் ருகி,
அவியகத் துறைகள் தாங்கி,
ஐந்திணை நெறிஅ ளாவி,
கவியுறத் தெளிந்து, தண்ணென்று
ஒழுக்கமும் தழுவி, சான்றோர்
கவியெனக் கிடந்த கோதா
விரியினை வீரர் கண்டார்

என்று கம்பர் கோதாவிரி ஆற்றின் சிறப்பைப் பாடியுள்ளார். 940 மைல் தொலைவுக்கு ஓடும் இந்த ஆறு இந்தியாவின் பெரிய ஆறுகளுள் ஒன்று; புனிதமான ஆறும் ஆகும். இது தோன்றும் இடத்தின் அருகேயுள்ள நாசிக்—பஞ்சவடியிலும், கடலுடன் கலக்கும் இடத்தின் அருகேயுள்ள கோதாவிரியிலும் சத்திரம் அமைத்துள்ள பெருமை நகரத்தாருக்கு உரிய தனிப்பெருமையாகும்.

AF

# சொசைட்டியில் இதுவரை தலைவர், காரியதரிசி பதவிகள் வகித்தவர்களின் விவரம்.

| | | |
|---|---|---|
| **1934ம் வருஷம்** | | |
| சா. அ. ச. ராமன் செட்டியார் | தலைவர் | இரங்கூன் |
| சுப. க. அ. லெட்சுமணன் செட்டியார் | காரியதரிசி | ,, |
| **1936ம் வருஷம்** | | |
| அள. வீர. பெ. லெட்சுமணன் செட்டியார் | தலைவர் | ,, |
| **1937ம் வருஷம்** | | |
| அ. க. அ. சித. வெ. சிதம்பரஞ் செட்டியார் | தலைவர் | ,, |
| அள. வீர பெ. சிவப்பிரகாசஞ் செட்டியார் | காரியதரிசி | ,, |
| **1940ம் வருஷம்** | | |
| சா. ராம. சித. ச. ராமசாமி செட்டியார் | காரியதரிசி | ,, |
| **1941ம் வருஷம்** | | |
| சா. ராம. சித. ச. நாச்சியப்ப செட்டியார் | காரியதரிசி | ,, |
| **1946ம் வருஷம்** | | |
| கூ. கரு. நா. நாராயணன் செட்டியார் | தலைவர் | ,, |
| சி. கரு. ஆ. கரு. இராமநாதன் செட்டியார் | காரியதரிசி | ,, |
| **1948ம் வருஷம்** | | |
| கூ. கரு. நா. கண்ணப்ப செட்டியார் | தலைவர் | ,, |
| **1949ம் வருஷம்** | | |
| கூ. கரு. நா. நாராயணன் செட்டியார் | தலைவர் | ,, |
| **1950ம் வருஷம்** | | |
| அள. வீர. வெ. பெ. அருணாசலஞ் செட்டியார் | தலைவர் | ,, |
| கூ. அரு. சித. நா. சோமசுந்தரஞ் செட்டியார் | காரியதரிசி | ,, |
| **1951ம் வருஷம்** | | |
| கூ. கரு. நா. நாராயணன் செட்டியார் | காரியதரிசி | ,, |
| **1953ம் வருஷம்** | | |
| ராம. வீர. ராமசாமி செட்டியார் | தலைவர் | ,, |
| ராம. பெ. அள. அண்ணாமலை செட்டியார் | காரியதரிசி | ,, |
| **1955ம் வருஷம்** | | |
| மு. அள. நடராஜன் செட்டியார் | காரியதரிசி | ,, |
| ராம. அரு. அரு. வீர. ராமசாமி செட்டியார் | தலைவர் | ,, |
| கூ. அரு. க. வயி. சொ. கண்ணப்ப செட்டியார் | காரியதரிசி | ,, |
| **1956ம் வருஷம்** | | |
| கூ. கரு. நா. நாராயணன் செட்டியார் | காரியதரிசி | ,, |
| **1957ம் வருஷம்** | | |
| ராம. பெ. அள. சொக்கலிங்கம் செட்டியார் | தலைவர் | ,, |
| சா. ராம. அரு. ராம. ராமசாமி செட்டியார் | காரியதரிசி | ,, |
| **1959ம் வருஷம்** | | |
| சொ. மு. அ. மெ. மு. ஷண்முகம் செட்டியார் | தலைவர் | ,, |
| **1961ம் வருஷம்** | | |
| மு. சிவ. சிவப்பிரகாசஞ் செட்டியார் | தலைவர் | ,, |
| அரு. சு. சுப்பிரமணியம் செட்டியார் | காரியதரிசி | ,, |
| **1963ம் வருஷம்** | | |
| முருகப்பா அன் சன்ஸ் நடராஜன் செட்டியார் | தலைவர் | ,, |
| அரு. சு. சுப்பிரமணியம் செட்டியார் | காரியதரிசி | ,, |

# 1962-63ம் ஆண்டுக்கு நமது சொசைட்டிக்குத் தேர்ந்தெடுத்திருக்கும் அங்கத்தினர்களின் விவரம்.

| | | | |
|---|---|---|---|
| முருகப்பா அன் ஸன்ஸ் நடராஜன் செட்டியார், தலைவர், | 115 | ஷுவேபோந்தா வீதி, | இரங்கோன் |
| சொ. மு. லெ. சுப்பிரமணியன் செட்டியார். உப-தலைவர், | 57 | ,, | ,, |
| அரு. சு. சுப்பிரமணியன் செட்டியார். காரியதரிசி, | 105 | ,, | ,, |
| கூ. கரு. நா. காசி செட்டியார். உப-காரியதரிசி, | 70 | ,, | ,, |

## காரியசபை அங்கத்தினர்கள். (7)

| | | | | |
|---|---|---|---|---|
| முருகப்பா அன் சன்ஸ் நடராஜன் செட்டியார், | தலைவர், | 115 | ,, | ,, |
| சொ.மு.லெ. சுப்பிரமணியன் செட்டியார். | உப-தலைவர், | 57 | ,, | ,, |
| அருசு. சுப்பிரமணியன் செட்டியார். | காரியதரிசி, | 105 | ,, | ,, |
| கூ. கரு. நா. காசி செட்டியார். | உப-காரியதரிசி, | 70 | ,, | ,, |
| ராம. வீர. ராமசாமி செட்டியார். | அங்கத்தினர், | 120 | ,, | ,, |
| பி. நா. ராம. லெ. வெங்கிடாசலஞ் செட்டியார். | ,, | 94 | ,, | ,, |
| சித. கும. சிதம்பரஞ் செட்டியார். | ,, | 73 | 29-வது வீதி, | ,, |

## நிர்வாக சபை அங்கத்தினர்கள். (17)

| | | |
|---|---|---|
| ராம. நா. ராமசாமி செட்டியார் | 122ஆம் அறை, ஷுவேபோந்தா வீதி, | இரங்கோன் |
| ராம. வீர. ராமசாமி செட்டியார் | 120ஆம் வீ. முரு. அறை, | ,, |
| சித. நா. நாராயணன் செட்டியார் | 118ஆம் சா. ராம.—க. வெ. அறை | ,, |
| வீர. சொ. சுப்பய்யா செட்டியார் | 116ஆம் அறை | ,, |
| அ. க. அ. சித. அழ. சிதம்பரஞ் செட்டியார் | 112ஆம் அ. க. அறை | ,, |
| மு. அழ. ராமசாமி செட்டியார் | 100ஆம் அறை | ,, |
| ச. கரு. நா. நாகப்ப செட்டியார் | 98ஆம் அழ. வீர. பெ. அறை | ,, |
| பி. நா. ராம. லெ. வெங்கிடாசலஞ் செட்டியார் | 94ஆம் அறை | ,, |
| ராம. பெ. நா. நாச்சியப்ப செட்டியார் | 84ஆம் ராம. பெ. அறை | ,, |
| கூ. அரு. சித. நா. சோமசுந்தரஞ் செட்டியார் | 70ஆம் அறை | ,, |
| கூ. க. சித. கண்ணப்ப செட்டியார் | 52ஆம் கூ. கரு. நா. அறை | ,, |
| வே. சுப. சுப்பிரமணியன் செட்டியார் | 32ஆம் அறை | ,, |
| கண. ராம. சொ. சொக்கலிங்கம் செட்டியார் | 57ஆம் சி. அரு. அறை | ,, |
| கதி. கரு. கருப்பஞ் செட்டியார் | 61ஆம் சி. ராம. நா. நா. ராம. அறை | ,, |
| சி. கரு. சி. ராம. கரு. சுப்பிரமணியன் செட்டியார் | 105ஆம் சி. கரு. சி. அறை | ,, |
| தெ. தெ. பெரியகருப்பன் செட்டியார் | 75ஆம் அறை 29வது வீதி | ,, |
| யெ. க. யெ. யெ. யேகப்ப செட்டியார் | 73ஆம் அறை | ,, |

## நியமனம் செய்யப் பெற்ற அங்கத்தினர்கள்.

| | | |
|---|---|---|
| சித. கும. சிதம்பரஞ் செட்டியார் | 73ஆம் அறை | ,, |

## எக்ஸ் அபிஷியோ மெம்பர்கள்.

காரியதரிசி, ரெங்கோன் நாட்டுக்கோட்டை செட்டியார்கள் சங்கம்,
74, ஷுவேபோந்தா வீதி இரங்கோன்
காரியதரிசி, கம்பை தனவைசியர் கல்விக் கழகம் 74, ,, ,,
காரியதரிசி, ரெங்கோன் நாட்டுக்கோட்டை செட்டியார்களின் கோவில்கள்
தரும பரிபாலன சபை, 112/122, ,,

## பர்மாவில் நாட்டுப்புரங்களிலிருந்து தேர்ந்தெடுத்திருக்கும் அங்கத்தினர்கள்

| | |
|---|---|
| லெ. சித. ராம. மாணிக்கஞ் செட்டியார் | பக்கோ |
| சித. அரு. அருணுசலஞ் செட்டியார் | மோல்மேன் |
| ராம. கரு. அழ. அழகப்ப செட்டியார். | ,, |
| சித. நாரா. நாராயணன் செட்டியார் | தட்டோன், சுவைச்சான், பாவுங்கட்டோ, செஞ்சாயி. |
| சா. ராம. மு. சித. மு. பழநியப்ப செட்டியார் | எவுண்டம்—தனுப்பியூ. |
| தி பேங் ஆப் செட்டிநாடு அரு. அழகப்ப செட்டியார். | மூப்பின். |

## கணக்குப் பரிசோதகர்கள்.

| | |
|---|---|
| நா. லெ. ராமநாதன் செட்டியார் | 57ஆம் அறை ஷுவேபோந்தா வீதி, இரங்கோன் |
| சுப. மு. நா. குமரப்ப செட்டியார் | 61ஆம் அறை ,, ,, |

# நூற்றாண்டுவிழாக் குழுவினர்

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | முருகப்பா அன் சன்ஸ் மு. பழ. நடராஜன் செட்டியார், தலைவர் | ஷ்வேபோந்தா வீதி, | 115 | இரங்கோன் |
| 2. | அரு. சு. சுப்பிரமணியம் செட்டியார் காரியதரிசி, | ,, | 105 | ,, |
| 3. | சொ. மு. அ. மெ. மு. ஷண்முகம் செட்டியார், | ,, | 116 | ,, |
| 4. | காந்தி அண்ணாமலை செட்டியார் | பிகாண்டெட் வீதி, | 121 | ,, |
| 5. | அள. வீர. பெ. அருணாசலம் செட்டியார் | ஷ்வேபோந்தா வீதி, | 98 | ,, |
| 6. | வீர. ராம. நா. சாத்தப்ப செட்டியார் | ,, | 57 | ,, |
| 7. | நா. கரு. ராம. இராமநாதன் செட்டியார் | ,, | 122 | ,, |
| 8. | சி. கரு. சி. ராம. சிந. ரெத்தினம் செட்டியார் | ,, | 105 | ,, |
| 9. | கண. மெ. நா. சொக்கலிங்கம் செட்டியார் | ,, | 61 | ,, |
| 10. | ராமானுஜம் அன் கம்பெனி நாராயணன் செட்டியார் | ,, | 57 | ,, |
| 11. | நா. லெ. ராமநாதன் செட்டியார் | ,, | 57 | ,, |
| 12. | லெ. பழ. அருணாசலஞ் செட்டியார் | ,, | 114 | ,, |
| 13. | பேங் ஆப் செட்டிநாடு சீனிவாசன் செட்டியார் | ,, | 84 | ,, |
| 14. | முருகப்பா அன் சன்ஸ் வேலாயுதஞ் செட்டியார் | ,, | 115 | ,, |
| 15. | சொ. சுப. சுப்பிரமணியன் செட்டியார் | கீமந்தான் | | ,, |
| 16. | கும. மதுவப்ப செட்டியார் | ஷ்வேபோந்தா வீதி, | 61 | ,, |
| 17. | ராம. வீர. ராமசாமி செட்டியார் | ,, | 122 | ,, |
| 18. | சித. நாரா. நாராயணன் செட்டியார் | தட்டோன் | | |
| 19. | மு. அண்ணாமலை செட்டியார் | ஷ்வேபோந்தா வீதி, | 93 | ,, |
| 20. | சா. ராம. மு. சித மு. பழநியப்ப செட்டியார் | ,, | 130 | ,, |
| 21. | கரு. ச. நடராஜன் செட்டியார் | 29வது வீதி, | 75 | ,, |
| 22. | நாக. வேலாயுதஞ் செட்டியார் | ஷ்வேபோந்தா வீதி, | 61 | ,, |
| 23. | வயி. ராம. அரு. சுந்தரேசன் செட்டியார் | ,, | 114 | ,, |
| 24. | பழ. சிவ. பழநியப்ப செட்டியார் | ,, | 118 | ,, |
| 25. | ராம. பெ. அள. அ. சொக்கலிங்கஞ் செட்டியார் | ,, | 84 | ,, |
| 26. | சி. கரு. சி. கரு. சிந. காசி செட்டியார் | ,, | 105 | ,, |
| 27. | கூ. அரு. சொ. அரு. அருணாசலஞ் செட்டியார் | ,, | 52 | ,, |
| 28. | சொ. மு. லெ. பெரியகருப்பன் செட்டியார் | ,, | 57 | ,, |
| 29. | சுப. மு. நா. குமரப்ப செட்டியார் | ,, | 61 | ,, |
| 30. | கரு. மெ. மெய்யப்ப செட்டியார் | ,, | 52 | ,, |



## ஸ்ரீ காசி நகரச்சத்திர மானேஜிங் சொசைட்டி

**மகமை**

| | ஆண் | | பெண் | | பிள்ளைகள் | |
|---|---|---|---|---|---|---|
| ஸ்ரீ காசி | | | | | | |
| முதல் தடவை | ரூ. 4 | 25 | ரூ. 3 | 00 | ரூ. 1 | 25 |
| மறு தடவைகள் | 3 | 00 | 2 | 00 | 1 | 00 |
| பிரயாகை | 2 | 50 | 1 | 25 | 0 | 75 |
| அயோத்தி | 2 | 50 | 1 | 25 | 0 | 75 |
| கயை | 3 | 00 | 1 | 50 | 0 | 75 |
| கல்கத்தா | 2 | 50 | 1 | 25 | 0 | 75 |
| காளிகாட் | 1 | 50 | 1 | 00 | 0 | 50 |
| தாரகேசுவரம் | 1 | 00 | 0 | 50 | 0 | 25 |
| கோதாவரி | 1 | 00 | 0 | 50 | 0 | 25 |
| நாசிக் பஞ்சவடி | 2 | 50 | 1 | 25 | 0 | 75 |

## நகரக் கோவில்களின் விவரம்

| | கோவிலின் பெயர் | இறைவன் பெயர் | இறைவி பெயர் |
|---|---|---|---|
| 1. | இளையாற்றக்குடி | கயிலாசநாதர் | நித்யகல்யாணி |
| 2. | மாற்றூர் | ஐநூற்றீசர் | பெரியநாயகி |
| 3. | வயிரவன் கோவில் | வளரொளிநாதர் | வடியுடையம்மை |
| 4. | இரணிக் கோவில் | ஆட்கொண்டநாதர் | சிவபுரந்தேவி |
| 5. | பிள்ளையார்பட்டி | மருதீசர் | வாடாமலர் மங்கை |
| 6. | நேமம் | ஜெயங்கொண்ட சோழீசர் | சவுந்தர நாயகி |
| 7. | இலுப்பைக்குடி | தான்றோன்றியீசர் | சவுந்தர நாயகி |
| 8. | சூரைக்குடி | தேசிகநாதர் | ஆவுடை நாயகி |
| 9. | வேலங்குடி | கண்டீசுவரர் | காமாட்சியம்மை |

## நகரத்தார்களுக்குக் காசி நகரச்சத்திரம் செய்துவரும் உதவிகள்.

1. மானேஜருக்கு முன்பணம் அனுப்புகிறவர்கள் பெயருக்கு அவர்கள் பிறந்த நட்சத்திரங்களில் விசுவேசர் கோவிலில் அபிசேகம் அர்ச்சனை செய்து பிரசாதம் அனுப்புகின்றனர்.

2. கங்கைத் தீர்த்தம் வேண்டும் என்று கேட்பவர்களுக்கு அவரவர் விருப்பம் போல டிரம் அல்லது குடத்தில் கங்கைத் தீர்த்தம் அனுப்பிவைக்கின்றனர். டிரம், குடம் விலைகள் அடிக்கடி மாறிக்கொண்டிருப்பதால், தேவைக்காரர்கள் முன்கூட்டி எழுதி மானேஜர் குறிப்பிடும் தொகையை அனுப்பினால் அவரவர் விருப்பப்படி பாசஞ்சர் ரயிலில் பிரயாகையிலிருந்தாவது காசியிலிருந்தாவது பிரயாகைக் கங்கை அனுப்பி வைக்கப்பெறும்.

3. மோட்ச தீபம் போடுவதற்கு ஏற்பாடு செய்யப்பெறும். அவ்வாறு போடவேண்டும் என்று விரும்புகிறவர்கள் நகரச்சத்திரம், வாரணாசி என்ற விலாசத்துக்குத் தந்தியடித்து இறந்தவர் பெயரையும் தந்தியில் சொல்லி, பணத்தையும் தந்தி மணியார்டரில் அனுப்ப வேண்டும். ஐந்து ரூபாய் அனுப்பினால் நகரேசுவரர் கோவிலிலும் 50 ரூபாய் அனுப்பினால் விசுவேசர் கோவில், விசாலாட்சி கோவில், நகரேசுவரர் கோவில் மூன்றிலும் மோட்ச தீபம் போட்டு, விபூதி பிரசாதங்கள் அனுப்பிவைக்கப்படும். பிரசாதம் அனுப்பி வைப்பதற்குரிய விலாசத்தைத் தந்தியில் தெளிவாகச் சொல்லவேண்டும்.

4. அஸ்தி போடுதல். அஸ்தியை அனுப்பி 50 ரூபாய் செலுத்துபவர்களுக்குப் புண்ணியவாசம் செய்து பிண்டம் போட்டு அஸ்தியையும் பிண்டத்தையும் சேர்த்துக் கங்கையில் கரைத்துக் கங்காபுத்திரர் மேற்படி காரியங்களைச் செய்துவைக்க ஏற்பாடு செய்து, அஸ்தி அனுப்பியவர்களுக்கு விபூதி, குங்குமம், வயிரவர் கயிறு, தீர்த்தச் செம்பு ஆகியவை அனுப்பிவைக்கப்படும். ரூபாய் 50க்குக் குறைந்த தொகை மட்டும் அனுப்பினால், எஞ்சிய தொகையும் வரும்வரை அஸ்தி போட ஏற்பாடு செய்ய இயலாது.

5. காசிக்கு வருபவர்கள் தங்குவதற்கு வசதி செய்து கொடுக்கப்படுகிறது. யாத்ரீகர்கள், சாந்தி சதாபிஷேகம் முதலிய வைதீக நிகழ்ச்சிகளுக்காகவும் சவண்டி சிரார்த்தம் ஹோமம் யக்ஞம் முதலிய சடங்குகள் செய்வதற்காகவும் வருபவர்கள், அந்திய காலத்தைக் காசியில் கழிக்க வரும் காசிவாசிகள், காசி இந்துப் பல்கலைக் கழகத் தேர்வுகள் எழுத வரும் ஆடவர், பெண்டிர் ஆகியோர் வசதியாகத் தங்குவதற்கு நமது சத்திரம் பயன்பட்டு வருகிறது.

மேலே கண்ட வசதிகள் யாவும் நகரத்தார்களுக்குச் செய்து கொடுக்கப்படுகின்றன. காசிச் சத்திரமும் இதைச் சேர்ந்த கிளைச் சத்திரங்களும் தனிப்பட்டவர்களுடைய சொத்து. நகரத்தார்களுடைய வசதிக்காக நகரத்தார்கள் பணத்தில் ஏற்பட்டவை; ஒரு மானேஜிங் சொசைட்டியின் நிர்வாகத்துக்குக் கட்டுப்பட்டவை. இந்தச் சத்திரங்களில் தங்கும் உரிமை, மானேஜிங் சொசைட்டியார் அவ்வப்போது வகுக்கும் சட்ட திட்டங்களுக்கு உட்பட்டு, நகரத்தார்களுக்கு உண்டு. நகரத்தார்கள் மிகப் பொறுப்புடன் சிபார்சு செய்யும் பிற சமூகத்தினரும் சத்திரங்களில் தங்குவதற்கு அனுமதிக்கப்படுகின்றனர். அவ்வாறு சிபார்சு செய்யப்படுபவர்கள் இந்துக்களாகவும் கூடுமானவரை சைவ சமயத்தில் நம்பிக்கை உள்ளவர்களாகவும் இருக்கவேண்டும். சத்திரத்தில் இறைச்சி சமைக்கவோ உண்ணவோ கூடாது என்பதையும் அவர்களுக்குத் தெரிவிக்க வேண்டும்.

## வடஇந்தியாவிலுள்ள நகரத்தார் நிறுவனங்கள்

காசி (வாரணசி)

Nattukkottai Nagara Chatram, Godhowlia, Varanasi 1., U. P.
Tel. Address: Nagara Chatram, Varanasi.

பிரயாகை

Nattukkottai Nagara Chatram, No. 149, Mori Daraganj P. O.
Allahabad, 6.

அயோத்தி

Nattukkottai Nagara Chatram, Ayodhya, Fyzabad, U. P.

கயை

Nattukkottai Nagara Chatram, Chand Choura, Gaya. (Bihar)

கல்கத்தா

Nagarathar House, 34, Ezra Street, Calcutta - 1.
Tel. Address: "Chatram" Calcutta.

காளிகாட்

Nagara Chatram, Kalighat, Calcutta.

தாரகேசுவரம்

Nagara Madam, Tarakeswar, Near Calcutta, (West Bengal)

கோதாவிரி

Nagara Madam, No. 9/70, Aryapuram, Rajahmundry P. O.
Godavari Dist. (Andhra Pradesh).

நாசிக் பஞ்சவடி

Nattukkottai Nagara Chatram, Kartik Swami Mandir,
Panchavati, Nasik (Maharastra).



காசி நகரச்சத்திரத்திலிருந்து விசுவேசருக்குப் பூசைப் பொருள்கள் (சம்போ) போகும் காட்சி.

Ceremonial Daily procession of Puja articles from Nattukkottai Chatram to the Visvanath Temple, Varanasi.

दैनिक पूजन सामग्री :—

नाट्टुक्कोट्टै सराय से विश्वनाथ के मंदिर ले जाते समय ।






காசி நகரச்சத்திரத்திலுள்ள கல்வெட்டு.

Inscription in the Nattukkottai Chatram, Varanasi, to mark the opening of the building.

**काशी नगर-सराय में शिलालेख-उद्घाटन**






அயோத்தியிலுள்ள கல்வெட்டு.

Inscription in Nattukkottai Chatram, Ayodhya.

**अयोध्या नाट्टुक्कोट्टै सराय में शिलालेख**

# மானேஜிங் சொஸைட்டியின் வரலாறு

## காசித் தொடர்பு

சிவபத்தி மிக்காராய், தமிழ் நாட்டிலும் கடல்கடந்த நாடுகளிலும் பாடல்பெற்ற தலங்கள் முதலியவற்றில் புதிய கோயில்களைக் கட்டியும், மன்னர்கள் கட்டிய கோயில்களைப் பேணியும் புதுப்பித்தும் வந்த பெருமை பல நூற்றுண்டுகளாக நகரத்தார்களைச் சேரும். தல யாத்திரை செய்வதில் நகரத்தார் ஆடவர்க்கும் பெண்டிர்க்கும் உள்ள ஈடுபாடு உலகறிந்தது. இவர்களில் பலர் இராமேசுவரத்திலிருந்து மிருத்திகை எடுத்தும் கோடித் தீர்த்தம் கொண்டும் கால்நடையாகக் காசிக்குச் சென்று விசுவநாதரை வழிபட்டு வருவார் ஆயினர்.

## சிவராத்திரி உற்சவம்

19-ம் நூற்றுண்டுக்கு முற்பட்ட காலத்தில் போக்குவரத்து வசதிகள் மிகக் குறைவாக இருந்தன. அந்நாட்களில் நடந்து சென்று தல யாத்திரை செய்பவர் பல இன்னல்களுக்கு ஆளாயினர். இக்காரணத்தால், பலர் சேர்ந்து காசி யாத்திரையை மேற்கொள்வதும், கூடிய வரை சிவராத்திரியன்று காசியில் இருக்குமாறு பயணம் அமைத்துக்கொள்வதும் நகரத்தார்களுள் வழக்கமாக இருந்துவந்தது.

## இடைக்கால ஏற்பாடு

1801 முதல் கல்கத்தாவில் அரிசி முதலிய பொருள்களை ஏற்றுமதி செய்து, நகரத்தார்கள் நாளும் பெருகிச் செல்வத்தில் திளைத்தனர், செல்வாக்கும் பெற்றனர். கப்பல் கம்பெனிகள் நகரத்தார்களுக்கு ஆண்டு இறுதியில் கப்பல் கேள்வுத்தொகையில் ஒரு பகுதியைத் திருப்பிக் கொடுத்தனர். இவ்வாறு கிடைத்த ரீபேட் தொகையைப் பொது நிதியாக வைத்திருந்து தர்மத்திற்குச் செலவிடுவதென்று கல்கத்தா நகரத்தார் முடிவு செய்தனர். ஆண்டுதோறும், இவ்வகையில் 25,000 ரூபாய்வரை வருமானம் வந்துகொண்டிருந்தது.

முத்தி தரும் தலங்கள் ஏழில் முதன்மையானதாகிய காசியில், தர்மம் செய்வதே சிறந்தது என்று கல்கத்தா நகரத்தார்கள் கருதினர். குமரகுருபரர் மடத்தில் சில காலமும் பின்னர் தற்காலிகமாக வேறு ஓர் இடத்திலும் இருந்துகொண்டு கல்கத்தா நகரத்தார்கள் சிவராத்திரி போன்ற திருவிழாக்களில் விசுவேசுவரருக்கு அபிஷேகங்கள் நடத்தவும் ஏழைகளுக்கு அமுது படைக்கவும் ஏற்பாடு செய்தனர்.

## சொந்தக் கட்டிடம்

மேற்கண்ட முறையில் 50 ஆண்டுகள் அபிஷேகம் அன்னதானம் முதலியன நடைபெற்றன. அதன் பின்னர், ஹிந்துஸ்தானி கோஷாயி சாதுக்கள் மடம் விலைக்கு வாங்கப் பெற்றது. 1863-ல் ருத்ரோத்காரி ஆவணி 10உயில் அந்த மடம் சில பகுதிகள் புதுப்பிக்கப்பெற்றும் பெரும் பகுதி புதிதாகக் கட்டப்பெற்றும், நாட்டுக்கோட்டை நகரச் சத்திரம் என்ற பெயரில் தொடங்கப் பெற்றது. இந்த நன்னாளின் நூற்றுண்டு விழாவே இப்பொழுது கொண்டாடப்பெறுகின்றது. அன்றுமுதல் விசுவேசுவரர் விசாலாட்சி அன்னபூரணி துண்டிவிநாயகர் காலபைரவர் முதலிய மூர்த்திகளுக்கு நாள்தோறும் பூசைகள் சிறப்பாகச் செய்யப்பட்டு வருகின்றன. அந்தணருக்கும், துறவிகளுக்கும், ஏழை எளியோர்க்கும் உணவு படைக்க அன்னதானக் கட்டளைகள் ஏற்படுத்தி, சத்திரத்தின் முக்கிய பணிகளுள் ஒன்றாக நாள்தோறும் அன்னதானம் செய்யப் பெறுகிறது.




No.23 of 1934-35.

IN THE OFFICE OF THE REGISTRAR OF JOINT STOCK COMPANIES, BURMA.

In the matter of Sri Kasi Nattukottai Nagara Satram Managing Society

I do hereby certify that pursuant to Act XXI of 1860 of the Legislative Council of India, entitled an Act for the registration of Literary, Scientific and Charitable Societies, Memorandum of Association and certified copy of Rules and Regulations have this day been filed and registered in my office and that the said Society has been duly incorporated and is a Literary, Scientific and Charitable Society.

Registration fee Rs.50/-.

Dated Rangoon, 8th September 1934.




Sd/- Ba Tha

Assistant Registrar, Joint Stock
Companies, Burma.
10-9-1934.

*******

"Certified True Copy"




Assistant Registrar, 16/9/38
Joint Stock Companies, Burma.

## பெருவளர்ச்சி

1880 முதல் கல்கத்தா நகரத்தார் பெரிய அளவில் செல்வம் ஈட்டினர். அதற்கேற்ப கல்கத்தா, காளிகாட், பிரயாகை, அயோத்தி, கயை, தாடகேசுவரம், கோதாவரி ஆகிய தலங்களில் தங்கள் தருமங்களைப் பெருக்கினர். கட்டிடங்கள் கட்டி ஆங்காங்கேயுள்ள சத்திரங்கள் இனிது நிகழவும் மூர்த்திகளைப் பிரதிட்டை செய்யவும் பூசை முதலிய தெய்வப் பணிகள் செம்மையாய் நடைபெறவும் மூலதனம் வைத்தனர். இதே காலத்தில், பம்பாய் நகரத்தார்கள் நாசிக் பஞ்சவடியில் சத்திரங்கள் நிறுவி தண்டாயுதபாணி திருவுருவத்தைப் பிரதிட்டை செய்தனர்.

## கல்கத்தா விசாரணை

ஷெ சத்திரங்கள் கல்கத்தா நகரத்தார்களின் விசாரணையில் (மேற்பார்வையில்) இயங்கி வந்தன. நாசிக் பஞ்சவடிச் சத்திரம் மட்டும் பம்பாய் நகரத்தார்கள் பார்வையில் இருந்துவந்தது.

பல காரணங்களால் கல்கத்தாவில் நகரத்தார்களின் கடைகள் எண்ணிக்கையில் குறைந்தன. பல கடைகள் கல்கத்தாவிலிருந்து இரங்கூனுக்கு மாற்றப்பெற்றன. செல்வம் பெருக்கிய இரங்கூன் நகரத்தார்கள் சிவமும் பெருக்கப் பெருவிருப்பம் கொண்டனர்.

## இரங்கூன் விசாரணை

1925-ம் ஆண்டுக்குப் பின் இரங்கூன் நகரத்தார்கள் காசிச் சத்திரத்திற்கு மகமை எழுதினர். பிறகு இரங்கூன் நகரத்தார்களுடைய மேற்பார்வையில் காசி முதலிய சத்திரங்களின் ஆட்சி நடைபெறத் தொடங்கியது. இந்த ஆட்சி முறை இன்னும் சிறப்பாக விளங்குவதற்காக 1934-ம் ஆண்டில் இரங்கூன் நகரத்தார்கள் கூடி ஒரு ''சொசைட்டி''யை உருவாக்கினர்.

## சொசைட்டியின் தோற்றம்

10-9-1934-ல் பவ ஆவணி 25உ ''ஸ்ரீகாசி நாட்டுக்கோட்டை நகரச் சத்திரம் மானேஜிங் சொசைட்டி'', இரங்கூன் சப்ரிஜிஸ்தர் ஆபீசில் பதிவு செய்யப்பெற்றது.

தொடக்க அறிக்கை, சொசைட்டியின் குறிக்கோள்களைத் தெளிவாகக் கூறுகிறது:—

### ஸ்ரீ காசி நாட்டுக்கோட்டை நகரச் சத்திர நிர்வாக சபையின் மெமோராண்டம் ஆப் அசோஷியேஷன் என்னும் தொடக்க அறிக்கை.

1. இச்சபை ''ஸ்ரீ காசி நாட்டுக்கோட்டை நகரச்சத்திர நிர்வாக சபை'' யென்றழைக்கப்படும்.
2. இதன் பதிவு செய்யப்பட்ட ஆபீசு இரங்கூன் மொகல் வீதி 74-வது இலக்கமிட்ட கட்டிடத்திலுள்ள பர்மா நாட்டுக்கோட்டைச் செட்டியார்கள் சங்கக் காரியாலயத்திலிருக்கும்.
3. சபையின் நோக்கங்கள் :

(ஏ) இந்தியாவிலும் பர்மாவிலும் காசி நகரச்சத்திர ஸ்தாபனங்கள் என்று வழங்கப்பட்டு காசி, அயோத்தி, கயா, பிரயாகை, தாடகேச்வரம், கோதாவரி முதலிய ஸ்தலங்களில் ஏற்படுத்தப் பட்டிருக்கும் தர்ம ஸ்தாபனங்களைக் கண்காணித்து, நடப்பித்து, பராமரித்து வருதல்.

(பி) வட இந்தியாவுக்கு யாத்திரையாகச் செல்லும் எல்லா நாட்டுக் கோட்டைச் செட்டியார்களுக்கும் வேண்டிய சௌகரியங்களைச் செய்து கொடுத்தல்; காசியிலுள்ள ஸ்ரீ காசி விஸ்வேஸ்வரர் கோயிலிலும் மேற்கண்ட ஊர்களிலிருக்கும் தேவாலயங்களிலும் தினசரி பூஜை மற்றும் மத சம்பந்தமான காரியங்களை நடத்துதல்; அல்லது நடத்தி வைத்தல்.

(ஸி) வட இந்தியாவிற்கு யாத்திரையாகப் போகும் நாட்டுக் கோட்டைச் செட்டியார்களுக்கு அன்னவர்களால் ஏற்படுத்தப் பட்ட இடங்களிலும் சத்திரங்களிலும் விடுதி கொடுத்து வசதிகள் செய்து கொடுத்தல்.

(டி) நாட்டுக்கோட்டைச் செட்டியார்கள் சார்பாகச் சகல சடங்கு களையும், கிரியைகளையும் நடத்திவைத்தலும், அன்னவர் களுக்கு வட இந்தியாவிலிருந்தும் வேறு இடங்களிலிருந்தும் அவ்விதமான சடங்குகளுக்குச் சம்மந்தப்பட்ட எல்லாப் பொருள்களையும் வஸ்துக்களையும் அனுப்புதலும்.

(இ) ஸ்ரீ காசி நகரச்சத்திரத்திற்காக அதன் நிர்வாகத்திற்கும் அதை நீடித்து நடத்துவதற்கும் அல்லது மேற்கொண்டு சொத்தைச் சம்பாதிப்பதற்கும் வேண்டிய நிதி அல்லது மூலதனம் நன்கொடை வகையராவை பொதுவாக வசூல் செய்தலும், சிறப்பாக எல்லாவிடங்களிலுமுள்ள நாட்டுக்கோட்டைச் செட்டியார் கடைகளிலிருந்தும் தனி நபர்களிடமிருந்தும் குறிப்பிட்ட விகிதங்கள் பிரகாரம் மகமையை வசூல் செய்தலும் அவ்விதம் கிடைக்கும் பணங்களைத் தகுந்த முறையில் வட்டிக்குப் போட்டு வைத்தலும்.

(எப்) ஸ்ரீ காசி நகரச்சத்திரத்தின் சொத்துக்களை காரியக் கமிட்டியோ பொதுச்சபையோ தீர்மானம் செய்தால் விற்கலாம்.

4. கீழ்க்கண்ட நபர்கள் 1934ம் வருஷம் ஏப்ரல் மாதம் 13ந் தேதி முதல் 1937-ம் வருஷம் ஏப்ரல் மாதம் 13-ந் தேதி வரையுள்ள மூன்று வருஷ காலத்துக்கு காரியக்கமிட்டி அங்கத்தினர்களாகவும் உத்தியோகஸ்தர்களாகவு மிருப்பார்கள் :—

தலைவர்

(1) சா. அ. ச். இராமன் செட்டியார்,
நிம்பர் 116, மொகல் வீதி, இரங்கூன், பாங்கர்.

உபதலைவர்

(2) மு. அழ. நாராயணன் செட்டியார்,
நிம்பர் 100, மொகல் வீதி, இரங்கூன், பாங்கர்.

காரியதரிசி

(3) சுப. க. அ. லெட்சுமணன் செட்டியார்,
நிம்பர் 70, மொகல் வீதி, இரங்கூன், பாங்கர்.

(4) ராம. அரு. அரு. ராம. அருணசலஞ் செட்டியார்,
நிம்பர் 107, மொகல் வீதி, இரங்கூன், பாங்கர்.

(5) கூ. அரு. க. சுப்பிரமணியன் செட்டியார்,
நிம்பர் 62, மொகல் வீதி, இரங்கூன், பாங்கர்.

(6) அ. க. அ. சித. வெ. சிதம்பரஞ் செட்டியார்,
நிம்பர் 112, மொகல் வீதி, இரங்கூன், பாங்கர்

(7) அழ. வீர. பெ. சிவப்பிரகாசஞ் செட்டியார்,
நிம்பர் 98, மொகல் வீதி, இரங்கூன், பாங்கர்.

### மகமை

இரங்கூன் நகரத்தார்கள் தண்டாயுதபாணி கோயிலுக்குத் தைப்பூச மகமை எழுதிவருவதோடு காசிச் சத்திரத்துக்கு ரூ. 1000க்கு அரைக்கால் வீதம் ஆண்டுதோறும் மகமை எழுதி வருவதென்று ஒருமனமாய்த் தீர்மானித்தனர். பர்மாவில் நாட்டுப்புறங்களில் உள்ள நகரத்தார்களை ரூ. 1000க்கு வீசம் வீதம் மகமை எழுதச் செய்வதென்றும் மலாயா, செய்கோன், இலங்கை நகரத்தார்களுக்கும் எழுதி மகமை வசூலிப்பதென்றும் அக் கூட்டத்தில் முடிவுசெய்யப்பெற்றது.

### நடப்புச் செலவு

கல்கத்தாவிலும், கோதாவரியிலும் அந்தந்த ஊர்களில் கிடைத்த வீட்டு வாடகைகளைக்கொண்டே எல்லாச் செலவுகளும் செய்யப்பெற்றுவந்தன. ஏனைய 6 சத்திரங்களுக்கும் வாடகைக் கட்டிடத்தில் நடந்துவந்த அரித்துவார் சத்திரத்திற்கும் இரங்கூன் தலைமைக் காரியாலயத்திலிருந்து மாதம் ரூ. 3,000/- அனுப்பப்பெற்று வந்தது. பிறகு செலவுகளைச் சிக்கனமாகச் செய்ய ஏற்பாடாகி ரூ. 2,000/- மட்டும் அனுப்பப் பெற்றது.

### நிர்வாகம்

நிர்வாக சபையார் சத்திரங்களின் கட்டிடங்களை அவ்வப்போது பழுதுபார்த்தும் புதுப்பித்தும் தேவையில்லாத இடங்கள் முதலியவற்றை விற்றும் சத்திரங்களின் நலத்தைப் பேணி வந்திருக்கிறார்கள்.

காசி விசுவேசர் கோவில் மகந்து பங்காளிகளுக்குள் கோவில் நிர்வாகம் பற்றிச் சச்சரவு உண்டாகி அலகாபாத்தில் வழக்கு நடந்தது. மகந்துகளுக்குள் ஒற்றுமையில்லாத நிலையில், காசி விசுவேசர் கோயில் நிர்வாகத்தை நடத்தும் பொறுப்பை நகரத்தார்களே ஏற்க வேண்டுமென்று அலகாபாத் உயர்நீதி மன்றம் ஆணையிட்டது. இந்நிகழ்ச்சி நகரத்தார்களுடைய ஆழ்ந்த தெய்வபக்திக்கும் சீலத்துக்கும் அவை வடஇந்திய மக்களால் மதிக்கப் பெற்றதற்கும் எடுத்துக்காட்டாகும். நகரத்தார்களின் இறைபணியைப் போற்றிப் பிறப்பிக்கப்பட்ட இந்த ஆணைக்கிணங்க காசி நகரச் சத்திரம் ஏஜண்டு, கோயில் ரிசீவராக இருந்து வருவதற்கு, நிர்வாக சபை இசைவு தெரிவித்தது.

### நாசிக் பஞ்சவடி

நகரத்தார் பலருடைய வேண்டுகோளுக்கிணங்க, நிர்வாக சபையார் நாசிக் பஞ்சவடி நகரச்சத்திரம், கார்த்திகைச்சுவாமி கோவில், அவைகளின் சொத்துக்கள் ஆகியவற்றை ஒப்புக்கொண்டு 1940-ம் ஆண்டு முதல், அவற்றின் ஆட்சியையும் பொறுப்புடன் கவனித்து வருகின்றனர்.

## 1942 — 1952

1942-ல் பர்மாவில் ஜப்பானியருடைய ஆட்சி ஏற்பட்டு, இந்தியாவிற்கும் பர்மாவிற்கும் போக்குவரத்து இல்லாதிருந்தது. இதனால் நிர்வாக சபை செயலாற்ற இயலாது போயிற்று.

நிர்வாக சபையின் ஆட்சிக்குட்பட்ட தர்ம ஸ்தாபனங்கள் யாவும் இந்தியாவில் இருந்ததால் அவற்றை நடத்தும் பொறுப்பையும், செலவுக்குப் பணம் அனுப்பும் கடமையையும் இந்தியாவில் இருந்த நகரத்தார்கள் பலர் ஏற்றுச் செவ்வனே செய்தனர். இதைப்பற்றிய விவரங்களை இம்மலரின் பிறிதொரு பகுதியில் காணலாம்.

நெருக்கடியான ஒரு காலத்தில் இந்தியாவில் உள்ள நகரத்தார்கள் இந்த ஸ்தாபனங்களை நடத்தியும் விசுவேசர் கைங்கரியம் ஒரு நாளும் தடைப்படாது நன்றாகச் செய்தும் சொசைட்டியின் பொறுப்பைத் தங்கள் கடமையாகக்கொண்டு நிறைவேற்றியது பொன் எழுத்துக்களில் பொறிக்கத்தக்கது.

### போருக்குப் பின்

8-6-1953ல் விஜய வைகாசி 26வ இரங்கூன் நகரத்தார்கள் கூடி தலைவர், உப தலைவர், காரியதரிசி முதலியவர்களையும் நிர்வாக சபை, காரிய சபை அங்கத்தினர்களையும் தேர்ந்தெடுத்தனர்.

மலாய் நாட்டில் நன்கொடை வசூலிப்பதற்கான முயற்சிகளை சொசைட்டி மேற்கொண்டது. சொசைட்டி பிரதிநிதிகளாக இரங்கூன் சொ. மு. அ. மெ. ராம. ஏஜண்டு பழ. ஷண்முகம் செட்டியார் அவர்களும், ராம. பெ.

GOVERNMENT OF BURMA

SIMLA

D. O. No.

In the 3rd October 1942.

CERTIFICATE.

The Sri Kasi Nattukottai Nagara Satram Managing Society was duly registered on the 8th September 1934 under Act XXI of 1860 as a literary, scientific and charitable society. Present conditions no longer enable the Society to operate in Burma but in accordance with the Memorandum of Association of the Society its principal functions have always been in India and the Government of Burma are satisfied that the Society is now carrying out its functions in India.

2. This certificate is furnished by order of the Government of Burma.

I.C.S.,
Secretary to the Government of Burma.

அழ. ஏஜண்டு அண்ணாமலை செட்டியார் அவர்களும் பினாங்கு முதல் சிங்கப்பூர் வரை பல ஊர்களுக்குச் சென்று நகரத்தாரவர்களைச் சந்தித்தனர். இதன் பயனாக மலாயா நகரத்தார்கள் ரூ. 80,666 நன்கொடை வழங்கினர். இவ்வாறு ஒரு பெருந்தொகை தந்து காசியம் பதியில் நடைபெறும் சிவத் தொண்டுக்கு உதவிய மலாயா நகரத்தாரவர்களுக்கு நிர்வாக சபையார் தங்கள் நன்றியைத் தெரிவித்துக் கொள்வதுடன், காசி விசுவேசர் திருவருளால் நன்கொடையாளருக்கு எல்லா நலன்களும் உண்டாகப் பிரார்த்திக்கின்றனர்.

1955-ம் ஆண்டில், காசியிலுள்ள கட்டிடங்கள், தேவகோட்டை தி. ராம. தி. சு. தி. தின்னப்ப செட்டியாரவர்கள் மேற்பார்வையில் நிர்வாக சபையாரால் நல்ல முறையில் பழுது பார்க்கப்பெற்றன.

வரவேண்டிய தொகைகளுக்காக சொசைட்டியார் ஒப்புக்கொண்ட நிலங்கள், பர்மா அரசாங்கத்து நிலத் தேசியமயச் சட்டப்படி 1955ல் தேசியமயமாக்கப் பெற்றதால் வருவாய் குறைந்தது. இரங்கூன் நகரத்தார்கள் மகமையும் நன்கொடையும் தந்ததும் 1955-56ல் குறிப்பிடத்தக்க நிகழ்ச்சி.

1957-58-59 ஆம் ஆண்டுகளில் எல்லாக் கிளைச் சத்திரங்களிலும் சிறுசிறு மராமத்து வேலைகள் நடைபெற்றன. பிரயாகையில் ரூ. 5,000 வரை செலவு செய்து அங்குள்ள கட்டிடத்தில் பல சீர்திருத்தங்கள் செய்யப்பெற்றன. 1958-59ல் செய்கோன் நகரத்தார் ரூ. 3000 அனுப்பியுதவினர்.

1959-60-ஆம் ஆண்டில் சொசைட்டிப் பிரதிநிதிகளாக இரங்கூன் சொ. மு. அ. மெ. மு. ஏஜண்டு பழ. ஷண்முகம் செட்டியார் அவர்களும், ராம. வீர. ராமசாமி செட்டியார் அவர்களும் ஸ்ரீ காசிக்குப்போய் அவ்விடத்தில் (அன்றுட உபயோகத்தில் இல்லாதிருந்த) உபரி நகைகளும் வெள்ளிச் சாமான்களும் ரூ. 44,579க்கு விற்றுக் கொடுத்தனர். அப்பணம் காசி யுனைட்டெட் கமர்சியல் பேங்கில் டிப்பாசிட் செய்யப்பெற்றது.

7-11-60ல் நடைபெற்ற விசேஷப் பொதுக் கூட்டத்தில் நம் ஸ்தாபனத்தை இரங்கோன் சொசைட்டி நிர்வாகப் பொறுப்பிலேயே இந்தியாவில் ரிஜிஸ்டர் செய்யலாம் என்று தீர்மானிக்கப்பெற்றது.

11-2-62ல் காசியிலுள்ள நமது நகரேசுவரர் கோவிலிலுள்ள மூர்த்திகளுக்கு மருந்து சாத்தி அஷ்டபந்தன மஹா கும்பாபிஷேகம் செய்யப்பெற்றது.

9-4-62ல் நடைபெற்ற பொதுக்கூட்டத்தில் சோபகிருது ஆவணி 10-ல் நூற்றுண்டு விழாவைச் சிறப்பாகக் கொண்டாடுவதென்று முடிவு செய்யப்பெற்று அதற்கென் ஒரு குழு நியமிக்கப்பெற்றது. நூற்றுண்டு விழா நினைவாக, பெரியதொரு கட்டிடம் வாங்கி அதைக் காசிச் சத்திரத்தின் மூலதனமாக அமைப்பதென்றும் முடிவு செய்யப்பெற்றது.

கல்கத்தா நகரேசுவர் கோவிலுக்குப் புதிய சிங்கார முருகேசர் சிலாபிம்பம் செட்டிநாட்டில் தக்க ஸ்தபதிகளால் செய்வித்து 1963-ல் கொண்டுவரப்பெற்றது.

## நிர்வாகச் சிக்கல்கள்

இந்தியாவில் ஐந்து இராச்சியங்களில் இந்த ஸ்தாபனத்தின் கிளைகள் உள்ளன. ஆங்காங்கு உள்ள சத்திரங்களும் கோயில்களும் சொத்துக்களும் அந்தந்த இராச்சியத்தில் செய்யப்படும் சட்ட திட்டங்களுக்கு உட்பட்டு நடத்த வேண்டியதிருக்கிறது. அந்த இராச்சியங்களின் சட்டசபைகளால் புதியதாக நிறைவேற்றப்படும் மத தர்ம ஸ்தாபனச் சட்டங்கள் நம்மைப் பெரிதும் பாதிக்கின்றன. சில 'ரிட்டர்ன்'களைத் தாக்கல் செய்ய நேரிடுகிறது. சில சட்டங்களின்படி நமது சத்திரங்களை அந்தந்த இராச்சியத்து அதிகாரிகளிடம் பதிந்துகொள்ள வேண்டியதிருக்கிறது.

சொத்துக்களின் நிர்வாகமும், சத்திரங்களை நிர்வகிக்கத் தகுதியான ஆட்களை நியமித்து அவர்களைக் கண்காணிப்பதும் இவ்வாறே பொறுப்பும் சிக்கலும் நிறைந்த பிரச்சினைகள் ஆகும். சொசைட்டியார் தங்களால் இயன்ற வரை இந்தக் கடமைகளை நன்கு நிறைவேற்றி வருகின்றனர்.

## நன்றியுரை

நமது தரும ஸ்தாபனங்களுக்கு தாராளமாக நன்கொடை தந்து உதவிவரும், பர்மா, மலாயா, செய்கோன், இலங்கை நகரத்தார்களுக்கும், காசிக்கும் ஏனைய தலங்களுக்கும் வந்து பால் கட்டளை முதலியவற்றுக்குப் பணம் தந்து உதவியுள்ள மெய்யன்பர்க்கும் பன்னீர், சந்தனம், ஜவ்வாது, அரகஜா முதலிய பொருள்களைத் தொடர்ந்து அனுப்பிவரும் கொடையாளர்களுக்கும் நமது சொசைட்டியின் சார்பாக நன்றி கூறுவது எங்கள் கடமையாகும்.

நன்கொடை விவரங்களும், கணக்குகளும் சொசைட்டி ஆண்டுதோறும் வெளியிட்டுள்ள அறிக்கையில் தொகுக்கப்பெற்றிருக்கின்றன.

நம் சொசைட்டியின் வளர்ச்சிக்காகவும் சமயக்கல்வி வளம்பெறவும் பர்மா கம்பை தன வைசியர் கல்விக்கழகத்தார் கியா ஒரு லட்சத்து ஒன்றும், கோலாலம்பூர் நகரத்தார்கள் ரூபாய் ஓராயிரத்து ஒன்றும் மலாயா சுங்கைப்பஹாப் சுப. அரு. அருணாசலம் செட்டியார் அவர்கள் ரூபாய் ஐயாயிரமும் மற்ற அன்பர்கள் பல வாறும் நன்கொடை கொடுத்திருப்பதை நன்றி யுடன் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

முக்கியமாக நகரத்தார் பெண்மக்களைப் பாராட்ட விரும்புகிறோம். இவர்கள் நாளும் சிவம்பேணி ஆகமப்படி வழிபாடு செய்து தீர்த்தந்தோறும் புனித நீராடுவர். காசி முதலிய தலங்களுக்கு ஸ்பெஷல் ரயில்களில் யாத்திரையாக வந்து இவர்கள் தம் மரபினர் வழி நின்று சைவ சமயத்தைக் காத்து வருகின்றனர். அறச்செயல்களுக்கு அள்ளிக்கொடுத்து ஆக்கந்தந்து மன நிறைவு பெறுதலே தங்கள் பிறவிப் பெரும் பயனெனக் கருதும், இந்தத் தாய்மார்களைப் பெரிதும் போற்றிப் புகழ்தல் பொருத்தமேயாகும்.

இந்த 100 ஆண்டுகளில் சத்திரங்களின் நிர்வாகப் பொறுப்பும் பிற தொண்டுகளும் செய்துவந்துள்ள அனைவரும் நமது நன்றிக்கும் பாராட்டுக்கும் உரியவர்கள் ஆவர்.

இரங்கூனில் சொசைட்டியின் தலைவர், துணைத்தலைவர், காரியதரிசி, உபகாரியதரிசி, காரிய சபை, நிர்வாக சபை அங்கத்தினர்கள் ஆகிய பதவிகள் வகித்துப் பணிபுரிந்து வந்த வர்களுக்கும் சொசைட்டியின் பிரதிநிதிகளாக இந்தியாவுக்கும் மலாயாவுக்கும் சென்று வந்துள்ள பேரன்பர்களுக்கும் இரங்கூன் அலுவலகப் பணியாளர்க்கும் எம் நன்றி உரியது.

இரங்கூன் நாட்டுக்கோட்டைச் செட்டி யார்களின் கோயில்கள் தர்ம பரிபாலன சபையும், கம்பை தனவைசியர் கல்விக் கழகமும், பர்மா நாட்டுக்கோட்டைச் செட்டி யார்கள் சங்கமும் இந்த ஸ்தாபனத்துடன் இணைந்து பணிபுரியும் சகோதர ஸ்தாபனங்கள் ஆகும். அவற்றின் ஆட்சியாளர்கள் பல உதவிகளைச் செய்து வருகிறார்கள், அவர் களுடைய ஒத்துழைப்பைப் பெரிதும் போற்று கிறோம்.

மேற்கூறிய எல்லோர்க்கும் நலன்கள் அனைத்தும் உண்டாக வேண்டுமென்று காசி விசுவேசுவரர் திருவருளை மனமொழி மெய் களால் இறைஞ்சுகின்றோம்.

## முடிவுரை

நகரத்தார்கள் காசியம்பதியில் சத்திரம் கட்டி அபிஷேக ஆராதனைகளை மேற்கொள் வதற்கு முன்னர் அங்கு ஆராதனைகளும், நைவேத்தியமும் முறையாக நடைபெறவில்லை. நகரத்தார்களால்தான் அவை ஒழுங்கான வடிவம் பெற்றுள்ளன. மகந்துகளைக் கலந்து, விசுவேசுவரருக்குத் திருவனந்தல் உச்சிக்காலம் அர்த்தசாமம் என்ற மூன்று காலப் பூசைகளை என்றென்றும் நடத்திவரும் உரிமையை நாம் பெற்றோம். எல்லா மூர்த்திகளுக்கும் நாள் தோறும் மலர் அனுப்ப நந்தவனம் அமைத் தோம். பல்லாண்டுகள் சொந்தமாகப் பசுமடம் நடத்திவந்தோம். இந்த நூறாண்டுக் காலமும் நாள் தவறாமலும் நாழிகை தவறாமலும் விசுவேசர்க்குரிய பூசைகளை சைவ ஆகமப் படியும் அரசரும் பிற கோடீசுவரர்களும் கண்டால் பொறாமைப்படத்தக்கவாறும் நடத்தி வந்திருக்கிறோம்.

1940 வரை நாள்தோறும் 350 பேருக்கு அன்னதானங்கள் செய்துவந்தோம். அந்தண ரும் ஏழைகளும் நோயாளிகளும் மாணவர் களுமாகப் பல்வகை மக்கள் இவற்றால் பெரும் பயனடைந்தனர். அளவு சுருங்கினாலும், இன்றளவும் இத் தருமங்களைத் தொடர்ந்து செய்து வருகிறோம்.

எத்தனையோ சமூகங்கள் சாதிகள் இந்திய நாட்டில் உண்டு. கவியரசர் பாரதியார் பாடிய வாறு, 'ஆயிரமுண்டு இங்கு சாதி'. ஆயினும் வட இந்தியா எங்கும் உரிமையோடு ஒரு பொது இடம் உள்ளவர்கள் நாம் மட்டுமே ஆவோம். எவரையும் எதிர்பாராது தலந் தோறும் தங்கி இறை வழிபாடு செய்யவும் கவலையின்றிக் காசி யாத்திரை தொடங்கவும் நமக்கு வசதி இருந்து வருகிறது.

இந்தத் தருமங்கள் தொடர்ந்து நடந்து வரவும் இன்னும் பெருகவும் நகரத்தார்கள் தாராளமாக நன்கொடை வழங்கிக் காசி விசுவேசர் அருளால் நலம் பல பெற்று மேன் மேலும் செல்வம் ஈட்டி வாழ்வாங்கு வாழ்வார் களாக!

காசி விசுவேசர் துணை.

மு. பழ. நடராசன் செட்டியார்
தலைவர்.

சொ. மு. லெ. சுப்பிரமணியன் செட்டியார்
துணைத்தலைவர்.

அரு. சு. சுப்பிரமணியன் செட்டியார்
காரியதரிசி.

கூ. கரு. நா. காசிச் செட்டியார்
உபகாரியதரிசி.

இரங்கூன்,
18—8—63

# கங்கை

கங்கை இந்தியாவின் மிகப் பெரிய ஆறு. உலகப் பெரிய ஆறுகளுள் ஒன்று. சமயத் தொடர்புடையது; இந்துக்களால் புனித ஆருகப் போற்றப்படுவது. நீளம் 1,557 மைல். தென் இமயமலையில் கங்கோத்திரி என்னும் இடத்துக்குக் கடல் மட்டத்திலிருந்து 13,800 அடி உயரத்துக்கு மேலுள்ள பனிக்குகையில் பாகீரதி ஆறு தோன்றுகிறது. அவ்வாற்றுடன் ஜான்ஹவி, அளகநந்தா என்ற ஆறுகள் சேர்ந்து கங்கையாருகின்றது. இது சுகி என்ற இடத்தில், இமயமலையைத் துளைத்துக்கொண்டு தென்மேற்கில் திரும்பி ஹரித்துவாரம் என்ற இடத்தை அடைகிறது.

அங்கிருந்து உத்தரப்பிரதேசத்தில் சிறிது தூரம் தெற்காக ஓடிப்பின் தென்கிழக்காகத் திரும்பி, பருக்காபாத் மாவட்டத்தின் கிழக்குப் பகுதி வழியாக ஓடுகிறது. பருக்காபாத் மாவட்டத்தில் கங்கையோடு ராமகங்கா ஆறு கலக்கிறது. பிரயாகையில் (அலகாபாத்தில்) யமுனை என்ற பேராறு கங்கையோடு கலக்கிறது. அங்கிருந்து உத்தரப் பிரதேசத்தில் கிழக்காகப் பாய்ந்தோடி, வழியில் கோமதி ஆறும் காக்ரா ஆறும் கலக்கப்பெற்றுக் காசி நகரைக் கடந்து, வேறு பல சிற்ருறுகளையும் தன்னோடு சேர்த்துக்கொண்டு, வங்காளத்தின் எல்லையில் சேர்ந்து, ராஜமகால் குன்றுகளைத் தொட்டுக் கொண்டு தெற்காகத் திரும்பி, கௌரி என்ற சிதைந்த நகரத்திற்கு 20 மைலுக்கு அப்பால் கிளைகளாகப் பிரிந்து கழிமுகமாக அமைகிறது.

இக்கழிமுகம் வங்காள விரிகுடாவிலிருந்து 300ஆம் மைலில் தொடங்குகிறது. பத்மா எனப்படும் தலையாய கிளையானது தென்கிழக்குத் திசையில் ஓடி, கோலந்தாவில் பிரமபுத்திரா நதியுடன் கலந்து, பின் மேக்னு என்ற அகன்ற கழிமுகத்தை அமைத்துவிட்டு, நவகாளி என்ற இடத்தில் கடலில் கலக்கிறது. மேக்னு கழிமுகம் கிழக்குக் கோடியில் உள்ளது. அதற்கு மேற்கே மற்றும் பல கழிமுகங்கள் உள்ளன. மேற்குக் கோடியில் ஹூக்ளிக் கழிமுகம். இதில்தான் கடலிலிருந்து 80 மைல் தொலைவில் கல்கத்தா நகரம் உள்ளது. ஹூக்ளிக் கிளையாறே போக்குவரத்திற்கு முக்கியமான நீர்வழி. கடலிலிருந்து 1,300 மைல் தூரம்வரை கங்கையில் நடுத்தரக் கப்பல்களும் கல்கத்தாவரை கடலில் செல்லும் பெரிய நீராவிக் கப்பல்களும் செல்லுகின்றன. கங்கையாற்றின் நீர் பாயும் நிலத்தின் பரப்பு 4,32,480 சதுரமைல்.

புராண வரலாறு: இந்தியாவில் ஆங்காங்குள்ள ஆறுகள் தெய்வத்தன்மை கொண்டனவாகப் போற்றப்படுகின்றன. அவற்றுள் கங்கைக்கு மட்டும் தனித்ததோர் பெருமை பண்டைக்காலந் தொட்டே இருந்து வருகிறது. கங்கை பாரதநாடு முழுதுமே போற்றப்படும் மாநதியாகும். இந்து மதத்திற்கு ஓர் உயிர் நாடிபோல் ஓடிக்கொண்டிருப்பது கங்கை. மானிடரின் பாவங்கள் அனைத்தையும் கழுவி, அவர்களுக்குத் தூய்மையையும், பேரறிவையும் வீட்டையும் அளிக்க வல்லதென்று நூல்களாற் கூறப்பெறும் இந்த நதி இந்திய நதிகள் எல்லாவற்றிற்குமே பிரதிநிதியாக விளங்குகிறது. மற்ற இடங்களில் உள்ள பல நதிகளுக்கும் புனல்களுக்கும் உபசாரமாகக் கங்கையின் பெயர் கொடுக்கப்பட்டிருக்கிறது. எல்லா மங்கல ஸ்நானத்திற்கும் 'கங்கா ஸ்நானம்' என்ற புனிதப் பெயரே வழங்கி வருகிறது. இந்துக்கள் குடிக்கும் நீர் எதுவாயினும் அதை கங்காமிரு

தம் என்றே சொல்லுவர். வாழ்க்கையின் கடைசிக் காலத்தில் கங்கைக்குப் போகவேண் டும்; அதன் கரையில் காலத்தை நல்ல நினை வுடன் போக்கவேண்டும் என்று வைதிக இந்துக்கள் எண்ணுவர்.

கங்கைக்குத் தேவநதி என்றும், ஆகாச கங்கை என்றும் பெயர். கங்கை முதலில் விண்ணுலகிலேயே இருந்து, பின்னுல் பூவுல கில் இறங்கிப் பின் கீழே பாதாளத்திற்குச் சென்றதால் இதற்கு 'த்ரி-பத-கா' (மூன்று வழிகளில் செல்பவள்) என்ற பெயர் ஏற்பட் டது. வானிலிருந்து கங்கை கீழே வந்த கதை இதிகாச புராணங்களில் இரண்டு வகையாகக் காணப்படுகிறது. மிகவும் நன்ருய்த் தெரிந்த கதை வால்மீகி இராமாயணத்தில் பாலகாண் டத்தில் இராம லட்சுமணர்களுக்கு விசுவாமித் திரர் சொல்லும் கதைகளுக்கிடையே காணப் படுவதாகும். கங்கை இமயமலையின் மகளாய்த் தேவர்களின் வேண்டுகோளுக்கிணங்கி வானிலே தங்கி வந்தாள். அயோத்தியை ஆண்ட சகரமகாராஜன் வேள்வியைத் தொடங் குவதற்கு முன் இந்திரன் வேள்விக் குதிரை யைத் திருடிக்கொண்டுபோய்ப் பாதாளத்தில் தவமிருக்கும் கபில முனிவரின் அருகில் கட்டி ஒளித்துவிட்டான். சகரனுடைய 60,000 பிள்ளைகளும் குதிரையைத் தேடிக்கொண்டு, பூமியைத் தோண்டிப் பாதாளத்திற்குச் சென் றனர்; பாதாளத்தில் கபில முனிவருக்கு அருகே தந்தையின் வேள்விக் குதிரையைக் கண்டதும் அவர்கள் கபிலரே குதிரையின் திருடர் என் றெண்ணி, அவரைத் தாக்குவதற்கு ஓடி வந்தனர். கபிலர் தம் தவசத்தியால் அவர்கள் அனைவரையும் சாம்பலாக்கினுர். சகரன் தன் மூத்த மனைவியின் மைந்தன் அசமஞ்சன் மகனுன அஞ்சுமானை அனுப்பிக் குதிரையை யும் காணுமற்போன மக்களையும் தேடச் செய் தான். அஞ்சுமான் பாதாளஞ் சென்று குதிரை யைக் கண்டு, அங்கே நடந்த சம்பவத்தையும், கங்கை நீரைக் கொண்டு வந்து சாம்பல் குவி யலை நனைத்தால் எரிந்துபோன சகர புத்திரர் களின் ஆன்மா கடைத்தேறும் என்ற செய்தி யையும் சுபர்ணன் என்ற தெய்வப் பறவையிட மிருந்து அறிந்தான். குதிரையைக் கொண்டு சகரன் வேள்வியை நிறைவேற்றிக்கொண் டான். சகரனுக்குப் பிறகு அரசனுன அஞ்சு மான் எவ்வளவோ பாடுபட்டும் கங்கையை வானிலிருந்து கீழே கொண்டுவர முடியவில்லை. பின் திலீபன் அரசனுனுன். அவனுலும் ஒன் றும் செய்ய முடியவில்லை. அவனுக்குப் பிள்ளை யாய்த் தோன்றிய பகீரதன் தன் தவத்தால் பிரமதேவனையும் சிவபிரானையும், கங்கையை யும் திருப்தி செய்து, கங்கையை இறக்கித் தன் முன்னேர்கள் கடைத்தேறும்படி செய்தான். பகீரதன் பூலோகத்திற்குக் கொண்டு வந்த தால் கங்கைக்கு 'பாகீரதி' என்று பெயர் ஏற் பட்டது. இதனுல் பெரிய காரியங்களைச் சாதிக்க மேற்கொள்ளும் பெருமுயற்சிக்கு 'பகீரதப் பிரயத்தனம்' என்ற பெயர் ஏற் பட்டது.

பிரமன் வரம் கொடுத்ததும் வானிலிருந்து விழும் கங்கைப் பெருக்கின் வேகத்தைத் தாங் கச் சிவபெருமான் ஒருவரே ஆற்றலுள்ளவர் என்று அவரைக் குறித்து பகீரதன் தவங்கிடந்து கீழே விழும் கங்கையைத் தாங்கும்படி அவரை வேண்டிக்கொண்டான். இப்படி கங்கையைத் தலையில் தாங்கியதால் சிவபிரானுக்கு 'கங்கா தரன்' என்ற பெயர் ஏற்பட்டது.

'சிவன் என்னைத் தாங்குவதா? அவனையும் இழுத்துக்கொண்டு பாதாளம் செல்வேன்' என்று இறுமாப்புக்கொண்டு, கங்கை மிக வேக மாகச் சிவபிரான் தலையில் விழ, அவள் செருக்கை அடக்கச் சிவபிரான் அவளைத் தம் சடையின் ஒரு பகுதியில் அடக்கிக் கொண் டார். பல்லாண்டுகள் கங்கை சிவபிரான் தலை யிலே கட்டுண்டு சுழன்று கொண்டிருந்தாள். மறுபடியும் பகீரதன் தவங்கிடந்து சிவபிரானை வேண்ட, அவர் தம் தலையிலிருந்து 7 அருவி களாகக் கங்கைப் பிரவாகத்தை விடுத்தார். இந்த 7 அருவிகளாவன: கிழக்கு முகமாய் விழுந்தோடியவை மூன்று: ஹ்லாதினீ, பாவனீ, நளினீ. மேற்கே பாய்ந்தவை மூன்று: ஸுச க்ஷுஸ், சீதா, சிந்து, ஏழாவது பகீரதனைப் பின் தொடர்ந்து, தென்புறமாக வந்த கங்கா -பாகீரதி. வரும் வழியில் கட்டிற்கடங் காத கங்கா தேவி மறுபடியும் வேள்வி நடத்திக் கொண்டிருந்த ஜன்ஹு முனி வரின் வேள்விக் கூடத்தினுட்பாய, அவர் கங் கையைக் காதில் அடக்கிக் கொண்டார்; பின் னும் பகீரதன் வேண்ட, காது வழியே விட்டார்.

# தமிழ்நாடும் கங்கையும்

அரித்துவாரில் கங்கையாற்றின் பெருமித ஓட்டத்தைக் கண்டு கண்டு வியந்தேன். சங்க காலப் புலவர்களும் புகழ்ந்து பாடிய அந்த ஆற்றின் ஆழமும் வேகமும் நீரின் தண்மையும் தூய்மையும் உணர்ந்து போற்றினேன்.

ஆற்றங்கரையில் சிறு கோயில்கள் பல இருந்தன. அங்கே வந்து பிரார்த்தனை செய்வோர் பல வகைப் பொருள்களையும் ஆற்றிலே எறிந்தனர். தலையை மொட்டை அடித்துக் கொண்ட பிறகு தலை மயிரை எல்லாம் கையிலேந்தி வந்து தூய்மையான கங்கை நீரில் எறிந்து இருகையும் குவித்துக் கும்பிட்டு நின்றனர். இறந்தவர்களின் உடம்பைச் சுட்டெரித்த பிறகு சில எலும்புகளை மட்டும் கொண்டு வந்து ஆற்றில் இட்டால் போதுமே; ஆனால் அந்த மக்கள் குடம் குடமாக மூட்டை மூட்டையாக எல்லா எலும்புகளையும் சாம்பலையும் கொண்டு வந்து கங்கையில் விடுகின்றனர். அவ்வளவு அசுத்தங்கள் கலந்தும் கங்கை தூய்மை கெடாமல் பெருமிதத்தோடு ஓடி வருகிறது.

இமயமலைப் பனி உருகி வருவதாலும் மிக்க வேகத்தோடு ஓடி வருவதாலும் ஆழமும் பரப்புமாக நீர் மிகுந்து செல்வதாலும் அதன் தூய்மையைக் கெடுக்க அவ்வளவு மக்களாலும் முடியவில்லை.

இவ்வளவு நீர்ப் பெருக்கும் தண்மையும் தமிழ்நாட்டு ஆறு களுக்கு வாய்த்தால், தமிழ் நாட்டு ஆற்றங்கரைகளை உலகம் போற்றும்படியாகத் தமிழர்கள் செய்திருப்பார்கள்.

—டாக்டர் மு. வ. எழுதியுள்ள 'மண் குடிசை'
என்னும் நாவலில் ஒரு பாத்திரம்.

---

ஜன்ஹு விட்டதால் கங்கைக்கு 'ஜான்ஹவி' ('ஜன்ஹு மகள்') என்ற பெயர் ஏற்பட்டது. ஜன்ஹு ஆச்சிரமம் சுல்தான்கஞ்சு என்ற இடத்தில் இருக்கிறது. பாகவதம் 10, 70, 44-ல் உள்ளவாறு வானில் ஓடும் நிலையில் இந்நதி மந்தாகினி என்றும், பூமியில் கங்கை என்றும், பாதாளத்தில் போகவதி என்றும் பெயர் பெற்றது.

பாகவதத்திலே திரிவிக்கிரமாவதாரத்தில் உலகளந்த பெருமானது வானளாவிய திருவடியைப் பிரமதேவன் தன் கமண்டலநீரால் அலம்பியபோது, பெருகியவளே ஆகாச கங்கை ஆனதுபற்றி கங்கைக்கு 'விஷ்ணுபதி' என்றும் பெயர் வழங்குகிறது. இதே புராணத்தில் மற்றோரிடத்தில் கங்கை விண்ணுலகில் இருந்ததும் பூவுலகிற்கு வந்ததும், பின் வருமாறு சொல்லப்பட்டிருக்கிறது: திரிவிக்கிரமாவதாரத்தில் பெருமானுடைய கால் நகம் குத்திப் பிரமாண்டம் பொத்தலாகிப் போனபோது அதிலிருந்த நீர் ஒழுகித் துருவமண்டலத்தில் விழுந்து, அங்கிருந்து, வானில் வழிந்தோடி, மேருவில் விழுந்து, பிரமலோகம் அடைந்து, அங்கிருந்து சீதா, அளகநந்தா, வவங்க்ஷு, பத்திரா என்று நாற்றிசையிலும் நான்கு அருவிகளாகப் பெருகிக் கடைசியில் கடலை அடைந்தது. இவற்றுள் அளகநந்தையே பரதகண்டத்தினுள் பாய்ந்த ஆறாகும்.

கங்கை கீழே இறங்கியதாகக் கூறப்படும் நாள் வைகாசி, சுக்கிலபட்ச, திருதியை செவ்வாய்க்கிழமை, அத்தநட்சத்திரம்.

## காசியம்பதியில் நீராடும் கங்கைத் துறைகள்

*1. அசி
2. லோலார்கம்
3. துளசிதாஸ்
4. ஜானகி
5. பாரசுவநாதம்
6. சிவாலயம்
7. நிரஞ்சனம்
8. பிரமேந்திரம்
9. அனுமந்தம்
10. அரிச்சந்திரம்
11. லல்லி
12. சிந்தாமணி
13. ராணி
14. கேதாரம்
15. சௌகி
16. உருக்மாங்கதம்
17. க்ஷேமேசுவரம்
18. மானசரோவர்
19. நாரதம்
20. அன்னபூரணா
21. பாண்டேயம்
22. சதுர்சஷ்டி
23. தண்டி
24. ராணாமகால்
25. முன்ஷி
26. அகல்யாபாய்
27. சீதளா
28. பிரயாகை
*29. தசாசுவமேதம்
30. அசுவம்
31. கிடிகீ
32. மான்மந்திரம்
33. திரிபுரசுந்தரி
34. விசாலாட்சி
35. ஜராசசந்தேசுவரம்
36. லலிதா
37. கங்காகேசவம்
38. பிரம்மநாளம்
39. மகாசுமயானம்
40. சித்திவிநாயகம்
*41. மணிகர்ணிகை
42. தத்தாத்ரேயம்
43. சேந்தியம்
44. சங்கடாதேவி
45. யமேசுவரம்
46. கங்காயகால்
47. அக்னீசுவரம்
48. இராமா
49. இலட்சுமண பாலா
50. மங்களா கௌரி
51. பஞ்சகங்கை
52. பிந்துமாதவம்
53. துர்க்கா
54. பிரம்மா
55. சத்திரம்
56. ராஜமந்திரம்
57. லால்
58. கௌ
59. நாராயணன்
60. திருலோசனேசுவரம்
61. பிரகலாதம்
62. ராஜா
63. கட்கவிநாயகம்
*64. வருணாசங்கமேசுவரம்

*புள்ளியிட்டவை சிறப்புமிக்க நீராடு துறைகள். நடந்து செல்ல இயலாதவர்கள் படகிலேனும் சென்று இவ்வைந்து துறைகளிலும் நீராடுவது மரபு.

---

கங்கை பாயுமிடம் யாவராலும் தூயதாகக் கருதப்பட்டபடியால் கங்கைக் கரையில் பண்டைக்காலங்களில் முனிவர்களின் ஆச்சிரமங்களும் தவமிருக்கும் இடங்களும் இருந்தன. அவை இக்காலத்தில் கங்கைக்கரையில் திருப்பதிகளாகவும், தீர்த்தங்களாகவும் கருதப்படுகின்றன. இதன் கரையில் தங்கிச் சித்த புருஷர்கள் பரம பதத்தை அடைவதாகக் கூறுவதால் இதற்குச் சித்த நதி என்றும் பெயர். இப்படி கங்கையை ஒட்டி ஏற்பட்ட தலங்கள் ஏராளமாயிருப்பினும், அவற்றுள் மிகச் சிறந்தவை கங்கை உற்பத்தியாகும் இடமான கங்கோத்திரியும், கங்கை தென்படும் இடமான கங்காத்துவாரம் என்ற ஹரித்துவாரமும், பிரயாகையும், காசியும் ஆகும். கங்கையில் விழும் ஆறுகள் எல்லாவற்றின் சங்கமங்களையும்விட, கங்கையும் யமுனையும் சேரும் இடமான பிரயாகையை மிகவும் சிறப்பாகக் கொண்டாடுகிறார்கள். இப்படியே கங்கை கடலில் கலக்குமிடமும் புனிதமாக எண்ணப்படுகிறது.

கங்கோத்திரி : இது கர்வால்பிரதேசத்தில் ருத்திர ஹிமாலயம் என்ற பள்ளத்தாக்கில் இருக்கிறது. இப்பள்ளம் முழுதும் நிரம்பிக்கிடக்கும் பனிக்கட்டியிலிருந்து கங்கை உற்பத்தியாகிறது. இங்கே கங்காதேவியின் கோயில் ஒன்று இருக்கிறது.

கங்காத்துவாரம் (ஹரித்துவாரம்): இதற்கு மாயாபுரி என்றும் பெயர். இந்தியாவில் ஏழு முக்கியத் தலங்களுள் ஒன்றாகிய மாயா என்பது இவ்விடமே. கங்கை தோன்றும் இடம் என்று காளிதாசன் சொல்லும் கனகலம் என்பதும் இதன் பக்கமே. ஹரித்துவாரத்திலுள்ள தீர்த்தத்திற்குத் பிரமகுண்டம் என்று பெயர். தட்சன் வேள்வி நடத்தியபோது சதி தன் உடலை நீத்த இடமும் இதுவென்று கூறுவர்.

பிரயாகை: இது கங்கை, யமுனை, கண்ணுக்குப் புலனாகாமல் ஓடுவதாகக் கருதப்படும் சரசுவதி இம்மூன்றும் கூடுமிடம். சரசுவதி பூமியினுள் நுழைந்து மறைந்துபோய்ப் பிரயாகையில் கங்கை யமுனை கூடுமிடத்தில் வந்து வெளிப்படுவதாகக் கூறுவர். மூன்றின் சங்கமமாதலால் இதற்குத் திரிவேணி என்றும் பெயர். இதன் அருகில் அலகாபாத் என்ற நகரம் உள்ளது. இங்கே ஆண்டு தோறும் மாகம் (மாசி) என்னும் மாதத்தில் மாகமேளம் என்னும் புனிதமான பெரு நீராட்டுவிழா நடைபெறும். 12 ஆண்டுகளுக்கொருமுறை கும்பமேளா என்னும் பெருவிழா நடைபெறுகிறது. இதில் இலட்சக் கணக்கான இந்துக்கள் கலந்து கொள்வர்.

காசி: கங்கையைச் சார்ந்த திருப்பதிகளில் காசியே முதன்மை பெற்றது. மற்றும் இது பாரதநாட்டின் கணக்கற்ற திருப்பதிகளிலும் தலை சிறந்தது. இதற்கு அவிமுக்த க்ஷேத்திரம், ஆநந்தவனம், பெருமயானம் என்றும் பெயர். இங்கே வந்து வசித்தாலே நற்கதியடையலாம்; இங்கே உடலை நீத்தலே முத்திக்கு வழியாகும்; சிவபிரான் இங்கே தெருத் தெருவாக அலைந்து கொண்டு, மடியும் மக்கள் காதில் தாரக மந்திரத்தை உபதேசித்துக் கொண்டிருக்கிறார் என்பர்.

கங்கையைப்பற்றிப் புராணக் கதைகள் பல வருகின்றன. அவற்றுள் முக்கியமாகச் சொல்ல வேண்டிய சம்பவங்கள் இரண்டு: கங்கை பீஷ்மரை ஈன்றெடுத்தது; முருகக் கடவுளுக்குத் தாயாக விளங்கியது. இதனால் இருவருக்கும் காங்கேயர் என்ற பெயர் ஏற்பட்டது.

கங்கையில் நீராடுவது, அதன் கரையிலும் அங்குள்ள திருப்பதிகளிலும் முன்னோர்களுக்கு சிராத்தம் செய்வது, அதன் நீரில் விழுந்து உடலை நீப்பது, தான தருமங்களைச் செய்வது, இப்படி கங்கை சம்பந்தமான ஒழுக்கங்கள் பல கூறப்படுகின்றன. வேதாந்த அறிவு சிறிதுமில்லாதாதாரும் கங்கா—யமுனா சங்கமம் என்ற பிரயாகையில் உடலை விடுவதால் முத்தியடைகிறார்கள் என்று வேதம், புராணம், ஸ்மிருதி முதலியவை கூறும்.

கங்கையின் மான்மியம், கங்கை சம்பந்தமாக நடத்தவேண்டிய அனுஷ்டான முறை, இவை அனைத்தும் தொகுக்கப்பட்டுத் திரிஸ்தலீ சேது, கங்கா வாக்கியாவளி முதலிய தரும நூல்களில் தரப்பட்டிருக்கின்றன. ஸ்காந்த புராணத்தில் காசி கண்டம் முழுதும் காசியை வைத்துக்கொண்டு கங்கையின் மான்மியம் விவரிக்கப்பட்டிருக்கிறது. காசி யாத்திரை விதி, பஞ்சக்குரோச மகாத்மியம் முதலிய நூல்களும் இவற்றையே விளக்குவனவாகும். வைதிக யாத்திரிகர், 'கங்கா, கங்கா' என்று செபித்துக் கொண்டு போவார்கள்; ஒரு சிறு பாத்திரத்தில் கங்கை நீரை அடைத்துக் கொண்டு வந்து வீட்டில் வைத்துப் பூசை செய்வர். கங்கை யாத்திரை இராமேசுவர யாத்திரையோடு பூர்த்தியாவதால் நாள்தோறும் யாத்திரிகர்கள் கொண்டு வரும் கங்கைநீர் இராமேசுவர லிங்கத்திற்கு அபிஷேகமாய்க் கொண்டிருக்கிறது. கங்கை—ராமேசுவர யாத்திரை மூலம் பண்டைக்காலத்தில் நாட்டில் ஒற்றுமை வலுப்பட்டதோடு, அறிவாளிகளும், அவர்கள் எழுதிய நூல்களும் வடக்கிலும் தெற்கிலும் பரவ வசதி ஏற்பட்டது.

கங்கை, காயத்திரி, கீதை இம்மூன்று ககாரங்களுக்கு மேலான ககாரம் இல்லை என்று ஒரு சுலோகம் உண்டு. கங்கையை யோகிகள் மாநிலத்தில் வெளியே நீராடும் ஆறுகக் கருதுவதில்லை; அதை ஒவ்வொரு மெய்யினுள்ளும் ஓடும் நாடியாகக் கருதுவர். கங்கை—யமுனை—சரசுவதி என்ற திரிவேணி சங்கமம் இடை, பிங்கலை, சுழுமுனை என்று யோக நூலில் பேசப்படும் யோகப் பயிற்சிக்கு அடிப்படையான மூன்று நாடிகளே என்றும் கருதுவர்.

—கலைக்களஞ்சியம்

# மாநகர் காசி

—'கலைக்களஞ்சியம்'

காசி மாவட்டத்தின் தலைநகர். கங்கை யுடன் கலக்கும் வருணை, அசி ஆகிய இரு துணையாறுகளின் இடையில் உள்ளது. காசியின் பழைய பெயர் வாரணசி. இது உத்தரப் பிர தேசத்தின் இரண்டாவது பெரிய நகரம்; கல் கத்தாவிற்கு வடமேற்கில் 400 மைல் தூரத்தில் உள்ளது. இந்துக்களுக்கும் சீக்கியருக்கும் பௌத்தருக்கும் புண்ணிய நகரம்; வாணிக நகரமாகவும் திகழ்கின்றது. பித்தளைப் பாத் திரம் செய்தல், பட்டு நெசவு, சரிகை வேலை, நகை முதலிய அணிகலங்கள் செய்தல், பொம்மை செய்தல் ஆகியவை சிறப்பான கைத் தொழில்கள். காசி முக்கியமான நகரங்களுடன் ரெயில் பாதையால் இணைக்கப்பட்டுள்ளது. மக்கள் தொகை. 3,55,777 (1951.)

வரலாறு: வேதகாலத்தின் பிற்பகுதியி லிருந்தே காசி புகழ்பெற்ற நகரம். மகாபாரதம் இராமாயணம் முதலிய பண்டை நூல்களிலும் காசி புகழ்ந்து கூறப்பட்டுள்ளது. புத்தர் தோன்றுவதற்குமுன், கி. மு. ஏழாம் நூற்றாண் டில் இங்கு ஜனநாயக ஆட்சி நடந்து வந்தது. காசி மௌரிய குப்தப் பேரரசின் முக்கியமான வாணிக நிலையமாகவிளங்கியது. குப்தர்களிட மிருந்து, கோரி முகம்மது காசி நகரைக் கைப் பற்றினர். வடநாட்டில் பல முஸ்லிம் இராச் சியங்கள் ஏற்பட்ட காலத்தில் இது ஜான்பர் இராச்சியத்தில் சேர்ந்திருந்தது. அக்பர் ஆட் சியில் அலகாபாத் பகுதியில் இது ஒரு முக்கிய மான நகரமாயிருந்தது. 1763-ல் ராஜா ஜய சிங்கு இங்கு வானாராய்ச்சி நிலையத்தை நிறு வினார். பதினெட்டாம் நூற்றாண்டில் அயோத்தி இராச்சியத்தில் முகம்மதாபாத் என்ற அரசியல் பெயருடன் சேர்ந்திருந்தது. 1722-ல் நவாப் சஆதத்கான் மன்ஸாராமைக் காசியின் வரி வசூலிக்கும் அதிகாரியாக நிய மித்தார். இவர் வழிவந்தோர் காசி மன்னர் கள் என்று அழைக்கப்பட்டார்கள். 1775-ல் காசி ஆங்கிலேயர் வசப்பட்டது.

புனிதமான காசி இந்து சமயங்களின் வளர்ச்சிக்கு நிலைக்களனாக விளங்கி வருகிறது. வியாசர் முதலிய முனிவர்களும், மகாவீரர், புத்தர், சங்கரர், துளசிதாசர் முதலிய பல சமய ஆசிரியர்களும் வாழ்ந்த இடம் காசி.

பல நூற்றாண்டுகளாக வடமொழிக் கல்வி ஓங்கி வந்த காசியில் இந்த நூற்றாண்டின் தொடக்கத்தில் பெசண்ட் அம்மையார் நிறு வின இந்துக் கல்லூரி பண்டித மதன் மோகன மாளவியாவின் தியாகத்தினாலும் பெருமுயற்சி யாலும் இந்துப் பல்கலைக் கழகமாக வளர்ச்சி யடைந்தது.

காசியில் நூற்றுக்கணக்கான கோயில்கள் உள்ளன. விசுவநாதர், அன்னபூரணி, விசா லாட்சி, துர்க்கை, பிந்துமாதவர், கேதாரேசு வரர் கோயில்கள் முக்கியமானவை. அவை களில் பெரும்பான்மையானவை ராஜபுத்திர வீரர் மான்சிங் என்பவரால் கட்டப்பெற்றவை. ஔரங்கசீபு காலத்தில் இடிக்கப்பட்ட விசுவ நாதரின் கோயிலை இந்தூர் மகாராணி அகல் யாபாயும், மற்றவைகளை மகாராஷ்டிர அரசர் களும் பிரபுக்களும் புதுப்பித்தார்கள். காசியில் யாத்திரா மார்க்கம் 36 மைல் சுற்றளவு கொண்டது. இது பஞ்சக்குரோச யாத்திரை எனப்படும். கங்கையாற்றின் படித்துறைகள் எல்லாமே புனிதம் என்றாலும், மணிகர்ணிகை, கேதாரகட்டம், தசாச்வமேதம், அனுமக் கட்டம் ஆகியவை சிறப்புமிக்கவை.

காசியில் அற நிலையங்கள் உள. ஸ்ரீராம கிருஷ்ண விவேகாநந்த மடத்தினர் நடத்தும் பெரிய மருத்துவசாலை ஒன்று உள்ளது.

# எங்குலத்தார் என்றும் வாழ்க !

நாரா நாச்சியப்பன்

வாய்ந்திருக்கும் நேரமெல்லாம் வருவாய் பண்ணும்
வழிதுறையில் செலவழிப்பார் ; பொருள்கு விப்பார் ;
ஓய்ந்திருக்கும் நேரமெலாம் சிவபூ சைக்கே
ஒதுக்கிடுவார் ; வீண்வம்பு, சூதுக் கேகார் ;
பாய்ந்திருக்கும் தேறு போலே செல்வம்
பல்கிடினும் பகட்டறியார் ; எளிய வாழ்வே
ஏய்ந்திருக்கும் இன்பமென எண்ணிக் கொள்வார்
எங்குலத்தார் நகரத்தார் என்றும் வாழ்க !

நவமணிகள் விற்கின்ற வணிக ராக
நாடாளும் மன்னவருக் கிணையாய் வாழ்ந்தார்.
சிவமணிகள் போற்றுகின்ற தரும மெல்லாம்
செய்ததிலே பேரின்பம் கண்டி ருந்தார்.
புவனமெலாம் படைத்தவனைப் பூசை செய்து
போற்றிநின்றார் ; அத்தோடு வயிற்றைக் காட்டிக்
கவனமதை ஈர்த்தவர்க்கும் சோறு போட்டுக்
களிப்படைந்தார் நகரத்தார் என்றும் வாழ்க !

ஆதாய வரவெல்லாம் தருமத் திற்கே
ஆக்குகின்ற நெஞ்சுடையார் ; காசி நாதன்
பாதார விந்தத்தை அலங்க ரிக்கும்
பணிசெய்யப் புகுந்தார்கள் ; ஏழை மக்கள்
ஆதாரம் கிடைத்ததென மனங்க ளிக்க
ஆகார மளித்தார்கள் ; சத்தி ரங்கள்
தோதாக அங்கங்கே நாட்டில் எங்கும்
தோற்றிவைத்தார் நகரத்தார் என்றும் வாழ்க !

கடுகளவு பொருளேனும் வீணுய்ப் போனுல்
    கலங்கிடுவார் ; மனம்பதைப்பார் ; புண்ணி யத்தைத்
தொடுகின்ற செயற்கென்ருல் கோடி கோடி
    தொகுத்ததெலாம் ஒருநொடியில் மனங்க னிந்து
கொடுத்துவிடும் வள்ளன்மை யுடையார் ; அன்பு
    குடிகொண்ட நெஞ்சத்தார் ; வைய மெல்லாம்
தடுத்தாலும் நேர்மைவழி மாரு தேகும்
    தகையுடையார் நகரத்தார் என்றும் வாழ்க !

பொருள்கருதித் தம்மனையை விட்டுச் சென்ற
    போதினிலும் குடும்பத்தை மறவா நெஞ்சும்,
உருள்கடலின் திரையூடே கலஞ்செ லுத்தி
    ஊர்விட்டுச் சென்ருலும் பிறந்த நாட்டை
ஒருபொழுதும் மறவாத நெஞ்சும், செல்வம்
    உண்டாக்கப் பலவழிகள் உண்டென் ருலும்
தருமத்தை மறவாத நெஞ்சும் கொண்ட
    தகையாளர் நகரத்தார் என்றும் வாழ்க !

ஈட்டுகின்ற பெருமுயற்சி யுடையார் ; செல்வம்
    இசையில்லா வழிகளிலே சென்றி டாமல்
நாட்டமுடன் காத்திருக்கும் தவத்தார் ; மற்றும்
    நற்பயன்கள் வருதுறைகள் ஆய்ந்த றிந்து
வேட்டபடி நல்குகின்ற மனத்தார் ; செல்வி
    வீற்றிருக்கும் திருமனையார் ; ரொக்கம் வைத்துப்
பூட்டியுள்ள பெட்டகத்தார் ; வாழ்வை நன்கு
    பொருட்படுத்தும் நகரத்தார் என்றும் வாழ்க !

அன்னமிடும் சத்திரங்கள் வைத்த தோடு
    அருங்கல்வி பரப்புதற்கும் வழிவ குத்தார்.
தென்னகத்துத் தமிழிசையை வளர்த்த தோடு
    திருநாட்டிற் பல்தொழிலும் வளர்க்க லானுர்.
என்னென்ன துறையெல்லாம் இந்த நாட்டை
    எழில்வளங்கள் மிக்கதுவாய்ச் செய்ய லாமோ
அன்னதுறை அத்தனையும் செயற்ப டுத்தி
    அகங்களிக்கும் நகரத்தார் என்றும் வாழ்க !

# காசி—இராமேசுவரம்

தேவகோட்டை, செல்வி : மெ. வள்ளியம்மை
இரங்கூன்

"மூர்த்தி தலம் தீர்த்தம் முறையாய்த் தொடங்கினர்க்கோர், வார்த்தை சொலச் சற் குருவும் வாய்க்கும் பராபரமே" என்பது தாயுமானுர் திருவாக்கு. பாரதநாடு மூர்த்தி தலம் தீர்த்தம் ஆகிய இம்மூவகைச் சிறப்பினுலும் மேன்மை பெற்று விளங்குவது. பாரதத்தின் வடபகுதியில் காசியும் தென் பகுதியில் இராமேசுவரமும் அமைந்து இந்நாட்டின் வழிபாட்டு ஒருமைப் பாட்டைத் தொன்று தொட்டு நிலைநிறுத்திவருகின்றன.

வடநாட்டிலுள்ளவர்கள் தென்னுட்டு இராமேசுவரத்துக்கு வந்து வழிபாடு ஆற்றுவதையும் தென்னுட்டில் உள்ளவர்கள் வடநாட்டுக் காசிக்குச் சென்று வழிபாடு ஆற்றுவதையும் தங்கள் வாழ்வில் புனிதமான செயல் என்று கருதி ஒழுகி வருகின்றுர்கள். இராமேசுவரம் போகம் வழங்குவதில் முன்னணியிலும், காசி முத்தி வழங்குவதில் முன்னணியிலும் ஆகத் திகழ்வன. காசிக்கும் இராமேசுவரத்துக்கும் இடையே நெடுந்தொலை இருந்துங்கூட இவ்விரண்டு திருத்தலங்களையும் ஒன்று சேர்த்துக் காசி-இராமேசுவரம் என்று நெருக்கமாக வழங்குவது நமது நாட்டிலுள்ள மரபு.

காசி யாத்திரை செய்ய முடியாத தென்னுட்டினரும் இராமேசுவர யாத்திரை செய்ய முடியாத வடநாட்டினரும் வாழ்நாளில் ஒரு பெருங்குறை உடையவர்களாகவே தங்களைக் கருதிக் கொள்ளுகிறுர்கள். காசித்தலத்தின் பெருமையை மற்ற தலங்களைப் பற்றிச் சொல்லும்போது "காசியை விடச் சிறந்தது" என உயர்வு நவிற்சியாக யாரும் சொல்லி வருவதிலிருந்து அறிந்து கொள்ளலாம். காசி-இராமேசுவர யாத்திரையை விதிப்படி செய்தவர்களுக்கு இம்மையில் முத்திப்பேறு கிட்டும் என்பது உறுதி.

இம்மைப் பேறுகளுள் தலையானது நன்மகப்பேறு. அதனுலேயே "பெறுமவற்றுள் யாமறிவதில்லை அறிவறிந்த மக்கட் பேறல்ல பிற" என்று தமிழ் வேதம் கூறியது. அறிவுடைய நல்ல பிள்ளைகளைப் பெறுவதற்கு முற்பிறப்புக்களில் பெரும் புண்ணியம் செய்திருக்க வேண்டும். "பெண்டு வாய்க்கும் பிள்ளை வாய்க்கும் புண்ணியவானுக்கு" என்பது நம் நாட்டுப் பழமொழி. நன்மக்களைப் பெற்றவர்கள் எப்பொழுதும் மகிழ்ச்சியுடையவர்களாக இருப்பார்கள். அல்லாத மக்களைப் பெற்றவர்கள் படும் அல்லல்களை நாள் நாளும் உலகியலில் நாம் கண்டு வருகிறோம். நன்மக்கட்பேறு பெற்றவர்கள் ஏனைய எல்லாப் பேறுகளையும் பெற்றவர்களாவார்கள். ஞானசம்பந்தர் முதலிய நன்மக்களைப் பெறச் சிவபாத இருதயராதிய பெற்றோர்கள் செய்த தவச் சிறப்பைப் பெரிய புராணத்தில் காணலாம்.

இராமேசுவரம் நன்மக்கட் பேற்றை நல்கி அருளுகின்ற பெருந்தலம். இங்கு வந்து விதிப்படி தங்கி இத்தலத்தில் உள்ள புண்ணிய தீர்த்தங்களில் மூழ்கி இராமலிங்கப் பெருமானை வழிபட்டால் நன்மகப்பேறு கிடைக்கும் என்பது அன்று தொட்டு இன்றுவரை அநுபவத்தில் கண்டு வருகிற உண்மை. இராமேசுவர

யாத்திரை செய்து மகப்பேறு பெற்றவர்கள் பலர். நன்மகப் பேற்றை முன்னணியில் கொண்டு மற்ற எல்லாப் பேறுகளேயும் எளிதில் வழங்க எழுந்தருளி இருக்கின்ற இராமலிங்கப் பெருமான் காசித் தலத்துடன் தொடர்பு கொண்டவர். அங்ஙனமே இத்திருத்தலமும் இதிலுள்ள தீர்த்தங்களும் காசித் திருத்தலத் துடனும் அங்குள்ள தீர்த்தங்களுடனும் தொடர்பு கொண்டவை.

மக்களாகப் பிறந்தவரனேவரும் மறுபடியும் ஒரு தாயின் வயிற்றிற் புகாத பெரும் பேற்றைப் பெறுவதற்கு முயற்சி செய்தல் வேண்டும். மாதா உதிரத்தில் வாராத வாய்ப்பு முத்தி பெற்றவர்களுக்கே அமைவது.

"எய்தற் கரிய பிறவிதனக்
கெய்திற் றென்று லதுகொண்டு
செய்தற் கரிய அறங்கள்பல
செய்து துயர்கூர் பிறவியினின்
றுய்தற் கொருமை பெறவொண்ணு
துழல்வோன் உடம்பு பொற்கலத்தில்
பெய்தற் குரிய பால்கமரில்
பெய்த தொக்கும் என்பரால்"

என்ற ஆன்ருேர் திருவாக்கின்படி பிறவிப் பயனுன முத்தியைப் பெறுவதற்கு முயல வேண்டியது இன்றியமையாதது. இம்மைப் பேறுகளேப் பெறுவதற்கு எவ்வளவோ முயற்சி களேச் செய்து உழைத்து வருகிருேம். மறுமைப் பேருகிய முத்தியில் அவ்வளவாக நம் கவனம் செல்லுவதில்லே. இது பெரிதும் வருத்தத்திற் குரியதாகும். முத்திக்குரிய சாதனங்களில் காசி யாத்திரை முதற் சாதனமாகும்.

காசியில் எழுந்தருளியிருக்கும் விசாலாக்ஷி அம்மை உடனுய விஸ்வேஸ்வரப் பெருமான் அந்தத் திருத்தலத்தி லுயிர்விடுகிற எல்லாப் பிராணிகளேயும் தமது திருவடியில் சேர்த்துக் கொள்ளுகிருர் என்பது புராணங்களின் வாயி லாகவும் அநுபவ வாயிலாகவும் அறியப்பெறு கின்றது. உடம்பை விட்டு உயிர் பிரிகின்ற இறுதி வேளேயில் அம்மையப்பராகிய இருவரும் வந்து மரணுவஸ்தையால் வருந்துமுயிர்க்குக் களேப்பு நீங்கும்படி அம்மை தனது முந்தானே யால் வீசுகிருர் என்றும் அப்பன் உயிர்விடும்

---

தொன்றுதொட்டு தர்மமே ஜெய மென வெற்றி கண்ட நமது நாட்டுக் கோட்டை நகரத்தார் மரபினர், காசி முதல் இராமேஸ்வரம் வரை, ஆலயத்திருப் பணிகள், அன்ன சத்திரங்கள், கல்விச் சாலேகள் பல நிறுவி நடத்தி வருகின்றனர். தற்போது காலப் போக்கிற்கு ஏற்றவாறு கல்வி நிலேயங்களும், மருத்துவ நிலேயங் களும் ஏற்படுத்தி வருகின்றனர்.

ரயில் வசதி, கார் வசதி, ஆகாய விமான வசதி முதலிய பிரயாண வசதிகள் கொஞ்சமும் இல்லாத பழங்காலத்தில், நடந்தும், வாகன ஊர்திகளிலும் சென்று ஆயிரம் மைலுக்கப்பால் உத்திர தேசத் தில் உள்ள காசி க்ஷேத்திரத்தைத் தலே மையாகக் கொண்டு, மகுடாதி மகுடம் தரித்த மன்னுதி மன்னரும் புகழ்ந்து போற்றும் வண்ணம், சத்திரங் கள் கட்டி, விஸ்வேசன் திருவருள் கைவரப் பெற்று, அயோத்தியில் இராமபிரானேப் பூசித்தும் பற்பல அற நிலேயங்களே நிறுவி, நம் போன்ற பின் சந்ததியாருக்குப் பெருமை தேடித் தந்த அப்பெரியார்களே நாம் மறவாமல், அவர்கள் அமைத்த தர்மத்தைத் தொடர்ந்து நடத்த நமக்கு ஸ்ரீவிசாலாட்சி சமேத ஸ்ரீவிஸ்வநாதப் பெருமான் அருள் புரிவாராக.

காலப் போக்கை அனுசரித்து அயல் நாட்டில் உள்ள தர்ம ஸ்தாபன நிதிகளே இயன்றவரை நமது நாட்டுக்குக் கொண்டுவந்து, இங்குள்ள தர்மம் தழைத் தோங்க ஆவன செய்ய நகரத்தாரனே வரையும், குறிப்பாக அரசினரிடையே செல்வாக்கு உள்ள நண்பர்களேயும் பணி வாக வேண்டுகிறேன். வாழ்க நகரத்தார் சமூகம். தர்மங்கள் தழைத்தோங்குக!

***அள. அரு. சோமநாதன் செட்டியார்***
பரம்பரை டிரஸ்டி
இராமேஸ்வரம் தேவஸ்தானம்

---

பிராணியின் தலையைத் தனது வலது தொடையில் வைத்துத் திருவைந்தெழுத்தை உபதேசிக்கிறார் என்றும் புராணங்கள் கூறுகின்றன. காசியை மயானபூமி என்று வழங்குவதிலிருந்து இவ்வுண்மையை அறிந்து கொள்ளலாம்.

காசி முத்திப் பேற்றை வழங்கியருளுகின்ற திருத்தலம். இங்கு வந்து விதிப்படி தங்கி இத்தலத்தில் உள்ள புண்ணிய தீர்த்தங்களில் நீராடுவது அன்று தொட்டு இன்றுவரை அநுபவத்திற் கண்டுவரும் உண்மை. முத்திப்பேற்றை முன்னணியில் கொண்டு மற்ற எல்லாப் பேறுகளையும் எளிதில் வழங்க எழுந்தருளி இருக்கின்ற விஸ்வலிங்கப் பெருமான் இராமேசுவரத் தலத்துடன் தொடர்பு கொண்டவர். அங்ஙனமே இத்திருத்தலமும் இதில் உள்ள தீர்த்தங்களும் இராமேசுவரத் தலத்துடனும் அங்குள்ள தீர்த்தங்களுடனும் தொடர்பு கொண்டவை.

இராமேசுவர யாத்திரையில் உப்பூர், தேவிபட்டினம், தனுஷ்கோடி, திருப்புல்லணை, திரு உத்தரகோச மங்கை ஆகிய தலங்களும் அங்குள்ள தீர்த்தங்கள் மூர்த்திகள் வழிபாடும் செய்யப் பெறுதல் வேண்டும். அதுபோலவே காசி யாத்திரையில் தாடகேஸ்வரம், ஹரிதுவாரம், பிரயாகை, அயோத்தி, கயா, பஞ்சவடி முதலிய தலங்களும் அங்குள்ள தீர்த்தங்கள், மூர்த்திகள் வழிபாடும் செய்யப் பெறுதல் வேண்டும். இராமேசுவர யாத்திரை செய்பவர்கள் காசி கங்கா தீர்த்தத்தைக் கொண்டு வந்து இராமலிங்கப் பெருமானுக்கு அபிஷேகம் செய்வதும், காசி யாத்திரை செய்பவர்கள் இராமேசுவரத்திலுள்ள கோடி தீர்த்தத்தைக் கொண்டு வந்து விசுவலிங்கப் பெருமானுக்கு அபிஷேகம் செய்வதும் மரபு.

இராமேசுவர யாத்திரை தனித்துச் செய்யப் பெறுவதுண்டு. காசி யாத்திரையோ இராமேசுவர யாத்திரைத் தொடர்பில்லாது செய்யப் பெறுவதில்லை. வடநாட்டிலிருந்து இராமேசுவர யாத்திரைக்கு வருபவர்கள் கங்கா தீர்த்த அபிஷேகத்தைப் பிரதானமாக வைத்திருக்கிறார்கள். தென்னாட்டில் இருந்து காசி யாத்திரை செல்பவர்கள் யாத்திரையை இராமேசுவரத்தில் தொடங்கி மீண்டும் இராமேசு

வரத்துக்கு வந்து நிறைவு செய்வது வழக்கம். சிவலிங்க வழிபாடுகளுள் ஜோதிர்லிங்கங்களின் வழிபாடு பெரும் பயன் தருவது. அந்த ஜோதிர் லிங்கங்கள் பன்னிரண்டு உள்ளன. அவற்றுள் இராமலிங்கம் ஒன்றே தென்னுட்டிலிருப்பது. விஸ்வலிங்கம் உட்பட மற்றைப் பதினெரு லிங்கங்களும் வடநாட்டில் உள்ளன, காசி இராமேசுவர யாத்திரைப் பிணைப்பு ஜோதிர் லிங்கங்களின் தொடர்பை விளக்குவதேயாகும்.

இந்த யாத்திரை முதன் முதலாக உப்பூரி லிருந்து தொடங்கப்பெறும். இங்கே எழுந்தருளி யிருப்பவர் வெய்யிலுகந்த விநாயகப் பெரு மான். இவரை வழிபட்டு இவர் திருமுன்பே யாத்திரை அநுக்ஞையைப் பெற்றுக் கொள் வார்கள். பின்னர் நவ பாஷாணம் என்னும் தேவிபட்டினத்திற்குச் சென்று அங்குள்ள தீர்த்தங்களில் மூழ்கிக் கடலுக்குள் அமைந் திருக்கும் நவக்கிரகங்களை யாத்திரை இனிதே நடைபெற வேண்டி வழிபாடு செய்துகொண்டு இராமேசுவரத்தை அடைந்து இலக்குமண தீர்த்தத்தில் பிதிர்க் கடன்கள் செய்து தனுஷ் கோடியில் ரத்தினுகர மகோததி சங்கமத்தில் நீராடி இராமேசுவரம் வந்து மலைவளர் காதலி யாகிய பருவத வர்த்தனி அம்மையுடன் எழுந் தருளியிருக்கும் இராமலிங்கப் பெருமானையும் விஸ்வநாதர் விசாலாக்ஷி ஆகிய மூர்த்திகளையும் வழிபட்டு அங்குள்ள புண்ணிய தீர்த்தங்கள் எல்லாவற்றிலும் மூழ்கிக் கோடித் தீர்த்தமும் மிருத்யுவும் எடுத்துக்கொண்டு வடதிசை நோக்கிப் புறப்பட்டுக் காசி யாத்திரையை மேற்கொள்வார்கள். காசியிலும் அதனைச் சுற்றிலும் உள்ள தீர்த்தங்களும் கோயில்களும் எண்ணில்லாதனவாகும். அவற்றுள் கங்கை யும் விஸ்வேஸர் கோயிலும் பெருஞ்சிறப் புடையவை. காசிக் கங்கை அறுபத்துநான்கு தீர்த்தக் கட்டங்களையுடையது.

முறையாகக் காசி யாத்திரை செய்பவர்கள் மேற்கொள்ளுகின்ற வழிபாட்டு முறை மிக விரிவானது. முற்காலத்தில் இந்த யாத்திரை யைப் பன்னிரண்டு ஆண்டுக் காலம் மிகச் சாவ தானமாகச் செய்வார்களாம். வாகன வசதிகள் பல துறையிலும் பெருகியுள்ள இந்நாளில் இந்த யாத்திரையைப் பலர் சில நாட்களில் செய்து விடுகிருர்கள். காசி யாத்திரையில் தண்டம், முண்டம், பிண்டம் ஆகிய மூன்றும் இன்றியமை யாது செய்யப் பெற வேண்டியன. பிரயாகை யில் கங்கை, யமுனை, சரசுவதி ஆகிய மூன்று புண்ணிய நதிகளும் ஒன்றுகூடும் திரிவேணி சங்கமத்தில் முண்டனஞ்செய்து கொள்ளுவ தும், பின்னர் விசுவநாதருக்குக் காசித் தலத்தில் தண்டனிடுவதும், இறுதியாகக் கயாவில் பிதிர்களின் பொருட்டுப் பிண்டம் போடுவதும் காசி யாத்திரையில் அனைவராலும் மேற் கொள்ளப் பெறுவனவாம். கயாவிலுள்ள வட வால மரத்தின் அடியில் திருமாலின் பாதத்தில் போடப்படுகிற பிண்டத்தால் பிதிர்கள் உய்தி பெறுகிருர்கள். மற்றும் அயோத்தி முதலிய தலங்களில் உள்ள புண்ணிய தீர்த்தங்களும் தாடகேஸ்வரம் முதலிய திருத்தலங்களிலுள்ள மூர்த்திகளும் வழிபடுவோர்க்குப் பெருநலத்தை வழங்கி வருவது கண்கூடு.

இராமேசுவரம், புராணப் புகழும் புரா தனப் பெருமையும் பெற்ற ஊராகும். 1905 ம் வருஷம் நான் காசி செல்லும் போது ஒரு வண்டியில் சாமான்கள் ஏற்றிச் சென்றேன். வண்டியோட்டி வந்த முகம்மதியப் பையன் எங்கே போகிறீர்கள் என்ருன். நான் காசி என்றேன். அவன் உடனே காசி ராமேசுவரமா என்ருன். அவ்வளவு தூரம் எல்லோருக்கும் அறி முகமான ஊர் இராமேசுவரம். லட்சக் கணக்கான பேர்கள் வசிக்கும் டில்லி, பம்பாய், போன்ற நகரங்களைக்கூடப் பலர் அறியவில்லை. ஆனல் 13,000 பேர் வசிக் கும் ராமேசுவரத்தை அறியாதார் இலர்.

—ஸ்ரீகாஞ்சி காமகோடிபீடம்
ஸ்ரீசங்கராச்சாரிய சுவாமிகள்

காசி யாத்திரை முடிந்து திரும்பும்போது மீண்டும் இராமேசுவரம் வந்து காசியிலிருந்து கொண்டு வந்த கங்கா தீர்த்தத்தை இராம லிங்கப் பெருமானுக்கு அபிஷேகம் செய்து வழி பட்டுத் தர்ப்பசயனம் என்னும் திருப்புல்லணை யில் அறிதுயிலிலமர்ந்துள்ள பெருமாளையும் திரு உத்தரகோச மங்கையில் மங்கள நாயகி உடனுக எழுந்தருளியுள்ள மங்கல நாதரையும் வழிபட்டு யாத்திரையைப் பூர்த்தி செய்வார்கள்.

# அறம் வளர்க்கும் நகரத்தார்

கதி. சுந்தரம்

1. அன்புநெறி வளர்ந்தோங்க அறநெறியின் திறமேற்று அருளைப் போற்றும்
இன்பநெறி புரக்கின்ற உயர்வுடையார் தனவணிகர் இயலும் நல்ல
மன்னுயிரின் நலம்காக்கும் நகரத்தார் வளநாட்டுக் கோட்டை ஆவார்
என்னென்பேன் இவராற்றல் தமிழ்வளர்க்கும் மனம்படைத்தார் என்றும் வாழ்க!

2. அலைஆடும் நெடுங்கடலின் வாணிகத்தை மிகக்கொண்டே பொருளை ஈட்டி
மலைநாடும் கடவுளுக்கு மனமகிழ கலைக்கோயில் ஆக்கி நின்றார்
கலைநாடும் இளைஞர்க்குப் பலகலையின் கழகங்கள் பலவும் தந்தார்
நிலைநிற்கும் புகழ்பெற்ற நகரத்தார் பொதுத்தொண்டை உலகம் போற்றும்

3. மண்ணுலகில் புகழ்பெற்ற காசி தன்னில்
மாநிலத்தார் போற்றுகின்ற விசுவேஸ் வரர்க்கே
எண்ணரிய சிறப்புடனே விழாக்கள் செய்தே
என்றென்றும் இறையருளை போற்றி நின்றார்
புண்ணியம்செய் நகரத்தார் காசி தன்னில்
பொற்புடனே கட்டியுள்ள சத்தி ரத்தின்
பண்ணொலிக்கும் நூற்றாண்டு விழாவே! வாழ்க!
பாரெல்லாம் நகரத்தார் அறமே! வாழ்க!!

4. 'பஞ்சவடி' 'பிரயாகை' மற்றும் உள்ள
பாடலுறு 'அயோத்தி' 'கயா' நகரம் எல்லாம்
மஞ்சுதவழ் மாளிகைகள் பலவும் கண்டார்
மாதவத்தோர் போற்றுகின்ற அறத்தைச் செய்தார்
நெஞ்சார அறம்போற்றி ஏழை வாழ்த்த
நீறணிந்து உணவளித்தார் உள்ளம் வாழ்க!
செஞ்சுடராய்க் கொடைபரப்பும் நாட்டுக் கோட்டைச்
சீர்மைமிகு நகரத்தார் என்றும் வாழ்க!!

5. கன்னல் வளரும் திருநாடு
கவிஞர் உண்மை இறைநெறியில்
என்றும் சென்று பயன்பெறவே
இன்பம் பலவும் பெற்றிடவே
அன்பார் மக்கள் அனைவருமே
அறத்தைப் போற்றி மேன்மையுற
அருளின் திறத்தால் மக்களெலாம்
அமைதி பெற்று மகிழ்ந்திடவே
இன்ப வாழ்வில் உண்மைநெறி
என்றும் நின்று சிறந்திடவே
எழில்சேர் நாட்டின் தொழில்களெலாம்
இணைந்து நின்று இலங்கிடவே
அண்ணல் விசுவேஸ் வரனே நீ
அன்பாய் வருக! வருகவே!
அருளின் வடிவாம் முதல்வனீயே
அன்பாய் வருக! வருகவே!!

# கலம்பகத்திற் காசி

பள்ளத்தூர் பண்டித. மு. முத்து வேங்கடாசலம்

ஆனந்த வல்லியுடன் ஆனந்தக் கானகத்தே
ஆனந்தக் கூத்தாடு அருட்கடலை—ஆனந்தங்
கொள்ளத் திளைத்தாடும்! கூடாதேல் இப்பிறவி
வெள்ளத்(து) இளைத்தாடு வீர்.

### காசிச் சிறப்பு

நமது பாரத நாட்டில் புனிதமான ஏழு நகரங்களில் காசி ஒன்று. இந்நகரே ஏனைய வற்றிலும் முதன்மையானது; மிகச் சிறந்த கங்கை நதிக் கரையிலமைந்தது; தீர்த்த விசேடமும் தல விசேடமும் ஒருங்கேயமைந்து முத்தித் தலமாய் விளங்குவது; வாரண, அசி என்னும் இரு நதிகள் இந்நகரைச் சூழ்ந்திருத் தலால் 'வாரணசி' என்னும் பெயரும் இதற் குண்டு; சக்தி பீடமாகிய அன்னபூரணியின் திருமுன்னர் ஆதி சங்கரர் ஸ்ரீசக்ரப்ரதிட்டை செய்துள்ளார்.

பரம்பொருள் இந்த விச்வத்தையெல்லாம் தனக்குள் வயமாக்கிக் கொண்டு விசுவநாதனு கத் திகழும் தலம் இது. ஞானியர் நோக்கில் அவனைத் தவிர மற்றவையெல்லாம் அழிந்து விடும் மஹாஸ்மசானம் இது. சாவையே சாக வைத்து அமுதநிலையள்ளித் தரும் மயானம் இது; அந்த அமுதம் அளிப்பவளைத்தான் 'அன்னபூரணி' என வழிபடுகின்றனர்; தன் விசாலமான கண்களால் விசாலாக்ஷி என்ற கோலத்தில் உலகையெல்லாம் பரிவுடன்கண்ட பின்னரே அருளன்னத்தை யூட்டுகின்றுள். வியாச காசியில் வேதவியாசர் வீற்றிருந்து அருள் புரிகின்றுர், கங்கையாறு வடக்கு நோக்கி ஓடும் மாண்பு மிக்க தலமிது.

### காசிக்கலம்பகச் செய்தி

இத்தலம் பற்றிய பல அருமையான செய்தி களைக் குமரகுருபரர் தம் காசிக்கலம்பகத்திற் குறித்துள்ளார். அவற்றுட் சிலவற்றைக் காண் போம்.

"இத்தலத்தில் இறந்த ஆன்மாக்களை அம்பிகை தன் மடியிற் கிடத்தி இளைப்பாற்ற அகிலேசர் பிரணவத்தை உபதேசிப்பர்" என்பது புராண வரலாறு. இக்கருத்தை,

"ஒரு பெண்ணொடும் ஓடிப் பெருங்கருணை
தராநின்ற காசித் தடம்பதியார்"

எனக் குமரகுருபரர் குறிக்கின்றுர். இத்தலத் தில் இறந்த சிற்றுயிர்களும் சாரூபம் பெற்றுப் பல ஆண்டுகளாகத் தம்மைப் படைத்தளித்த தேவர்களைப் பார்த்து, "நீவிர் முன்னிருந்த நிலையிலேயே இருக்கின்றீர்கள்; யாம் நும்மினும் மேம்பட்ட நிலையடைந்தோம்" என்று கை கொட்டிச் சிரித்துச் சிவலோகஞ் செல்லா நிற் கும் என்ற கருத்தைக் கலம்பகம் காட்டு கின்றது.

இறப்பவர்க்கு விசுவநாதர் பிரணவோப தேசஞ் செய்து சாரூபப் பதவியை வழங்கியருளு வர் என்ற தல் ஐதீகத்தை அகத்துறையுடன் பொருத்தியமைத்த பாடல்கள் சிலவற்றைக் காண்போம்:

"எடுக்கச் சிவந்த சிலம்படியார் அகி
லேசர் நறைக்
கடுக்கைச் சடைமுடியாரடியார்க்குக்
கலைகள் கொய்து

கொடுக்கக் கொடுக்க வளர்கின்ற வா!
வெறுங் கூட்டில் எரி
மடுக்கக் குறை உயிர் மாதரைத் தேடு
மதிக் கொழுந்தே''

(கடுக்கை-கொன்றை. வளர்கின்றவா-வளர்கின்றவாறு என்ன வியப்பு).

சந்திரன் தண்கதிரைப் பொறுமல் வெதும்பிய தலைவி "விசுவேசர் தம் அடியவர்க்குச் சாருபம் வழங்குகையில் ஒவ்வொருவர்க்கும் ஒரு கலையுடைய பிறையை அணியத் தருகின்றார்; இவ்வாறு பலர்க்குக் கலைகள் கொய்து கொடுக்கவும் இம்மதிக்கொழுந்து வளர்ந்து கொண்டேயிருக்கிறது என்ன வியப்பு'' என்று வியக்கின்றாள்.

விசுவேசர் கொன்றை மாலையைப் பெறாது வாடிய தலைவி ஒருத்தி, அதை வாங்கித் தர வேண்டும் என்று சொல்ல வந்தவள் ''தண்ணென்று நறையிதழித்தார்'' என்ற அளவில் ஆற்றாமை மிகுந்து உணர்வழிந்து தரை மேல் விழுந்தாள்; அவள் நிலையைக் காசிநாதருக்குக் கூறும் தோழி ''இங்ஙனம் இவள் மூர்ச்சித்துக் கிடத்தலைக் கண்டால் தேவரீர் இறந்தாளாகக் கருதிப் பிரணவோபதேசம் செய்ய வருவீர் என்று எண்ணி இது செய்யத் துணிந்தனளோ?'' என்கின்றாள். பாடல் காண்மின்!

கண்ணென்று திருநுதலில் கனல் உருவ
மாப் படைத்த காசிநாதா!
'தண்ணென்று நறை இதழித்தார்' என்றாள்;
நெட்டுயிர்த்தாள்; தரைமேல் வீழ்ந்தாள்,
எண்ணென்று முணராமே கிடக்கின்றாள்;
இது கண்டால் எழுத்தொன்று ஓதத்
துண்ணென்று வருவர் எனத் துணிந்தனளோ?
அறியேன் இத்தோகை தானே.

(இதழித்தார் - கொன்றைமாலை. எழுத்து - பிரணவம்)

காசியில் பாபம் செய்தவர்க்கு யம தண்டனையில்லை என்பதும், வைரவர் தண்டனை மட்டும் உண்டு என்பதும் புராண வரலாறுகள். இதைத் தலைவி,

''ஆமோ அவி முத்தத் தையரே
பெண்பழிவீண்
போமோ வயிரவர்தம் சாதனமும்
பொய்யாமோ''

என்பதில் குறிக்கின்றாள்.

(அவிமுத்தம்- காசி. சாதனம்-தண்டனை)

கங்கைத் துறைகளில் ஒன்றான மணிகர்ணிகையில்தான் இறந்தவர்க்குக் காதில் பிரணவத்தை உபதேசித்தருள்கின்றார். மணி-பிரணவ மந்திரம். கர்ணிகை - காது. மந்திரம் இறப்பவர் காதுக்கு அலங்காரமாகும் இடம் அத்துறை. ''உடல் விடும்போது நன் மணிகர்ணிகைப் பூந்துறை பேணுமாறு பெற வேண்டும்'' என்று குமரகுருபரர் அத்துறையில் உடல் விடுதலை வேண்டுகின்றார்.

இத்தகைய மகத்துவம் வாய்ந்த காசித் தலத்தில் விசுவேசர், விசாலாக்ஷி அன்னபூரணி, துண்டி விநாயகர், கால பைரவர் முதலிய மூர்த்திகட்கு வழிபாடுகளும், அந்தணர்கட்கும் அடியார்கட்கும் திருவமுதும் நிலையாய் ஏற்படுத்திச் சிறப்பாக நகரத்தார்கள் செய்து வரும் சிவ புண்ணியச் செயல்கள் நினைந்து நினைந்து பாராட்டத்தக்கன.

''பொருளீட்டி அறம் பேணிப் புகழ்வளர்த்து
நெறி நின்று பொருவிலீசன்
அருளீட்டி வாழ்ந்து வரும் தனவணிகர்''

என்று முன்னோர் பாராட்டிக் கூறியுள்ளமை இயல்பு நவிற்சியே. நகரத்தார் தருமமாக நாள்தோறும் உச்சிக் காலத்தும் அர்த்த சாமத்தும் விசுவேசருக்கு பால் அபிடேகம் செய்யப் பெற்று வருகிறது.

சத்திரம் தொடங்கிய நூற்றாண்டு விழாவின் நினைவு மலரில் இக்காசி பற்றிய கலம்பகக் கட்டுரை இடம் பெறச் செய்த வெளியீட்டுக் குழுவினர்க்கு என் மனங்கலந்த நன்றியைப் புலப்படுத்திக் கொள்கின்றேன்.

அறம் வளர்க! அருள் மலர்க!

# சமயக் கல்வி

தி. சு. அவிநாசிலிங்கம், எம். பி. (முன்னாள் கல்வி அமைச்சர்)
இராமகிருஷ்ண வித்தியாலயம், பெரிய நாயக்கன் பாளையம்,
கோயம்புத்தூர் மாவட்டம்.

இவ்வாண்டு விவேகானந்த சுவாமிகளின் 100 ஆண்டு விழாவைக் கொண்டாடப் பெறும் சிறப்பைக் கொண்டது. இந்த நாட்டு மக்கள் மனத்தில் புதிய உணர்ச்சியை ஊட்டி, நம் சமயத்திற்குப் புதிய உயிரை ஊட்டிய பெருமை விவேகானந்த சுவாமிகளுடையது. இவருடைய வார்த்தைகளும், கருத்துக்களும் ஆன்மீகம் நிறைந்தனவாய் ஆண்மை ஊட்டுவனவாகத் திகழுகின்றன. அவர் சமயக் கல்வியை மிக முக்கியமாக நினைத்தார். அவர் எத்தகையானதாக இருக்க வேண்டு மென்பதையும் கணீர் கணீர் என்ற வார்த்தைகளில் எடுத்துரைத்திருக்கிறார் :

எல்லாக் கல்வி முறைகளிலும் சமயக் கல்வி மிக முக்கியமான அம்சமாய் இருக்க வேண்டும். சமயக் கல்வி என்பதில் என்னுடைய மதத்தைப் பற்றிய கல்வியையோ, அல்லது எந்தத் தனிப்பட்ட ஒருவருடைய மதத்தைப் பற்றிய கல்வியையோ, அல்லது ஒரு கூட்டத்தினருடைய மதத்தைப் பற்றிய கல்வியையோ நான் குறிப்பிடவில்லை. மனித வாழ்க்கைக்கு என்றும் அடிப்படையாக இருந்து வரும் நிலையான ஆன்மீக இயற்கை நியதிகள் மக்கள் அறியுமாறு எடுத்துச் சொல்லப்பட வேண்டு மென்பதே என் கருத்து. முதலில் ஆன்மீகத் துறையில் சிறந்து விளங்கியிருக்கும் நாயன்மார்கள், ஆழ்வாராதிகள் வாழ்க்கைகள் பக்தியுடன் கொண்டாடச் செய்யவேண்டும். என்றும் அழியாத நிலையான ஆன்மீக உண்மைகளைத் தங்கள் வாழ்க்கையில் அனுஷ்டித்த அவதார புருஷர்களான இராமர், கிருஷ்ணர், மகாவீரர் (அனுமார்), ராமகிருஷ்ண தேவர் முதலியோர் மக்களுக்குத் தங்கள் வாழ்க்கையில் பின்பற்றும் இலட்சியங்களாக விளங்கும்படி செய்யவேண்டும்.

பிருந்தாவனக் கிருஷ்ணனைத் தற்சமயம் கொஞ்சம் தள்ளிவைப்போம். ஒரு மகாயுத்தத்தின் மத்தியில் அஞ்சாது நின்று சிங்கம் போல் கர்ஜித்து, கீதையை உபதேசித்து, அர்ஜுனனுடைய சோர்வை நீக்கி ஆண்மையை ஊட்டிய அந்த கிருஷ்ணனுடைய வழிபாட்டையே நாம் இப்போது பரப்ப வேண்டும். அதனோடு, சக்தி உபாசனையும் நாள் தோறும் செய்தல் வேண்டும். நமக்கு இப்போது வேண்டுவன, வீரத்தையும் ஆண்மையையும் உண்டாக்கக் கூடிய இலட்சியங்களே. ஒப்பற்ற ஆண்மையுடனும், அளவற்ற வேகத்துடனும் தியாகத்தைக் கவசமாக ஏற்று, ஞானத்தைக் கத்தியாகக் கொண்டு, உண்மைக்காக உழைத்து, அம்முயற்சியில், அவசியமானால், தங்கள் உயிரையும் தத்தம் செய்யக்கூடிய வீரம் செறிந்த ஆண்தகைகளே நமக்கு இப்போது இலட்சியமாகத் தேவை. போர் முனையில் எதற்கும் அஞ்சாது போர் புரியத் தக்க உணர்ச்சிதான் நமக்கு இப்போது அவசியம்.

அந்த ராம பக்தரான மகா வீரரையே (அனுமார்) உங்கள் இலட்சியமாக்கிக் கொள்

ளுங்கள். ராமர் ஆணையால் அவர் கடலையும் கடந்தார். அவர் உடலை உருக்கவும் சாவை எதிர்க்கவும் ஒரு சிறிதும் அஞ்சவில்லை. அவர் சிறந்த அறிவாளி. புலன்களனைத்தும் அவர் வயப்பட்டிருந்தன. அவர் வாழ்க்கை முழுதும் ராமசேவையில் கழிக்கப்பட்டது. சேவைக்கு இலட்சியமாகவுள்ள இவரை ஆதாரமாக வைத்துக் கொண்டு உங்கள் வாழ்க்கையை நடத்துங்கள். சேவை என்ற இலட்சியத்தை மேற்கொண்டால் மற்ற அருங்குணங்களனைத்தும் தாமே நம் வாழ்க்கையில் பொருந்தும். குருவின் உபதேசங்களை முற்றிலும் ஏற்று அவற்றின்படி ஒழுகுவதிலும், பிரமசரியத்தை வழுவாது கடைப்பிடித்தலுமே, எவ்விஷயத்திலும் வெற்றி பெறுவதற்கான இரகசியமாகும். அனுமார், சேவைக்கு இலட்சியமாக இருப்பது போல், ஆண்மைக்கும் வீரத்திற்கும் எடுத்துக் காட்டாக இருக்கின்றார். உலகம் அவர் வீரத்தைக் கண்டு பிரமிக்கிறது. ராமசேவையில் தம்மை முற்றிலும் தியாகம் செய்வதில் அவருக்குச் சிறிதும் கவலை இல்லை. வேறு எவ்விஷயத்திலும் அவருக்கு அக்கறை இல்லை. இராகவனுடைய உத்தரவைச் சிரமேற்றாங்கி அதன்படி நடப்பதே அவர் வாழ்க்கையில் கொண்டிருந்த ஒரே விரதம். அத்தகைய பூரண பக்தியே இப்போது நமக்குத் தேவை.

தற்காலத்தில் கிருஷ்ணன் கோபிகைகளுடன் விளையாடிய தெய்வீக லீலையை ஆராதிப்பது நமக்கு நல்லதன்று. வெறும் புல்லாங்குழலை வாசித்து நாட்டைப் புனருத்தாரணம் செய்ய முடியாது. மிருதங்கத்தையும் ஜால்ராவையும் அடித்துக் கொண்டு பாடுவதும், ஆடுவதும் நம்மைத் தாழ்த்தி விட்டன. பரமனை நினைத்துப் பாடுவதும் ஆடுவதும் மிக உயர்ந்த சாதனைகள் என்பதில் ஐயமில்லை. ஆனால் அவற்றுக்கு இன்றியமையாத பூரண பரிசுத்த மின்றி நாம் இச்சாதனைகளிலீடு பட்டது நம்மைத் தாழ்த்தித் தபோகுணத்தில் தள்ளியிருக்கிறது. நம் நாட்டில் பேரிகைகள் செய்வதில்லையா? யுத்த பேரிகைகள் இந்தியாவில் கிடைப்பதில்லையா? இவற்றின் ஆழ்ந்த முழக்கங்களை நம் இளைஞர்கள் கேட்கும்படி செய்யுங்கள். மிருதுவான சப்தங்களையும் சங்கீதங்களையும் இளமையில் இருந்து கேட்டு நம் மக்கள் ஆண்மையை இழந்து விட்டனர். மறுபடியும் வெற்றி முரசைக் கொட்டுங்கள்! பேரிகைகளை அடியுங்கள்! அவை உண்டாக்கும் ஆழ்ந்த முழக்கங்களுடன் ''மகாவீர், மகாவீர்'' என்ற சப்தம் முழங்க, உலக முழுதும் ''ஹர ஹர மஹாதேவ்'' என்ற நாதம் கேட்கட்டும். பெண்மையை உண்டாக்கக் கூடிய மிருதுவான ஸ்வரங்களைக் கொஞ்ச காலத்திற்கு நிறுத்தி வைப்போமாக. வீரத்தை உண்டாக்கக் கூடிய பேரிகை முழக்கத்தையே நாம் இப்போது கேட்டுப் பழகவேண்டும். இடி முழக்கம் போன்ற வேகத் தொனிகளை மறுபடியும் கிளப்புவோம். அவை மூலம் நாட்டில் புத்துயிர் ஊட்டவேண்டும். எல்லா விஷயங்களிலும் எளிமையும் வீரமும் செறிந்த தன்மையை மறுபடியும் பிறப்பிக்க வேண்டும். இத்தகைய தன்மையை ஒருவன் பெற்றால் ஆயிரக்கணக்கானபேர் அவனைப் பின்பற்றுவார்கள். நம் இலட்சியத்திற்கு ஓர் அங்குலம் பிறழாமல் பார்த்துக் கொள்ளவேண்டும். எப்பொழுதும் தைரியத்தைக் கைவிடாதீர்கள்! உண்ணும்போதும் உறங்கும்போதும் உடுத்தும்போதும் அல்லது பாடும்போதும், விளையாடும்போதும், அல்லது இன்பத்திலும் எப்போதும் உயர்ந்த ஆண்மையைக் கடைப்பிடியுங்கள்; எச்சமயத்திலும் எந்த விதமான பலவீனமும் உங்கள் மனத்தில் புகவிடாதீர்கள்! அனுமனை நினைத்துக் கொள்ளுங்கள்; பராசக்தியை மனத்தில் வையுங்கள்; உங்களுடைய பலவீனங்கள் கோழைத் தன்மை யாவும் மறையக் காண்பீர்கள்!

கடவுளிடம் நம்பிக்கை இல்லாதவனை நாஸ்திகனென்று பழைய மதங்கள் கூறின. ஆனால், தன்னிடத்தில் நம்பிக்கையில்லாதவனை நாஸ்திகன் என்று புதுமதம் கூறுகின்றது. இந்தத் தன்னம்பிக்கை சுயநலத்தைக் கோரும், 'தனது' என்ற எண்ணம் அன்று. இந்த நம்பிக்கை எல்லாரிடமும் வைக்கவேண்டிய ஒரு விசுவாசத்தைக் குறிக்கும். ஏனெனில் நாமே அனைத்துமா யிருக்கிறோம். எனவே, சுய அன்பு என்பது, மனிதர் மிருகங்கள் முதலிய அனைவர் பேரிலும் அன்பு கொள்வதாகப் பொருள்படும். நாமே அனைத்துமாயிருக்கிறோம் என்ற இத்தகைய நம்பிக்கையே நமக்கு என்றும் எக்காலத்தும் பேருதவியாக இருக்கத்தக்கது. மக்களில் பெரும்பாலோர் தன்னம்பிக்கை உடையவர்களா

ஸ்ரீகாசியம்பதியில் நாட்டுக்கோட்டை நகரத்தார்களாகிய நம்மவர்கள் நடத்திவரும் நகரச்சத்திரத்தின் நூற்ருண்டு விழா. கொண்டாடவிருப்பது அறிந்து மிக்க மகிழ்ச்சியடைகிறேன் விழா சிறப்புற நடைபெறவும் அதையொட்டி வெளியிடவிருக்கும் மலர் சிறந்த முறையில் கண்ணுக்கும் கருத்துக்கும் விருந்தளிக்கும் வகையில் வெளிவரவும் எனது நல் வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

A. நாகப்பன்.
*Managing Director*
THE INDIA LEATHER CORPORATION PRIVATE LTD., MADRAS

யிருந்தால், உலகில் இப்போது காணப்படும் துன்பங்களில் பெரும்பகுதி மறைந்திருக்கும்.

அரிய பழைய உபநிடதங்களை மறுபடியும் போற்றிப்படியுங்கள். ஞானமும் ஒளியும் சக்தியும் கொடுக்கக் கூடிய பல தத்துவங்கள் அதில் நிறைந்திருக்கின்றன. இவ்வுயர்ந்த தத்துவங்களைக் கடைப்பிடியுங்கள். உலகிலுள்ள உயர்ந்த உண்மைகள் உணர்வதற்கு மிகவும் எளியவை. நாம் இப்போது உயிருடன் இருக்கிருேம் என்பதைப் பற்றி யாருக்காவது சந்தேகம் இருக்கிறதா? அது போலவே அவை தாமே விளக்கமாயிருப்பவை. உப நிஷத்துக்களின் இவ்வுயர்ந்த உண்மைகள் உங்கள் முன் நிற்கின்றன. அவற்றை மேற்கொள்ளுங்கள்; அவற்றை வாழ்க்கையில் கடைப்பிடித்து நடவுங்கள்! அப்பொழுதுதான் இந்தியாவின் இலட்சியம் கை கூடும்.

நமது உடலின் பலக் குறைவே நம் கஷ்டங்களில் சுமார் மூன்றில் ஒரு பங்குக்குக் காரணமா யிருக்கிறது. நாம் சோம்பேறிகளாகி விட்டோம். நம்மால் எக்காரியத்தையும் சேர்ந்து செய்ய இயலுகிறதில்லை. கிளியைப் போல் பல விஷயங்களைப் பற்றிப் பேசுகிருேம்! ஆனுல் அவற்றைச் செய்வதில்லை. காரியத்தில் ஈடுபடாமல், வெறும் பேச்சே நமக்கு வழக்கமாய் விட்டது. உடலிலிருக்கும் வலிமையற்றமையால் எதையும் சாதிக்க முடிவதில்லை. நம் இளைஞர்கள் முதலில் பலம் பெறவேண்டும். சமய உணர்ச்சி பின்னர் தானே ஏற்படும். வாலிப நண்பர்களே! நீங்கள் பலசாலிகளாகுங்கள். இதுவே நான் உங்களுக்குக் கொடுக்கும் புத்திமதி.

உங்கள் நரம்புக் குழாய்களில் இன்னும் சிறிது வலுவுள்ள இரத்தம் ஓடும்போது கிருஷ்ண பரமாத்மாவின் மகத்தான ஞானத்தையும் மகத்தான பலத்தையும் இன்னும் நன்ருக அறிந்து கொள்ளுவீர்கள். உங்கள் முதுகு வளையாமல், உங்கள் கால்கள் தளர்வுருமல் நீங்கள் நிமிர்ந்து நிற்கும் போதே, உங்கள் மனத்தில் ஆண்மையும் வீரமும் தோன்றும் போதே, உபநிடதங்களில் நுட்பத்தையும் ஆன்மாவின் மகிமையையும் நீங்கள் நன்குணர்வீர்கள்.

கல்வி முறையில் ஒரு பெருங்குறையிருக்கிறது. அக்கல்வி பக்தியுணர்ச்சியின்றி வெறும் புத்திக்கு மாத்திரம் பயிற்சியளிக்கிறது. இதயம் இல்லாமல் வெறும் புத்திக்கூர்மை மாத்திரம் இருந்தால் அது ஒருவனை அதிகச் சுயநலமுடையவனுகத்தான் செய்யும். இதயம் ஒன்று சொல்லி, புத்தி வேறு ஒன்று உரைப்பின், இதயத்தையே பின்பற்ற வேண்டும். இதய பூர்வமான உணர்ச்சி ஒருவனை மிக உயர்ந்த நிலைக்குக் கொண்டு போகும். புத்தியால் எப்போதும் அவ்வளவு உயர்ந்த நிலைக்கு அழைத்துச் செல்ல முடியாது. இதயம் புத்திக்கு மேல் சென்று தெய்வ சன்னிதானத்தை அடைய முடியும். ஆதலால் எப்போதும் இதய உணர்ச்சியை நன்ருக வளருங்கள். இதயத்தின் மூலம் ஆண்டவன் பேசுகிருன்.

# வணிகர் வண்மை வாழ்க

சுவாமி சுத்தானந்த பாரதியார்

——:o:——

தமிழும் சைவமும் தழைத்தினி தோங்கவே
திரைகட லோடித் தேடிய செல்வம்
அள்ளி வழங்கி அறவினை செய்த
தனவா ணிகரின் சரித்திரப் புகழை
உலகெலாம் அறியும். உத்தம வணிகர்
சத்திரம் பலபல சதுருடன் எழுப்பி
அந்தணர் மாணவர் ஆண்டிபர தேசிகள்
அனுதைகள் யாவரும் அருந்தி வாழச்
செய்யும் பணிகளின் சிறப்பென் சொல்வோம்
உழைத்த பணத்தால் ஊரினை யூட்டித்
தழைத்த தருமமே தலைகாத் திடுமே.
பாத்தூண் என்னும் பண்பாட் டுடவே
நல்விருந் தோம்பும் நாட்டுக் கோட்டைச்
செட்டியார் வாணிகச் செல்வம் மல்கி
ஃபோர்டு ராக்ஃபெலர் போலவா ழியவே
அன்பும் அறமும் பண்பும் பயனுமாய்
நகர முதல்வர் நாட்டுக் கோட்டையார்
மன்னர் பின்னர் மங்கல மாக
வாழ்க நல்லறம் வாழிய மாதோ.

# கீதை வழி நடப்பவர்கள்

எம். ஆர். ஜம்புநாதன்,
பம்பாய்.

"தருமத்திலிருந்து திரவியம் தோன்று கிறது. தருமத்திலிருந்து இன்பம் வருகிறது, தருமத்தால் அனைத்தையும் பற்றுகிறோம். தர்மமே தரணியின் இரசமாகும்."

கீதையின் இம் மொழிகளைப் பின்பற்றி வரும் தன வைசியர்களாகிய நகரத்தார்கள். தருமம் ஓங்கப் பல பணிகள் புரிந்து வருகிறார்கள்.

தருமம் அறிந்த தமிழராம் அகஸ்தியரே ஸ்ரீ இராமருக்குப் பஞ்சவடியைப் புலப்படுத் தினார். அகஸ்தியர் வேத சூத்திரங்களைப் பாடினார். மறைமொழிகளிலே யோகத்தையும் போகத்தையும் விளக்கி, சைவத்தைப் புகழ்ந் தார். அப் பஞ்சவடியிலே தமிழர் பண்புக்குச் சிகரமாக இருப்பது செட்டியார்களின் நகரச் சத்திரமாகிய கார்த்திக் மந்திர் என்பதை அங்கு வரும் ஒவ்வொருவரும் அறிவர். காசியிலே மறை ஒலியோடு சைவத் திருநாமங்களைக் கேட்க விரும்பினால் நகரத்தார்கள் நடத்தும் பூசையின்போது காசி விசுவநாதரைக் காண வேண்டும். நகரத்தார்களின் பாடசாலைகள் இல்லாமலிருந்தால் தென்னாட்டு வேத கோஷம் மறைந்திருக்கும். அவர்கள் செய்யும் தருமங் களை நடத்துபவர்களுக்கும் சைவ சமயத் தொண்டுக்கு ஆதரிப்போருக்கும் என் வாழ்த்துக்கள். ★

# நகரத்தார்களின் பொதுநோக்கு

'தமிழண்ணல்'
இராம. பெரியகருப்பன், எம். ஏ.,
தமிழ் விரிவுரையாளர்,
தியாகராசர் கல்லூரி, மதுரை.

நாட்டுக்கோட்டை நகரத்தார் சமூகத்தினர் அனைவரும் சைவ சமயத்தினராக விளங்குகின்றனர். அதன் பயனாகச் சைவ சமயத்தின் பொதுநோக்கு அவர்கள் பாலும் விளங்கக் காண்கிறோம். முதலியார், நாயுடு, பிள்ளைமார் போன்ற பிற சமூகத்தினர்களில் சைவநெறிப் பட்டவர்களும், வைணவ நெறிப் பட்டவர்களுமாக இரு சாராரும் உளர். இன்னும் சில சமூகங்களில் கிறித்தவர்கள், இந்துக்கள் ஆகிய இரு சமயத்தினரும் உள்ளனர். நகரத்தார்பால் இவை போன்ற பிரிவினை கிடையாது. அனைவரும் சைவரே. ஆயினும் காழ்ப்பற்ற சமரச நோக்கத்தால் திருமாலை வழிபடுவதிலும் அவர்கள் சிறந்து விளங்குகின்றனர்.

நகரத்தார் சமூகத்தினர் பல திருமால் கோயில்களை உருவாக்கிப் பேணி வருகின்றனர். செட்டிநாட்டின் முதன்மை வாய்ந்த நகரமாகிய காரைக்குடியில் கல்லுக்கட்டி மேல் கரையில் கிருஷ்ணன் கோயில் இருக்கிறது. காரைகுடிக்கு அடுத்த அரியக்குடியிலிருக்கின்ற சீனிவாசப் பெருமாள் கோயிலுக்கு, நகரத்தார் பல இலட்ச ரூபாய்களைச் செலவிட்டுள்ளனர். தேவகோட்டை நகரத்தார் வடகலைப் பெருமாள் கோயில், தென் கலைப் பெருமாள் கோயில் என இரண்டு கோயில்கள் கட்டியுள்ளனர். இக் கோயில்களின் திருப்பணிகளும் அன்றாடப் பூசை நடைமுறைகளும், வைணவர்களல்லாத சைவர்களாகிய நகரத்தார்களின் பொருளுதவியால் நிகழ்த்தப் பெற்று வருகின்றன.

மேலும், அரண்மனைச் சிறுவயல் நகரத்தார் தம் செலவில் பெருமாள் கோயில் ஒன்று கட்டியுள்ளனர். கீழச் சிவற்பட்டி, கொற்றமங்கலம், செம்பொன்னூர், பாகனேரி ஆகிய ஊர்களிலும் நகரத்தார், பெருமாள் கோயில்களைக் கட்டியுள்ளனர். நாட்டரசன் கோட்டை நகரத்தார்கள், அலர்மேலு மங்கைத் தாயார் உடனிருக்கும் வேங்கடேசப் பெருமாள் கோயில் ஒன்று கட்டியுள்ளனர்.

வைணவத் தலமாகிய திருக்கோட்டியூர்க் கோயில் திருப்பணிகளிலும் அதன் திருவிழா நிகழ்ச்சிகளிலும் இவ்வினத்தவர்க்குச் சிறப்பான பங்குண்டு. வைணவர் போற்றும் தலமாகிய திருமெய்யத்திலிருக்கின்ற சத்திய மூர்த்தி கோயிலிலுள்ள கல் திருமேனிகளுக்கு இராமச்சந்திரபுரம் தீ. நா. முத்தையா செட்டியாரவர்கள் தைலக் காப்பிட்டுள்ளார்கள். அரிமளத்திற்கு அருகேயுள்ள கடையக்குடிப் பெருமாள் கோயிலில் நடைபெறும் கசேந்திர மோட்ச விழாவிற்கு நகரத்தார் பெண் மக்கள் பெரிதும் விரும்பிப் போய் வருகின்றனர்.

பர்மாவில் கல்வி வளரும் கம்பை என்னும் சிற்றூரில், நாயுடு சமூகத்தினர் பெருமாள் கோயில் ஒன்று கட்டியுள்ளனர். இக் கோயிலின்கண் நகரத்தார்களும் சில திருப்பணிகள் செய்துள்ளனர். தில்லை நடராசப் பெருமான் எல்லையிலா இன்ப நடம் புரியும் பொன்னம்பலத்திற்கு அணிமையில் கோவிந்த ராசப்பெருமானின் கோவிலொன்று உளது. அக் கோயில் சிதைந்து இடிந்துவிழும் நிலையிலிருந்த போதும், சைவர்களுக்கும் வைணவர்களுக்கும் முரண்பாடு ஏற்பட்டமை காரணமாகப் பழுது பார்க்கப்படாதிருந்தது. அவ்விரு திறத்

தாரையும் அமைதியான முறையில் உடன்படச் செய்தவர் நகரத்தாராகிய அண்ணுமலை அரசரே ஆவார். அதன் பயனுகக் கோவிந்த ராசருக்குப் புதிய கற்கோயிலமைந்து 1934-இல் குடமுழுக்கு நடைபெற்றது.

நகரப் பெருங்கோயிலாகிய இளையாற்றங் குடியில் ஆதிகேசவப் பெருமாள் கோயில் இருக்கிறது. இக் கோயிலைக் கழனிவாசற் குடியார் என்ற பிரிவைச் சேர்ந்த நகரத்தா கட்டியுள்ளனர். இரணியூர் நகரப் பெருங் கோயிலில் இராச நாராயணப் பெருமாளுக்கு ஒரு கோயில் கட்டப்பட்டிருக்கிறது.

நகரத்தார் குடும்பங்கள் பலவற்றில் இராமர் படம் வைத்து வழிபடுவதை இன்றும் காணு கிறேம். புரட்டாசி மாதம் முழுதும் விரத மிருந்து, இராமாயணக் கதையை இரவு தோறும் படித்து, அத்திங்களின் இறுதியில் பட்டாபிடேக விழாக் கொண்டாடும் வழக்கம் இன்றும் செட்டிநாட்டில் பல குடும்பங்களில் நிலவுகிறது. இவர்கள் தம்பாலுள்ள இராமாயண ஏடுகளை மிகுந்த பக்தியுடன் பேணிப் போற்றுகின்றனர். இப் புரட்டாசி மாதத்தில் சனிக்கிழமைதோறும் பலருக்கும் விருந்திட்டு மகிழ்கின்றனர்.

தனி ஒருவர் இல்லத்திற்குள்ளேயே பெருமாள் கோயில் ஒன்று இருக்கும் காட்சி யையும் தேவகோட்டை நகரில் கண்டேன். உயர்திரு, பி எஸ். சாத்தப்ப செட்டியார் அவர்கள் 1943-இல் தம் மாளிகையில் ஒரு பெருமாள் கோயிலை அமைத்து அதனருகே பூசகர்க்கும் வீடுகட்டிக் கொடுத்திருக்கிருர்கள். இங்கு இரண்டு காலப் பூசை நடைபெற்று வருகிறது. மூலவிக்கிரகம் கல்லாலும், உற்சவ விக்கிரகம் தங்கத்தாலும் ஆனவை.

நகரத்தார் வாழுமிடங்களில் அனைத்துச் சமயத்தவர்களும் அன்பு வாழ்வு வாழ்கின்றனர். நகரத்தார் தமது சமயத்தில் ஆழ்ந்த பற்றுடை யவர்கள். பழக்க வழக்கங்களிலும் சமயம் மொழி கலை பண்பாட்டுத் துறைகளிலும் அவர் களைப் பழமை விரும்பிகள் (Conservatives) எனலாம். சமூகக் கட்டுப்பாடுகட்கு உட்படும் மனப்பான்மை படைத்தவர்கள். பிற சமயத் தவர்கள் தத்தம் சமயங்களில் எவ்வளவு பற்றுக் கொண்டிருப்பினும் அக்காரணத்திற்காக அவர்களை இந் நகரத்தார் வெறுப்பதில்லை. ஆனுல், தமது சமய வாழ்வுக்குப் பிறருடைய சமயப்பற்று குறுக்கே வருமாயின், அப்போது தான் அதனை வெறுத்தொதுக்க முற்படுவர்.

## பழமொழிகளில் காசி

காசி இரண்டு எழுத்துத்தானே, காண எத்தனை நாட் செல்லும்?
காசிக்குப் போனுலும் அகப்பை அரைக்காசு.
காசிக்குப் போனுலும் கதிபெற வழியில்லை.
காசிக்குப் போனேன் காவடி கொண்டுவந்தேன்.
காசி முதல் இராமேசுவரம் வரை.
காசியில் இருந்தவன் கண்ணைக் குத்தக்
காஞ்சிபுரத்திலிருந்து கையை நீட்டிக்கொண்டு போனுன்.
காசி விசாலாட்சி காஞ்சி காமாட்சி மதுரை மீனுட்சி.
கங்கைக்கு நிகரான நதியும் இல்லை; காசிக்கு நிகரான பதியும் இல்லை.

மதுரையை ஆண்ட இந்து மன்னரான திருமலை நாயக்கர் கிறித்தவ சமயம் மதுரையில் கால்கொள்ள இடம் கொடுத்தார். தஞ்சையை ஆண்ட இடைக்காலச் சோழ மன்னர்கள் நாகையில் பௌத்த விகாரம் ஒன்று அமைக்க ஆதரவு தந்தனர். தஞ்சையை ஆண்ட நாயக்க மராட்டிய மன்னர்கள் நாகூர் ஆண்டவர் மசூதிக்கும் வேளாங்கண்ணியிலும் தரங்கம்பாடியிலும் உள்ள கிறித்தவத் தேவாலயங்களுக்கும் உதவி செய்துள்ளனர். இங்ஙனம் இம் மன்னர்கள் தமது சமரசப் பொது நோக்கைப் புலப்படுத்தியிருப்பதுபோல, மன்னர் பின்னோரான நகரத்தார் வணிகர்களும் தனிப்பட்ட முறையிலும் பொது முறையிலும் பிற மதச் சார்புடையவர்களால் நடைபெறுகின்ற அற நிறுவனங்கட்கும் கோயில்கட்கும் இந்தியாவிலும் பர்மாவிலும் ஏனைய நாடுகளிலும் நன்கொடைகள் வழங்கித் தமது சமரச மனப்பான்மையை நிலைநிறுத்தியுள்ளனர்.

பிறரும் தம்மைப்போல வாழ எண்ணும் இப் பெருந்தன்மை மிக்க பொதுநோக்கு போற்றுதற்குரியதாகுமன்றோ!



நாட்டுக்கோட்டைச் செட்டிமார்கள் குடியேறிய பூமி கள்ளர் நாட்டைக் காட்டிலும் காடாரம்பம். அதனால்தான் அந்த வகுப்பினர் திரைகடலோடித் திரவியம் தேட முற்பட்டார்கள். தமிழ்நாடே பெருமை கொள்ளும்படியான பொருள் சேகரம் செய்தார்கள்.

பணத்தை வாரியெடுத்துத் தமிழ் நாட்டிலும் பல திக்குகளிலும் கொட்டினார்கள். கோவில்களிலும், குளங்களிலும், பாடசாலைகளிலும், பசுமடங்களிலும், சத்திரங்களிலும் செட்டிமாருடைய மிதமிஞ்சிய ஆசை புத்துருவம் பெற்றது. மதத்திற்கும் கலாச்சாரத்திற்கும் சரியான சமயத்தில் செட்டிமார்கள் கைகொடுத்திராவிட்டால், இன்று நாட்டில் எவ்வளவு சீர்கேடு ஏற்பட்டிருக்கும்?

திருக்களர் என்ற சிறிய ஊருக்குப் போயிருந்தேன். அது திருத்துறைப் பூண்டிக்கு அருகிலுள்ள சிவஸ்தலம். ஞான சம்பந்த மூர்த்தியின் வாக்கில் பாடப்பெற்ற ஸ்தலம். அந்த க்ஷேத்திரத்திற்குச் செட்டிமார்கள் புத்துயிர் அளித்திருக்கிறார்கள். கோவிலில் காலத்தில் பூஜைகள் நடக்கின்றன. கோவிலையே புதுப்பித்துக் கும்பாபிஷேகம் பண்ணப்பட்டிருக்கிறது. வேத கோஷமும், தேவார கோஷ்டியின் இனிய கீதமும் அவ்வூரில் காதில் விழுந்துகொண்டே இருக்கின்றன. "செய்வன திருந்தச் செய்" என்ற வாக்கைத்தான் செட்டிமார்கள் தங்கள் ஒவ்வொரு கோவிலிலும் காட்டுகிறார்கள் என்பது அவர்களுடைய திருப்பணிகளிலிருந்து நன்றாகத் தெரிகிறது.

**—கு. ப. ராஜகோபாலன்**

*சக்தி*, செப்டம்பர் 1940 இதழ் (ப. 137-8)

இடங்கொண்ட கங்கையவள் எழுந்தோடி அருள்காட்ட
நடங்கொண்ட காட்டிடையே நற்காசிப் பதிவிரும்பி
விடங்கொண்ட மணிமிடற்றர் விசுவேசர் அடிபரவும்
திடங்கொண்ட நகரத்தார் திருவறங்கள் வாழியரோ.

**வித்துவான் பூ. அமிர்தலிங்கம்.**
தமிழ் விரிவுரையாளர், அழகப்பா கல்லூரி, காரைக்குடி.

சிந்துர முகத்துச் செல்வனே! முன்போல்
திகழ்தரு சைவமும் தமிழும்
இந்தமா நிலத்து எங்கணும் பரவ
இறைபணி யாற்றும்வை சியர்க்கு
உந்தன் நல்லருளைத் தந்தருள் புரிய
உவப்புடன் வேண்டினேன்; மேலும்
சிந்தையிற் குடிகொள் ஐங்கரப் பெரும!
சீருடன் அமைக இம்மலரே.

பன்மொழி களிலும் தலைசிறந் தொளிரப்
பாவலர் நாவலர் போற்றத்
தொன்மொழி யாகத் தமிழினைத் தந்த
சுந்தர! முருகவேள் எந்தாய்!
பொன்மொழிச் சிறப்பை இனிதுநன் குணர்ந்து
புகழுடன் போற்றும்வை சியர்கள்
தென்மொழி போல வாழ்ந்திட அருளாய்
தேவனே! ஞானதே சிகனே!

கண்ணுதற் பெரும! கருத்தினில் அன்பர்
களித்திட இருந்தருள் புரியும்
பெண்ணொரு பாக! பிறைமுடிச் செல்வ!
பீடுறு சைவமும் தமிழும்
கண்ணெனப் போற்றிக் காசிநல் லிறையைக்
கருத்தினில் கொண்டுபூ சிக்கத்
தண்ணருள் பெருகு நிறைதன வணிகர்
தரணியில் வாழிய இனிதே!

**ம. வெ. நாராயணன்,**
சித்தாந்த சைவ நிலையம், உலகன்பட்டி.

# வாழ்த்துரை

மன்னவர் பின்னோர் என்று இளங்கோ அடிகள் புகழ்ந்து கூறும் நாட்டுக்கோட்டை நகரத்தார் மரபினர் தொன்று தொட்டு இன்றுவரை சிவநெறியும் செந்தமிழும் புரந்துவரும் பெருமக்கள் என்பது உலகறிந்த உண்மை யாகும்.

இச்சமூகத்தைச் சார்ந்த தாழ்விலாச் செல்வர்கள், தென்னாடு எங்கணும் எண்ணற்ற கற்றளிகளை எழுப்பியும், தொன்மைச் சிறப்பு வாய்ந்த ஆலயங்கள் பலவற்றைப் புதுக்கியும், அறச்சாலைகள் கல்வி நிலையங்களை நிறுவியும் அருந் தொண்டாற்றி யுள்ளனர்; இன்றும் அத்தகைய நற்பணிகளைத் தமது தலையாய கடமையாகக் கருதிப் புரிந்து வருகின்றனர்.

மேலும், தமிழகத்தில் மட்டுமின்றி வட நாட்டிலும், இலங்கை, பர்மா, இந்தோனேசியா முதலிய கடல் கடந்த பகுதிகளிலும் இச்சமூகத்தினர் மேற்கண்ட அறச் செயல் களை இனிதாற்றிப் புகழ் சான்று இலங்குகின்றனர்.

இத்தகைய அறப்பணிகளுள் ஒன்றாய் முகிழ்த்த காசி யம்பதி நாட்டுக்கோட்டை நகரத்தார் சத்திரம் ஆல்போல் தழைத்து வளர்ந்து தனது நூற்றாண்டு விழாவைச் சிறப்புறக் கொண்டாட இருப்பதறிந்து மிக்க மகிழ்ச்சி யடைகிறேன்.

விழா இனிதே நிகழ்ந்தேறவும், நாட்டுக்கோட்டை மரபினர் இத்தகைய அறச்செயல்களை, சிறப்பாகத் தமது சமூக ஏழை மாணவர்க்கும், மணம் விழைந்து நிற்கும் மங்கையர்க்கும் தக்க பொருளுதவி புரியும் நற்பணியை, இனிதாற்றிப் புகழ் பெறவும் எல்லாம் வல்ல ஆலவாய் அவிர்சடை அண்ணல் அருள் புரிவாராக.

**கருமுத்து தியாகராசன்.**



காசி விசுவேசர் நாகாபரணப் பூசைக் காட்சி.

The famous evening ARTI service conducted by the Nattukkottai Chettiars in the Viswanath Temple.

विश्वनाथ के मंदिर में नाट्टुक्कोट्ट चेट्टियारों द्वारा प्रसिद्ध सन्ध्या आरती

# தமிழிலக்கியமும் காசியும்

சித்தாந்தச் செல்வர் டி. பி. சித்தலிங்கம், எம். ஏ.
தமிழ் விரிவுரையாளர், காசி இந்துப் பல்கலைக்கழகம்.

"சைவமும் தமிழும் தழைத்தினிதோங்குக" என்ற முழக்கத்தைத் தமிழ் நாட்டில் நாம் கேட்கிறோம். "தென்னாடுடைய சிவனே போற்றி" என்று திருவாசகம் கூறுகிறது. தென்னாட்டுக்குரிய சிவன் எந்நாட்டவர்க்கும் அருள்புரிவதாக மாணிக்க வாசகர் கூறுகிறார். இவைபோன்ற பல ஆட்சிகளால் தமிழ் நாட்டுக்கும் தமிழுக்கும் சிவனோடும் சைவசமயத்தோடும் நெருங்கிய தொடர்புண்டு என்பது தெள்ளிதிற் புலனாகும். சிவநெறியோடு தொடர்புடைய எல்லாமே தமிழில் இடம் பெற்றிருத்தல் கண்கூடு. சிவனே முழுமுதல் எனக்கூறும் மெய்கண்ட சாத்திரங்களும் தோத்திரங்களாகிய திருமுறைகளும் தமிழில் இருப்பதை அனைவரும் அறிவர்.

சிவபெருமான் திருக்கோலம் கொண்டுள்ள திருத்தலங்கள் பற்றியும், சிறப்புமிக்க நீர்த்துறைகளைப்பற்றியும் எல்லாச் சந்நிதிகளுமே திருவருள் பொழிபவை என்றாலும் சிறப்பாகக் கூறப்படும் திருமூர்த்தங்களைப்பற்றியும் புராண நூல்களிற் பரக்கக் காணலாம். "மூர்த்தி தலந் தீர்த்தம் முறைமையால் தரிசித்தோர்க்கு வார்த்தை சொலச் சற்குருவும் வாய்க்கும் பராபரமே" என்ற அடிப்படையிலே சமயவாழ்க்கை தொடங்குகிறது.

மூர்த்தி தலம் தீர்த்தம் என்ற மூவகையிலுமே தனிச்சிறப்போடு விளங்குவது காசி.

"தலங்கள் தம்மின் மிக்குள்ளதாய்த்
தகுதிசால் தீர்த்தக்
குலங்கள் தம்மின்மிக் குள்ளதாய்க்
குறையிரந்தோர்க்கு
நலங்கள் தந்தருள் மூர்த்தியாய்
நாதவே தாந்தப்
புலங்கள் தந்தபே ரொளியுறை
தலனென்று புகலாய்"

என்று முனிவர் பலர் சூதபுராணிகரைக் கேட்டதாகப் பரஞ்சோதி முனிவர் கூறுகிறார். சூதபுராணிகர் முக்கியமான திருத்தலங்களைப் பற்றிச் சொல்லத்தொடங்குகிறார்:

"அன்னமலி வயற்புலியூர் காசிநகர்
காளத்தி யாலவாயாம்
இன்னவளம் பதிநான்கு"

என்று சிதம்பரம், காசி, காளத்தி, மதுரை என்ற நான்கு தலங்களைக் குறிப்பிடுகிறார்.

முத்தி தரும் நகரேழில் காசியும் இடம் பெறுகிறது.

"காசி மாயாபுரி அவந்தி காஞ்சிமற்று
ஓசைகொள் அயோத்தி வண்துவரை
ஒப்பறும்
ஏசிலா மதுரையென் றிசைக்கும் ஏழ்பதி
மாசறு முத்தியை வழங்கும் என்பவே".

### காசியின் பெருமை

"கங்கைக்கு நிகரான நதியும் இல்லை, காசிக்கு நிகரான பதியும் இல்லை" என்பது இந்துக்களின் கொள்கை. சிவத்தலங்கள் பலவற்றுள்ளும் சில சிறப்புடையன. திருவாரூரில் பிறப்பதும், சிதம்பர தரிசனமும், திருவண்ணா

U

மலையைச் சிந்திப்பதும், காசியில் இறப்பதும் முத்தி தரும் என்பது சைவர்களின் நம்பிக்கை.

"முனிப்புலி தொழுசிதம் பரங்கண் ணுற்றவர்
முழைப்புலி முழங்குமவ் வருணை யங்கிரி
நினைப்பவர் அமலவா ரூர்ப்பி றப்பவர்
நிகழ்த்துறு காசியிற் சென்றி றப்பவர்
தனிப்பெரு முத்தியை யடைவர்"

—சிவஞான பாலைய சுவாமிகள் கலம்பகம்

"மின்னவிர் அம் பலங்காணக் காசிநகர்
வதிந்திறக்க வியன்காளத்திப்
பொன்னகரம் பத்தியினால் வழிபாடு
செயவளிக்கும் போகம் வீடு"

—திருவிளையாடற் புராணம்.

காசியின் பெருமை இதனுடன் நின்றுவிட வில்லை. காசியில் வாழ்கிறவர்களைத் தொட்டா லும் போதும், பிறவித் துன்பமில்லை என்று காசிக்கண்டம் கூறுகிறது.

"பாடகத் தொடர்ச்சிப் பழவினை*
சிமிழ்ப்பப் பற்றற வெறிந்துவீடளிக்குஞ்
சேடமை காசி யுறையு நர்மேனி
தீண்டி னும்பவக்கட லழுந்தார்"

மூர்த்தி தலம் தீர்த்தம் என்ற மூன்றும் உயர்ந்தவை என்றும் இம் மூன்றும் ஒன்றுகூடி யிருத்தல் மிகச் சிறந்தது என்றும் கூறுவார்கள். காசியில் இம்மூன்றும் ஒருசேரச் சிறந்துவிளங்கு கின்றன. இவற்றுக் கிணையாக வேறெங்கு மில்லை யென்று காசி கண்டம் குறிக்கிறது.

"இலகுசுடர் விச்சுவநாதற் கிணையாங்
கடவுளி லிங்கமும் நீர்
சுலவுமணி கன்னிகைக் கிணையாந்
துகள்தீர் தெய்வதீர்த்தமும்—வான்
கலவமஞ்ஞை நடம்பயிலும்
காசிக்கிணையா நன்னகரும்
உலகமொரு மூன்றினுநிலையீ துண்மை
யுண்மை யுண்மையால்"

---

* "பாடகம்போலச் சூழ்ந்த
பழவினைப் பயத்த தென்முன்"

– (காந்தருவதத்தையிலம்பகம், சிந்தாமணி) என்ற பாடற்பகுதியை ஒப்புநோக்குக.

இப்படிப்பட்ட பெருமை காசிக்கு எப்படி ஏற் பட்டது?

காசி என்ற வடசொல், காசி எனப்பிரியும். "காச்யதே பிரகாசதே இதி காசி"—எது சுய மாகப் பிரகாசிக்கிறதோ அது காசி.

"தேசொடும் பொலிந்து முத்தித்
திருமகள் உறைதல் தன்னால்
காசி யென்றுரைப்பர்"

என்பதாகக் காசிக்கண்டம் குறிப்பிடுகிறது.

வரணை, அசி என்ற இரண்டு ஆறுகள் கங் கையோடு கலக்கின்றன. இவ்விரண்டுக்கும் இடைப்பட்டபகுதியிலுள்ள நகரமே வாராணசி. இதை வாரணசி என்றும் வாரணவாசி என்றும் கூறுவதுண்டு.

வரணையும் அசியும் தம்மை நெருங்கியவர் களின் பாவங்களைத் தீர்க்கின்றனவாம்.

"சார்ந்தவர் - பாவநீங்கத் தகைதலான்
வரணை யென்றும்
ஆர்ந்தநீர்படிந் தோர்பாவ
மறுத்தலால் அசியேயென்றும்"

வழங்குவதாக, அதிவீரராம பாண்டியர் கூறு கிறார்.

மணிகர்ணிகை என்ற துறையிலமர்ந்து முழுமுதற் கடவுளான முக்கண்ணனே, அங்கே யிறந்த வுயிர்களின் வலதுகாதில் பிரணவ மந் திரம் கூறிப் பிறவாநெறியூட்டுவதாக எல்லா நூல்களும் எடுத்துரைக்கின்றன.

சமயத்துறையில் இவ்வளவு சிறப்புடைய காசியைப்பற்றித் தமிழிலக்கியங்களில் ஏதே னும் குறிப்புண்டா என்று சிறிது காணலாம்.

சங்க நூல்களில் ஒன்றான கலித்தொகை வாரணவாசி என்றபெயரையே குறிப்பிடுகிறது. "வாரணவாசியிலுள்ளார் பெறும் அருளுடைமை யாகிய தன்மை" என்பது தலைவியின் வாயி லாகக் கூறப்படுகிறது.

"தெருவின்கண் காரணமின்றிக்
கலங்குவார்க் கண்டுநீ
வாரணவாசிப் பதம் பெயர்த்தல் ஏதில"

—குறிஞ்சிக் கலி.

ஐம்பெருங் காப்பியங்களுள் ஒன்ருகியமணி மேகலேயிலும் வாரணுசி பற்றிய குறிப்பு உளது.

" வார ணுசியோர்மறையோம் பாளன்
ஆரண வுவாத்தி யபஞ்சிக னென்போன் "
(வரி 3, 4)

" வார ணுசியோர் மாமறை முதல்வன்
ஆரண வுவாத்தி யரும்பெறன் மனேவியான்"
(வரி 78, 79)

(ஆபுத்திரன் திறமறிவித்த காதை).

சிந்தாமணியின் காந்தருவதத்தை யிலம் பகத்திலும் "வாரணவாசி மன்னன்" என்ற ஆட்சி உண்டு.

திருமுறைகளிள் காசி பற்றிய குறிப்பு மிகுதியாகக் காணேம். தென்னுட்டில் சிவ ராஜதானியாகக் கருதப்படுவது சிதம்பரம். அதேபோல் வடநாட்டில் சிவராஜதானியாக விளங்குவது காசி. எனினும் காசி பற்றிய குறிப்புக்கள் மிகவும் அருகியே உள்ளன. கறை யான் அரித்த திருப்பதிகங்களுள் காசிபற்றிய திருப்பாடல்களும் கலந்தன போலும்.

காசி, தேவார வைப்புத் தலங்களுள் ஒன்று என்றே* திருஞானசம்பந்தர் தமது திரு க்ஷேத்திரக் கோவையில் வாரணுசியைக் குறிப் பிடுகிருர்.

" மாட்டூர் மடப்பாச்சி லாச்சி ராமம்
முண்டீச் சரம்வாத வூர் வாரணுசி
காட்டும் கடம்பூர்படம் பக்கம்
கொட்டும் கடல் ஒற்றியூர்..."
—இரண்டாம் திருமுறை

திருநாவுக்கரசு சுவாமிகள் தமது திருக் கயிலாய யாத்திரையில் வாரணுசிக்குச் சென் ருர் என்பதாகச் சேக்கிழார் ஓதுகின்ருர்.

அன்ன நாடுகடந்துகங்கை
யணேந்து சென்று வலங்கொள்ளும்
மின்னு வேணியர் வார
ணுசி விருப்பி னேடு பணிந்துடன்

* சிவக்கவிமணி திரு. சி. கே. சுப்பிர மணிய முதலியாரவர்கள் கருதுகிருர்கள்.

(அப்பர் சுவாமிகள் புராணம், தருமபுர ஆதீன வெளியீடு, 1944, பக்கம் 593)

பின்ன ணேந்தவர் தம்மை யங்க
ணெழிந்து கங்கைபெயர்ந்துபோய்
மன்னு காதல்செய் நாவின் மன்னவர்
வந்து கற்கர முந்தினர் —செய். 353

அப்பர் சுவாமிகள் தமது க்ஷேத்ரக்கோவைத் திருத்தாண்டகத்தில்,

" மண்ணிப் படிக்கரை வாழ்கொளி
புத்தூர் வக்கரை மந்தாரம்
வாரணுசி வெண்ணி விளத்தொட்டி..."
(6-ஆம் திருமுறை)

என்றும்,

" தேனூர் புனற்கெடில வீரட்டமும்
திருச்செம்பொன் பள்ளி திருப் பூவணமும்
வானேர் வணங்கும் மணஞ்சேரியும்
மதிலுஞ்சை மாகாளம் வாரணுசி
ஏனேர் களேத்தும் "

(காப்புத் திருத்தாண்டகம், 11)

என்றும் குறிப்பிடுகிருர்.

மற்றைய திருமுறைகளில் காசி பற்றிய குறிப்பைக் காணேம்.

பின்னர், அதிவீரராம பாண்டியர் (கி. பி. 1552-1564) என்ற மன்னர் காசிகண்டம் என்ற வடமொழி நூலேத் தமிழிற் பெயர்த்தார். இது, காசி காண்டம் எனவும் படும். காசியம் பதியின் பெருமைகளே இந்நூல் விளக்கிக் கூறு கிறது. வடமொழிக் கந்தபுராணத்தில் சங்கர சம்ஹிதை என்ற பகுதியில் குமரோற்பவ கண் டம், காசி கண்டம், காளிகாகண்டம் என்னும் மூன்று பிரிவுகள் உண்டு. இந்தக் காசி கண் டத்தையே அதிவீரராம பாண்டியர் தமிழில் தந்தார்.

பதினேழாம் நூற்ருண்டில் முற்பகுதியில் விளங்கிய ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் "காசிக் கலம்பகம்" என்றொரு நூலே இயற்றினர்கள்.

" ஆனந்த வல்லியுட னுனந்தக் கானத்தே
ஆனந்தக் கூத்தா டருட்கலே—ஆனந்தம்
கொள்ளத் திளேத்தாடும் கூடாதேல் இப்பிறவி
வெள்ளத் திளேத்தாடு வீர் " (86)

(ஆனந்தக் கானம் - காசி)

நோயுற்றுத் தளர்ந்தும் மூப்பினுல் இளைத்தும் இருக்கும் போதும் ஒருவர் இன்ப வாழ்வு எய்தவல்ல இடம் ஒன்று இருக்கிறது. அதன் பெயர் காசி என்று அவர் குறிப்பிடுகிருர்.

"படுத்தபாயுட னேபிணிமூழ்கிலும்
பல்விழுந்து நரைத்தற மூப்பினும்
அடுத்த தீங்கிவர்க்கேபெரு வாழ்வெனும்
அப்பெ ரும்பதி யெப்பதியென்பீரேல்
விடுத்து விட்டிந் திரதரு வும்புவி
வெண்குடைக்கு விடுமா சாட்சியும்
கடுத்த தும்பு கலித்தரைத் தேடுவார்
காத லித்து வருந்திருக் காசியே" (24)

இதே நூற்ருண்டின் பிற்பகுதியில் வாழ்ந்த ஸ்ரீ சிவப்பிரகாச சுவாமிகள் (பிறப்பு கி. பி. 1652) கற்பனைக்களஞ்சியம் எனப்புகழ் பெற்றவர். இவர் தமது சிவஞான பாலைய சுவாமிகள் கலம்பகத்தில் இரண்டிடங்களில் காசியைக் குறிப்பிடுகிருர்.

"பெருமானே சிவஞானிப்
பெயருடையோன் நினதருளால்
வருமான்மா பரமுத்தி
மருவுதலே யியல்பாகும்
பரமான்மா வுரைசெய்யப்
படுகாசி முதலனதாந்
தருமாறூ ருபசாரந்
தருவதுநிற் கிடைத்திடனே" (35)

"முனிப்புலி தொழுசிதம் பரம்...
நிகழ்த்துறு காசியிற் சென்றிறப்பவர்
தனிப்பெரு முத்தியை யடைவர்..." (91)

அரிச்சந்திர புராணம், மாபாரதம் முதலிய நூல்களும் காசித்தலப் பெருமையைக் குறிப்பிடுகின்றன.

அபிநவகம்பன் என்று புகழப்பெற்ற மகா வித்துவான் மீனுட்சி சுந்தரம் பிள்ளை யவர்கள் (கி. பி. 1815 - 1876) காசி ரகசியம் என்னும் வடமொழி நூலைத் தமிழிற் செய்யுள் வடிவில் மொழி பெயர்த்தார். இந்நூல் கி. பி. 1881-இல் திருச்சிற்றம்பல ஞானியார் உரையுடன் வெளியாயிற்று.

மகாகவி சுப்பிரமணிய பாரதியார், காசியில் சில காலம் வாழ்ந்தார். அவரது தங்கை குடும்பத்தார் இன்றும் காசியில் இருந்துவருகிருர்கள். பாரதியார் பல பாடல்களில் கங்கையைப் புகழ்ந்து கூறியுள்ளார்.

"இன்னறு நீர்க்கங்கை யாறெங்கள் யாறே
இங்கிதன் மாண்பிற் கெதிரெது வேறே"

காசியையும் அவர் மறந்து விடவில்லை.

"காசி நகர்ப் புலவர் பேசுமுரை தான்
காஞ்சியில் கேட்பதற்கோர்
கருவி செய்வோம்"

இவை தவிர, வேறு பல நூல்களும் காசியைப் பற்றி வெளியாகி இருக்கின்றன. ஆனுல், அவற்றின் முழு விவரமும் கிடைக்க வில்லை.

1. காசிக் கதிர்காமவேலர் திருவநட்பா — சிவஞான தேசிகர்.

2. காசித் தலத்தில் சத்தவாரணத்தில் எழுந்தருளியிருக்கின்ற 56 விநாயாக மூர்த்திகளின் திருநாமங்கள் - சிவானந்தமூர்த்தி.

3. காசி மான்மியம் - ஆசிரியர் தெரியவில்லை.

பதிப்பித்தவர் பறங்கிப்பேட்டை தெய்வ நாயக முதலியார்.

4. காசி விசுவநாத சுவாமி பேரில் பதிகம் (ஆசிரிய விருத்தம்) சுப்புராய ஐயர்.

இந்துக்களின் வாழ்க்கையில் காசி இரண்டற இணைந்திருக்கிறது. கங்கைப் பேராறு காசியை வளைத்துக்கொண்டு ஓடுகிறது. கங்கையால் காசிக்குப் பெருமையா, காசியால் கங்கைக்குப் பெருமையா என்பதை அறுதியாகக் கூற முடியாது. கங்கையைப் பற்றியும் காசியைப்பற்றியும் இந்திய இலக்கியங்கள் அனைத்துமே கூறுகின்றன. காசி என்னும் ஊர்ப்பெயர் மக்களுக்குப் பெயராகவும் வழங்கி வருவதும் இந்தத் தலத்தின் சிறப்பை உணர்த்தும். தென் தமிழ் நாட்டு மக்களின் வாழ்வில் காசி பெற்றுள்ள சிறப்புக்கு மற்றோர் எடுத்துக்காட்டு, அவர்கள் தம் நாட்டி

## விநாயகர்



தமிழ் மக்கள் அனைவருக்கும் விநாயகரிடம் ஈடுபாடு உண்டு; இவ் வீடுபாடு நகரத்தார்களிடம் சிறப்பாகக் காணப்படுகிறது. 'பிள்ளை யார் பட்டி' என்ற ஒரு கோயிற்பிரிவு (கோத்திரப் பிரிவு) நகரத் தார்க்குள் இருப்பதாலும் பல நூற்றுண்டுகட்குமுன் நகரத்தார்களிடம் 'மரகத விநாயகர்' இருந்ததாக வரலாற்றுச் செய்திகள் கூறுவதாலும் இது தெரிய வருகிறது. மரகதத்தால் விநாயகர் உருவம் செய்திருப் பார்களா? என்று ஐயப்படுவதற்கு விடை கூறுமாப்போல, தாய்லந்து நாட்டில் 4 அடி உயரமுள்ள மரகத புத்தர் திருவுருவம் இன்றும் காணப்படுகிறது.

நகரத்தார்கள் கட்டியுள்ள விநாயகர் கோயில்களின் எண்ணிக்கை ஓராயிரத்துக் கும் மேற்பட்டது.

லுள்ள சிலஊர்களுக்கும் காசி என்ற பெயரைச் சூட்டியிருப்பதாகும். தென்காசி, சிவகாசி என் பன இதற்கு விளக்கமாக அமைந்திருக்கின் றன. அண்மையில் வெளியான பத்திரிக்கைச் செய்தி இதனை வலியுறுத்துகிறது. மதுரை மாவட்டத்து மேலூர் முதற்கோட்டத்தைச் சேர்ந்தது மணப்பச்சேரி. அதைச் சேர்ந்த வெள்ளாளப்பட்டி அருகே பூதக்குடி மலையடி வாரத்தில் காடுகள் உள்ளன. அங்குள்ள கல் வெட்டிலிருந்து தெரியவரும் செய்தியாவது :

> பறம்பு நாட்டிற்குப் புறத்தேயுள்ள மலைநாட்டுக்குப் புறமலைநாடு என்ற பெயர் இருந்தது. இக்காட்டுக்குள் அழிந்த ஊரின் பண்டைய பெயர் "வாரணவாசி" என்று இருந்து பின் னர் சேரநாராயணபுரம் என்று மாறியது.

முத்தித்தலமாகிய காசியில் உணவும் உறையுளும் அளிக்க நகரத்தார் வசதி செய்துள் ளனர். அவர்களால் நடத்தப் பெறும் நாட்டுக் கோட்டை நகரத்தார் சத்திரம் கடந்த நூற்றுண்டுகளாக, காசியில், தமிழ் நாட்டினர்க் கும் பிற கீழை நாடுகளிலிருந்து கடல் கடந்து வரும் தமிழர்க்கும் பேருதவி புரிந்து வருகிறது கடந்த நூற்றைம்பதாண்டுகளாக, நகரத்தார், காசி விசுவநாதர்க்கு நாள்தோறும் மூன்று வேளை பூசைக்கு ஏற்பாடு செய்து நடத்தி வரு கிறார்கள். இந்தப் பூசையையும் நகரத்தார் சத் திரமே நடத்தி வருகிறது.

இந்தச் சத்திரம் அண்மையில் தனது நூற் றுண்டு விழாப் பெறவிருக்கிறது. இறைவன் தொண்டு, அடியார்க்குணவு முதலியவற்றின் மூலம் இறைபணியாற்றும் இச்சத்திரம் மேலும் பல நூற்றுண்டு விழாக்களைக் காண எல்லாம் வல்ல சிவன் திருவருள் துணை நிற்குமாக!

> காசியைக் குறித்துச் செல்லும்
> கால்களே கால்களாகும்
> காசியை வழுத்தும் நாவே
> நாவெனக் கழறலாமால்
> காசியின் கதைகள் கேட்கும்
> செவிகளே செவிகளாகும்
> காசியை இனிது காணும்
> கண்களே கண்களாமால்.
>
> — காசி கண்டம்.

# கடமையை உணர்த்தும் கடவுள்

திருப்பெருந்திரு தெய்வசிகாமணி அருணாசல தேசிக சுவாமிகள்
(குன்றக்குடி அடிகளார்)

**தே**சம் உய்யத் திருவாசகம் தந்த மாணிக்க வாசகப் பெருமானின் வரலாறு கருத்திற்கினிய விருந்தாகும். வரலாற்றுப் போக்கில் ஐயங்கள் எழுவதற்கு வாய்ப்புண்டு. இது சரியா? அது சரியா? என்று பல கேள்விகளை மாணிக்க வாசகர் வரலாற்றில் எழுப்ப முடியும். ஆம், வெறும் அறிவு விவாதத்திற்குட்பட்டது—நடைமுறைக் கொவ்வாதது, அனுபவத்திற் கல்லாதது. வெற்று அறிவுணர்ச்சியோடு மாணிக்க வாசகர் வரலாற்றைப் படித்தால் குழப்பமே மிஞ்சும். ஆழ்ந்த அறிவோடும், நடைமுறையோடும், அனுபவத்தையும் சாத்தியக் கூறுகளையும் கூட்டி மாணிக்கவாசகர் வரலாற்றைப் படித்தால் அவ்வரலாறு வாழ்க்கைக்குப் பெரு விருந்தாக இருப்பதை உணரலாம். இந்த முறையில் மாணிக்க வாசகரின் வரலாற்றை ஆராய்வோமாக.

பாண்டிய மன்னனிடத்தில் மாணிக்க வாசகர் அமைச்சராக இருக்கின்றார். அறிவிலும், ஆட்சி முறையிலும், குடி மக்களுக்கு நல்லன செய்வதிலும் சிறந்து விளங்குகின்றது மாணிக்க வாசகரது அமைச்சியல். குடி மக்களிடம் வரி வாங்குவது அரசனுடைய ஆடம்பர வாழ்க்கைக்காக அன்று; மக்களுக்குரிய திருப்பணிகளைச்செய்யவேண்டும். பாண்டிய மன்னனே மக்களின் வரிப்பணம் கொண்டு பரிகள் வாங்கி வரச்சொன்னான். பரிகள் ஆடம்பரத்தின் சின்னம்அல்லது போர்ப்படை. பரிகள் வாங்கச் சொன்ன காலத்தில் பாண்டிய அரசனுக்குப் பகையே யில்லை. ஆதலால் ஆடம்பரத்துக்காகவே அரசன் பரிகளை வாங்கிவரச் சொன்னான் என்று கருத இடமிருக்கின்றது.

தேவையற்ற ஒன்றைச்செய்ய அமைச்சர் மாணிக்க வாசகரின் மனம் துணியவில்லை. ஆனால் அரசனின் ஆணை! அரசனைப் பரிவாங்கும் எண்ணத்திலிருந்து நல்வாழ்வுத் துறைக்கு அழைத்துச் செல்ல வேண்டும். திருத்துதலில் பலமுறைகள் உண்டு. திருத்துபவர்—திருத்தப் படுபவர் ஆகியோரைப் பொறுத்து முறைகள் மாறுபடும். தன்னினும் தாழ்ந்தாரை இடித்துக் கூறித் திருத்தலாம். தனக்குச் சமமானோரை அறவுரைகள் கூறித் திருத்தலாம். தன்னினும் உயர்ந்தோரை அவர் விரும்பியதை ஒழித்து வேறொன்றைச் சொல்வது அல்லது செய்வதன் மூலமே திருத்தலாம். இங்கு அரசன் திருத்தப் படவேண்டும். ஆதலால் மாணிக்க வாசகர் அரசன் கூறியது விடுத்து, அதாவது பரிகளை வாங்காமல், திருக்கோயில் எடுப்பித்து, இதுவே செய்யத்தக்கது என்று அறிவுறுத்த எண்ணினார். ஆதலால் அரசனுக்கு நன்மை தரும் எண்ணத்தில் மாணிக்க வாசகர் செய்தாரே தவிர வேறு கருத்திலன்று. அங்ஙனம் பார்க்கும் பொழுது பரிகள் வாங்கக் கொடுத்த பணத்தைக் கொண்டு கோயில் கட்டியது நியாயமே ஆகும்.

“திருக்கோயில் கட்டியது எந்த வகையில் சிறந்தது, பரிகள் வாங்குவதைவிட?” என்று பகுத்தறிவு உலகம் கேட்கத்தான் செய்யும். திருக்கோயில் கட்டியதன் மூலம் நாடும் அரசனும் பெற்ற நன்மை ஒன்றல்ல; பலப்பல வாகும். சிறப்பாக அரசனுடைய பொருள் அறங்கலந்த அருளியலுக்குப் பயன்பட்டது. அதன் மூலம் அறமும், கலையும், அருளும் வானுற வளர்ந்து அரசனுக்கு அழியாப்புகழைத்

## மக்கள் இதயங்களிலே...

அண்ணுமலேப் பல்கலேக் கழகத்தை நிறுவிய திரு. அண்ணுமலே செட்டியாரும், காரைக்குடியில் கல்லூரி நிறுவிய வள்ளல் டாக்டர் அழகப்ப செட்டியாரும், மதுரையிலும் மற்ற இடங்களிலும் கல்லூரி, கல்விக் கூடங்களே நிறுவிய கருமுத்து திரு. தியாகராகச் செட்டியாரும் இன்னும் 1000, 2000 ஆண்டுகள் கழிந்த பின்னரும் நாட்டு மக்களால் மறந்துவிட முடியாதவர்கள். அவர்கள் கல்விக்காக ஆற்றியிருக்கும் அரும் பெரும் பணி காலத்தால் அழியாத ஒன்று. இவர்கள் கல்விக் கூடங்கள் நிறுவியதால் தான் ஆண்டு தோறும் பல ஆயிரக் கணக்கானவர்கள் கல்வி கற்று வெளியே வருகிருர்கள். அதேபோல் திரு.பச்சையப்ப முதலியாரும், திரு.செங்கல்வராய நாயக்கரும் மக்களின் இதயங்களிலே குடி கொண்டிருக்கிருர்கள்.

—திராவிட முன்னேற்றக் கழகத்தின் அவைத் தலேவரும், தமிழ்நாடு சட்டசபை எதிர்க்கட்சித் தலேவரும் ஆகிய
நாவலர் திரு. **இரா. நெடுஞ்செழியன்**
எம். ஏ., எம். எல். ஏ.
(சைதை, மாநகராட்சி உயர்நிலேப்பள்ளி இணேப்புக் கட்டிடத்திறப்பு விழாவில் 2-9-1963)

---

தந்தன. எப்படி அறம் ஆயிற்று? கலேஞர்களும் ஊழியர்களும் திருக்கோயில் கட்டுங்காலத்தில் தொழில் பெற்றனர்; தொழிலுக்கேற்ற ஊதியம் பெற்றனர்; வாழ்வை வளப்படுத்திக் கொண்டனர். இதை அறம் அல்ல என்று எப்படிச் சொல்ல முடியும்? கல்லெல்லாம் கலேயாகி, கடவுளராகி, பேசும் தெய்வத்தைத் தன்னகத்தே கொண்டுள்ள கோயில்கள் கலேயின் விளக்கந் தரும் இடங்கள்தானே!

அரசன் குதிரைகளோடுவரும்படிமாணிக்க வாசகருக்கு ஆணே பிறப்பித்தான். மாணிக்க வாசகர் என் செய்வார்? தமக்கு உற்ற புகலிடமாய் விளங்கும் இறைவனிடத்தில் முறையிட்டார். ஆம், அவன்தானே எல்லாம்! தமக்கு அன்புப்பட்டவர் பாரம் பூண்பது இறைவனின் குணமன்றே? குதிரைகள் கொண்டு வருவதாகத் திருவருள் ஆணே பிறந்தது. குறிப்பிட்ட நாளில் குதிரைவரும் என்றசெய்தியோடு மாணிக்க வாசகர் மதுரை சென்ருர்; அரசனிடம் தெரிவித்தார். குதிரைகளும் குறிப்பிட்ட நாளில் வந்தன. இறைவன் ஒரு பெருந்திருவிளேயாடல் நடத்தினன். காட்டில் திரியும் நரிகளே எல்லாம் பரிகளாக்கினன். தானே குதிரைச் சேவகனுக அமர்ந்தான். குதிரைகளேக் கொண்டு வந்து அரசனிடம் கயிறுமாற்றிச் சேர்ப்பித்தான். அரசனும் நிலேயற்ற மகிழ்ச்சியில் திளேத்தனன். கதிரவன் படுத்தனன். காரிருள் சூழ்ந்தது. பரிகளெல்லாம் நரிகளாயின. உலகமே நடுங்க ஊளேயிட்டன. அரசனுக்குச் செய்தி எட்டியது. வெகுண்டெழுந்தனன். மாணிக்க வாசகரை வெஞ் சிறையில் இட்டுக், கல்லுடைக்கச் செய்தான். இடையில் பகலில் பரியும், இரவில் நரியுமாக ஆக்கிய திருவிளேயாடலின் உளக்குறிப்புத்தான் என்னே? இக்கருத்தை ஆராய "உறங்குவது போலும் சாக்காடு; உறங்கி, விழிப்பது போலும் பிறப்பு" என்ற திருக்குறளே நினேவிற்கொண்டு ஆராய்ந்தால் அரிய கருத்துக்கள் வெளிப்படும். இக்குறளின்படி இம்மை—பகலுக்கும், மறுமை—இரவுக்கும் உவமிக்கப்படுவது தெளிவாகிறது. இம்மையில் இன்பம் போலத் தோன்றுவன மறு

மையில் துன்பத்தை விளைவிக்கக்கூடும். இந்தப் படிப்பினையைப் பலருக்கு நினைவுபடுத்துவதற் காகவே, பகலில் இன்பந்தரும் குதிரைகளாக வும் இரவில் தொல்லைதரும் நரிகளாகவும் ஆக்கித் திருவிளையாடல் செய்தருளினார். இங்ஙனம் சிந்தித்துப் பார்க்கும் பொழுது பரமன் நரிகளைப் பரிகளாக்கியதும் பரிகளை நரிகளாக்கியதும் நியாயமே!

சிறையில் வாடிய மாணிக்க வாசகர் ஆற்ரொணுத் துயருற்ருர். அருளாளராகிய மாணிக்க வாசகர் அல்லலுறுவது இயற்கைக்கே தாங்க முடியவில்லை. இயற்கை அன்னை சினங்கொண்டாள். வைகையில் வெள்ளமெனப் பொங்கிப் பாண்டிமாநகரை அழிக்கத் தொடங்கினுள்.

''வைகையாற்றின் வெள்ளந்தடுக்கக் குடிக்கோர் ஆள் வருக'' என்று அரசனின் ஆணை பிறந்தது. அரசனின் ஆணை கேட்ட குடிமக்கள் வெள்ளம்போல் திரண்டு வெள்ளந்தடுக்கும் வேலையில் ஈடுபட்டனர். ஆனால் ஒரே ஒரு குடி வெள்ளத்தடுப்பு வேலைக்கு ஆளனுப்ப முடியாமல் தவித்தது. ஆம், அந்தக்குடியில் பெண்ணொருத்தியே வாழ்ந்தாள். அவளும் முதியவள். வேலை செய்யும் சக்தி யற்றவள். அரசன் ஆணைவழி ஆளையனுப்ப இயலவில்லையே என்று ஏங்குகின்ருள். அற்றவருக் கருந்துணையாக விளங்கும் ஆண்டவனை நோக்கி வேண்டுகின்ருள். வீதிவழியே ''கூலியோ கூலி'' என்ற குரல் கேட்கின்றது. ஆம் தேவர்க்கோவறியாத தேவதேவன்' தெருவழியில் நடந்து வருகின்ருன்; தட்டும் மண்வெட்டியும் தாங்கி, ''கூலியோ கூலி'' என்று கூவி நடந்துவருகின்ருன். குரல் கேட்ட கிழவி—வந்து ஆறுதல் பெற்ருள்; அமைதி கொண்டாள். வந்திக்கு ஆளாக அமைகின்ருன். கூலி பொன்னல்ல, பொருளல்ல; வயிற்றுப் பசிதீர்க்கும் பிட்டேயாகும். பிட்டைத் தின்று விட்டு வெள்ளந்தடுக்கும் வேலையில் ஈடுபடச்சென்ற கூலியாள் அங்குத் தனது வேலையை ஒழுங்காகச் செய்யவில்லை. தான் செய்யாததோடு மாத்திரமின்றி செய்பவரையும் கெடுக்கின்ருன். இதனால் வந்தியின் பகுதி அடைபடாமலே கிடக்கின்றது. மாலையில் அரசன் வெள்ளத்தடுப்பு வேலையைப் பார்வையிட வருகின்ருன். அடைபடாத பகுதியைப் பார்க்கின்ருன். அதற்குரிய வந்தியின் ஆளை வெகுண்டு அடிக்கின்ருன். அடித்ததென்னவோ எதிரிலிருந்த ஆளை. ஆனால் அடிபட்டது வையத்துயிர்க்கெல்லாம்; அடித்தவன் உட்பட! கொற்ருள் மறைந்தனன்! இந்நிகழ்ச்சிகளின் தொடர்பிலே பெறப்படும் நற்கருத்துகள் எவை? எவை? ஏன் இறைவன் கொற்ருளாக வந்தனன்? அவன் நினைத்த மாத்திரையில் எல்லாவற்றையும் செய்யக் கூடியவனு யிற்றே? அப்படி வந்தபோதும் பொன்னுக்கும் பொருளுக்கும் மண் சுமக்காமல் வெறும் பிட்டுக்கு மண் சுமந்தது ஏன்? உலக உயிர்கள் வாழ உணவு தேவை. தனக்குத் தேவையான அளவு ஒன்றையே இவ்வுலகிலிருந்து பெற்றுக் கொண்டு, பொன் பொருளில் ஆசைப்படாமல் திருத்தொண்டு செய்ய வேண்டும் என்ற கருத்தை விளக்கவே பிட்டுக்கு மண் சுமந்தான்! இவ்வுலக முழுவதையும் ஓர் ஒழுங்கிலும் முறை பிறழாத நிகழ்ச்சியிலும் அழைத்துச்செல்லும் ஆண்டவன் ஏன் தன்னுடைய கொற்ருள் கோலத்தில் அதற்குரிய பொறுப்பைச் செய்து நிறைவேற்ருது விட்டனன்? வாழ்க்கை கடமையோடு பிணைக்கப்பட்டது. கடமையைச் செய்யத் தவறுகிறவர்கள் கடுந்தண்டனைக்குரியோர் என்பதை வையகத்துக்கு எடுத்துக்காட்டவே கடமை தவறுவது போல நடித்து அடிபெற்று அறிவுரை கொடுத்தனன். இந்த உலக உயிர்கள் அனைத்தும் இறைவனின் இருப்பிடம் என்பதை உலகுக்கு உணர்த்தவே, அவன்மீது விழுந்த அடி உலகம் முழுவதும்விழுந்தது! இங்ஙனமெல்லாம் மாணிக்க வாசகரது வரலாற்றை உணரும் பொழுது, இந்த வரலாற்றை உலக முழுவதும் உணர்ந்து படிக்கவேண்டும் என்ற ஆசை ஏற்படுகின்றது. ஒவ்வொருவரும் மாணிக்க வாசகரது வரலாற்றைப் படித்துப் பயனடைவார்களாக!

தமிழ்ப் பண்பாட்டின் அணிகலனுக—தமிழகத்தின் உயிர்நாடியாக—தமிழ்க் கலைகளை வளர்க்கும் ஒப்பற்ற தலைவர்களாக—கனவிலும் நனவிலும் சைவமும் தமிழும் இந்திய நாடெங்கும் மட்டுமன்றிக் கடல் கடந்தும் பரப்பி வரும் நகரத்தார்கள் பன்னெடு நாட்கள் வாழ்க. அவர் தம்காசி நகரச்சத்திரம் போன்ற அறங்கள் தழைத்து நெடிது வாழ்க.

வாழ்க தமிழ்! வளர்க நல்லறம்!



கயையில் உள்ள நகரச்சத்திரமும், கல்வெட்டும்.

Nattukkottai Chatram in Gaya (Bihar) and Inscription therein.

गया में नाट्टुक्कोट्टै सराय तथा उसमें शिलालेख





அயோத்தி நகரச்சத்திரக் கட்டிடமும், அங்கே பிரதிட்டை
செய்யப்பெற்றுள்ள கோதண்டராமரும்.

The Nattukkottai Chatram at Ayodhya and the idol of
Kothandarama installed therein.

अयोध्या में नाट्टुक्कोट्टै सराय-कोदंडराम की मूर्ति का स्थापन



# கங்கைச் சிந்தனைகள்

சாலை இளந்திரையன்
தில்லிப் பல்கலைக்கழகம்

**உயர் கங்கை**

இமயமலைச்சாரலில் சிறிது தூரம் மேலேறிச் சென்று, அங்கே கங்கை இறங்கிவரும் அழகைக் கண்டால் உள்ளமும் உடலும் ஒருங்கே சிலிர்க்கின்றன. 'இமயமலையின் உச்சியிலிருந்த பனிக்கட்டி, அங்கிருந்தவாறே, இந்திய நாட்டை அள்ளி அணைத்து நிற்கும் முப்பெருங் கடல்களில் ஆடும் அலைகளின் அழகைக் கண்டதோ?—அவைகளோடு சேர்ந்து ஆடவேண்டுமென்று ஆசை கொண்டதோ?—அதனால்தான் அத்தனை வேகமாக ஓடி வருகிறதோ!' இமயச் சரிவிலே கங்கையைக் காணும் யாருக்கும் இந்த எண்ணம் தோன்றாமல் போகாது.

அத்தனை ஆர்வப்பெருக்குடன் ஓடிவரும் கங்கையைக் காணும்போது, அது ஓர் ஆறு என்ற எண்ணமே தேய்ந்துவிடுகிறது; "கன்னிப் பருவத்தில் கால்வைக்கப் போகும் இன்னிளம் பெண்ணோ இவள்?", என்ற எண்ணமே தோன்றுகிறது. அத்தனை நளினப் பேரழகு! அத்தனை சுறுசுறுப்பு! யாவற்றுக்கும் மேலாக சமவெளியில் விரிந்து பரந்து விழியிரண்டு கொள்ளாமல் ஓடும் கங்கை போலல்லாமல், நம் விழிக்கு அளவாக அடங்கி ஒடுங்கிய உருவுடன் ஓடி வருகிறாள் கங்கை....

**சமவெளிக் கங்கை**

இந்தியச் சமவெளிக்கு வந்ததும் கங்கை நமக்கு நல்கும் காட்சி வேறு; அதன் அடியாக எழுகின்ற எண்ணமும் வேறு...இந்தியச் சோம்பேறிகளுடன் சேர்ந்து கங்கையும் சோம்பேறியாகி விட்டாளா? அல்லது அவளின் இருகரைகளிலும் ஒலிக்கும் தேவப்பேரொலி அவள் போக்கைத் தடுத்து அமைதிப்படுத்திவிட்டதா? 'முடைப்புல்லும் முக்குறுணித் தண்ணியைச் செறுக்கும்' என்பது பழமொழி. அல்லது துறைதோறும் துறைதோறும் இத்தனை 'மெய்'யன்பர்கள் இறங்கி இறங்கி அவள்மேல் இறக்குகின்ற பாவச்சேறு அவள் நடையைத் தடுக்கிறதா? தங்கள் பாவத்தைக் கழுவத் தன்னை நம்பி வந்த அத்தனை பேரையும் கண்டு அளவளாவி, நின்று நின்று அவர்களின் கதைகளைக் கேட்டுக் கொண்டே போகின்றாளா, கங்கை? அல்லது, வழிநடைக்குத் தண்ணீர்பந்தல், மோர்மடம், சுமைதாங்கி, அன்னசத்திரம் முதலியவைகளைக் கட்டிய தமிழர்கள், ஆயிரத்தெண்ணூறு மைல்களுக்கு இப்பால் வந்து தன் கரைகளிலும் சத்திரங்கள் அமைத்து விட்டார்களே என்று வியப்போடு நின்றுபார்த்து,அங்கே கேட்கும் தமிழோசையை விட்டுப் பிரிய மனமில்லாமல் மெல்ல மெல்ல நடக்கின்றாளோ?...

என்ன, சிரிக்கிறீர்கள்?...இன்னும் கொஞ்சம் தமிழர்கள் கங்கைக்கரையில் குடியேறியிருந்தால், கங்கை வங்கக் கடலை மறந்து குமரிக் கடலை நோக்கிப் புறப்பட்டிருப்பாள்! "பழமறைகள் முறையிடப் பைந்தமிழ்ப் பின்சென்ற பச்சைப் பசுங்கொண்டலை" (திருமாலை) நீங்கள் கேள்விப்பட்டதில்லையா? பள்ளி கொள்ளுவதிலேயே சுகங்கண்ட பெருமான் தமிழ்பின் செல்வதென்றால், ஓடி விளையாடுவதிலேயே விருப்பமுற்ற கங்கை, தமிழ்பின் வந்திருப்பாள் என்பதில் வியப்பும் உண்டோ?...அரித்துவாரத்தைத் தாண்டியபின் கங்கைநல்லாள்

எடுக்கும் அமைதிநடை இப்படி எத்தனையோ எண்ணங்களை எழுப்புவதாக உள்ளது.

**காசிக் கங்கை**

கங்கைக் கரைவழியே காசிக்குச் சென்றால் அங்கே ஓர் அற்புதத்தைக் காணலாம்: தங்களைக் கங்காபுத்திரர்கள் என்று சொல்லிக் கொள்ளும் காசிநகர்ப் பண்டாக்கள், "தக்ஷிண தேசத்திலிருந்து வரும் யாத்திரைக்காரர்களுக்கு விசேஷ அறிக்கை" என்று ஒரு 'நோட்டீஸ்' தமிழில் அச்சடித்து விநியோகிக்கிறார்கள். அந்த அறிக்கையின் ஒரு பகுதி வருமாறு:

"ஸ்ரீகாசி க்ஷேத்திரத்தின் கண்ணுள்ள 64 கட்டங்களில் பிரதானமானது மணிகர்ணிகா கட்டம். இம்மணிகர்ணிகா கட்டத்திலேயே காசியில் செய்ய வேண்டிய சகல கிரியைகளும் செய்வது உத்தமம். இந்தக் கட்டத்தில் சிரார்த்தம், பிராயசித்தம் முதலியவைகள் செய்துவைக்க 'தீர்த்தப் புரோகிதர்களாகிய கங்காபுத்திரர்களுக்கே' அதிகாரமுண்டு. காசியில் அனுமான், கேதார கட்டங்களில் புரோகிதர்கள் என்று பேர்வைத்துக் கொண்டிருக்கும் தக்ஷிண தேசத்துப் பிராம்மணர்கள் போலிப் புரோகிதர்களே ஒழிய அவர்களுக்கு மணிகர்ணிகா கட்டத்திலோ அல்லது 64 கட்டங்களிலோ யாதொரு கிரியைகள் செய்து வைக்க அதிகாரம் கிடையாது. தீர்த்த யாத்திரைக்காக வந்து ஸ்வதேசாபிமானத்தால் ஏமாற வேண்டாம். ஆகையால் சகல கிரியைகளும் மணிகர்ணிகா கட்டத்தில் தீர்த்தப் புரோகிதர்களாகிய கங்காபுத்திரர்களைக் கொண்டு செய்வித்துக் கொண்டு காசி யாத்திரா கங்கா ஸ்நான பலன்களை அடைவீர்களாக!"

('துணைசென்ற பலன்"—கஜமுகன், பக்கம் 46, சிவாஜி ஆண்டு மலர் 1959)

காற்றில் பறந்துவந்து தன்மேல் விழும் இந்த அறிக்கைகளைத் தன் மெல்லிய அலைக் கரங்களில் ஏந்திப் படித்துப் பார்த்த கங்கை மயங்கி நிற்பதிலும் தயங்கி நடப்பதிலும் வியப்பு ஏது? "இதேதடா, இவர்களின் அழுக்கை எல்லாம் கரைத்துச் செல்லும் நம்மையே இவர்கள் தங்கள் இன-மொழி அழுக்கில் புதைக்கிறார்களே!' என்று எண்ணுமலா இருப்பாள், கங்கைநல்லாள்?...

**கங்கையின் ஓட்டங்கள்**

நிலத்தில் ஓடுகின்ற கங்கையின் கரையிலேயே வெகுதூரம் சென்றுவிட்டோம். அப்படியே சென்றால், கங்கைமுகக் கப்பல் போக்குவரத்தில் நம்மை மறந்து, கோதுமையிலும், சணலிலும் மனத்தைப் போக்கிவிடுவோம். கங்கையின் மற்றொரு பக்கத்தைப் பார்க்கலாம், வாருங்கள்:

'கங்கைநதி எங்கெங்கே ஓடுகிறது?' என்று யாராவது கேட்டால், அவர்கள் பின்வரும் பதிலைத் தருவார்கள்: "இமயமலையில், கடல்மட்டத்திலிருந்து 13800 அடி உயரத்துக்கு மேல் உள்ள ஒரு பனிக்குகையில் உற்பத்தியாகிறது; இமயமலையின் அடிவாரத்திலுள்ள அரித்துவாரம் என்னும் இடத்தில் சமவெளியை அடைகிறது. அங்கிருந்து உத்திரப்பிரதேசத்தில் தெற்காகவும் தென்கிழக்காகவும் ஓடி, பிரயாகையில் யமுனையோடு கலந்து, காசி நகரைக் கடந்து, வங்காளத்தில் நடந்து பல கிளைகளாகப் பிரிந்து, நவகாளி என்ற இடத்தில் கடலில் கலக்கிறது. இவ்ஆற்றின் நீளம் 1,557 மைல். இந்நதியின் நீரால் வளம்பெறும் நிலத்தின் பரப்பு 4,32,480 சதுரமைல்..."

தண்ணீர் ஆறாகக் கங்கை ஓடுகின்ற பகுதியையும் பரப்பையும்தான் இந்த விவரக் குறிப்பு விளக்குகிறது. ஆனால் தண்ணீர் ஓட்டத்தை விட ஆற்றல் சான்ற வேறுசில ஓட்டங்களும் கங்கைக்கு உண்டு. அந்த ஓட்டங்களால் இந்த நாட்டின் சமயமும், வரலாறும், இலக்கியமும் செழித்துவந்துள்ள சிறப்பு, ஆறுகளில் கங்கைக்கே உள்ள தனிச் சிறப்பு. இந்த வகையில் பார்க்கும்போது,

" இமயமுதற் குமரிவரை
இதயந் தோறும்
இருகிளையாய்த் தழைத்தபல
மொழிகள் தோறும்

எமதினிய கங்கைநல்லாள்
ஓடு கின்ருள்;—
எத்தனையோ யுகயுகமாய் ஓடுகின்ருள்...

இந்தியத்தின் தென்கோடியில் உள்ள தமிழ்நெஞ்சில் கங்கை ஓடாத காலமே இருந்த தில்லை.

இமயவர் உறையும் சிமயச் செவ்வரை,
வெண்திரை கிழித்த விளங்குசுடர்
நெடுங்கோட்டுப்
பொன்கொழித்து இழிதரும் போக்கரும்
கங்கை''

எனவரும் பெரும்பாணுற்றுப்படையில் தவழ்ந்து, அண்மைக்காலப் பாரதியின் உள்ளத்தில் செழிப்பேற்றி, மேலே குறித்த (இமயமுதற் குமரி வரை) பாட்டுடியில் ஓடி, மேலும் ஓடிக் கொண்டே இருக்கிருள் கங்கை.

### பழந்தமிழ்க் கங்கை

கங்கையை நினைத்த முதல் தமிழ் நெஞ்சம் அதன் வளத்தை நினைத்தது. 'கங்கைவாரியும் காவிரிப்பயனும்' பிறவும் புகாரில் வந்து ஈண் டும் காட்சியில் உவகை மிகுந்தது அக்காலத் தமிழ்நெஞ்சம். அதைத் தொடர்ந்து வந்த சமயக் காலம், வளத்தின் எல்லையாக நின்ற கங்கையைப் பாவம் தேய்க்கும் புண்ணிய நன் னதியாக்கியது. கி. பி. இரண்டாம் நூற்ருண் டுக்கு முன்பே, கங்கையின் இப்புதிய (சமய) ஓட்டம் தமிழகத்தில் தொடங்கிவிட்டது. அக் காலத்தை நமக்கு விவரிக்கும் சிலப்பதிகாரத் தில், தனக்கு ஏற்பட்ட பாவத்தைப் போக்கிக் கொள்வதற்காக மாடலன் என்பவன் கங்கை யாடச் சென்றதாகச் செய்தி வருகிறது. தாங்கள் வளர்த்த கீரிப்பிள்ளையை மனைவி கொன்றுவிட, அதனுல் ஏற்பட்ட பாவத்தைப் போக்கிக்கொள்ளுவதற்காக,அவள் கணவனை மறையவன் கங்கையாடப் போனுன் என்ற செய்தியும் 'சிலம்பில்' வருகிறது. அங்கேயே, கங்கை செய்யும் அதே அருஞ்செயலை ஒரு தமிழ்வணிகவள்ளல் செய்துவிட்டான் என்ற செய்தியும் உள்ளது! கீரிப்பிள்ளையைக் கொன்ற பாவம் தீருவதற்குச் (சாத்திரப்படி) இரண்டு வழிகள் இருந்தன: ஒன்று, அவர்கள் கங்கையில் முழுகிஎழ வேண்டும்; மற்றது; அவர்கள் பெய

ரால் பெரும்பொருட்செலவில் தானம் செய்ய வேண்டும்...மறையவனே, 'பாவியாகிய உன்னோடு இனி வாழேன்' என்று மனைவியை விட்டு விட்டுத் தான்மட்டும் கங்கையாடக் கிளம்பி விட்டான். அறியாது செய்த குற்றத்தால் தன் இல்வாழ்க்கையையே இழந்த மனைவி, கங்கையைத் தேடிச் செல்லாமல், இங்கேயே பாவத்தைப் போக்க முயன்றாள். அங்கே கங்கைக்குப் போட்டியாகத் தோன்றினான் வணிகக் கோவலன்:

"ஒத்துடை அந்தணர் உரைநூற் கொள்கையின்,
தீத்திறம் புரிந்தோள் செய்துயர் நீங்கத்
தானம்செய்து, அவள் தன்துயர் நீக்கி,
கானம் போன கணவனைக் கூட்டி......"

அவள் இழந்த வாழ்வை அவளுக்கு அமைத்துக் கொடுத்தான்.

## வெற்றிக்கங்கை

சாதாரண மக்கள் கங்கையில் முழுகிப் பாவம் நீங்கினார்கள்; சமயக் கோட்பாடு அந்த நம்பிக்கையை அவர்களுக்கு ஊட்டியிருந்தது. பெரும் பொருளாளர் கங்கையுடன் போட்டி போட்டுக் கொண்டு தானஞ் செய்ய முன்வந்தார்கள். தமிழ்மன்னர்களோ, கங்கையைப் புண்ணிய நதியாக மட்டுமல்லாமல் தங்கள் வீரத்தைக் காட்டுவதற்கு ஏற்ற ஓர் வெற்றி எல்லையாகவும் கருதினார்கள்.

சேரன் செங்குட்டுவனின் தாய்கங்கையாட விரும்பினாள். அவளை அழைத்துக்கொண்டு, தன் அரச ஆடம்பரங்களுடன் வடதிசைக் கங்கையை அடைந்தான் செங்குட்டுவன். தண்ணீர்க் கங்கை சமய நம்பிக்கையிற் கலந்து ஓடிய செய்தியை அறியாததனாலோ என்னவோ அப்போது கங்கைக்கரையில் ஆட்சிபுரிந்து வந்த மன்னர்கள் செங்குட்டுவனை எதிர்த்துத் திருப்ப முனைந்தார்கள். அப்போரைப் பற்றிய செய்தியைச் செங்குட்டுவனின் அமைச்சனாகிய வில்லவன்கோதை குறிப்பிட்டு அவனைப் போற்றுகிறான்:

"கங்கைப் பேர்யாற்றுக் கடும்புனல் நீத்தம்
எங்கோ மகளை ஆட்டிய அந்நாள்,—
ஆரிய மன்னர் ஈரைஞ்ஞூற்றுவர்க்கு
ஒருநீ யாகிய செருவெங் கோலம்
கண்விழித்துக் கண்டது கடுங்கண் கூற்றம்!"

புண்ணியத் தன்மையிலும் புனிதத் தன்மையிலும் கங்கைக்கு இணையானது காவிரியாறு. சமய அறிஞர்களெல்லாம் இந்தக் கொள்கையையே கொண்டிருந்தார்கள். பிற்காலச் சமயவாணர்கள், 'கங்கையிற் புனிதமாய காவிரி' என்று கூடப் பாடியுள்ளார்கள். ஆனால் தமிழ்நாட்டு மன்னர்களுக்குப் புனிதமும் தெய்வத்தன்மையும், காவிரியை விடக் கங்கையிலேயே மிகுந்து தோன்றியது. காரணம் அதைச் சாக்கிட்டாவது கங்கைவரையிலே தங்கள் வீரத்தை நிலைநாட்டலாம் என்று தமிழ் மன்னர்கள் கருதினார்கள். கண்ணகிக்குச் சிலை எடுக்கச் செங்குட்டுவன் முடிவுசெய்தபோது நடந்த நிகழ்ச்சி நாம் எல்லாரும் அறிந்ததே: "இமயத்தில் கல் எடுத்துக் கங்கையில் நீராட்டலாம்; பொதியமலையில் கல் எடுத்துக் காவிரியில் நீர்ப்படை செய்யலாம். இரண்டிலும் தெய்வத்தன்மை உண்டு" என்று அமைச்சர்கள் சொன்னார்கள். அதைக் கேட்ட செங்குட்டுவன், "வீரவேந்தர்கள் நம் ஊரில் கல் எடுத்து நம் நீரில் முழுக்குவது நமக்குப் பெருமையாகாது,—இமயமால்வரையில் கல்லெடுத்துக் கங்கையில் நீராட்டுவதே நமக்குச் சிறப்பு" என்று சொல்லிவிடுகிறான். கங்கையின் புண்ணியத் தன்மையும் தமிழ்மன்னரின் வீர வெற்றியின் பரப்பை விரிக்கவே பயன்பட்டது என்பது கங்கைக்குப் பெருமை. எல்லாரும் தங்கள் அழுக்கை அவளிடம் கொண்டு விட்டுச் செல்ல, தமிழ்மன்னன் தனது வெற்றியையல்லவா அவளுக்கு அணியாகச் சூட்டிச் செல்கிறான்!

## இடைக்காலக் கங்கை

இந்தத் தமிழ்மரபு நீண்ட நெடுங்காலமாக நின்று நிலவியது. பிற்காலத் தமிழ்மன்னர்களும் தங்கள் வெற்றிக்கு வட எல்லையாகக் கங்கையையே கொண்டிருந்தார்கள். கங்கையை வென்றால்தான் தங்கள் வெற்றி முழுவெற்றி என்பது அவர்களின் எண்ணம். பிற்காலச் சோழர்களில் ஒருவனாகிய முதலாம் இராசேந்திரனுக்குக் கங்கை கொண்ட சோழன்

என்று ஒரு பெயர் உண்டு. அவன் தனது கங்கை வெற்றியின் அடையாளமாக ஒரு புதிய ஏரியை அமைத்து, கங்கை நீரைக் கொண்டு வந்து அதை நிரப்பினுன். அவனே,

“ கங்கை நதியுர் கடாரமும் கைக்கொண்டு
சிங்கா தனத்திருந்த செம்பியன்”

என்று போற்றுகிறது தமிழ்...

அக்காலத்தில் தமிழ்ப்பேரரசன் என்ருல் அவனேடு கங்கையும் தொடர்புபட்டு இருந்தாக வேண்டும் என்று ஒருமரபே இருந்தது. தெற்கே குமரி,—வடக்கே கங்கை, இந்த இரண்டின் எல்லேவரை சென்று நிற்கும் ஆணேக்கே அக்காலம் உண்டு. ஆகையால் மன்னர்களேக் 'கன்னிக் கொழுநன்,' 'கங்கை மணுளன்' என்றெல்லாம் வாழ்த்திப் பாராட்டினுர்கள். கலிங்கத்துப்பரணியில் களக்கூழ் சமைத்து உண்ட பேய்கள், முதலாம் குலோத் துங்கனே வாழ்த்தும் செய்தியைப் பாருங்கள்:

“ பொன்னித் துறைவனே வாழ்த்தினவே!
பொருநைக் கரையனே வாழ்த்தினவே!—
கன்னிக் கொழுநனே வாழ்த்தினவே!
கங்கை மணுளனே வாழ்த்தினவே!”

### பாரதிக் கங்கை

மன்னர்களின் ஆட்சி மாறி, நாம் எல்லாரும் இந்நாட்டு மன்னர்களாவதற்குப் போராட்டம் நடத்திக் கொண்டிருந்த காலத்திலும் தமிழ் வழியே வந்து நம் நெஞ்சை வளஞ்செய்தாள் கங்கை. “இன்னறு நீர்க்கங்கை யாறெங்கள் யாறே” என்னும் இறுமாந்த முழக்கம், நம் இதயத்துக்கே புதிய சக்தியைக் கொடுத்தது: அந்தச் சக்தியின் விளேவாக என்ன நடக்கும் என்று நம் சுப்பிரமணியக் கவிஞன் கனவு கண்டானே அதுவும் இப்போது நடைபெறு கிறது:

“ கங்கை நதிப்புறத்துக் கோதுமைப் பண்டம்
காவிரி வெற்றிலேக்கு மாறு கொள்ளுவோம்”

என்பது அவன் கண்ட கனவுகளிலே ஒன்றல்லவா?

### வற்ருத கங்கை

இவை மட்டுமோ? நம் வளமார்ந்த உள்ளத்தையே கங்கைக்கு ஒப்பிடுகிறது புதுக் கவிநெஞ்சம்:

“கங்கையைப்போல் காவிரிபோல் கருத்துக்கள்
ஊறும்உள்ளம் எங்கள் உள்ளம்!”

என்று நம் பாரதிதாசனுரின் தமிழ்ச் செருக் கிலேயுமல்லவா கங்கை பொங்குகிருள்! ஆமாம்; கங்கைச் சிந்தனைகள், கங்கை போலவே கட்டுக்கடங்காது பொங்கிக் கால் பரந்து செல்லும் இயல்புள்ளவை. அவைகளே நிறுத்தி முற்றுப்புள்ளி இடமுடியாது;—சற்றே நின்று இளேப்பாறுவோம்...

---

## காசியில் சிறப்பான நாட்கள்

*மகாசிவராத்திரி*
*தீபாவளி*
*ஹிந்தி புத்தாண்டு*

---

## கங்கையும் காவிரியும்

வடக்கே கங்கையிலிருந்து தெற்கே காவிரி தாம்பரபரணி வரை ஒரு பொதுவான போக்கு வரத்து, மின்சார உற்பத்தித் திட்டத்தை அமைக்கும் வழியில் எல்லா நதிகளேயும் இணைப் பது, பொருளாதார வகையில் இந்தியாவில் நிரந்தரமான ஒற்றுமை ஏற்படுத்தும் வழிகளில் ஒன்ருகும். இந்தியா முழுதும் சம்பந்தப்பட்ட ஏதாவது ஒரு திட்டத்தின் மூலந்தான் ஒற்றுமை ஏற்படுத்த முடியும்.

ருஷ்யாவில் வால்கா கால்வாய் ருஷ்ய மக்களே இணைத்துக் கொண்டிருக்கிறது. இந்தியாவிலும் அந்த முறையைப் பரீட்சித்துப் பார்க்கலாம்.

—டாக்டர் சர் சி. பி. இராமசாமி ஐயர்.



# பூவும் பாலும்

கழகப் புலவர், சித்தாந்த பண்டிதர் ப. இராமநாதன்

வையத்து மக்கள் வாழ்வாங்கு வாழ்வதற்கு வாய்மைகுன்று வண்மை நற்சார்பு வேண்டும். ஆருயிர்கள் சார்பின்றி வாழமுடியாவென்னும் உண்மை அவ்வுயிர்களின் தோற்றமுறையான் நன்குணரலாம். அஃதாவது ஓரறிவு முதல் ஆரறிவு ஈருகவுள்ள அனைத்துயிர்களும் ஆண் பெண் வடிவாகிய உடலகத்துத் தங்கி உலக வாழ்க்கையினை ஒன்றேடொன்று உயிரும் உளமும் உடலும் உறையுளுமொத்து மருவி இணைபிரியாது வாழ்ந்து இனம் பெருக்கி இன்புற்று வருவதாலுணரலாம்.

இதுவே சிவபெருமானின் திருவுள்ளமென்பது அவன் தண்ணளியால் படைத்தளித்த உடம்பு வேறு பாட்டானுணரலாம். அதுவுமன்றி அப்பெருமான் தானும் அருளால் ஆண் பெண் திருமேனியாகக் காட்சி தந்தருளுவதால் காணலாம். இவ்வுண்மை "சத்தியும் சிவமுமாய தன்மையிவ் வுலக மெல்லாம்" என்னும் சிவஞான சித்தியார்த் திருப்பாட்டானுணரலாம்.

சிவபெருமான் ஆருயிர் அனைத்தையும் தான் தங்கும் உணர்வுத் திருக்கோயிலாகக் கொண்டு திகழ்கின்றனன். புறத்தே காணப்படுந் திருக்கோவில்கள் உணர்வூட்டுந் திருக்கோவில்களாகும். திருக்கோவில்கள், சமயவுண்மைகளைத் தாய்மொழியில் போதிக்கும் வாய்மைக் கல்லூரிகளாகும். ஆங்குச் செல்லும் மெய்யன்பர்கள், அக்கல்லூரியில் கற்கும் உரிமையும் கடமையுமுடைய நல் மாணவராவர்.

திருக்கோவில் வழிபாட்டிற்கு இன்றியமையாது வேண்டப்படுவன பூவும் புனலும், "போற்றி போற்றி" எனப் புகன்று பூத்தூவி அருச்சித்தலும், ஆன்பாலாட்டி இறவாத இன்பத் திருமுழுக்குச் செய்வித்தலும் ஆகும்.

பூவின்கண் பொருந்திய மணம் கட்புலனுகாது மெய்ப்புணர்ப்பு முறையால் நிறைந்து அடங்கி மூக்குப் புலனுக்கு எட்டும் வண்ணம் அமைந்துள்ளது. அப்பூவினை மாண்புறுத்துவதும் அம் மணமேயாம். இது போல் இறைவனும் ஆருயிர்களின் மாட்டு மெய்ப்புணர்ப்பாகப் புணர்ந்து மறைந்து நின்றருளுகின்றனர். இவ்வுண்மை யுணர்த்துவதே பூவின் சிறப்பாகும்.

அப்பூத் திருக்கோவிலுக்கென அமைக்கப்பட்ட திருநந்தனவனத்திலிருந்து கொண்டு வந்து சரம், மாலை, இண்டை, செண்டு, பிணையல், கண்ணி முதலிய பலவாகச் சமைத்துக் காலங்கள் தோறும் வழுவாது சாத்தி வழிபடுதலே சாலச் சிறந்ததாகும். இறைவன் திருமுழுக்குக்குத்தூயநீர் திருக்கோவிலுள்ளிருக்கும் கூவல் நீரே பெரும்பாலும் பயன் படுத்துகின்றனர். அல்லது ஓடும் ஆற்று நீரைச் சிறப்புடன் கொணர்ந்து பயன்படுத்துகின்றனர். இத்தகைய பெருந் தொண்டுக்கு நகரப் பெருஞ் செல்வ வணிகப் பெருமக்கள் (நகரத்தார்) ஆங்காங்கு திருநந்தனவனம் அமைத்து வேண்டும் பெரும் பொருட்செலவில் பூ வெடுப்பித்து மேற் கூறியவாறு மாலை முதலியன அமைப்பித்து அறக்கட்டளை வாயிலாகக் காலங்கள் தோறும் இறைவற்குச் சாத்துவித்துப் பெரும் பணி செய்து வருகின்றனர். இம்முறையில் தொண்டாற்றியவர் நாயன்மாருள் 'முருக நாயனு' ராவர். அவ்வுண்மை, வரும் சேக்கிழார் அருண்மொழியானுணரலாம்.

"கொண்டு வந்து தனியிடத்தி
னிருந்து கோக்குங் கோவைகளும்
இண்டைச் சுருக்கும் தாமமுடன்
இணைக்கும் வாச மாலைகளும்
தண்டில் கட்டும் கண்ணிகளும்
தாளிற் பிணைக்கும் பிணையல்களும்
நுண்டா திறைக்கும் தொடையல்களும்
சமைத்து நுடங்கு நூன்மார்பர்."
"ஆங்கப் பணிகள் ஆனவற்றுக்
கமைத்த காலங் களினமைத்துத்
தாங்கிக் கொடுசென் றன்பினெடுஞ்
சாத்தி வாய்ந்த அர்ச்சனைகள்
பாங்கிற் புரிந்து பரிந்துள்ளார்
பரமர் பதிகப் பற்ருன
ஓங்கிச் சிறந்த அஞ்செழுத்தும்
ஓவா நாவின் உணர்வினுர்."

—கஉ. முருக நாயனுர் -க, கO

இனி ஆன்பால் திருமுழுக்கும் பூ வழிபாட்டிற் கடுத்த மாவழி பாடாகும். இறைவன் வாலறிவன். பால் ஒன்றே களங்கமில் தூவெள்ளறிவிற்குத் தக்க எடுத்துக் காட்டாகும். மேலும் ஆண்டவன் அளித்தருளும் பெருந்தண்ணளிக்கும் சான்ருகும். ஆன்பால் ஒன்றே தாய்க்கும், சேய்க்கும், தாயில் சேய்க்கும், நோயுடையார்க்கும், நோயில் நலமுடையார்க்கும், மருந்துக்கும், விருந்துக்கும், பிற சிறப்புக்கட்கும் இன்றியமையாச்சிறப்புடைத்தாகும். இவ்வுண்மை "நெய்யில்லாவுண்டிபாழ்" நீறில்லா நெற்றிபாழ்" "பாலுந்தெளிதேனும்" "சிவாய நம வென்று" என நல் வழிக்கண் தமிழ் மூதாட்டியார் செந்நெறிச் சிறப்பாக ஓதியவற்ருனுணரலாம்.

திருக் கோவிலின்கண் திருவைந்தெழுத்து மந்திர முறையான் நாண்மங்கலஞ் செய்யப்பட்டு அம்மந்திரத்தானே மெய்யடியார்களால் நாளும் வழிபாடுசெய்யப்பட்டு வரும் இறைவன் மெய்ப் பண்புகளின் திருவடையாளமாகக் காணப்படும் மந்திரத் திருவுருவங்களேயுள்ளன. அத்திருவுருவங்களுக்குப் பேரன்புடன் ஆட்டப்படும் தூய ஆன்பால் மந்திரக்கலஞ் சார்ந்த மாண்பு மிகு பாலாகும். எனவே அப்பால் எத்திறத்தார்க்கும் நன்னலந்தரும் திருவருண் மருந்தாகும். அத்தகைய பாலும் திருக்கோவிலுக்கென அமைக்கப்பட்ட பசுமடத்து ஆன்பால்களே ஏற்புடையன ஆகும். ஆன் குலத்தின் மெய்ம்மை ஏற்றமுணர்ந்தே சிவபெருமானுக்கு ஆனேறு ஊர்தியாகவும் கொடியாகவும் அமைந்துள்ளது. அம்மட்டு மன்று ஆன் சாணம் திருவெண்ணீற்று முதலாகவுந் திகழ்கின்றது.

இப்பெற்றியெல்லாம் உணர்ந்த சிவன் தொண்டே பெருந் தவமாகக் கொண்டு ஆங்காங்கு அயராவன்புடன் புரிந்து வரும் சீரிய நகரத்தார் யாண்டும் பசுமடப் பேரறங்கள் பல புரிந்து வருகின்றனர். அன்னுர் தொண்டும், தொல்குலமும் ஆண்டவனருளால் யாண்டும் சிறப்பதாக, பாலாட்டுச் சிறப்புச் செந்தமிழ்த் திருமாமறைகளின் பரக்கக் காணலாம். அது வருமாறு:

"ஆடினுய்நறு நெய்யொடு பால்தயிர்"

—ரு. க – க.

"சீல முடைய கோக்குலங்கள்
சிறக்குந் தகைமைத் தேவருடன்
கால முழுதும் உலகணைத்துங்
காக்கும் முதற்கா ரணராகும்
நீலகண்டர் செய்யசடை
நிருத்தர்சாத்து நீறு தரும்
மூலம் அவதா ரஞ்செய்யு
மூர்த்திமன்ருல் முடிவென்னே."
"மீள மீள இவ்வண்ணம்
வெண்பால் சொரிமஞ் சனம் ஆட்ட
ஆள வுடையார் தம்முடைய
அன்பர் அன்பின் பாலுளதாய்
மூள அமர்ந்த நயப்பாடு
முதிர்ந்த பற்று முற்றச்சூழ்
கோள மதனில் உள்நிறைந்து
குறித்த பூசை கொள்கின்றுர்."

—கஉ. சண்டேசுர நாயனுர், - உக, ருக.

நல்லார் நயவர் நகரத்தார் செய்பணிகள்
எல்லாரும் ஏத்தும் எழிலினவே-வில்லாரும்
மன்னர் பின்னேர் செய்யறங்கள் மன்னு
புகழ் தந்தருளால்
இன்னுநிகழ் கின்ற இனிது.



# காசியில் கைவிட்டவை

காசிக்குத் தாத்தாவும் சென்றுவந்தார்—உடன்
களிப்போடு பிள்ளைகள் சூழ்ந்துகொண்டார்
ஆசையாய்க் கூடியே பேசுகையில்—அங்கே
ஆனந்தன் தாத்தாவைக் கேட்கலுற்ருன்.

" அத்தையும் காசிக்குச் சென்றுவந்தாள்—இனி
அவரைக்காய் தின்பதே இல்லையென்ருள்
பாட்டியும் காசிக்குச் சென்றுவந்தாள் – இனிப்
பாகற்காய் தின்பதே இல்லையென்ருள்.

இப்படிக் காசிக்குச் சென்ருேரெல்லாம்—அங்கே
ஏதேனும் ஒன்றினை விட்டுவந்தார்
அப்படி நீயுமே விட்டதென்ன?—தாத்தா
அவசியம் கூறிட வேண்டு"மென்ருன்.

" கோபக்காரன் என்றே ஊரிலுள்ளோர்—என்னைக்
கூறிடு வாரன்ருே? ஆதலினல்,
கோபத்தைக் காசியில் விட்டுவந்தேன்"—என்றே
கூறினர் மறுமொழி தாத்தாவமே.

கண்ணனும் உடனேயே, "தாத்தா, தாத்தா—நீயும்
காசியில் விட்டதும் என்ன?" என்ருன்
"இந்நேரம் கோபத்தை விட்டதாய்ச் சொன்னேனே
எங்கே கவனமோ?" என்றுரைத்தார்.

முரளியும், "தாத்தா, நீ விட்டதென்ன?"—என்றே
மீண்டும் ஒருமுறை கேட்டிடவே,
திரும்பவும், "கோபத்தை விட்டே"னென்றே—தாத்தா
செப்பினர், முரளியும் "ஓகோ"என்ருன்.

அருணனும், கோபுவும், அழகப்பனும்—இன்னும்
அலமுவும், கீதா, காவேரியுமே,
திரும்பத் திரும்பக் கேள்விதனைக்—கேட்கச்
சீறி எழுந்தார் தாத்தாவுமே!

" வேலையற்ற வெட்டிப் பிள்ளைகளா—என்ன
வேடிக்கையா இங்கே காட்டுகிறீர்?
தோலை உரித்தே எடுத்திடுவேன்" – என்று
சொல்லியே கையில் தடியெடுத்தார்.

"கோபத்தைக் காசியில் விட்டேனென்ருர்—இதோ
குண்டாந் தடியுடன் வந்ததடா!
ஆபத்து! ஆபத்து!" என்றேசொல்லி—உடன்
அனைவரும் ஓட்டம் பிடித்தனரே!

—குழந்தைக் கவிஞர் அழ. வள்ளியப்பா

# காசியில் இறைபணி

ராவ்சாயிப்
நல். முருகேசமுதலியார், B.A.,
சென்னை அரசாங்கத் துணைச் செயலர் (ஓய்வு)
சென்னை சைவசித்தாந்த மகாசமாஜத்
துணைத் தலைவர்

சீத்த மோக்ஷத் தானங்களில் மிகச் சிறந்தது புண்ணிய நதியாகிய கங்கையின் கரையில் அமைந்துள்ள காசித் தலமாகும். இதில் சிவமூர்த்தி அடியவர் தீர்மானித்தபடி காட்சி தந்து சித்தியளிப்பவர். இது சர்வசங்க காலத்தில் சிவமூர்த்தியின் சூலத்தின் முனையின் நின்று அழிவடையாதது. சர்வ சங்கார காலத்தில் பூதங்கள் யாவும் ஒடுங்கும் இடமாதலால் இதற்கு மாமயானம் எனப் பெயருண்டு. ஆன்மாக்கள் இங்கு சிவானந்தம் பெறுவதால் ஆனந்தகானம் என்றும் பெயர் உண்டு. விசுவேச்சுவரனாகிய சிவப்பெரும் பொருளை காசி பெண்ணுருப் பெற்று வணங்கி தன்னை வணங்கினவர் முத்தியடைய வரம் பெற்றாள். தேவி அன்னபூரணியாக நின்று உயிர்கட்குக் கருணை காட்டியதால் தருமவனம் என்ற பேரும் இதற்கு உண்டு. எனவே, பண்டைநாள் முதற்கொண்டு காசிக்குச் சென்றால் கருமம் தொலையும் என்றும், விசுவ நாதரைத் தொழுதால் முத்தியடையலா மென்றும் பாரத நாட்டில் எல்லா மக்களும் நம்பிக்கை கொண்டிருந்தார்கள். நம் தமிழ்த் நாட்டவர்கள் ராமேச்சுரத்திலுள்ள ராமலிங்கத் தையும் காசியிலுள்ள விசுவலிங்கத்தையும் ஆயுள் நாளில் தரிசித்து உய்வடைவதைப் பெரிய குறிக்கோளாகக் கொண்டிருந்தார்கள்.

காசி வேதாகம சாத்திரக் கலைகளுக்கு ஒரு தாயகம். நம் தமிழ் நாட்டு மடங்களும் வீர சைவ மடங்களும் பல நூறு ஆண்டுகளுக்கு முன்பே அங்கு அமைக்கப் பெற்றுள்ளன. ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் அங்கு மடம் அமைத்து சைவத்தைப் பரப்பியது தென் னாட்டின் பெருமையாகும். இத்தகைய தலங் களில் தரும சத்திரங்கள் அமைத்தலும் அங்கு திருக்கோயில் கொண்டெழுந்தருளியிருக்கும் முழுமுதற் கடவுளுக்குப் பூசனை நிபந்தங்கள் ஏற்படுத்துவதும், அடியார்களுக்கு உணவும் உறையிடம் தருதலும் பெருத்த சிவ புண்ணிய மென நம் முன்னவர்கள் கருதி வந்தார்கள். அத்தகைய சிவ தருமங்களில் தலை சிறந்த வர்கள் நம்மவர்களில் செல்வத்தை நல் வகையில் செலவழிக்க வல்லவர்களும், திருப் பணிகளைச் செவ்வையாகச் செய்ய ஆற்ற லுடையவர்களுமான செட்டிநாட்டு நகரத் தார்கள் என்பது நாடு அறியும். அவர்கள் தமிழ் நாட்டிலே தில்லை முதலிய பல தலங்களில் செய்துவரும் தரும கைங்கரியங்களைப் பலரும் அறிவார்கள். ஆனால் அவர்கள் வட நாட்டில் முக்கிய தலங்களில் செய்துவரும் தொண்டைப் பற்றிச் சிலரே அறிந்திருக்கக்கூடும். காசி, பிரயாகை, கயை, அயோத்தி, காளிக்கட்டம், பஞ்சவடி, ஹரித்துவாரம், ராஜமகேந்திரவரம், முதலிய இடங்களில் அவர்கள் சத்திரங்கள் யாத்திரிகர்களுக்கும் ஒரு புகலிடமாக இருந்து வருகின்றன.

அடியேன் சென்ற பிப்ரவரி மாதம் திருப்பனந்தாள் மடத்து சைவ சித்தாந்த சொற் பொழிவுகளை நிகழ்த்த காசி, அலகாபாத்து பல்கலைக் கழகங்களுக்குச் சென்றிருந்தேன். அந்தச் சந்தர்ப்பத்தில் காசி, பிரயாகை, கயை, கல்கத்தாவிலுள்ள நகரத்தார் சத்திரங்களுக்கு விஜயம் செய்தேன். முக்கியமாக, காசியில் அவர்கள் நடத்தும் திருப்பணிகளை இந்தக் கட்டுரையில் பாராட்ட விரும்புகிறேன்.

காசியிலுள்ள நகரத்தார் சத்திரம் ஆரம்பித்து சுமார் 100 ஆண்டுகளாகின்றன. அதற்கு முன்பே சுமார் 1820-ம் ஆண்டி லிருந்தே காசி விஸ்வநாதருக்குத் திரிகால

பூசனை கைங்கர்யங்களை நகரத்தார்கள் அமைத்துள்ளார்கள். விசுவநாதருக்கு நகரத்தார் மண்டபப்படி வெகு சிறப்பாக அமைந்துள்ளது. இந்த பூசையைப் பார்ப்பதற்கே இந்தியாவின் பல மூலைகளிலிருந்தும் அடியவர்கள் அன்புடன் காத்திருந்து கண்டு சொல்லொணு ஆனந்தம் அடைகிருர்கள். முக்கியமாக, அர்த்த சாம பூசை மிகவும் சிறந்தது. சத்திரம் மேற்பார்வையாளர் திரு. A. PR. கண்ணப்ப செட்டியார் உதவியினுல் நான் வெகு அருகிலிருந்து அந்தப் பூசையைப் பார்த்து கண் பெற்ற பலனை அடைந்து ஆனந்தமெய்தினேன்; சத்திரத்திலிருந்து பூசனை திரவியங்கள் நாதசுவர மேளத்துடன் வெகு விமரிசையாக எடுத்துக்கொண்டு போகப்படுகின்றன. அபிடேகம், புஷ்பாலங்காரம், தீபாராதனை, சோடசோபசாரம் சம்பிரமமாக நடக்கின்றன. பூசை சாமான்கள் எல்லாம் வெள்ளியே. இம்மாதிரி தென்னுட்டு முறை வடநாட்டில் எங்குமே காண முடியாது. பூசகர்களும் இந்தப் பூசனையை வெகு பக்தி சிரத்தையுடன் செய்கிருர்கள். கருவறையின் நாலு பக்கங்களிலும் பக்தர்கள் சிவநாமத்தைக் கோஷிக்கிருர்கள். தமிழ் நாட்டு நாதசுவரம் வாசிக்கப்படுகிறது. எனது ஒரு குறை, தேவாரம் ஓதப்படவில்லை. கூடிய சீக்கிரத்தில் தாளத்துடன் தேவாரம் ஓத ஏற்பாடு செய்ய வேண்டுமென விரும்புகிறேன். வடநாட்டவர்கள் தமிழ் மறையின் ஒலியில் ஆனந்தம் அடைவார்கள், என்பதில் ஐயமில்லை.

இந்தப் பூசனைக்காக நந்தவனமும், கோசாலையும் கூட ஏற்பட்டுள்ளன

சத்திரம் வெகு விசாலமானது. அதில் நகரேசுவரர் ஆலயம் வெகு அழகாக அமைந்துள்ளது. பூசனைகள் சரியாக நடந்து வருகின்றன. நான் சென்றபோது கிருத்திகை நாளாக இருந்தது. முருகவேளுக்கு மயில் வாகன உத்சவத்தைக் கண்டு மகிழ்ந்தேன். நான் பிரதி கிருத்திகை தினமும் முருகன் கோயில் சென்று தரிசிப்பது வழக்கம். காசியிலும் அது தவருமல் இருந்தது நகரத்தவர்கள் ஏற்படுத்தியிருந்த இந்த நல்ல திருப்பணியே. சத்திரத்தில் சாத்திரம் படிக்கும் மாணவர்களுக்கு உறைவிடம் மட்டும் தருவதாக அறிந்தேன். இந்தச் சலுகையை நம் தமிழ் நாட்டு மாணவர்கள் பெருவாரியாகப் பெற்று, காசிப் பல்கலைக் கழக பல பரீட்சைகளில் தேர்ந்து பயனடைய வேண்டும். சென்னை அரசாங்கம் அத்தகைய மாணவர்களுக்கு, படிப்பு மானியம் கொடுத்தல் நலம். மடத்தில் வட நாட்டவர்கள் தமிழ் கற்க விரும்பினுல் ஒரு பண்டிதரை ஏற்படுத்தி தமிழ், தேவாரம் முதலியன சொல்லிக் கொடுக்கலாம். தமிழர்கள் இத்தகைய பணிகளில் ஈடுபட வேண்டும். தமிழ் பரவ வேண்டும் என்று மேடைகளில் பேசினுல் மட்டும் போதாது. உத்தர பாரத தமிழ் பிரசார சபை ஒன்று நிறுவ வேண்டும். தமிழும் சமயமும் ஒன்றையொன்று பிணைந்து நிற்கின்றன. தமிழ் வளர்ந்தால் சமயமும் வளரும்.

நகரத்தார்களால் கட்டப்பட்ட ஸ்ரீ காசி விசாலாக்ஷியம்மையார் ஆலயம் அருகாமையிலே இருக்கின்றது. அதில் பூசனை நம் தமிழ் நாட்டு வைதிகரைக்கொண்டே நடைபெற்று வருகிறது. நவராத்திரி காலத்தில் விசேஷ பூசைகள் சிறப்பாக நடைபெறுகின்றன என்று கேள்விப்பட்டேன். அக்காலங்களில் கோயில் பூசனையும், சத்திரத்தில் தென்னுட்டவர்களைக் கொண்டு தெய்வப் பாடல்கள் இசையரங்கு நிகழ்த்தினுல் மக்கள் பயனடைவார்கள்.

காசி சத்திர நிர்வாகம் ரங்கூனில் ரிஜிஸ்தர் செய்யப்பட்ட நகரத்தார்கள் சங்கம் ஒன்ருல் நடத்தப்பட்டு வருகிறது என அறிகிறேன். பர்மா, மலாயா, செய்கோன் முதலிய வெளிநாடுகளிலுள்ள நகரத்தார்கள் நன்கொடையாலும், காசிக்கு வரும் யாத்திரிகர்கள் தரும் மகமைப் பணத்தாலும் கல்கத்தா முதலிய இடங்களிலுள்ள கட்டிட சொத்துக்களில் வரும் வருவாயையும் கொண்டு நிர்வாகம் தக்க ஏஜெண்டுகளால் செவ்வையாய் நடந்து வருகின்றது. இது நகரத்தார்கள் திருப்பணியானுலும் மற்ற யாவரும் பொருளுதவி செய்து புண்ணியமடைவது அவர்கள் கடமையாகும்.

முக்கியமாக, இந்தச் சந்தர்ப்பத்தில் நான் சொல்ல விரும்புவது என்னவெனின் அற நிலையங்கள் அரசாங்கத் தலையிடுதலின்றியே

நன்கு நடைபெறலாம் என்பதை நகரத்தார் காசி கைங்கரியம் எடுத்துக் காட்டுகிறது. நூற்றில் ஒன்றிரண்டு தவறிப்போனுல், அது காரணங்கொண்டு எல்லாவற்றிலும் அரசாங்கம் தலையிடுவது அவசியமில்லை. காசியில் வதிந்து வரும் தென்னுட்டவர் எவரும் நகரத்தார் சத்திரத்திலும் திருப்பனந்தாள் ஆதீனத்து குமாரசுவாமி மடத்திலும் மிகுந்த பெருமை பாராட்டுகிருர்கள். காசிக்குச் செல்லும் தமிழர்கள் இந்தச் சத்திரத்தால் சொந்த ஊரார்கள் மத்தியில் இருப்பது போலவே பாவிக்கிருர்கள். ஸ்ரீ விசுவநாதரைத் தொழுவ தற்கு இது நல்ல அனுகூலமாக இருக்கிறது.

இந்தச் சத்திரம் ஆரம்பித்து 100 ஆண்டு களாகின்றன. இந்த நூற்றுண்டு விழா ஆகஸ்டு 1963-இல் நடைபெறவிருக்கின்றது. இந்த விழாவைப்பற்றி இந்தியா முழுவதும் அறிவிக்கப்பட வேண்டும். பர்மா, மலாயா, இலங்கை, செய்கோன் முதலிய வெளிநாடுகளி லுள்ள தமிழர்கள் யாவரும் அறிய வேண்டும்.

அந்த நல்ல நாளிலே அன்பர்கள் இந்தச் சத்திரம் நீடூழி நிலவ வேண்டுமென்று எல்லாம் வல்ல ஸ்ரீகாசிநாதனைப் பிரார்த்திக்க வேண்டும்.

கோயிலில் சிறந்த பூசனை செய்விப்பது மல்லாமல், சத்திரத்தில் சிறப்புக் கூட்டம் போடலாம். அவ்வமயம் எதிர்காலத்தில் நடக்கவேண்டியவைகளைப் பற்றித் திட்டமிட்டு நடத்த வழிவகைகள் தேடவேண்டும். சமயச் சொற்பொழிவுகள், இன்னிசைகள் கூட ஏற்படுத்தலாம். அவைகள் எல்லாவற்றையும் விட நிரந்தரமாக இருக்கும் வேலைகளை மேற் கொள்ள வேண்டும். இந்த நூற்றுண்டு மலர் வாடாமலராக இருந்து தெய்வ மணத்தை வீச வேண்டும். வசதியிருந்தால் நூற்றுண்டு விழாவுக்கு அடையாளமாக காசிப் பல்கலைக் கழகத்தில் ஆண்டுச் சொற்பொழிவுக்கு மூல பணம் அமைத்துத் தரலாம். அடியேன் மேலே குறித்துள்ள சில யோசனைகளையும் சிந்திக்க லாம். இந்தக் கட்டுரையை எழுதுவதற்கு எனக்கு வாய்ப்புத் தந்ததற்கு மகிழ்ச்சியடை கிறேன்.

இந்த அறநிலையம் நீடூழி வாழ்க! அதை நடத்தும் நண்பர்கள் யாவரும் நீடு நிலவுக! என எல்லாம் வல்ல இறைவனை வழுத்து கிறேன்.



“கங்கா தேவி கயிலாயங் காட்டு வாள்போற் கடிதேகிப்
பொங்கார் வத்தோ டுத்தரத்திற் புகும்பொற் காசித் திருத்தலத்தே
யிங்கா ரடிய ரெவர்களையு மின்ப வாழ்வி லிருத்தவெனத்
தங்கா ருடைய விசுவேசன் தடங்கட் பிராட்டியடிபணிவாம்”

**பாலகவி வயிநாகரம் இராமநாதன் செட்டியார்.**

# மலாயாவில் நகரத்தார்களின்
# தெய்வத் திருப்பணி

முருகு சுப்பிரமணியன்.
ஆசிரியர் : "தமிழ் நேசன்" மலாயா.

மலாயா இன்று உலக நாடுகளிடையே செல்வ நிலையில் ஓங்கி நிற்பதற்கு மூலகாரணம் ரப்பர். ரப்பர் மரங்களில் பால் வடித்து அவற்றைப் பணங்காய்க்கும் மரங்களாக விளங்கச் செய்யும் மகத்துவம் தமிழ்ப் பாட்டாளிகளுக்கு உண்டென்றால் ஆதியில் ரப்பர்த் தோட்டங்களைப் பயிர் செய்ய மூலதனம் கொடுத்த பெருமை புகழ்படைத்த தமிழ் வணிகர்களான தனவணிகர்களையே சாரும்.

'திரைகடலோடியும் திரவியம் தேடு' என்னும் பழமொழிக்கு முழுமையான இலக்கியமாகக் காட்சியளிக்கும் செட்டியார் சமூகத்தினர் ஆயிரக்கணக்கான ஆண்டுகளுக்கு முன்பே முத்து முதலியன கொண்டு பாய்மரக் கப்பலில் வந்திருக்கின்றனர். சரித்திரங்களும் இலக்கியங்களும் உறுதிப்படுத்தும் செய்தி இது. ஆதிநாளில் இவர்களில் ஒருவரான 'சந்திரதத்தன்' என்பார் தம் சொந்த மரக்கலத்தில் மலாயா வந்து காவிரிப்பூம்பட்டினம் திரும்பியதாக மணிமேகலை கூறுகிறது.

ஆனால், செட்டியார்கள் மலாயாவில் 'கொடுக்கல் வாங்கல்' ஆரம்பித்து ஏறக்குறைய 150 ஆண்டுகள் ஆகின்றன. மலாக்காவிலேயே அவர்கள் முதன்முதலில் குடியேறினர். பினாங்குக்கு 130 ஆண்டுகளுக்கு முன்னதாகவும், சிங்கப்பூருக்கு 120 ஆண்டுகளுக்கு முன்னதாகவும் செட்டியார்கள் வந்தனர்

மலாக்காவில் ஆங்கிலேயர்களுக்குச் சொந்தமான ஒருசில தோட்டங்கள் நீங்கலாக மற்றத் தோட்டங்கள் எல்லாம் செட்டியார்களிடமிருந்து பணம் பெற்றுப் பயிர் செய்யப்பட்டவையே. அந்நகரை அலங்கரிக்கும் கட்டிடங்களில் பெரும்பான்மை இவர்களின் பணத்தால் கட்டியனவாகவே இருக்கும்.

மலாக்காவில் தன் சேயான் என்னும் சீனத்தவக்கை மேனாட்டிலிருந்து ரப்பர்க் கொட்டைகளை வரவழைத்துப் 'புக்கேலிந்தான்' என்னும் இடத்தில் முதன்முதலில் ரப்பர்த் தோட்டம் போட்டார். அவருக்குப் பண உதவி செய்தவர்கள் நாட்டுக்கோட்டைச் செட்டியார்கள்.

மலாயாவில் செட்டியார்கள் போட்டிருக்கும் மூலதனம் தற்சமயம் 20 கோடி வெள்ளிக்கு மேல் இருக்குமென்று மதிப்பிடப்படுகிறது.

'இந்நாட்டில் இப்போதுள்ள பெருத்த பணக்காரர்கள் என்று கூறக்கூடிய சீன முதலாளிகள், தோட்டச் சொந்தக்காரர்கள், ஈயச் சுரங்க அதிபர்கள், மற்றும் பெரும்

பான்மையினர் நாட்டுக்கோட்டைச் செட்டியார்களின் பண உதவி பெற்றே தொழிலை ஆரம்பித்துப் பெருக்கி முன்னேற்றம் அடைந்தவர்கள் என்பது யாவரும் அறிந்தது'. இவ்வாறு ''மலாயாவின் தோற்றம்'' என்னும் சரித்திர நூலில் கூறப்படுகிறது.

மலாயாவின் நாட்டுக்கோட்டைச் செட்டியார்களின் வர்த்தக சங்கங்களில் மிகப் பழையது சிங்கப்பூர்ச் சங்கமாகும். அது 1931-ல் தோன்றியது. சிங்கப்பூர் தேங்ரோடு தண்டாயுதபாணி கோவிலுக்கு அருகில் நிறுவப்பெற்றிருக்கிறது இச்சங்கம். அமராவதி புதூரில் குருகுலம் கண்ட திரு சா. சு. சுப்பிரமணியன் செட்டியார் சங்கத் தோற்றத்திற்கு மூலகாரணமாவார்.

கோலாலம்பூர் அகில மலாயா நாட்டுக்கோட்டைச் செட்டியார்கள் சங்கத்திற்கு மலாயா கூட்டரசில் எட்டு நகரங்களில் கிளைகள் இருக்கின்றன.

இது சம்பந்தமாகச் செட்டியார்கள் பெருமைப்பட்டுக் கொள்ளக்கூடிய மற்றொரு செய்தியையும் இங்கு குறிப்பிடுவது அவசியம்.

கோலாலம்பூரில் திரு. க. வீ. அழ. மு. முத்தையாச் செட்டியார் அவர்கள் அந்நாட்களில் க நாட்டமாக விளங்கியவர்கள். கோலாலம்பூர் சாட்டர்டு பாங்குக்கு வந்த மானேஜர்கள் எல்லாரும் திரு முத்தையாச் செட்டியாரின் ஆலோசனையை ஏற்றே நடந்தார்கள்.



செட்டியார்கள் லேவாதேவித் தொழிலில் முன்னோடிகளாகவும் பழுத்த அனுபவசாலிகளாகவும் விளங்கி வந்திருக்கிறார்கள் என்பதற்கு இந்த ஒரு செய்தியே போதிய சான்றாகும்.

செட்டியார்களைப் பற்றி எழுதும்போது தெய்வப் பணியில் அவர்களுக்குள்ள ஈடுபாட்டை நாம் சொல்லாதிருக்க முடியாது.

மலாயாவில் செட்டியார்கள் தாங்கள் வாழும் இடங்களில் எல்லாம் கோயில் கட்டியிருக்கிறார்கள். அந்தக் கோயில்களுக்கு நல்ல இடமும் கட்டிடமும் நகைநட்டுகளும் சொத்துப் பத்துகளும் சேர்த்து, அவை என்றும் நின்று நிலவவும் வகை செய்திருக்கின்றனர்.

எச்சமயத்தின்பாலும் வேற்றுமை பாராட்டாதவர்கள் செட்டியார்கள்; எனினும் அவர்கள் அனைவருமே சைவ சமயத்தினர். தமிழ்க் கடவுளாம் திரு முருகனுக்கே தாம் சென்ற நாடுகளில் எல்லாம் அவர்கள் கோவில் எழுப்பியிருக்கின்றனர்.

பினாங்கிலேயே (1850-ம் ஆண்டில்) நகரத்தார் முதன்முதலில் தண்டாயுதபாணி கோவிலை நிறுவினர். 1857-ல் பினாங்கு தண்ணீர் மலைக் கோயில் தோன்றியது. சிங்கப்பூரில் தண்டாயுதபாணி கோவில் 1859-ல் கட்டி முடிக்கப்பட்டது.

மலாயாவில் முக்கிய ஊர்கள் அனைத்திலும் செட்டியார்களின் கோவில்கள் இருக்கின்றன. தாங்கள் கட்டி வைத்திருக்கும் கோவில்களில் அன்றாடம் பூசை முதலியன நடத்துவதோடு ஆண்டுதோறும் தைப்பூசம், பங்குனி உத்தரம் முதலான திருவிழாக்களையும் செட்டியார்கள் சிறப்பாக நடத்தி வருகிறார்கள்.

செட்டியார்கள் விமரிசையாக நடத்தும் இவ்விழாக்கள் பிற சமூகத்தினரையும் ஈர்க்கும் தன்மையன. சிங்கப்பூர் நகரத்தார் நடத்தும் தைப்பூச விழாவைப்பற்றி அறிஞர் ரோலாண்ட் பிராடல் தம் நூலில் சிறப்பாக எழுதியிருக்கிறார் என்பது இங்கே சுட்டிக் காட்டத்தக்கது.

## வளர்ந்துவரும் சிங்கப்பூர்

நாட்டுக்கோட்டைச் செட்டிமார்கள் தமிழ் நாட்டில் ஆலயப் பணிகள் பல செய்துள்ளார்கள். இம் மரபை ஒட்டியே சிங்கப்பூரிலும் அவர்கள் ஓர் ஆலயம் கட்டியிருக்கிறார்கள். அக் கோயிலுக்கு என்னை அழைத்துச் சென்று தெய்வ வழிபாடு செய்ய வாய்ப்பளித்தார்கள். தமிழ்நாட்டுக் கோவில் ஒன்றுக்குச் சென்ற எண்ணம்தான் என் மனத்தில் தோன்றியது.

—இந்திய அரசாங்கத்து
எஃகு, கனரகத் தொழில் அமைச்சர்
**உயர்திரு. சி. சுப்பிரமணியம்**
(ஆனந்தவிகடன், 11-8-63)

மலாயாவில் மொத்தம் 19 கோவில்கள் நகரத்தார்களின் நிர்வாகத்தில் இருந்து வருகின்றன. பெரும்பாலும் எல்லா ஊர்களிலும் தண்டாயுதபாணி கோவில்களே கட்டப்பட்டிருக்கின்றன. பினாங்கில் சிவன் கோவிலும், சிரம்பானில் செல்வ விநாயகர் கோவிலும், மலாக்காவில் பொய்யாத விநாயகர் கோவிலும் செட்டியார்களின் நிர்வாகத்தில் உள்ள கோவில்களே.

ஒவ்வொரு ஊரிலும் ஆண்டுதோறும் ஒரு திருவிழா சிறப்பாக நடைபெறுகிறது. சில ஊர்களில் தைப்பூசம், சில ஊர்களில் பங்குனி உத்தரம், இவ்வாறு ஊருக்கு ஒன்று மிக விரிவாகக் கொண்டாடப்படுகிறது. ஒவ்வொரு ஊர்த் திருவிழாவுக்கும் மற்ற ஊர் நகரத்தார்கள் சென்று கலந்து கொள்கிறார்கள். திருவிழாக்களின்போது அன்னதானமும் பெரும்பாலும் எல்லா ஊர்களிலும் நடத்தப்படுகிறது.

சிங்கப்பூர், பினாங்கு தைப்பூசங்கள் பல்லாயிரக்கணக்கான மக்களை ஈர்க்கும் வகையில் நடத்தப்படுகின்றன. காவடி எடுத்தல் முதலியவை பழனி முதலிய திருத்தலங்களை நினைவூட்டும் வண்ணம் நிகழுகின்றன.

கோவில்களின் நிர்வாகம் தக்க மூலதனங்களோடு நன்கு நடத்தப்படுகிறது. எப்பொழுதும் கோவில்கள் இனிது நடந்துவருவதற்கான

அமைப்புக்கள் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. வாகனங்கள், ரதங்கள், நகைகள் மற்றும் கோவில் தளவாடங்களுக்கும் குறைவில்லை. மிகவும் பூரணமாகக் கோவில் காரியங்கள் நடந்து வருகின்றன.

மலாயாவில் சைவம் தழைப்பதற்கு நிலைக் களனாக விளங்குபவை நகரத்தார்களின் கோவில்களே. தமிழ்ப் பண்பாட்டின் இருப்பிடமாகவும் அவை திகழ்கின்றன. கூட்டங்கள் முதலியன நடத்தவும், திருமணம் முதலிய பொது நிகழ்ச்சிகளை நடத்தவும் இக் கோவில்கள் பெரிதும் பயன்படுகின்றன.

ஊர்வாரியாக நகரத்தார்களின் கோவில்களும் அவற்றின் திருவிழாக்களும் வருமாறு :

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | அலோர் ஸ்டார் | தண்டாயுதபாணி கோவில் | — | மாசிமகம் |
| 2. | கூலிம் | தண்டாயுதபாணி கோவில் | — | தைப்பூசம் |
| 3. | பினங்கு | தண்டாயுதபாணி கோவிலும் சிவன் கோவிலும் | — | தைப்பூசம் |
| 4. | வாலப்பூர் | தண்டாயுதபாணி கோவில் | — | வைகாசி விசாகம் |
| 5. | சுங்குரும்பை | ,, ,, | — | பங்குனி உத்திரம் |
| 6. | தைப்பிங் | ,, ,, | — | ஆடிவேல் |
| 7. | ஈப்போ | ,, ,, | — | வைகாசி விசாகம் |
| 8. | தெலுக்கான்சன் | ,, ,, | — | சித்திரா பௌர்ணமி |
| 9. | கோலாலம்பூர் | ,, ,, | — | பங்குனி உத்திரம் |
| 10. | கிள்ளான் | ,, ,, | — | திருக் கார்த்திகை |
| 11. | சாவி (நிபோங் திபால்) (பாரிட் புந்தார் நகரத்தார் நிர்வாகம்) | ,, ,, | — | சித்திரா பௌர்ணமி |
| 12. | சிரம்பான் | செல்வ விநாயகர் கோவில் | — | ஆவணி விநாயக [சதுர்த்தி |
| 13. | மலாக்கா | பொய்யாத விநாயகர் கோவிலும் சன்னசி மலை தண்டாயுதபாணி கோவிலும். | — | மாசிமகம் |
| 14. | மூவார் | தண்டாயுதபாணி கோவில் | — | திருக்கார்த்திகை |
| 15. | பத்து பகாட் | ,, ,, | | |
| 16. | சிங்கப்பூர் | ,, ,, | — | தைப்பூசம் |
| 17. | தாப்பா | ,, ,, | | |

மலாக்காவில் உள்ள பொய்யாத விநாயகர் கோவில் மலாயாவிலேயே மிகப் பழமையானது. 'மலாக்காச் செட்டியார்கள்' டச்சுக் காரரிடம் நிலம் பெற்று 1781-இல் கட்டி முடித்தது அந்த ஆலயம். அதனை 'மலாக்காச் செட்டியார்கள்' நாட்டுக்கோட்டைச் செட்டியார்களிடம் சுமார் 25 ஆண்டுகளுக்கு முன்பு ஒப்படைத்தனர். அது முதல் மலாக்கா நகரத்தார்களின் நிர்வாகத்தில் பொய்யாத விநாயகர் கோவில் நடைபெற்று வருகிறது. இவ்வாறு செட்டியார்கள் ஏற்று நடத்திவரும் கோவில்களும் மலாயாவில் பல உண்டு.

மலாயாவில் நகரத்தார் சமூகம் ஆற்றி வரும் தெய்வத் திருப்பணி சைவ சமய வரலாற்றில் எப்பொழுதும் ஒளி வீசித் திகழும்.





★ ★

# தண்டாயுதபாணி வழிபாடு

நகரத்தார்கள் அனைவரும் சைவராக இருந்தும் வெளிநாடுகளில் அவர்கள் சிவபெருமானைவிடத் தண்டாயுதபாணிக்கே மிகுதியாகக் கோவில் கட்டியும் விழா எடுத்தும் வருகின்றனர். இதற்குக் காரணம் சிவாலயங்கள் சிவ ஆகம விதிப்படி நிறுவப்பட்டு அவ்வாறே சிவபெருமான் வழிபடப்பெற வேண்டும். அந்த ஆகம முறைகளை வெளிநாடுகளில் கடைப்பிடிக்க இயலாது. முறை தவறி நடக்க நேரின் ஏற்படும் அபசாரத்துக்கு—சிவ அபசாரத்துக்கு—நிவர்த்தி செய்ய வழியில்லை. மேலும், சிவலிங்கத்தைப் பூசை செய்வது கிரகஸ்த சிவாச்சாரியார் களால் மட்டுமே செய்யப்பட வேண்டும். சான்று திருவிளையாடற் புராணத்தில் தருமிக்குப் பொற்கிழி அளித்த படலம். தொழில் செய்யும் தொலை தூரங்களில் நியமநிஷ்டையுடன் இருப்பதிலுள்ள இன்னலை நகரத்தார்கள் உணர்ந்திருப்பதி லிருந்து அவர்களுடைய அடக்கமும் பக்தியுணர்ச்சியும் புலனாகும்.

மன்னிக்கும் தன்மை தண்டாயுதபாணிக்கு உண்டு. தாங்கள் செய்யக் கூடிய சிறு தவறுகளை மறந்து மன்னித்துத் தங்களை வாழவைக்க வேண்டும் என்பதை கருத்திற்கொண்டு, இவர்கள் சிறப்பிடம் தந்துள்ளனர். கோவில் கட்டுவதற்கு முன் அல்லது கோவில் கட்ட இயலாத சிறு ஊர்களில் தண்டாயுத பாணி படத்தை வைத்து வழிபடுவதே வழக்கம்.

முருகன் என்றும் தண்டாயுதபாணி என்றும் சுப்பிரமணியர் என்றும் தமிழ் மக்கள் போற்றும் இறைவனை வட இந்தியாவில் பிரபலப்படுத்தியவர்கள் நகரத் தார்கள் ஆவர். கல்கத்தாவில் ஒரு பெரிய அறிஞர் நகரத்தார் தொடர்பால் தமிழ் மொழி பயின்று, சுநீதி குமார் சாட்டர்ஜி என்ற தம் பெயரை 'நன்னெறி முருகன்' என்று ஆக்கிக்கொண்டிருக்கிறார்.

வீடுகளில் பூசை போடும்போது, வேல் ஊன்றிப் பூசை போடுவதும் அதற்குச் சுப்பிரமணியர் பூசை என்று பெயரிடுவதும் மரபு. சுப்பிரமணியருக்கு எத்தனை பெயர்கள் உண்டோ அத்தனை பெயர்களும் செட்டியார் சமூகத்தில் வழங்கக் காணலாம். நகரத்தார்கள் வாழும் சில ஊர்களில் ஏற்கெனவே சிவன் கோவில்கள் — சிவகங்கை ஜமீன்தார் முதலியவர்களால் கட்டப்பட்டிருந்தன. அவ்வூர்களில் நகரக் கோவில் கட்ட முடிவு செய்தபோது, நகரத்தார்கள் தண்டாயுதபாணிக்கே கோவில் கட்டியுள்ளனர். கல்லுப்பட்டி, கூழிபிறை, கோனாபட்டு, நெற்குப்பை ஆகிய ஊர்களிலும் உலகம்பட்டி ஞானியார் மடத்திலும் நகரத்தார்கள் சுப்பிரமணியர்க்குக் கோவில்கள் அமைத்துள்ளனர்.

—'கண.'

# ஸ்ரீ காசி நாட்டுக்கோட்டை நகரச் சத்திரம் நூற்றாண்டு விழா வாழ்த்து



நாமக்கல் கவிஞர் வெ. இராமலிங்கம் பிள்ளை

தெய்வ பக்தியில் திளைந்த மனமும்
சிவநெறித் தொண்டில் சலியாச் சிறப்பும்
பண்டைத் தமிழரின் நல்ல பண்புகள்
இன்னும் தம்மிடை இருக்கும் இனமாய்
வாணிபத் துறையில் மிகவும் வல்லராய்
செல்வம் வளர்க்கும் வித்தையிற் சிறந்து
திரவியம் தேடத் திரைகடல் ஓடி
எந்த நாட்டிலும் சொந்த நாடுபோல்
அங்குள எவரொடும் அன்புடன் பழகி
இம்மியே யாயினும் இகழ்ந்து விடாமல்
சிறுகச் சிறுகச் சேர்த்துப் பெருக்கிக்
கூடிய பொருளைக் கோடிக் கணக்கிலும்
ஆலயத் திருப்பணி, அன்ன சத்திரம்,
கல்விச் சாலைகள், கலைதெரி கழகம்,
மருத்துவ மனைகள், மாணவர் விடுதி
ஆகிய பலவித அறப்பணி களுக்கே
வாரி வழங்கும் வண்மை யாளராம்
நாட்டுக் கோட்டை நகரச் செட்டிமார்
தம்முடை தாயகம் தமிழ்நா டெங்கும்
பற்பல அறங்களைப் பாலிப்ப தோடு
பாரத நாட்டில் பல்வே றிடங்களில்
நல்லறப் பணிகளை நடத்துகின் றார்கள்.
அத்தகு அறங்களுள் அதிகம் சிறப்புற
தேசமே வணங்கும் காசியம் பதியில்
வீற்றிருந் தருள்புரி விஸ்வேஸ் வரற்கு
வடநாட் டவர்க்கு வழக்கமில் லாது
தமிழ்நாட் டிற்கே தனிப்பெரும் சிறப்பாம்

வாத்திய முழக்குடன் தோத்திரம் பாடி
அபிஷே கங்களும் ஆரா தனைகளும்
முக்கால பூஜை சாஸ்திர முறைப்படி
நைவேத்தி யத்துடன் நடப்பதற் காகிய
நிதிவரு வாய்களை நிரந்தர மாக்கி
அத்துடன் காசியில் நித்திய அறமாய்
அந்தணர், பிணியுளோர், அகதிகள், மாணவர்
முதலிய பலரும் இதமுற நாடிப்
புந்தி மகிழ்ந்திடப் போஜனம் உண்ணப்
புகலிட மாகப் புகழுடன் விளங்கி
நூறாண்டு காலமாய் நோன்புடன் நடக்கும்
நாட்டுக் கோட்டை நகரச் சத்திரம்
போற்றத் தகுந்த மிகப்பெரும் புண்ணியம்.
அந்தச் சத்திரம் ஆரம்பம் ஆகி
ஆண்டுகள் நூறு ஆயின ஆகையால்
நூற்றாண்டு விழாவை நாற்றிசை யோரும்
மெச்சிப் புகழ்ந்திட மேலான முறையில்
நடத்தி மகிழும் நாட்டுக் கோட்டை
நகரத் தார்களின் நலங்கள் பெருகி
தெய்வ பக்தியும் திருப்பணி ஆர்வமும்
தருமமும் தானமும் தவமும் தழைத்து
சத்திய சாந்த சன்மார்க்கம் நிலவ
உதவும் படிக்கு உவந்தருள் புரிந்திட
விஸ்வேஸ் வரரொடு விசா லாட்சியின்
பாதார விந்த மலர்களிற் பணிந்து
மனமார வாழ்த்தி மங்களம் பாடுவோம்.



# திருத்தொண்டை உயிரெனப் போற்றும் சிவநேயச் செல்வர்கள்

தனவணிகர் பல காலமாகத் தமிழ் நாட்டில் சிவாலயத் தொண்டுகள் செய்ததை நாம் அறிவோம். வட நாட்டில் காசியிலும் அவர்களுடைய சிவதர்மம் நடைபெற்று வருகிறது. ஏறத்தாழ நூற்றைம்பது ஆண்டுகளுக்கு முன்பு கல்கத்தா நகரில் இருந்து வியாபாரம் செய்துவந்த நகரத்தார் அவ்வூரில் சிங்கார வேலவருக்கு ஒரு கோயிலைக் கட்டி வழிபட்டுவந்தார்கள்.

அன்றியும் வடநாட்டில் பல இடங்களில் மடம், சத்திரம், நந்தவனம் ஆகியவற்றை அமைத்துச் சிவபூஜை, அன்னதானம் முதலிய அறங்களைச் செய்தார்கள். இலங்கை முதலிய பிற நாடுகளிலிருந்தும் தமிழகத்திலிருந்தும் யாத்திரையாக வடநாட்டுக்கு வரும் அன்பர்களுக்குப் பலவகை வசதிகளைச் செய்து தந்தார்கள்.

இந்த அறச் செயல்களுக்குள் மிகச் சிறந்தவை காசிமாநகரில் ஸ்ரீ விசுவ நாதருக்கு நடைபெற்றுவரும் அபிஷேக ஆராதனைகளாகும். இந்துக்களில் யாராக இருந்தாலும் காசிப்பிரானைத் தம்முடைய கையாலே நீராட்டி மலர்தூவி வழிபடலாம் என்பதை யாவரும் அறிவர். காசியில் நகரத்தார் ஒரு சத்திரம் அமைத்திருக்கிறார்கள். நகரத்தாருடைய கட்டளையாக அதிகாலையில் விசுவரூப பூஜையும், உச்சிக்கால பூஜையும், இரவு அர்த்தசாம பூஜையும் ஒரு நூற்றாண்டு காலமாகச் சிறப்பாக நடைபெற்று வருகின்றன. அந்தப் பூஜைகளில் உச்சிக்கால பூஜைக்கும் அர்த்தஜாம பூஜைக்கும் நகரத்தார் சத்திரத்திலிருந்து நாள்தோறும் அந்தப் பூஜைகளுக்குரிய பண்டங்கள் செல்லும். அவை போகும்போது அடியார்கள் 'சம்போ மஹாதேவா' என்ற முழக்கத்தோடு உடன் செல்வார்கள். இந்த ஊர்வலத்தைக் காணவரும் மக்கள் அந்தச் சூழ்நிலையினால் மனம் உருகிப் பொருளோடு செல்லும் அடியார்களின் காலைத் தொட்டுக் கும்பிடுவார்கள். இந்த மூன்றுகால பூஜையையும் முட்டின்றி நடத்தி வருவதைத் தம்முடைய வாழ்க்கையின் பயனாகக் கொண்டிருக்கிறார்கள் நகரத்தார்கள். ஒரு சமயம் காசிமாநகர் வந்து ஸ்ரீ விசுவேசரைத் தரிசித்து இன்புற்ற மைசூர் மகாராஜா அர்த்த சாமத்துப் பூஜைக் கட்டளையைத் தாம் ஏற்று நடத்த விரும்புவதாகவும் அதை வழங்க வேண்டுமென்றும் நகரத்தார்களைக் கேட்டாராம். அந்தத் திருத் தொண்டை உயிரெனப் போற்றிவரும் சிவநேயச் செல்வர்களாகிய நகரத்தார் அதை விட்டுவிட மனம் இசையவில்லை.

—கி. வா. ஜகந்நாதன்

*கலைமகள், பிப்ரவரி 1960*

# பர்மாவில் நகரத்தார்களின் தெய்வத் திருப்பணி

சொ. சுப. சுப்பிரமணியன் செட்டியார்
காரியதரிசி,
நாட்டுக்கோட்டைச் செட்டியார்கள் சங்கம், பர்மா.

**பர்**மா இன்று ஆசிய நாடுகளிடையே சீரும் சிறப்புமாக இருப்பதற்கு அதன் ஏற்றுமதி முக்கிய காரணமாகும். ஆசிய மக்களுக்கு இன்றியமையாத உணவாகிய அரிசியை அயல்நாட்டாருக்கு அளிக்கும் வாய்ப்பு அதற்கு கிடைத்துள்ளது. அதை, தங்கள் மூலதனத்தையும் அதனேடு தென் இந்தியப் பாட்டாளி மக்களின் உழைப்பையும் கொண்டுவந்து நிறைவேற்றிய பெருமை நாட்டுக்கோட்டை நகரத்தார்களைச் சேரும்.

'திரைகடலோடியும் திரவியம் தேடு' என்னும் முதுமொழிக்கிணங்க நாட்டுக்கோட்டை நகரத்தார்கள் 19-ஆம் நூற்றுண்டின் முற்பகுதியிலேயே வியாபார நிமித்தம் பாய்மரக் கப்பல்களில் பர்மாவுக்கு வந்து போயினர். ஆங்கிலேயர்கள் பர்மாவை முற்றிலும் தங்களின் ஆட்சியின்கீழ்க் கொண்டு வந்த பிறகு பர்மாவில் நிலையாக வாழவும் கீழ் பர்மாவில் உள்ள சதுப்பு நிலங்களை வேளாண்மை செய்ய மூலதனம் கொடுக்கவும் முற்பட்டனர்.

பர்மாவில் மோல்மேனில் குடியேறிய பிறகு நாளடைவில் பர்மா நாடெங்கும் சின்னஞ்சிறு ஊர்களிலும் பரவி தங்கள் கொடுக்கல் வாங்கல் தொழிலை நாட்டின் முன்னேற்றத்திற்கு உகந்த வகையில் செய்துவந்தனர். பெரும்பாலான நிலங்கள் செட்டியார்களின் மூலதனத்தின் உதவிகொண்டே வேளாண்மைக்குக் கொண்டு வரப்பெற்றது உலகம் அறிந்த விஷயம். பர்மாவின் முன்னுள் கவர்னர் சர் ஹார்கோர்ட் பட்லர் போன்ற பல பிரமுகர்கள் அதைப்பற்றி உயர்வான அபிப்பிராயங்கள் தெரிவித்துள்ளார்கள். ஒரு சமயம் அவர்களின் தொழில் பெருக்கம் 70 கோடி ரூபாய் வரை இருந்த தென மதிப்பிடப்பெற்றது.

பர்மாவில் நாட்டுக்கோட்டைச் செட்டியார்கள் சங்கம் 1923-ல் தோன்றியது. பர்மாவில் தொழில் செய்யும் எல்லா நாட்டுக்கோட்டைச் செட்டியார்களும் அதன் அங்கத்தினர்கள். ஏறத்தாழ 150 ஊர்களில் 1250 கடைகள் வரை இருந்தன.

தவிர ஸ்ரீகாசி நகரச்சத்திர மேற்பார்வையும் கல்கத்தாவிலிருந்து இரங்கூனுக்கு மாற்றப் பெற்று அதற்கென ஒரு சொசைட்டி நிறுவப் பெற்றது. அந்த சொசைட்டி 1934-ல் பதிவு செய்யப்பெற்றுள்ளது.

நகரத்தார்கள் சென்றவிடமெல்லாம் தெய்வப்பணியில் ஈடுபட்டு வந்துள்ளார்கள். தமிழ்த் தெய்வமாகிய முருகனுக்கு ஆங்காங்கே கோவில்கள் கட்டி வழிபட்டு வருகிறார்கள். பர்மாவில் சுமார் 60 நகரங்கள், தென்னிந்தியக் கலைச் சிறப்புடன் செட்டியார்கள் கட்டிய கோவில்களால் அலங்கரிக்கப்பெற்றன.

கோவில்களும் அவற்றைச் சார்ந்த நந்தவனங்களும் மடங்களும் மிகப் பெரிய அளவில் ஏற்படுத்தப்பெற்றுள்ளன. பெரிய நகரங்களை அடுத்த சிற்றூர்களில் வசித்த செட்டியார்கள் நகரங்களில் உள்ள கோவில்களில் பங்கு கொண்டு வழிபட்டு வந்தார்கள்.

இரங்கூனிலும் மோல்மேனிலும் நாட்டுக் கோட்டைச் செட்டியார்கள் கோவில்கள் தர்ம பரிபாலன சபை என்று பதிவு செய்யப் பெற்ற சொசைட்டிகள் இருந்து வருகின்றன. நகரத்தார்கள் சார்பில் கோவில் அலுவல்களை அச் சொசைட்டிகள் செய்து வருகின்றன.

பர்மாவில் நகரத்தார்களின் கோவில்கள் மடங்கள் உள்ள ஊர்களாவன :—



| | | | |
|---|---|---|---|
| 1. | இரங்கூன் | 31. | தொந்தை |
| 2. | பசுமந்தான் | 32. | போக்கலே |
| 3. | கீமந்தான் | 33. | மோல்மேன்சூன் |
| 4. | லேசூ | 34. | சைப்பி |
| 5. | மோபி | 35. | சோசான் |
| 6. | தக்கி | 36. | மூப்பின் |
| 7. | அவுக்கான் | 37. | எவுண்டம் |
| 8. | தொவுஞ்சை | 38. | மவுஞ்சவுட்டான் |
| 9. | லேப்பட்டான் | 39. | தோங்குவா |
| 10 | மீன்லா | 40. | கட்டப்பிறு |
| 11. | அவுப்போ | 41. | கய்யான் |
| 12. | சூப்பிங்கான் | 42. | டாப்பின் |
| 13. | சீக்கோன் | 43. | பக்கோ |
| 14. | நத்தலின் | 44 | தன்னப்பின் |
| 15. | பவுண்டை | 45. | சைட்டோ |
| 16. | தேக்கோன் | 46. | சைக்கோ |
| 17. | புரோம் | 47. | தத்துவம் |
| 18. | ஈஞுஞ்சான் | 48. | சுவைச்சான் |
| 19. | தயட்மியோ | 49. | மேல்மேன் |
| 20. | ஈந்தட்டா | 50. | டய்யூ |
| 21. | நத்தஞ்சான் | 51. | நவுலியப்பன் |
| 22. | பாசியன் | 52. | பென்விக்கோன் |
| 23. | மைஞுங் | 53. | பியூ |
| 24. | உவாக்கமா | 54. | டாங்கோ |
| 25. | மியாங்மியா | 55. | பின்மெஞு |
| 26. | சூமங்கை | 56. | மீஞ்சான் |
| 27. | அய்மென் | 57. | மாந்தலே |
| 28. | பியாப்பம் | 58. | மணியுவா |
| 29. | சைலா | 59. | மீன்பு |
| 30. | பேரியா | | |

## திருவிழாக்கள்

ஒவ்வோர் ஊரிலும் ஆண்டுதோறும் ஒரு திருவிழா சிறப்பாக நடைபெற்றுவருகிறது.

The Rangoon Chettiars have set aside a Lakh of Rupees for the Renovation of a neglected Temple in Rangoon. For a group which is expecting imminent withdrawal, this is a remarkable act.

—Dr. PHILIP SIEGELMAN
University of Minnesota.



அவைகளுள் தைப்பூசம், பங்குனி உத்திரம், சித்திராபௌர்ணமி முதலிய உற்சவங்கள் மிகச் சிறப்புள்ளன. பல ஊர்களில் திருவிழாவை ஒட்டி சுவாமி பவனி வருதல் நன்ருக நடைபெறுகிறது. பெரும்பாலான ஊர்களிலும் உற்சவ நாட்களில் அன்னதானம் நடத்தப் பெறுகிறது.

இரங்கூன், மோல்மேன், ஈந்தட்டா, பாசியன் முதலிய ஊர்களில் நிகழும் தைப்பூசம் பல்லாயிரக்கணக்கான மக்களைக் கவர்ந்து வந்துள்ளது. வெள்ளித்தேர்களில் சுவாமி எழுந்தருளி வந்த காட்சி மிகவும் உன்னதமானது. இரங்கூன் தைப்பூச விழாவன்று அரசாங்க அலுவலகங்களில் செட்டியார்கள் சம்பந்தப்பட்ட எல்லாக் காரியங்களுக்கும் தவணை கொடுக்கப்படும். கவர்னர் உள்ளிட்ட பல பிரமுகர்கள் சுவாமி பவனி செல்வதை வந்து கண்டுகளிப்பார்கள். தைப்பூச தினத்தன்று செலுத்தப்பெறும் காவடிகள் ஏராளமானவை. அண்மையில் சில வருடங்களாக இரங்கூன் தைப்பூச விழாவிற்கென, தமிழ்நாட்டிலிருந்து பல அறிஞர்களை வரவழைத்துச் சமய சம்பந்தமான விரிவுரைகள் நிகழ்த்த ஏற்பாடுசெய்து வருவது மிகவும் போற்றத்தக்கது.

## கோயில்களின் சொத்துக்கள்

பெரும்பாலும் எல்லா நகரக்கோவில்களுக்கும் குறிப்பிடத்தக்க அளவில் சொத்துக்கள் இருந்துவருகின்றன.

பர்மாவில் பொருளாதாரப் போக்கின் மாறுதல்கள் காரணமாக இந்தியர்களின் குறிப்பாக செட்டியார்களின் தொகை நாளடைவில் குறைந்து வருகிறது. மேலும் இரண்டாவது உலகப் போரில் ஓரளவு பாதிக்கப்பட்டதால்

நகரத்தார்களின் பொதுச் சொத்துக்கள் சீர் கேடு அடைந்துள்ளன. பல ஊர்களில் பொதுச் சொத்துக்கள் பழுதடைந்துவிட்டன. அவற்றை மீண்டும் செப்பம் செய்வதற்குத் தகுந்த அளவு நகரத்தார்கள் அந்தந்த ஊர்களில் இல்லை. குறிப்பாகச் சொன்னுல், சில ஊர்களில் செட்டியார்களின் தர்மச் சொத்துக்கள் தேடுவாரற்றுக் கிடக்கின்றன.

இந்த நிலைமாறி ஓரளவு மேற்பார்வை இருக்கக்கூடியதாக, பொது நடவடிக்கைகள் எடுக்கப்பெற்று வருகின்றன. கூடிய சீக்கிரம் அது பயனளிக்குமென எதிர்பார்க்கிருேம்.

புதுக்கோவில்

இவ்வாறு சேதமடைந்தவைகளில் இரங்கூன் நகரத்தார்களைச் சேர்ந்த பசுமந்தான் கோவில் ஒன்று. விக்கிரகங்கள் மடத்தில் வைக்கப்பெற்று, பூசைகள் நடந்து வருகின்றன. இப்போது நகரத்தார்கள் முந்தின இடத்திலேயே புதுக்கோவில் கட்டும் திருப்பணியைச் செய்துவருகிருர்கள்.

நாட்டுக்கோட்டை நகரத்தார்களின் தெய்வத் திருப்பணிகள் என்றென்றும் ஓங்கிவளர்ந்து மக்கள் பயனடையுமாறு அமைய எல்லாம் வல்ல இறைவனைப் பிரார்த்திக்கின்றேன்.



# வள்ளலார் திருவுள்ளம்



தி. அழகிய சொக்கலிங்கம், எம். ஏ., எம். லிட்.,
பல்கலைக்கழகக் கல்லூரி,
கேரளப் பல்கலைக்கழகம், திருவனந்தபுரம்.

உலகத்தார் படுந் துன்பங்களைக் கண்டு கனம் கலங்கியதனால்தான் சித்தார்த்தர் துறவு பூண்டு புத்தரானார். பொறி புலன்களை அடக்கிப் போதி மரத்தின் கீழ்த் தவமிருந்து ஞான ஒளி பெற்று, உலகம் உய்வதற்கான அருள் நெறியைக் கண்டறிந்தார். தன்னைப்போல் பிறனை மட்டும் அல்ல, பிற உயிர்களையும் போற்றி ஒழுகும் அருளறத்தைப் போதித்தார். இதனால் வையகம் அவரை,

''பாரில் உயிரையெல்லாம்—அருளால்
பாது காக்கவந் தோன்''

என வாயார வாழ்த்திற்று.

காட்டாற்று வெள்ளமல்ல வாழ்க்கை, அது காவிரியாறு. புனல் பொங்கிப் பாய்வதால் பயனில்லை. அழிவுதான் அதிகம். ஆனால், அது அணைகள் கட்டப்பட்ட காவிரியாருக் கருணையோடு நடந்துசெல்லும்போது, மக்கள் 'காவிரித்தாய்' என்று போற்றி அதன் பயனைத் துய்த்துப் பெருமகிழ்வு அடைகின்றனர். இதுபோல் மக்கள் மனம்போன போக்கில் வாழ்வதால் உலகத்திற்குக் கடுகளவும் நன்மையில்லை. மலையளவு தீமையே மிஞ்சும். 'எப்படியும்வாழலாம்' என்பது நெறியல்ல. 'இப்படித்தான் வாழ வேண்டும்' என்ற இலக்கணம் மனித வாழ்வுக்கு உண்டு. இந்த இலட்சியத்தை மக்களுக்கு உணர்த்தவே சமயங்கள் தோன்றின.

மக்கள் மார்க்கங்களின் உள்ளுறைப் பொருளை உணர்ந்துகொள்ளாமல், அவற்றின் பெயர்களிலேயே மனம் ஆழ்ந்து சமயப் பூசல்களில் இறங்கினர். தங்களது விருப்பு வெறுப்பைக் கலந்து குறுகிய சாதிப் பிணக்குகளைப் பெருக்கினர். இவற்றைக் கண்ட அடியார்களின் உள்ளம் நைந்து உருகியது. மக்களின் இந்த மனமயக்கத்தைக் கண்டித்தனர்.

''சாதி குலம் பிறப்பென்னுஞ் சுழிப்பட்டுத்
தடுமாறும்'' மக்களை,

''சாத்திரம் பல பேசுஞ் சழக்கர்காள்
கோத்திரமுங் குலமுங் கொண்டென்
செய்வீர்''

என்று மனம் வெதும்பிக் கேட்டனர்.

''ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்''

என்னும் பொதுமையைத் திருமந்திரத்தில் திருமூலர் அறிவுறுத்தினார். திருமூலருக்குப் பின் தாயுமானவர் சமரச நோக்கத்திற்குப் புத்துயிர் அளித்தார். இந்தப் பெரியோர்களின் வழிவந்த சான்றோராகிய வடலூர் வள்ளல், சமரச சன்மார்க்கத்தை நிறுவினார். எம்மதத்தினரும் ஒருங்கு சேர்ந்து வழிபடும்படிச் சத்திய ஞான சபையைக் கட்டினார். மனிதனிடத்தில் உள்ள அழுக்காறு, அவா, வெகுளி முதலியன அவனைச் சமரச ஞானி ஆக்குவதில்லை. இதனால் இராமலிங்க சுவாமிகள் அருளறத்தை வலியுறுத்தி, சாதி சமய மூடப் பழக்க வழக்கங்களைக் கடிந்துரைத்தார். அருள் கனியும் உள்ளத்தில்தான் ஆண்டவன் களிநடம் புரிவான். அவன் யாவும் கடந்தவன்; யாவர்க்கும் இனியன்.

''எச்சபை பொதுவென இயம்பினர் அறிஞர்கள்
அச்சபை இடங்கொளும் அருட்பெருஞ் சோதி''
''சாதியும் மதமுஞ் சமயமுங் காணு
ஆதி அநாதியாம் அருட்பெருஞ் சோதி''

எனப் பாடி மகிழ்கிருர் இராமலிங்க சுவாமிகள்.

''தென் ஞுடுடைய சிவனே போற்றி
எந்நாட் டவர்க்கும் இறைவா போற்றி''

என்று மாணிக்கவாசகர் சொன்னதன் உட் பொருளும் இதுவே.

இராமலிங்க சுவாமிகளும், உலெகெங்கும் சென்று ஆண்டவனின் புகழ்பாட வேண் டும் என்று இறைவனை இறைஞ்சும் வகையில்,

''அப்பா நான் வேண்டுதல்கேட் டருள்புரிதல் வேண்டும்
ஆருயிர்கட் கெல்லாம் நான் அன்புசெயல் வேண்டும்
எப்பாரும் எப்பதமும் எங்கணும்நான் சென்றே
எந்தை நின தருட்புகழை இயம்பிடல் வேண்டும்''

என்று வேண்டுகிருர்.

இது தொடங்கி எக்காலத்தும் சுத்தசன்மார்க் கத்தின் முக்கிய தடைகளாகிய சமயங்கள், மதங்கள், மார்க்கங்கள் என்பவற்றுள் ஆசார சங்கற்ப விகற்பங்களும்; வருணம், ஆசிரமம் முதலிய உலகாசார சங்கற்ப விகற்பங்களும் எங் கள் மனத்தில் பற்ருவண்ணம் அருள் செய்தல் வேண்டும். சுத்த சன்மார்க்கத்தின் முக்கிய லட்சிய ஆன்மநேய ஒருமைப்பாட்டுரிமை எங் களுக்குள் எக்காலத்தும், எவ்விடத்தும், எவ் வளவும் விலகாமல் நிறைந்து விளங்கச் செய் வித்தருளல் வேண்டும்'' என்றும் பரம்பொருளை நோக்கி விண்ணப்பம் செய்துகொள்கிருர்.

எங்கும் நிறைந்த ஆண்டவனை எந்த வடி வில், எந்த மொழியில், எந்த முறையில் வழிபட் டால்தான் என்ன? எளிய மக்கள் தங்கள் கருத்துக்கெட்டிய வகையில் ஆண்டவன் பல் வேறு உருவங்களில் இருப்பதாக எண்ணி விக் கிரக ஆராதனையில் ஈடுபடுகின்றனர். ஞானி களுக்கும் அருள் விளக்கம் பெற்றவர்களுக்கும் இது அவசியமில்லை. அவர்களுக்கு ஆண்டவன் ''ஒரு நாமம் ஒருருவம் ஒன்றுமில்லாப் பரம் பொரு''ளாக இருக்கின்ருன். இதைக் குறிப் பிடும் வகையில்தான் இராமலிங்க சுவாமிகள், ''கல்லார்க்கும் கற்றவர்க்கும் களிப்பருளும் களிப்பே'' என்று இறையைப் போற்றி வணங்கு கிருர்.

மனத் தூய்மையோடு செய்யப்படும் எந்த ஆராதனையையும் இறைவன் ஏற்று இன்புறு கிருன். இதனுல், அவன் இந்த வடிவில்தான் இருக்கிருன் என்று பேசுவது பேதைமை. எச் சமயத்தவரும் எம்மதத்தவரும் எம் மொழியின ரும் ஏற்றுக்கொள்ளும் வகையில் இறைவன் ஒளிப் பிழம்பாக, அருட்சோதியாக விளங்கு கிருன் என்றே சுவாமிகள் பாடியுள்ளார்.

விளக்கு ஏற்றப்பெற்றதும் அதைத்தொழும் வழக்கம் இன்று நமது நாட்டில் நிலவுகிறது. ''சோதியே சுடரே சூழொளி விளக்கே'' என்று மாணிக்கவாசகர் ஆண்டவனைப் புகழ்ந்துள் ளார். ''அருட் பெருஞ்சோதி தனிப்பெருங் கருணை'' என்பது இராமலிங்க சுவாமிகளின் அருள் வாக்கு. இறைவனை அருட்பெருஞ் சோதியாகக்கொள்வதால் சமயங்களையும் மதங் களையும் கடந்த சமரச சன்மார்க்கம் உருவா கிறது.

நாம் நம்முடைய ஆணவத்தை ஒழித்து ஆண்டவனிடம் முற்றுமாக நம்மை ஒப் படைத்துவிட்டால், அதன் பின்னர் அவன் நம்மை இயக்கும் பொறுப்பை ஏற்றுக்கொள் கிருன், ''அவனன்றி ஓரணுவும் அசையாத'' நிலை வந்துசேரும். அப்பொழுது பேசும் மொழி யெல்லாம் அவன் மொழியாகவும், செய்யும் செயலெல்லாம் அவன் செயலாகவும் இருக்கும். அடியார்கள் இந்தப் பரிபக்குவ நிலையை அடைந்தவர்கள். இராமலிங்க சுவாமிகள்,

''நானுரைக்கும் வார்த்தையெல்லாம் நாயகன் தன் வார்த்தை'' என்ருர்.

இந்த நிலையை அடைவதற்கு இறைவன் திருவடிகளைச் சரணடைந்து சதா சர்வ காலமும்

பற்றிக் கொண்டிருக்கவேண்டும். ஊனில் உயிரில் அவனைக் கலந்து கலந்து மனநிறைவு பெற வேண்டும். அப்போது அவன் நம்மோடு ஐக்கியமாகிவிடுவான். நெஞ்சில் நீக்கமற நிறைந்து அருள் சுரக்கும் இறைவனைக் கணமேனும் பிரிய மனம் ஒருப்படாது. அதனால்தான், "உன்னை மறக்கில் எந்தாயுயிரென் னுடம்பில் வாழுமோ" என்று உருகுகிறார் இராமலிங்க சுவாமிகள்.

தாயன்பை நாம் அறிவோம். மக்கள் மட்டும் அல்ல. விலங்குகளும் பறவைகளும் கூடத் தாயன்பில் தலைசிறந்து விளங்குகின்றன ஆகையினால் பெற்ற தாயைக் குழந்தையும், குழந்தையைப் பெற்ற தாயும் மறந்து எப்படி வாழ முடியும்? அப்படி ஒருகால் வாழ நேர்ந்தாலும் கூடத் தாம் இறைவனை மறந்து வாழ முடியாது என்கிறார் இராமலிங்க சுவாமிகள். உவமை இத்துடன் நிற்காமல் மேலும் தொடர்கிறது. உடம்பை உயிர் மறந்தாலும், அல்லது உயிரை உடல் மறந்தாலும், மனம் கற்ற கலைகளை மறந்தாலும், கண்கள் இமைப்பதை மறந்தாலும் தாம் நமச்சிவயத்தை மறவேன் என்கிறார் அடிகளார்.

இறையன்பில் தோய்ந்து இளைப்பாறும் இனிமைக்கு எதனை உவமையாகக் கூறமுடியும்! இறைவனைக் கோடையில் இளைப்பாறுவதற்குரிய குளிர்தரு என்பதா, தருவின் நிழல் என்பதா, நிழல் கனிந்த கனி என்பதா, ஓடையில் ஊறும் தண்ணீர் என்பதா, அதில் மலரும் மணமுள்ள பூ என்பதா, இளந்தென்றல் என்பதா, அது கொடுக்கும் சுகம் என்பதா, அத்தச் சுகத்தினால் விளையும் பயன் என்பதா! என்னதான் சொல்லி, மனித மொழியால் அவனைப் புகழ்வது! இத்தனை உவமைகளும் சொல்லிச்சொல்லி உள்ளம் பூரிக்கிறார் இராமலிங்க சுவாமிகள்.

"கோடையிலே யிளைப்பாற்றிக்
கொள்ளும்வகை கிடைத்த
குளிர் தருவே தருநிழலே
நிழல்கனிந்த கனியே
ஓடையிலே யூறுகின்ற
தீஞ்சுவைத்தண் ணீரே
உகந்ததண்ணீ ரிடைமலர்ந்த
சுகந்தமண மலரே
மேடையிலே வீசுகின்ற
மெல்லியபூங் காற்றே
மென்காற்றில் விளைசுகமே
சுகத்திலுறும் பயனே"

இராமலிங்க சுவாமிகள் தத்துவக் கருத்துக்களையும் எளிய சொற்களில் விளங்க வைக்கும் திறம் பெற்றவர். அவரது பாடல்கள் ஆழ்ந்த கருத்துக்கள் கொண்டவை. சமயக் கருத்துக்களை அள்ளிப் பொழியும் அடிகளின் பாக்களில் கவிதையழகும், கற்பனைச் செறிவும் தலை நிமிர்ந்து நிற்கின்றன. பாடல்கள் கற்போர் உள்ளத்தை உருக்கும் தன்மையுடையன.

சுவாமிகள் பொறிவாயில் ஐந்தவித்தவர். பத்தொன்பதாம் நூற்றுண்டில் தமிழும் சைவமும் புத்துயிர் பெறத் தோன்றிய சான்றோர். இவரது 'திருவருட்பா' செந்நெறி விளக்கும் சமரச சன்மார்க்க நூலாகத் தமிழ் இலக்கியத்தை அணி செய்து வருகிறது. இராமலிங்க அடிகள் இயற்றிய தமிழ்க் கீர்த்தனங்கள், கும்மி, கண்ணி போன்றவை இசைத் தமிழை வளம் பெறச் செய்துள்ளன. சுவாமிகள் தமிழ் உரை நடையையும் வளர்க்கத் தவறவில்லை. 'சீவ காருணிய ஒழுக்கம்', 'மனு முறை கண்ட வாசகம்' ஆகியவை இதற்கு எடுத்துக்காட்டு.

வள்ளலாரின் 'பிரபந்தத் திரட்டு' என்னும் நூலையும் திரு அருட்பா சுத்தப் பதிப்பையும் அச்சிட்டு அன்பளிப்பாக வழங்கியவர் நகரத்தாராகிய தர்மபூஷணம் தி. நா. முத்தையா செட்டியார் ஆவார்கள்.

"உலகெங்கும் எனது சுவிசேஷத்தை எடுத்துச் சொல்லுங்கள்" என்று இயேசுநாதர் தமது சீடர்களுக்குக் கட்டளையிட்டார். அந்தக் கட்டளையைச் சிரமேற்கொண்டு அவருடைய அடியார்கள் அனுபவித்த இன்னல்கள் எத்தனை! எல்லா இன்னல்களையும் அவர்கள் புன்முறுவலோடு, தியாக சிந்தையோடு தாங்கிக் கொண்டார்கள். இலவச வெளியீடுகளை வழங்கியும், பள்ளிகளைத் தொடங்கியும் மருத்துவ மனைகளை ஏற்படுத்தியும் பலவழிகளில் தொண்டாற்றி வருகின்றனர். இப்படி இராமலிங்கருக்கும் நாம் தொண்டாற்ற வேண்டும்.

வாழ்க வள்ளலார் அருள் நெறி!

வளர்க சமரச சன்மார்க்கம்!




# இந்தோனேசியாவில் நகரத்தார்களின் தெய்வத் திருப்பணி

மலாயா, பர்மா முதலிய நாடுகளுக்குச் செல்லுமுன்னரே நகரத்தார்கள் இந்தோனேசியாவிற்குச் சென்றனர் என்பது சில சான்றுகளிலிருந்து தெரியவருகிறது. வெளிநாடுகளுக்குச் சென்று வாணிப வளர்ச்சியோடு சமய வளர்ச்சியையும் பேணுவதில் நகரத்தார்கள் முன்னணியில்இருக்கின்றனர். வணிகர் குலத்தில்பிறந்த கோவலன் தந்தைக்கு மாசாத்துவான் என்பது பெயர். பெரிய வாணிபச் சாத்துக்களுக்கு (வெளிநாடு செல்லும் கூட்டங்களுக்கு)த் தலைவனுக இருந்தமையாலேயே அவனுக்கு அந்தப் பெயர் வந்தது. இந்தோனேசிய மொழியில் வியாபாரியை, 'செட்டி' என்று கூறுகின்றனர். பவளம், முத்து போன்ற தமிழ்ச் சொற்களை இந்தோனேசிய மொழி ஏற்றுக்கொண்டிருக்கிறது. பவளம், முத்து வாணிபத்தில் பல நூற்றுண்டுகளுக்குமுன் சிறந்துவிளங்கிய நகரத்தார்களுக்கு இந்தோனேசிய நாட்டுடன் நிலவிய உறவை இச் சொல் வழக்குகள் உறுதி செய்கின்றன.

இந்தோனேசியத் தீவுகளில் இரண்டாவது பெரியது சுமத்திரா என்னும் சுமத்திரையாகும். இது இயற்கைச் செல்வங்களும் வள நகர்களும் உடையது. இங்கு, தமிழ்க் கல்வெட்டுக்களும் உள்ளன.

தலைநகரம் மைதான் தில்லி என்பது. இந் நகரிலும் இதைச் சுற்றியுள்ள சிற்றூர்களிலும் நகரத்தார் சிலர் இன்னும் தொழில் புரிந்து வருகின்றனர். தஞ்சம்பாலை, கேந்தான், திப்பன்தங்கி என்பன சிற்றூர்களில் சிலவாம்.

பல்லவர்களுக்கும், சேர சோழ பாண்டியர்களுக்கும், விசயநகர மன்னர்களுக்கும் பின்னர் கோவில் கட்டுவதில் புகழ் பெற்றவர்கள் நகரத்தார்களே ஆவர். தமிழகத்தில் மட்டுமல்லாமல் தாம் செல்லும் நாடுகள் ஒவ்வொன்றிலும் நகரத்தார்கள் திருப்பணிகளைச் செய்து வந்திருக்கிறார்கள். தமிழகத்தின் சமய நெறியையும், வழிபாட்டு முறைகளையும், கட்டிடக் கலையையும், சிற்ப சித்திரங்களையும் அவர்கள் பிறநாடுகளில் பரப்பியிருக்கின்றனர். சுமத்திரைத் தீவின் தலைநகரான மைதான் தில்லியில் ஓர் அழகிய தண்டாயுதபாணி (முருகன்) கோவிலைத் தமிழ் நாட்டுப் பாணியில் அமைத்த பெருமை நகரத்தார்களைச் சாரும். அது சில தலைமுறைகளுக்கு முன் கட்டப்பட்டதாகும். அந்நாட்டில் கருங்கல் கிடையாமையால், கோவிலின் மூலப் படிமம் வெள்ளைக் கல்லால் ஆக்கப்பெற்றிருக்கிறது. விழாப் படிமம் (உற்சவர்) மட்டும் வெண்கலத்தால் அமைந்திருக்கிறது.

கோவிலில் அன்றுடம் இரண்டு காலப் பூசை நடத்தப்படுகிறது. ஆண்டுதோறும் தைப் பூச நாளில் விமரிசையாகத் திருவிழாக் கொண்டாடப் பெறுகிறது. அப்போது இறையுருவம் மரத் தேரில் ஏற்றப்பட்டு ஜலஹிந்து, ஜலமஜீது, கெசவன் என்ற நெடுஞ்சாலைகளின் வழியாக வீதி வலம் வருவது வழக்கம். மிகுதியான ஏழைகளுக்கு அன்று சோறு படைக்கப்படும். சுமத்திரையில் உள்ள சீனத்தவரும் வங்காளிகளும் இத் தண்டாயுதபாணி கோவிலுக்கு வந்து வழிபாடு செய்கின்றனர். இக் கோவில் விழா

சோமலெ

வின்போது அரசாங்க அலுவலகங்களில் வேலை செய்யும் இந்தியர் அனைவர்க்கும் விடுமுறை அளிக்கப்படுகிறது. இந்தக் கோவிலுக்கு இரண்டு வீடுகளும், சுமார் ஓர் இலட்ச ரூபாய் மதிப்புள்ள நகைகளும் இருக்கின்றன.

கோவிலின் ஆட்சி, மைதான்தில்லி வாழ் நகரத்தார்களால் செம்மையாக நடத்தப்பட்டு வருகிறது. வழிபாடுகள் யாவும் தமிழிலேயே நடந்துவருகின்றன. தமிழ்நாட்டின் முறைப்படி பண்டாரமே கோவில் பூசகராக இருந்து பூசைகளைச் செய்துவருகிறார்.



## ஜோதிர் லிங்கங்கள் 12

1 சோமநாதர்—சௌராஷ்டிரம்
2 மல்லிகார்ச்சுனம்—ஆந்திரம்
3 திரியம்பகம்—நாசிக்பஞ்சவடியருகே
4 மகாகாளர்—உஜ்ஜயினி
5 ஓங்காரம்—உஜ்ஜயினி அருகே
6 பீமசங்கரர்—பூனா அருகே
7 இராமேச்சுரம்
8 குஸ்ருணேச்சுரம்—எல்லோரா குகை அருகே
9 நாகநாதர்—சவுண்டி அருகே
10 வைத்தியநாதர்—பாட்னா அருகே
11 கேதாரேச்சுரர்—இமயத்தில்
12 விசுவேசுவரர்—காசி

## தருமம் வளர்க்கும் தனவணிகர்

நாசிக் பஞ்சவடி நற்பிர யாகை
காசி அயோத்தி கயைகல் கத்தா
தார கேசுரம் தண்கோ தாவரி
என்னும் தலங்கள் இருநான் கதனில்
சத்திரம் கட்டித் தருமம் வளர்க்கும்
நற்றன வணிகர் நலமுடன் காசி
நாதன் அருளால் நாளும்
வாழ்க! வாழ்க!! வழிவழிச் சிறந்தே!

—வித்துவான் வலம்புரி வே. அண்ணாமலை

## வழித்துணை வருவான்

காட்டையும் காடு சார்ந்த பகுதியையும் பழந்தமிழர்கள் முல்லை நிலம் என்று பிரித்தார்கள். இந்த முல்லையை அடுத்த மலைப் பகுதிகள் குறிஞ்சி நிலம் என்று பிரிக்கப் பெற்றன. குறிஞ்சி நிலத்திற்குத் தலைவனாக முருகப் பெருமானைக் கூறுகிறோம். பிற்காலத்தில் சுப்பிரமணியர் வழிபாடு பரவுவதற்கு முன்னமேயே முருகன் வழிபாடும் சிறப்பாகவேல் வழிபாடும் பழந்தமிழ் நாட்டில் விளங்கி வந்திருக்கக் காண்கிறோம். முல்லை, குறிஞ்சி ஆகிய இரு நிலங்களையும் பெற்றுள்ள செட்டிநாடுவாழ் மக்கள் முருகன் வழிபாட்டில் மிகவும் ஈடுபாடு கொண்டவர்கள். பழைய பாய்மரக் கப்பற் காலத்தில், கப்பல் ஏறும்பொழுது, 'திருத்தணி முருகன் வழித்துணை வருவான்' என்று சொல்லிச் செல்கின்ற மரபு இருந்து வந்தது. வேல் வழிபாட்டினை வாழ்க்கையின் குறிக்கோளாகக் கொண்ட நகரத்தார் பெருமக்கள் தாங்கள் சென்று வாணிகம் செய்த பகுதிகளிலெல்லாம் முருகனுக்குக் கோயில் எடுத்திருக்கிறார்கள். சிறப்பாக, இலங்கை, மலாய் நாடு பர்மா ஆகிய பகுதிகளில் முருகனுக்குத் திருக்கோயில் எடுத்து வேல் வழிபாடு செய்து வந்திருக்கிறார்கள். கடல் கடந்து சென்று வாழ்வு சிறக்க வழி தேடிய இவர்கள் வாழ்வின் குறிக்கோளாகிய வழிபாட்டை மறவாமல் போற்றினார்கள் என்பதற்குத் தமிழ் வழங்காத இப் பிற நிலங்களில் இன்றும் நிலைபெற்றிருக்கும் இத் திருக் கோயில்கள் தக்க எடுத்துக்காட்டுக்களாகும். இப்பகுதிகளில் எல்லாம் சென்று பிற மொழி பேசும் மக்களோடு பழகுகின்ற காலத்திலுங்கூட, அங்கங்கே உள்ள இத் திருக்கோயில்கள் என்னைக் கவர்ந்ததோடு, பிற செயல்களினால் இறை வழிபாட்டை மறந்திருந்த என்னை, முருகன் மறவாதிருக்கச் செய்த செயல் இன்றும் என் நெஞ்சைவிட்டு நீங்காது நிற்கின்றது. அங்ஙனம் முருகனை நினைக்குமாறு இவர்கள் செய்த திருப்பணி என்றும் வாழ்வதாக.

**அ. ச. ஞானசம்பந்தன்**
செயலாளர்,
தமிழ் வெளியீட்டுக் கழகம்,
கோட்டை, சென்னை-9.

# காசியைப் பற்றிய சைவ சித்தாந்தக் கருத்துக்கள்

மு. அருணாசலம்,
முன்னாள் சைவ சித்தாந்தப் பேராசிரியர்,
காசி இந்துப் பல்கலைக் கழகம்.

காசி க்ஷேத்திரம் இந்துக்கள் அனைவருக்கும் மிகப் புண்ணியமான ஸ்தலம். அதிலும், சைவர்களுக்கு மிகவும் சிறப்பானது. காசியில் இறக்க முத்தி என்று சொல்லுவார்கள். காசியில் இறப்பவர்களுக்கு உமாதேவியார் தோன்றி பிறவியாகிய இளைப்பு மாற, தம் மேலாடையால் மெல்ல வீசி, தாரக மந்திரத்தை உபதேசித்து முத்தியை அடையச் செய்கிறார் என்பது புராணம்.

காசி சம்பந்தமாகத் தமிழில் ஏற்பட்டுள்ள நூல்கள் அனேகம். பதினாறும் நூற்றாண்டின் மத்தியில் தென்காசியில் ஆட்சி புரிந்த அதிவீர ராம பாண்டியர் என்ற பாண்டிய மன்னர் காசி கண்டம் என்ற பெயரால் காசியின் மகிமையை 2526 விருத்தங்களால் விரிந்த புராணமாகப் பாடியிருக்கிறார். அதில் சைவ சமயத்தைக் குறித்த மிகப் பலவான கருத்துக்கள் முறையாகச் சொல்லப்பட்டுள்ளன. இது, புராணம் மாத்திரமன்றிச் சிறந்த இலக்கியமும் சமய நூலுமாகும்.

மகா வித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை 1012 செய்யுட்களையுடைய காசி ரகசியம் என்ற மற்றொரு புராண நூலும் செய்திருக்கிறார். மேலும் 17 ஆம் நூற்றாண்டில் இருந்த குமர குருபர சுவாமிகள் காசிக் கலம்பகம் என்ற சிறப்பான பிரபந்தம் பாடினார். தருமபுர ஆதீனத்துத் தலைவரான சிவஞான தேசிக சுவாமிகள், 200 ஆண்டுகளுக்கு முன், காசி ஸ்தலத்தில் எழுந்தருளியுள்ள சைவபரமான மூர்த்திகள் ஒவ்வொருவருக்கும், எளிய நடையில் அமைந்த, சிறப்பான கருத்துக்கள் பொதிந்த திருவருட்பா பாடியிருக்கிறார்.

நெடுந்தூரத்தில், ஒரு காலத்தில் போவதற்கு எவ்வித வசதியுமில்லாது அயல் மொழியும், தமிழருக்குப் புறம்பான ஆசாரமும் வழங்கிய காசியினிடத்து, தமிழ்மக்களுக்கு இவ்வளவு ஈடுபாடு ஏன்? என்ற கேள்வி எழலாம். அப்பர் சுவாமிகள் தேவாரத்துள் காசி க்ஷேத்திரம் வாரணாசி என்ற பெயரால் ஒரு வைப்பு ஸ்தலமாக அமைக்கப்பட்டுள்ளது. "மண்ணிப் படிக்கரை வாழ்கொளி புத்தூர் - வக்கரை மந்தாரம் வாரணாசி" என்பது க்ஷேத்திரக் கோவைத் திருத்தாண்டவம் ஆறும் பாடல். வருணை—அசி என்ற இரண்டு உபநதிகளுக்கு மிடையில் கங்கைக் கரையில் அமைந்து உள்ள காரணத்தால் இந்த ஸ்தலத்திற்கு "வாரணாசி" என்ற பெயர் வந்தது.

காசியில் சிவபெருமான் திருநாமம் விசுவநாதர் என்பது. உலகையும் கடந்த பிரபஞ்சம் அனைத்தையும், உள்ளடக்கி விசுவம் என்று சொல்கிறோம், இவ்விசுவசத்திற்குத் தலைவனாகிய ஆண்டவனை விசுவநாதன், அகிலேசன் என்று பெயர் சொல்வது பொருத்தமே.

தமிழ் நாட்டில் ஊர்கள் தோறும் சிறப்பான சிவாலயங்கள் அமைந்துள்ளன. ஆங்காங்கு, பட்டணம் முதல் பட்டிக்காடு வரை, வாழ்கின்ற மக்களுக்குத் தாங்கள் இருக்கும் இடத்திலே இறை யுணர்வும் மன அமைதியும் கைகூடுவதற்காக இவ்வாலயங்கள் நெடுங்காலமாக ஏற்பட்

டுள்ளன. நம் சமய ஆசாரியர்கள் பாசுரங்களைத் திருவாய் மலர்ந்தருளிய காரணத்தால், பல தலங்களுக்கு மகிமை பின்னும் பெருகலாயிற்று. இத்தகைய ஆலயங்கள் அனைத்திலும் சிறிய அளவிலோ, பெரிய அளவிலோ, காசி விசுவநாதர் கோயில் என்று தனியான ஓர் சிறிய கோயில் அமைக்கப்பட்டுள்ளது. இதற்கும் உள்ளூர் ஆலயத்தில் பற்றுக் கொள்வதற்கும் முரண் இல்லை. நம் ஆலயத்தில், மகாலிங்க மூர்த்தமாக எழுந்தருளியிருக்கின்ற பரம்பொருளே, விசுவம் அனைத்திற்கும் நாதனாக விளங்குபவன், அவனே காசியில் எழுந்தருளியுள்ள விசுவநாதன் என்று இந்த அமைப்பு நமக்குச் சுட்டிக் காட்டுகிறது. இது ஆசேது ஹிமாசலம் வரையில் உள்ள நாடு முழுமையும், ஹிந்து மக்கள் அனைவரையும் ஒற்றுமைப்படுத்துகின்ற திட்டம் மாத்திரமன்றி, பல நாம ரூபங்களால் நாம் ஆண்டவனை வழங்கினாலும் அவன் ஒருவன் என்ற ஒருமை உணர்ச்சியையும் ஊட்டுகின்ற பெருஞ்சாதனமாகும்.

சைவ சித்தாந்த சமயத்தின் தத்துவத்தைச் சுருக்கிப் பின்வருமாறு கூறலாம். ஆண்டவன் ஒருவன். உயிர்கள் பல. உயிர்களைப் பந்தித்து நிற்கின்ற பாசங்கள் மூன்று. அவரவர் வினைக்கு ஈடாகத் தனு கரண புவன போகங்களை ஆண்டவன் கூட்டுவிக்கின்றான். உயிர்கள் பாசத் தொடர்பால் பிறவி எடுத்து வினையில் உழன்று முடிவில் இருவினைகள் தம்முள் நேராக, தம்மைப் பற்றிய பாசங்கள் பக்குவப்பட்டு, திருவருளின் வசத்தில் நின்று விடுதலை பெறுகின்றன. இந்த விடுதலையை நோக்கியே அறிவு படைத்த உயிர்கள் யாவும் புத்திபூர்வாக முயல வேண்டும். முயலுவதற்கு வழிகள் பல. ஆசாரியனையும், அடியவரையும், திருக்கோயிலையும் வழிபடுவது ஆண்டவனை வழி படுவதேயாகும். சுருக்கமாக இவையே சைவ சமயத் தத்துவமாகும். இக் கருத்தில் பல அம்சங்கள் காசி என்ற தத்துவத்தோடு இணைந்திருப்பதைக் காணலாம்.

காசியில் இறக்கும் பேறு பெறுவது சிறப்பு. காசி க்ஷேத்திரத்தை - ''மகாஸ்மசானம்'' என்று சாத்திரம் கூறும். அதாவது, இங்கு உயிரைப் பற்றிய பாசங்கள் யாவும் நீறுகின்றன என்பது கருத்து. பாசங்கள், உயிரானது உடையவனைக் காணாதபடி மறைக்கின்றன, பந்திக்கின்றன. பாசங்கள் நீறுகவே, இந்த மறைப்பு விலகி பந்தமும் அறுகிறது. பந்தமற்று விடுதலை கை கூடுகிறது. ஆன்மா ஆண்டவனோடு இரண்டற்ற நிலை எய்துகிறான். இந்தப் பேருண்மையைத்தான் 'மகாஸ்மசானம்' என்ற பெயர் குறிக்கிறது. சாமானிய மயானம் உடலைச் சுடுகின்றது. இந்த மகா மயானம் உயிரைப்பற்றிய பாசங்களைச் சுட்டுப் பொசுக்கி விடுகிறது; பாச வீடு பெற்ற ஆன்மா முத்தி எய்துகிறான்.

காசியின் மற்றொரு பெயர் ஆனந்தவனம் என்பது. இப்பெயர் மிகச் சிறந்த உபநிடதக் கருத்தை உள்ளடக்கியது. ''யதோ வாசோ நிவர் தந்தே - அப்ராப் மனஸா ஸஹ ஆனந்தம் ப்ரும்மணோ வித்வான்'' என்பது தைத்திரீய உபநிடத வாக்கியம். இதன் பொருளாவது, ''எந்த இடத்தில் மேலும் அப்பால் செல்ல முடியாமல் வாக்கானது மனத்தோடு கூடத் திரும்புகின்றதோ, அதுவே ஆனந்தம், ப்ரும்ம நிலை என்று ஞானி உணர்கிறான்.''

''வாக்கு மனமிறந்தவான் கருணையாளன் உருத்தாக் கறவே நிற்கும் தனி முதல்வா,'' என்பது உண்மை விளக்கம். ''மாற்றம் மனங்கழிய நின்ற மறையோனே'' என்பது திருவாசகம். மாற்றமும் மனமும் கழிய நின்ற இடம் ஆனந்த நிலை. இந்த இடமே ஆனந்தவனமாகிய காசி என்பது மிகவும் உண்மையான கருத்து.

காசியில் இறப்போருக்கு உமாதேவியார் தோன்றி இளைப்பை மாற்றி முத்தியருளுகிறாள் என்பது ஐதிகம். இது சைவ சித்தாந்தக் கருத்து. அழிப்பு என்பதே இளைப்பாற்றல்தான் : நாசம் அன்று என்பது சிவஞான சித்தியார்; எனவே காசியில் இறக்கும் நல்லூழ் பெற்ற ஆன்மாவுக்கு இறைவனுடைய திருவருள்பதிவு (சத்தி நி பாதம்) ஏற்பட்டது பொருளாகும். அருளை உமாதேவி என்று சொல்வது சைவபரிபாஷை, இக்கருத்தையே, கேனோபநிஷதமும் கூறும்.

தேவர்களெல்லாம், யாம் பெரியம், யாம் பெரியம் என்று சண்டையிட்டு இருக்கும் நிலையில், அவர்களுக்கு இடையில் ஒரு பெரிய ஜோதி தோன்ற, ''அந்த ஜோதியாகிய தேவன் யார்?'' என்று அக்கினியும்

வாயுவும், அறிய முடியாது வெட்கித் திரும்பிய போது, இந்திரன் எதிரே உமாதேவியார் தோன்றினர் என்று உபநிடதம் சொல்கிறது. ''ஸ்தஸ் மின்னேவ ஆகாசே ஸ்திரியம் ஆஜ காமபஹூ, சோப மானும், உமாம் ஹைமவதீம்'' இங்கெல்லாம் உமை என்று சொல்லும் போது சைவ சித்தாந்தம் கூறுகின்ற ஆண்டவனுடைய பெருங் கருணை என்ற திருவருளே யாகும்.

மேலும் காசியில் ஆண்டவனுடைய சக்தியில் சிறப்பான மூர்த்தமாய் இருப்பது அன்ன பூர்ணு தேவி. விசுவ நாதருக்குரிய தேவியின் பெயர் விசாலாட்சி; தமிழில் பெருந்தடங் கண்ணம்மை எனினும், காசியில் முதன்மை இருப்பது அன்ன பூரணிக்கே. ''எத்திறம் நின்றுன் ஈசன் அத்திறம் அவளும் நிற்பள் என்று சிவஞான சிததியார் கூறுவது போல, உமா தேவியார் அன்னபூரணி வடிவத்தில் உயிர்களுக்கெல்லாம் பக்குவத்துக்கு ஏற்ற விதமாக தனுகரண புவன போகங்களைத் தந்து வினையை அனுபவித்துக் கழிக்கின்ற செயலைச் செய்கின்றார்.

சுத்த அத்வைத நிருபணம் செய்த மகான் சங்கரர் ''உலகில் உள்ள பொருள் ஒன்றே; அது தானே பல்வேறு வடிவங்களாக தோற்றம் அளிக்கிறது. தோற்றமளிப்பதற்குக் காரணம் மாயை. மாயை நீங்குகின்ற காலத்தில் பல வாய்த்தோன்றுகின்ற ப்ரும்மம் ஒன்றுகின்றது'; என்று அவர் ஸ்தாபிதம் செய்தார். அவருடைய சரித்திரத்தையும், நூல்களையும், நாம் தெளிவாக ஆராய்ந்து பார்த்தால் இந்த அத்வைத நிருபணம் அவர் மனத்துக்குச் சாந்தி அளிக்க வில்லை என்பதை உணரலாம். தம்முடைய கடைசி நாட்களில் நிர்க்குண உபாசனையை விட்டு நீங்கி, சகுண வழிபாடு தான் ஆத்ம சாந்தி அளிக்க வல்லது எனக்கண்டு, விசுவநாதர், விசாலாட்சி, அன்னபூரணி, தட்சணமூர்த்தி போன்ற தெய்வங்களைத் துதித்து எண்ணற்ற சுவை நிறைந்த அருட்பாசுரங்களை அவர் பாடினர். இந்த நிலையை நாம் நன்கு ஆராய்தல் வேண்டும். மனச்சாந்தி என்பது அத்வைத நிருபண நிலையைக் கடந்தது. காசியில் சங்கரர் கடைப் பிடித்த நிலையே சைவ சித்தாந்தத்தில் சோபான முறையாக அமைந்து இருக்கிறது.

சாஸ்திரங்களின் இறுதிப்பகுதியில் ஆசாரியனையும் சிவனடியார்களையும், சிவலிங்கத்தையும் சிவனெனவே வழிபடுக என்பது கட்டளை. இதன் விளக்கமாகவே முந்தையோரான சமயாசாரியர்கள், நாயன்மார்களுடைய வாழ்க்கை அமைந்திருக்கிறது. இவ்வகையில் பார்த்தால் சங்கரர் தம்முடைய ஆத்ம சாந்திக்கு உபாசனைத்தலமாகக் கொண்ட காசிஸ்தலத்தைச் சைவம் தனக்கு உபாசனைத்தலமாகக் கொண்டிருப்பதோடு அன்றி, குமர குருபர சுவாமிகள் கூறிய மாதிரியாக,

காணுங் காணும் நதிகளெல்லாம் புனற்
கங்கையே அங்குள தெய்வம் யாவையும்
தாணு எங்கள் அகிலேசரே மற்றைத்
தலங்கள் யாவும் தடமதிற் காசியே

என்றவாறு அவரவர் ஆங்காங்கு கங்கையும், விசுவநாதரும், காசியும் தரிசிக்கும் வழியும் செய்திருக்கிறது. காசி கன்னியாகுமரி என்று பழமொழி கூறும். இரண்டும் ஒன்றே எனக் காசியில் சைவ முரசொலித்து சைவப் பேரரசு செலுத்தியவர் குமரகுருபர சுவாமிகள். சிறந்த சைவ சித்தாந்தத்தின் விளக்காக இருந்தசுவாமிகளின் திருவுள்ளத்தின் வழி அவர் பராமரிப்பில் வந்த காசிக் கேதாரர் ஆலயம் தென்னாட்டுச் சிவாகம முறைப்படி அமைந்து பூசிக்கப் பெற்று வருவது இன்றும் காணத்தக்க காட்சி.

முடிவாக சங்கரர் பாடியருளிய காசி பஞ்சகத்தின் ஐந்தாம் பாடல் இங்கு குறிப்பிடத் தக்கது!

காசி க்ஷேத்ரம் சரீரம்
த்ரி புவன ஜனனீ
வ்யா பினீ ஜ்ஞான கங்கா
பக்தி ச்ரத்தா கயே யம்
நிஜ குரு சரண
த்யான யோக: ப்ரயாகர்!
விச்வசோயம் துரீயம்
சகல ஜன மனஸ்
ஸாக்ஷி பூதோ அந்தராத்மா''
தேஹே அர்வம் மதீயே யதி வஸதி

புனஸ் தீர்த்தம் அன்யத் கிம் அஸ்தி''

"இந்தச் சரீரமே காசி க்ஷேத்திரம். இதில் அமைந்துள்ள ஞானமே மூன்று புவனங்களை யும் உற்பத்தி செய்வதாயும், சர்வ வியாபினி யாயும் உள்ள கங்கை. பக்தி சிரத்தையே கயை. மெய்யான ஆசாரியனுடைய திருவடி தியானத் திலே மனத்தை ஒன்றுபடச் செய்வதே யோகம். துரிய நிலையே சகல ஜனங்களின் மனத்திலும் சாட்சி பூதனாய், அந்தராத்மாவாய் இருக்கின்ற விசுவேசன். இவ்வாறு என்னு டைய சரீரத்திலே அனைவரும் குடிகொண்டிருக் கின்ற நிலையில் வேறு தீர்த்தம் ஏது உளது?'' என்று சங்கரர் கேட்கின்றார். இந்தப் பாவனை ஜீவன் முத்தருக்கே கைவரக்கூடிய பாவனை. இது கைவருவதற்கே சரியை, கிரியை, யோக, ஞான மார்க்கமாகிய சைவ மார்க்கங்கள் குறிப் பிட்ட ஒருவருக்கோ ஒருவகுப்பாருக்கோ, உரிய வராக இல்லாமல் அனைவருக்கும் உரியவராக கட்டித் தழுவவும், நீராட்டவும், பால் சொரிய வும், நிவேதிக்கவும், மலரால் அர்ச்சிக்கவும் உரியவராய் விசுவேசர் இருப்பது எவ்விதப் பாகுபாடுமின்றி எல்லா இந்திய மக்களையும் இந்த நிலைக்குத் தூண்டிச் செலுத்துவதற் காகவே. இது சைவ சித்தாந்தத்துக்கு முழு மையும் உடன் பாடான சமரச நிலையேயாகும்.

ஆனந்த வல்லியுடன்
ஆனந்தக் கானகத்தே
ஆனந்தக் கூத்தாடு
அருட் கடலை-ஆனந்தம்
கொள்ளத் திளைத்தாடுங்
கூடாதேல் இப் பிறவி
வெள்ளத் திளைத்தாடு வீர்.

❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋

## இனிய கொடைத் தனவணிகர் என்றும் வாழ்க!

முருகனைத்தம் வாழ்விலென்றும் மறவா நெஞ்சும்
முறையாகச் சிவன்பணியும் சைவத் தொண்டும்
அருள்தவமும் ஆலயமும் மலரின் காவும்
அன்னமிடுஞ் சத்திரமும் மடமும் நல்ல
அறிவினொளி பெருகுமுயர் கல்விக் கோயில்
அதனருகே பலகலைகள் ஆயும் கூடம்
மருத்துவங்கள் பெற்றுய்ய வைத்ய சாலை
மக்களெலாம் பயனடையும் வளமார் சாலை

நல்லடியார் தமிழ்வளர்க்கும் பன்னூல் மன்றம்
நான்மறைகள் ஓதஎழிற் பாட சாலை
பல்லுயிரும் குடிக்கநல்ல நீர்த்த டாகம்
பற்பலவாம் அறம் வளர்த்த செட்டி யார்கள்
வல்லவராம் இறைபணியத் தோற்று வித்த
வளர்காசிச் சத்திரத்தின் நூறும் ஆண்(டு)இங்(கு)
எல்லவரும் போற்றநிறை வெய்தி வாழ்க!
இனிய கொடைத் தனவணிகர் என்றும் வாழ்க!

—அ. முருகப்ப செட்டியார் (மாநகரி)
மானேஜர், இரங்கூன் நகர விடுதி, சென்னை

❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋

# நகரத்தார் புள்ளிவிவரம்

1963-ல்இவ்விவரங்கள் வெவ்வேறு மாதங்களில் சேகரித்தவை. சில ஊர்களில் அரைப் புள்ளிகள் முழுப்புள்ளிகளாகக் கணக்கிடப் பெற்றிருக்கின்றன. சில ஊர்களில் அரைக் கால் புள்ளி என்ற கணக்கு நிலவுகிறது.

ஏறத்தாழ நமது எண்ணிக்கையை அறிந்து கொள்ள உதவியாக இருக்கும் என்ற எண்ணத்துடன் இப்பட்டியல் வெளியிடப் பெறுகிறது. புள்ளிக் கணக்கை ஒழுங்காக வைத்துக்கொள்ள நகரத்தார்கள் அனைவரும் முயலுவது நன்று. —'சோமலெ'

| | | |
|---|---|---|
| 1 | அமராவதி புதூர் | 31 |
| 2 | அரண்மனைச் சிறுவயல் | 102 |
| 3 | அரிமளம் | 397 |
| 4 | அரியக்குடி | 89 |
| 5 | அலவாக்கோட்டை | 147 |
| 6 | அழகாபுரி கண்டனூர் கொல்லங்குடி அழகாபுரி | 65 |
| 7 | அழகாபுரி நாட்டரசன் கோட்டை | 38 |
| 8 | ஆத்தன்குடி | 291 |
| 9 | ஆத்திக்காடு தெக்கூர் | 200 |
| 10 | ஆவினிப்பட்டி | 114 |
| 11 | உ. சிறுவயல் | 262 |
| 12 | உலகன்பட்டி | 93 |
| 13 | ஒக்கூர் | 74 |
| 14 | கடியாபட்டி இராமச்சந்திரபுரம் | 347 |
| 15 | கண்டமாணிக்கம் | 217 |
| 16 | கண்டவராயன் பட்டி | 324 |
| 17 | கண்டனூர் | 400 |
| 18 | கருங்குளம் | 37 |
| 19 | கல்லல் | 268 |
| 20 | கல்லுப்பட்டி | 109 |
| 21 | காரைக்குடி | 1650 |
| 22 | கானையார் மங்கலம் | 74 |
| 23 | கானாடு காத்தான் | 240 |
| 24 | கீழச் சிவற்பட்டி பில்லமங்கலம் அழகாபுரி | 543 |
| 25 | குருவிக்கொண்டான்பட்டி | 143 |
| 26 | கூழிபிறை | 363 |
| 27 | கொற்ற மங்கலம் | 165 |
| 28 | கொப்பனாபட்டி | 160 |
| 29 | கோட்டையூர் | 345 |
| 30 | கோனாபட்டு | 304 |
| 31 | சக்கந்தி | 20 |
| 32 | சண்முகநாதபுரம் என்ற ஆராவயல் | 212 |
| 33 | சிராவயல் | 59 |
| 34 | சிறுகூடற்பட்டி | 160 |
| 35 | செம்பொன்னூர் | 26 |
| 36 | செயங்கொண்டபுரம் என்ற செக்காலை காரைக்குடியிற் சேர்த்துக் கணக்கிடப்பட்டது. | |
| 37 | செவ்வூர் | 105 |
| 38 | சொக்கநாதபுரம் | 116 |
| 39 | சொக்கலிங்கபுரம் என்ற மதகுபட்டி | 91 |
| 40 | சொக்கலிங்கம்புதூர் என்ற சொக்கனேந்தல் | 89 |
| 41 | சோழபுரம் | 15 |
| 42 | சொர்ணநாதபுரம் என்ற தாணிச்சாவூருணி | 27 |
| 43 | தேவகோட்டை | 1746 |
| 44 | தேனிபட்டி | 60 |
| 45 | நடராசபுரம் | 65 |
| 46 | நற்சாந்துபட்டி | 345 |
| 47 | நாச்சியாபுரம் | 152 |
| 48 | நாட்டரசன்கோட்டை | 465 |
| 49 | நெற்குப்பை | 298 |
| 50 | நேமுத்துப்பட்டி | 150 |
| 51 | பட்டமங்கலம் | 66 |
| 52 | பலவான்குடி | 115 |
| 53 | பள்ளத்தூர் | 600 |
| 54 | பறியாமருந்துபட்டி | |
| 55 | பனங்குடி (இவ்வூரிலிருந்தவர்கள் வேந்தன்பட்டிக்கும் நெற்குப்பைக்கும் குடியேறி விட்டனர்) | 13 |
| 56 | பனையப்பட்டி | 125 |
| 57 | பாகனேரி | 243 |
| 58 | பிள்ளையார்பட்டி | 4 |
| 59 | புதுப்பட்டி (பொன்னமராவதி) | 219 |
| 60 | புதுவயல் | 355 |
| 61 | பூங்குடி என்னும் கீழப்பூங்குடி | 76 |
| 62 | பூலாங்குறிச்சி | 165 |
| 63 | பொன்னமராவதி | 1 |
| 64 | மகிபாலன்பட்டி | 82 |
| 65 | மாநகரி | 48 |
| 66 | மிதிலைப்பட்டி | 133 |
| 67 | ஆ. முத்துப்பட்டினம் | 122 |
| 68 | மேலைச்சிவபுரி | 218 |
| 69 | ராங்கியம் | 170 |
| 70 | ராயவரம் | 379 |
| 71 | கொற்றமங்கலம் லட்சுமிபுரம் | 65 |
| 72 | நெய்க்கோணம் (வி.லெட்சுமிபுரம்) | 82 |
| 73 | வலையபட்டி | 658 |
| 74 | விராமதி | 70 |
| 75 | விரையாச்சிலை | 140 |
| 76 | வெற்றியூர் | 65 |
| 77 | வேகுப்பட்டி | 195 |
| 78 | வேந்தன்பட்டி | 350 |
| | | 16552 |

# அழகுக்கிட்ட சட்டை (சித்தாந்த விளக்கம்)

எம். எஸ்பி. சண்முகம், எம். ஏ.,
இந்திய விவசாய ஆராய்ச்சிக் கழகம், புதுடில்லி.

பெண்கள் கச்சு அணியும் பழக்கம் பண்டைக்காலந்தொட்டு இருந்து வருகிறது. மார் பகங்களை அழகுற மறைக்க அணிந்த கச்சு இன்று ரவிக்கை என்ற ரூபத்திலும் பெயரிலும் மாறி வளர்ந்திருக்கிறது. ரவிக்கையில் எத்தனையோ விதம் உண்டு. சோழிக்கை, மல்லிகை மொட்டு, நர்கீஸ் கழுத்து, பாலும் பழமும், நாமிருவர் முதுகு என்றெல்லாம் பற்பல பெயர்களிலும் வண்ணங்களிலும் ரவிக்கைகள் நடமாடுகின்றன. இளம்பெண்களைக் கேட்டால் பெல்ட் இணைத்தது, பின்பட்டன் வைத்தது, கண்ணுடிக் கழுத்து, அரைக்கஜம் பாடி என்று பற்பல புது மோஸ்தர்களைச் சொல்வார்கள்.

உயிர் அநாதியானது. அதாவது தோற்றமும் முடிவும் இல்லாமல் என்றும் இயல்பாக நிலைத்து இருப்பது. இறைவனும் அப்படித்தான். தோற்றமும் முடிவும் இல்லாதவன். இறைவனோடு உயிர் வந்து ஒன்றுவதற்குமுன் வினையைத் துய்ப்பதற்காக அது உடலோடு கூடிப் பிறவியெடுக்கிறது. அந்த உடற்சட்டையோடு கூடிய பிறவியகன்றால்தான் மீண்டும் அது இறையுடன் கலந்து இறையின்பம் அனுபவிக்க முடியும்.

''பிறவியகன்றால்தான் இறையின்பம் அனுபவிக்க முடியும்''. எப்படி? எதுபோல?. அழகுக்காகப் பெண்கள் ரவிக்கை அணிகிறார்கள். இந்த ரவிக்கை தரும் அழகில் ஆடவர்கள் சொக்கிப் போகிறார்கள். ஆனால் அப்பெண்களுடன் ஆடவர்கள் உடலின்பம் துய்க்க விரும்பும்போது அந்தச் சட்டை (கச்சு) அங்கு உதவாது. தலைவன் தலைவியர் கூட்டத்தின் போது அது அகற்றப்பட வேண்டும். எப்படித் தலைவியைக் கண்டு தலைவன் கவர்ச்சியுறுவதற்குக் காரணமாய் நின்ற ரவிக்கை உடலின்பம் துய்க்கும்போது அகற்றப்படவேண்டியிருக்கிறதோ அவ்வாறே இறைவனுடன் இரண்டறக் கலக்கும் நிலை உயிருக்கு வரும்போது அது பிறவியாகிய உடற்சட்டையை அகற்றியாக வேண்டும். வினை கழிக்க எடுத்த உடலை உயிரானது விட்டகன்ற பின்பே இறையின்பம் அனுபவிக்க முடியும். இதனாலேயே பிறவியை ஒழித்து அடியிணையிற் சேர்க்க வேண்டுமென அடியார்களெல்லாம் மனமுருகி வேண்டினர்.

அநாதியான உயிர் இறைவனுடன் இரண்டறக் கலக்க விரும்புகிறது. அதற்கு வினை ஒரு இடையூறு. அந்த வினையை அனுபவித்து மாய்க்கும் பொருட்டு உயிரானது உடற் சட்டைக்குள் நுழைகிறது.

உயிர் இறைவனைச் சேரத் துடிப்பது போலத் தலைவி தலைவனை நாடுகிறாள். அவளுடைய அங்க அழகைச் சிறப்பாகக் காட்டித் தலைவனைக் கவர்ந்து உறவுக்கு உதவிய சட்டை அனுபவத்திற்கு உதவுவதில்லை.

சட்டை நீங்கப்பெற்ற பின்பே அனுபவம் சித்திப்பதுபோல் உடற்சட்டை நீங்கியபின்பே உயிரானது இறையுடன் இரண்டறக் கலந்து இன்பம் அனுபவிக்கிறது. அவ்வளவுதான். இனி ரவிக்கையைக் காணும் பொழுதெல்லாம் இக்கொள்கையும் நினைவில் வருமா?

# இலங்கையில் நகரத்தார்களின் தெய்வத் திருப்பணி

தொகுப்பு: கொழும்பு, செட்டியார் சேம்பர் ஆப் காமர்ஸ்

அழகு கொழிக்கும் இலங்கைத் தீவில், நாட்டுக்கோட்டை நகர தனவணிக மரபினர் முதன்முதலாக கி. பி. 1820-ல் பல வாணிபங்கள் செய்ய முன்வந்தனர். அந்நாளில் இவர்கள் அரிசி வியாபாரத்தையே முக்கியமாகக் கருதிச் செய்து வந்துள்ளார்கள்.

நகரத்தார் எங்குச் சென்றுலும் தாங்கள் சிறப்பாக வழிபடும் கதிர்வேலாயுதக் கடவுளுக்கு ஆலயம் அமைப்பது வழக்கம். அதற்கிணங்க, கொழும்பு மாநகரிலும் இலங்கையில் வேறுபல நகர்களிலும் சிற்றூர்களிலும் நம் சமூகத்தினர் இடையருது வழிபடும் முழுமுதற் கடவுளாகிய முருகப் பெருமானுகிய கதிர்வேலாயுதசுவாமிக்கு ஆலயங்களமைத்து வழிபட்டு வருகின்றனர். கொழும்பு செட்டியார் தெருவில் பழைய கதிர்வேலாயுத சுவாமி கோவிலும், புதிய கதிர்வேலாயுத சுவாமி கோயிலும் நகரத்தார்களால் கட்டப்பெற்று இன்றும் திரு ஒளித் தோற்றத்துடன் விளங்குகின்றன.

இவ்வாறு கதிர்வேலாயுதக் கடவுளுக்கு ஆலயங்கள் அமைத்து வழிபட்டுவந்த நகரத்தார், கதிர்காமத் தலத்தின் பெருமையை உணர்ந்தனர். ஒவ்வோர் ஆண்டும் ஆடிப் பௌர்ணமிக்கு நம்மவர்களில் ஒருவர் வேலெடுத்துச் செல்லுவதுவழக்கம். ஆடிப்பௌர்ணமிக்கு இரண்டு வாரம் முன்னதாகவே, இந்த வேல் யாத்திரை துவங்கிவிடும். இன்னிசைப் பல்லியங்கள் முழங்கக் கட்டியங் கூறிக்கொண்டு சிவநேயச் செல்வர்கள் புடைசூழ, கால்நடையாகவே புறப்படும் இந்த யாத்திரையில், காவடியெடுப்போரும் காணிக்கை செலுத்துவோரும் கலந்திருப்பர். கால் நடையாகவே புறப்படும் இந்தயாத்திரை முழு நிலா நாளன்று கதிர்காமத் தலத்தை அடையும். கதிர்காமத்தில் கோவில் கொண்டெழுந்தருளியிருக்கும் ஐயன் திருமுன்னர்த் தங்கள் திருவேல்களையும், காவடிகளையும், காணிக்கைகளையும் செலுத்திப் பின் கொழும்புக்குத் திரும்புவர். இந்தப் புனித யாத்திரை நிறைவெய்த ஒருமாத காலம் ஆகும்.

உலகப் போக்கிலும் கால வேகத்திலும் ஏற்பட்டுள்ள மாறுதல்கள் காரணமாக ஒவ்வோர் ஆண்டும் கதிர்காமம் போய்வருவது எளிதில் இயலாததாய் உணர்ந்த பழைய கதிர்வேலாயுத சுவாமி கோயில் நகரத்தார்கள், கொழும்பையடுத்த பம்பலப்பிட்டி என்ற சுற்றுப் புறப்பகுதியில் ஓர் இடம் வாங்கினர். அங்கு ஓர் ஆலயம் அமைத்து அதற்கு உபய கதிர்காமம் எனப் பெயரிட்டு அழைக்கலாயினர். இது போலவே புதுக்கதிர் வேலாயுத சுவாமி கோயில் நகரத்தார்களும் வெள்ளவத்தையில் ஓர் இடம் வாங்கி ஆலயம் அமைத்தனர். அவர்களும் தங்கள் கோயிலே உபய கதிர்காமம் என்ற பெயரால் வழங்கினர்.

தொடக்கத்தில் கொழும்புவிலிருந்து கதிர்காமத் தலத்திற்கு ஆடிநிறைமதிக்கு வேல் யாத்திரை சென்றதுபோல் இப்புதிய ஆலயங்கள் அமைந்த பின், பழைய கதிர் வேலாயுத சுவாமி பம்பலப்பிட்டி உபய கதிர்காமத்திற்கும், புதுக் கதிர் வேலாயுதசாமி, வெள்ளவத்தை

உபய கதிர்காமத்திற்கும் யாத்திரை சென்று வருவது வழக்கமாக இருந்து வருகிறது. ஆனல், பழைய புதிய இரு கதிர்வேலாயுத சுவாமிகளும் ஓர் ஆண்டிலேயே இந்த யாத்திரையை மேற்கொள்ளுவதில்லை. ஒவ்வோராண்டும் மாறி மாறி இரு கதிர் வேலாயுத சுவாமிகளும் இந்த வேல் யாத்திரையை மேற்கொண்டிருக்கிருர்கள்.

பழைய புதிய கதிர்வேலாயுத சுவாமிகள் முறைவைத்துக் கொண்டு மேற்கொள்ளும் இந்த விழா, வேல் விழா என்ற பெயரில் இலங்கையின் தேசியத் திருவிழாவாக நடைபெறுகிறது. இந்த வேல் விழாவை ஒரு களியாட்டம் என்றே கூறவேண்டும். ஒருமுறை வேல்விழாவைக் கண்டவர்கள், அந்தத் திருக்காட்சியைத் தங்கள் வாழ்வில் என்றும் மறக்க முடியாது. இலங்கையில் இதைவிடச் சிறந்த திருவிழா வேறென்றுமில்லை. நகரத்தார் பெண் மக்கள் பலர் இவ்விழாவைக் காண இலங்கைக்கு வருவது வழக்கம்.

ஆடிப் பௌர்ணமி நாளன்று எந்தக் கோயிலில் அந்த ஆண்டு விழா நடக்க இருக்கிறதோ அந்தக் கோவிலில் அன்பர்கள் வெள்ளம் போல் கூடுவர். அன்று நடக்கும் மகேசுவர பூசையும் அன்னதானமும் மிகச் சிறப்பாக இருக்கும். அதிகாலையில் செட்டியார் தெருவில் இன்னிசை முழங்கும். அதே சமயம் கதிர் வேலாயுதக் கடவுள் வெள்ளி இரதத்தில் எழுந்தருளுவார். நகர்ப்புறத்தின் முக்கிய வீதிகள் வழியாகத் திருவுலாச் சென்று அன்று மாலையே உபய கதிர்காமமாகிய பம்பலப்பிட்டி அல்லது வெள்ளவத்தையை அடைவார். மூன்று நாட்கள் உபய கதிர்காமத்தில் தங்கியிருந்து, பல்லாயிரக் கணக்கான பக்தர்களுக்குத் திருக்காட்சியளிப்பார். ஈசன் திருக்கோலங் கண்டு எண்ணம் நிறைவுற்ற அன்பர்கள் வயிறும் நிறைந்து அகங்களிப்பர்.

நான்காம் நாள் மாலை உபய கதிர்காமத்திலிருந்து புறப்பட்டு இரவெல்லாம் உலா நடத்தி ஐந்தாம் நாள் காலை தம் திருக்கோயிலுக்குத் திரும்பி வருவார் கதிர் வேலாயுதசுவாமி. வேல் விழாக் காலத்தில், சைவ சமயத்தினர் மட்டுமல்லாது வேறு பல சமயத்தினரும் பக்தியுடன் வந்து ஈசன் திருக்கோலத்தைக் கண்ணாரக் கண்டு கசிந்துருகி நெஞ்சாரத் தொழுது காணிக்கையும் செலுத்திச் செல்லுவர் என்பது குறிப்பிடத் தக்கதாகும்.

பழைய கதிர்வேலாயுத சுவாமி வேல் விழாவில் தங்க நிறம் பூசிய மரத்தேரில் உலாச் செல்வார். தங்கம் போல் இருப்பதால் தங்கரதம் என்றே அதைக் குறிப்பிடுவர். புதுக்கதிர் வேலாயுதசுவாமி பாரத நாட்டிலிருந்து வரவழைக்கப்பட்ட வெள்ளி இரதத்தில் உலாச் செல்வார். இந்த வெள்ளி இரதத்தின் பெறுமதி ஒன்றரை இலட்ச ரூபாயாகும்.

இரு கதிர்வேலாயுத சுவாமிகளுக்கும் தங்க வயிர, நவரத்தின நகைகளும், வெள்ளி அங்கிகளும், கட்டிடங்களும், தென்னந் தோப்புகளும், நந்தவனங்களும் தனித்தனியே இருக்கின்றன. இரு கோயில்களின் மொத்தச் சொத்துமதிப்பு ரூபாய் அறுபது லட்சமாகும்.



கோவில்களுக்குச் சொந்தமான கட்டிடங்களில் உள்ள கடைகள் வாடகைக்குவிடப்பட்டுள்ளன.

கதிர் காமத் திருத்தலத்தில் நகர மடம் ஒன்று இருக்கிறது. அங்கு முதன் முதலாக ஏற்பட்ட மடம் இதுதான். ஆடிப் பௌர்ணமி யன்று கதிர் காமத்து ஐயன் திருவிழா வரும் போது நகர மடத்தின் எதிரில் பூசை ஆராதனை முதலியன தொன்று தொட்டு நிகழ்கின்றன.

கதிர் காமம் கொழும்பிலிருந்து இருநூறு மைல் தொலைவில் இருக்கிறது. இந்த வழியில் மாத்தறை, அம்பாந்தொட்டை, திசமாரகம என்ற முக்கிய நகரங்கள் உள்ளன. கதிரமலை ஆண்டவனின் ஆலயம் மாணிக்க கங்கையின் கரையில்எழுப்பப்பட்டுள்ளது. புனிதமானஇந்த ஆற்றில் நீராடிய பிறகுதான் கதிர் காம யாத்திரை மேற் கொள்ளப்படும். கதிர்காமம் செல்லும் பயணிகள் கதிர மலைக்கும், விபூதி மலைக்கும், செல்வக்கதிர்காமத்திற்கும் சென்று இறை வழிபாடு இயற்றுவார்கள். செல்வக்கதிர் காமம் அடர்ந்த காட்டின் இடையில் அமைந்துள்ளது. ஆகவே, கதிரமலைக்கும் செல்வக்கதிர்காமத்திற்கும் செல்ல விரும்புவோர் விழாக் காலங்களில் தான் கூட்டங் கூட்டமாகச் செல்லுவார்கள். சிற்சில சமயம் இவ்வழியில் யானை போன்ற காட்டு விலங்குகள்குறுக்கிடுவதுண்டு. ஆனால், அரோகரா என்ற தெய்வ முழக்கம் கேட்டவுடன் அவை தம்பாட்டுக்கு விலகிச் சென்று விடுகின்றன. முருகன் திருவருளால் அடியார்கள் ஒருகாலும் காட்டு விலங்குகளின் தொல்லைக்கு ஆளானதில்லை.

ஆடிப் பௌர்ணமிவிழா நாளில் கதிர் காமத்தில் மட்டுமல்லாது இலங்கை முழுவதும் அரோகரா முழக்கம் நிறைந்து ஒலிக்கும்.

கொழும்பு நகரில் மட்டுமல்லாது இலங்கை முழுவதிலும் ஆங்காங்கே நகரத்தார் ஆலயம் நிறுவியுள்ளார்கள். அவைபற்றிய விவரங்கள்:

### நீர் கொழும்பு

இவ்வூர் நகரத்தார்களால் மாரியம்மன் கோவில் ஒன்று கட்டப்பெற்றுள்ளது. நாள்தோறும் பூசை முதலியன இடையருது நடைபெற்று வருகின்றன. நவராத்திரி விழா சிறப்பாக நடத்தப்பெறுகிறது. ஒரு நந்தவனமும், இரண்டு இலட்ச ரூபாய் மதிப்புள்ள சொத்துக்களும்கோவிலின் உடைமையா யுள்ளன.

### காலி

கதிர் வேலாயுத சுவாமி ஆலய மொன்றுள்ளது. அருகேயுள்ள உனுவட்டுனை என்ற சிற்றூரில் உபய கதிர் காமம் கோவிலொன்று கட்டப் பெற்றுள்ளது. கால பூசைகள் செவ்வனே நடைபெற்று வருகின்றன, பத்து லட்ச ரூபாய் மதிப்புள்ள சொத்துக்கள் உள.

### இரத்தினபுரி

நவரத்தினங்களுக்குப் பெயர் பெற்ற ஊர் இது. இதை யடுத்துள்ள திருஆனைக் கட்டியில் முருகபக்தர்களான நகரத்தார்வேலவனுக்கோர் ஆலயம் அமைத்துள்ளனர். சிறப்பாக நடைபெறும் தைப்பூச விழாவன்று ஆண்டவன் இரத்தினபுரி வரை இரதத்தில் உலாவந்து செல்வது வழக்கம். ஓர் இலட்ச ரூபாய்ச் சொத்து உண்டு.

### நாவலப்பிட்டி

இங்குள்ள கதிரேசன் கோயிலுக்கு மூன்று இலட்ச ரூபாய்ச் சொத்து உள்ளது. பூசைகள் நன்ருக நடைபெற்று வருகின்றன.

### கம்பளை

ஒன்றரை இலட்ச ரூபாய் மதிப்புள்ள சொத்துக்கு உரியது இங்குள்ள கதிரேசன் ஆலயம். ஆண்டுதோறும் சிறப்புற நடைபெறுவது தைப்பூச விழா.

### மாதம்பை

பிள்ளையார் கோயில் அமைக்கப்பெற்று பூசைகள் செவ்வனே நடைபெற்று வருகின்றன. ஓர் இலட்ச ரூபாய்ச் சொத்துக்கள் உண்டு.

### குருநாக்கல்

கதிரேசன் கோயிலில் கால பூசைகள் முறையுற நடந்து வருகின்றன. பங்குனி உத்தர விழா சிறப்புமிக்கது. ஐந்து லட்ச ரூபாய் மதிப்புள்ள சொத்துக்கள் உண்டு..

இந்து தேச சரித்திரத்தைப் பற்றிய ஐதீகம் ஒன்று உண்டு. அதாவது இந்திய வாணிபர்கள் முதலில் வர்த்தகத் துறையில் பல நாடுகளுக்கிடையில் ஐக்கியத்தை உண்டு பண்ணுகின்றனர். பின்பு அதைத் தொடர்ந்து அருள் துறையிலும் ஐக்கியம் ஏற்படுகிறது. திரும்பத் திரும்ப நேர்ந்து வருகிற இச்சீரிய நிகழ்ச்சிக்கு ஸ்ரீகாசி நாட்டுக் கோட்டை நகரச் சத்திரம் நல்லதொரு சான்று ஆகும்.

தென்னிந்தியாவில் அமைந்துள்ள அரும்பெரும் கோவில்களையெல்லாம் ஜீரண மடைந்து வந்தபொழுது அவைகளைப் புதுப்பித்து வைத்த சிறப்பு நாட்டுக்கோட்டைச் செட்டியார்களுக்கு உரியதாகிறது. அத்தகைய அரிய திருப்பணியுடன் நின்று விடாது புண்ணிய பூமியாகிய பரத கண்டத்தின் பல புண்ணிய க்ஷேத்திரங்களில் அதே திருப் பணியைப் பரப்புவாராயினர். அதன் மூலம் தமிழ்நாட்டுக்குத் தனிச் சிறப்பை அவர்கள் கொண்டு வந்திருக்கின்றனர்.

ஸ்ரீ காசியம்பதி சிவனுரது சிறப்பு வாய்ந்த உறைவிடமாகும். உடலுக்கு இருதயம் எவ்வளவு இன்றியமையாததோ, அருள் துறையில் காசியம்பதி இந்தியா முழுதுக்கும் அவ்வளவு இன்றியமையாததாகிறது. என்றென்றும் இந்தியா முழுதுக்கும் அருள் உணர்வை ஊட்ட வல்லதாய் ஸ்ரீகாசி இருந்து வருகிறது. அத்தகைய புண்ணிய க்ஷேத் திர்த்தில் ஸ்ரீகாசி விசுவநாதருக்கும் அவருடைய அடியார்களுக்கும் அரிய முறையில் நாட்டுக்கோட்டை நகரச் சத்திரம் பணியாற்றி வந்திருப்பது பாராட்டுதற்குரிய விஷய மாகும். இவ்வரிய பணியில் இப்பொழுது நூறு ஆண்டுகள் கழிந்திருக்கின்றன. இனி என்றென்றுமே இந்த நகரச் சத்திரம் இறைவனுரது திருத் தொண்டுகளைச் சீருடனும் சிறப்புடனும் செய்து வருவதற்கு ஸ்ரீகாசி விசுவநாதர் அருள் புரிவாராக.

**சுவாமி சித்பவானந்தா**
ஸ்ரீ இராமகிருஷ்ண தபோவனம், திருப்பராய்த்துறை

### யாழ்ப்பாணம்

நகரத்தார் நிறுவியுள்ள கதிர் வேலாயுத சுவாமி ஆலயத்தில் சித்திரைத் திருவிழா மிகச் சிறப்புடன் நடைபெறுகிறது. ஏழு லட்ச ரூபாய்ச் சொத்துக்கள் இருக்கின்றன.

### முன்னீச்சுரம்

மாதம்பையிலிருந்து ஏழு மைலில் உள்ளது. ஆவணி மாதப் பௌர்ணமி விழா ஆண்டுதோறும் முப்பது நாள் தேர்த் திருவிழாவாக நடைபெறுகிறது. விழாக் காலத்தில் நகர விடுதியில் அன்னதானம் நடைபெறுகிறது. நகர விடுதியின் மதிப்பு ஐம்பதினுயிரம் ரூபாய் இருக்கும்.

### கண்டி

கடல்சூழ் இலங்கையின் அழகு நகரமாகிய கண்டியில் நகரத்தார் கட்டியுள்ள செல்வ விநாயகர் ஆலயம் சிறப்புமிக்கது. உத்தரத் திருவிழா உயரிய முறையில் நடைபெறுகிறது. வரலாற்றுச் சிறப்புமிக்க மகாவெலி கங்கை என்ற ஆற்றின் கரையில் அமைந்துள்ள தென்னக்கும்புற என்ற இடத்துக்கு விழாக் காலத்தில் விநாயகர் இரதத்தில் சென்று வருவார். கோயிலுக்குரிய சொத்துக்களின் மதிப்பு ஆறு இலட்ச ரூபாய்.

### திருக்கேதீச்சுரம்

இராமன் சிவ வழிபாடாற்றிய தலம் இராமேச்சுரமானது. அது போலவே, கேது சிவ வழிபாடாற்றிய தலம் கேதீச்சுரமானது.

சுந்தரமூர்த்தி நாயனுரின் தேவாரம் பெற்ற திருத்தலம் இது. ஆலயம் உட்படப் பல தரும நிறுவனங்கள் நரத்தார்களால் இங்கு நடத்தப் பெற்று வந்தன. தலைமன்னுரிலிருந்து இருபது மைல் தொலைவில் உள்ளது இத்தலம். எட்டு ஆண்டுகளுக்கு முன் கோவிலும், கோவிலைச் சேர்ந்த நெல் வயல்களும், நிலங்களும் கட்டிடங்களும் யாழ்ப்பாணம் தமிழ்ப் பெருமக்களிடம் ஒப்படைக்கப் பெற்றன. கோவிலுக்குச் சொந்தமான சொத்துக்களின் மதிப்பு சுமார் பத்து லட்ச ரூபாய். நகரத்தார்களுக்குச் சொந்தமான மடம் ஒன்று உள்ளது.

# எங்கோ சென்றேன்!

மானதனை ஏந்திடுவோன் மைந்தா! வள்ளி
மயில்நாடி அணைந்திட்ட கந்தா! உன்றன்
மேனியெலாம் நீறணிந்து நின்ருய்! கண்டு
விம்மிவிம்மி நானழுதேன்; எங்கோ சென்றேன்!
தேனுண்ட மகிழ்ச்சியிலே அழுதேன் என்று
தெரியாதார் வியப்பேற என்னைப் பார்த்தே
ஏனென்ருர்? அவர்க்கென்ன சொல்வேன்? மீண்டும்
என்றழுவேன் இப்படிநான்? சொல்வாய்! ஐயா!

அருளுடையார் கண்டுமனம் மகிழ்தற் கென்றே
அழகிதழில், முருகா!புன் னகையை ஏந்தி
இருள்நடுவே சுடரெனநீ நிற்றல் கண்டேன்,
இமைகொண்டு விழிமூடிப் பார்த்தும், பொங்கிப்
பெருகிவரும் கண்ணீரின் வெள்ளம் வீழ்ந்தேன்;
பேச்சின்றிப் பெருமூச்சோ டெங்கோ சென்றேன்!
மறுபடியும் என்றழுவேன் இன்று போலே!
மனமிரங்கி நீயெனக்குச் சொல்வாய்! வேலா!

எதிர்நின்ற திரைவிலகக் கண்டேன் அங்கே
எழிலொழுகும் திருமுருகா உன்னைக் கண்டேன்.
புதிதாக ஏதேதோ கண்டேன்; உள்ளம்
பூரித்தேன்; பொங்கிவரும் கடல்போல், நெஞ்சம்
சதிராடி விம்மிடுதல் கண்டேன்; உன்நாள்
சரணென்றேன்; குரல்கம்மக் கந்தா என்றேன்.
நதியாக விழிமாறும் விந்தை கண்டேன்;
நானென்னை மறந்திட்டேன்; எங்கோ சென்றேன்.

—வீர. மெய்யப்பன் பி.இ.
உதவிப் பொறியாளர்,
பொதுப்பணித்துறை, செங்கோட்டை






நாசிக் பஞ்சவடி கோயில் வீடும்
புது மடமும்.

The two Nattukkottai Chatrams at Nasik Panchavati, Maharashtra. One houses the Karthik - Mandir and the pilgrims; the other is used by the Post Office.

**नासिक पंचवटी गृह-मंदिर**
**तथा नया मंडप**




நகரத்தார் விடுதி, 34, எஸ்ரா தெரு, கல்கத்தா-1.

Nagarathar House, 34, Ezra St., Calcutta-1.

नगरत्तार गृह, ३४ एज़्रा मार्ग, कलकत्ता—१

# ஐந்து திட்டங்கள்

டாக்டர் மெ. சுந்தரம் M.A., M. Litt., Ph. D.,
சென்னைப் பல்கலைக் கழகம், மதுரை.

நாட்டுப் பாடலுக்கும் நல்ல பணியாரத்திற்கும் பெயர் பெற்றது செட்டிநாடு. திருப்பணி புரிவதிலும், இருநிதி திரட்டுவதிலும் சிறப்புப் பெற்றவர்கள் செட்டியார்கள். தமக்கெனத் தனி நாடு வகுத்த சிறப்பு நகரத்தார்க்கு உரியது. நகரம் என்ற சொல் எல்லோர்க்கும் பொதுவாயினும் தமக்கே சிறப்பாக்கிக் கொண்டவர்கள் அவர்கள். "பல்லாங்குழி ஆடிப் பாண்டியரைத் தோற்கடித்து, சொக்கட்டான் ஆடிச் சோழரையும் தோற்கடித்த" பெருமை நாட்டுக்கோட்டையார்க்கு உண்டெனத் தாலாட்டுப் பாடல் கூறும். "முத்து விலை மதிக்கும் முப்பாட்டன் எல்லையிலே, பட்டு விலைமதிக்கும் பாட்டன்மார் எல்லையிலே, பொன்னு விலை மதிக்கும் பூமாமன் எல்லையிலே" என்று செட்டி நாட்டு வணிகச் சிறப்பை நாட்டுப்பாடல் விளக்கும். "அரசர் பின்னோர்க்கு அருநெறி மருங்கின், உரிய எல்லாம் ஒருவழி முடித்தாங்கு" என்று நகரத்தாரை 'அரசர் பின்னோர்' என்று கி. பி. இரண்டாம் நூற்றாண்டுக் காப்பியமான சிலப்பதிகாரம் உரைக்கும். இத்துணைச் சிறப்புக்களெல்லாம் பெற்றிருந்த நகரத்தார் வாழ்வு, இன்று சீர்திருத்தம் செய்யப் பெற வேண்டிய நிலையில் உள்ளது. அவர்கள் வாழ்வில் புதுமை காட்டிப் பொலிவூட்ட வேண்டியிருக்கிறது. 'செட்டி கப்பலுக்குச் செந்தூரான் துணை' என்ற பழமொழிப்படி வழிவழி வந்த வெளிநாட்டு வணிகம் ஒன்றன்பின் ஒன்றாக உருமாறி வருகிறது. இந்நிலையில் உள்நாட்டில் காலூன்றி உருவான செயல் புரிய முற்பட வேண்டும். இது வாழ்ந்த சமுதாயம், வாழ வேண்டிய சமுதாயம். அதன் வாழ்விற்கும் வளர்ச்சிக்கும் திட்டங்கள் தீட்டிச் செயற்பட வேண்டும்.

(1) கல்வி நிலையாலும் பொருளாதார அமைப்பாலும் இன்று நம் சமூகம் பிற்பட்ட நிலையில் உள்ளது. ஆதலின் 'நகரத்தார் சமூகம் பிற்பட்ட இனமே' என்று அரசினர்க்கு எடுத்து விளக்கி, பிற்பட்ட இனங்களின் பட்டியலில் இதனையும் ஒன்றாகச் சேர்க்கும்படி அரசினரிடம் வலியுறுத்த வேண்டும். அங்ஙனம் செய்தால்தான், நம் இளைஞர் கல்வியின் பல்வேறு துறைகளில் முன்னேறி வர முடியும்; நம் வணிகமும் தழைக்க முடியும். இது இந்நேரத்தில் மிகவும் இன்றியமையாத ஒன்று. நம் பெருமக்கள் இதனை உடனடியாகக் கவனித்து ஆவன புரிதல் வேண்டும். இதனால் எதிர்காலத்தில் நம் சமூகத்தின் நிலை உயர வழியேற்படும்.

(2) நம்மவர்கள் நடத்தும் வணிக நிலையங்களில் மகமைப் பணம் சேர்த்து, ஒரு பொதுநிதி நிறுவி, அதன் வாயிலாக எல்லாத் துறைகளிலும் நலிந்தோர்க்கும், மெலிந்தோர்க்கும் பொருளுதவி செய்தல் வேண்டும். இதனால் வாழ்வின் தாழ்வாரத்தில் உலவக் கூடியவர்கள் மேலேறி வர முடியும்.

(3) நகரத்தார் வரலாற்றினை ஆராய்ச்சி செய்து, தோற்றம் முதல் இன்றுவரை உள்ள பல்வேறு நிலைகளைத் தக்க சான்றுகளுடன் விளக்கி ஒரு பெருநூல் வெளியிடுதல் வேண்டும். இது நம் இனத்தின் சமூக, பண்பாட்டு வரலாற்றை மற்றையோர்க்கும் அறிவிக்கும் வரலாற்று ஏடாக நின்று நெடும்பயன் நல்கும்.

(4) வெளி நாடுகளில் உள்ள பொதுப் பணத்தை ஒன்றுதிரட்டி இங்கு கொண்டு வந்து, தேவைப்பட்ட இடங்களில் பள்ளிகளும், தொழில் நிலையங்களும் நிறுவி, அவற்றில் நம் இன இளைஞர்க்கு வேலை அளிக்க முற்பட வேண்டும். தூத்துக்குடியிலும் புதுச்சேரியிலும் இருந்த நகரவிடுதிகளை மீண்டும் நகரத்தார் வயப்படுத்த முயலவேண்டும்.

(5) நகரத்தார் வாழும் ஊர்தோறும் நகரத்தார் கழகத்தின் கிளைக்கழகங்கள் அமைத்து, அவற்றைத் தலைமை நிலையத்துடன் இணைத்து ஒன்றுபட்டுச் செயலாற்றி வரவேண்டும். அவற்றின் வாயிலாக, இச் சமூகப் பெருமக்கள் பற்றிய குறிப்பேடுகள், இன வரலாற்று இலக்கியங்கள், அறிக்கைகள் முதலியன அவ்வப் போது வெளியிடப் பெறல் வேண்டும்.

ஐந்தொகை பார்த்து வணிகம் நடத்தும் நகரத்தார் பெருமக்கள், வாழ்வை நடத்தும் இவ்வைந்து திட்டங்களையும் ஆராய்ந்து ஒரு நன்முடிவிற்கு வந்து செயலாற்ற வேண்டுகின்றேன். இதனால் இச் சமூகம் ஒளி நிறைந்த எதிர்காலம் பெறும் என்பது ஒருதலை.

## மரிக்கொழுந்துவிதை பாவுகிற விபரம்

மணல் பூமி ஒரு அடி உயரம், 4 அடி அகலம், 3அடி நீளம். ஒரு பாத்தி அரைக் கால்படி வந்தது. அதற்கு பாத்தி 50 அடி நீளம் வேணும். இந்த விதையுடன் தனித்த மணலை 2 பங்கு கூடச் சேர்த்து விதையுடன் கலந்து பாத்தியும் முன்னமே தண்ணீர் பாய்ச்சி மேப்படி பாத்தியை கையினுல் ஒத்தால்போல் தட்டி விதையைத் தெளித்து மணலைச் சல்லடையில் போட்டு விதைமறையும்படி சலித்து அதன் மேல் கம்புகள் பரப்பித் தழையால் மூடவும். மூன்றும் நாள்முளைக்கும். மேல் கம்புகளையும் தழைகளையும் எடுத்துப்போட்டு வைக்கோலை தண்ணீர் பாய்கிற இடத்தில் பந்துபோல் சுருட்டி வைத்து தண்ணீர் பாய்ச்சவும். ஒருநாள் விட்டு ஒரு நாள் தண்ணீர் பாய்ச்சவும். 22 நாளைக்குப் பிறகு நாத்தைப்பிடுங்கி நாலு விரக்கடைக்கு ஒன்று நடவும். இலை அமுங்காமல் நடவும். 10 நாள் களை எடுக்கவும். மேப்படி நாத்து காலையில் நடவும்.

— காசி நகரச் சத்திரம் முதல் நம்பர் கட்டளைப் பேரேடு பக்கம் நம்பர் 643

" எத்தவத்தைச் செய்தாலும்
ஏதவத்தைப்பட்டாலும்
முத்தர் மனம் இருக்குமாம் மோனத்தே"

என்று ஞானிகள் இயல்பைக் கூறுவர் பெரியோர். எந்த நாட்டில் சென்றாலும் தம் சொந்த நாட்டில் இருந்தாலும் சிந்தையெல்லாம் சிவன் திருப்பணிக்கே! என வாழ்ந்தவர் நம் நாட்டுக்கோட்டை நகரத்தார். பல்லவ அரசர்களைப் போன்றும் பாண்டிய மன்னர்களைப் போன்றும் பல் வேறு திருக்கோயில்களைக் கட்டிய பெருமைக்கு உரியவர்களாகிய அவர்கள், தம் நாட்டிலும் பிற நாட்டிலும் பல நகர விடுதிகளையும், அறச்சாலைகளையும் அமைத்துள்ளார்கள்.

வட நாட்டில் புண்ணியத்தலங்கள் பலவற்றில் இறை பணி குறைவின்றி நடப்பதோடு ஆங்காங்கே நகரவிடுதிகள் பல, பலருக்குப் பேருதவியாய் இருந்து வருகின்றன. காசிப்பதியைப் புண்ணியத்தலமாக நாம் எண்ணி வருகின்றோம். அப்பெரும்பதியில் நகர விடுதி அமைத்திருப்பதன் பயனை அங்கு சென்று வருவோர் நன்கு அறிவர். வேற்று மொழி பேசுகின்ற நாட்டில் நாம் யாத்திரை செய்கின்றோம் என்ற எண்ணமே எழாதபடி நம் நாட்டில் சொந்த வீட்டில் இருப்பது போன்றதோர் உணர்வை ஊட்டி வருகின்றது அவ்விடுதி. பல்வகையிலும் பயன்பட்டு வரும் இவ்விடுதிக்கு நூறாண்டு நிறைவதை ஒட்டி, விழாக் கொண்டாடுவதும் மலர் வெளியிடுவதும் மகிழ்ச்சிக்குரியதாகும். இத்தகைய நல்லறப் பெரும்பணியில் ஈடுபட்டுள்ள நகரத்தார் அனைவரும் குன்றாத பொருள் வளத்தோடு என்றும் நின்று வாழ எல்லாம் வல்ல இறைவன் திருவடிகளை வாழ்த்துகின்றேன்.

**மு. நாராயணன் செட்டியார்**
*Chairman :*
THE INDIA LEATHER CORPORATION
PRIVATE LTD.

# வியத்நாமில் நகரத்தார்களின் தெய்வத் திருப்பணி

சித. அழகப்பன்
கோட்டையூர்.
(வியத்நாம் செட்டியார் சேம்பர் ஆப் காமர்சின் முன்னாள் துணைத் தலைவர்)

இரண்டாவது உலகப் பெரும் போருக்கு முன்னர் பிரெஞ்சுக்காரரின் ஆட்சியில் இந்தோ சீனு இருந்து வந்தது. அப்போர் முடிவடைந்த பிறகு இந்தோ சீனு நான்கு நாடுகளாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது. பிரிக்கப்பட்ட இப் பகுதிகளுக்குத் தெற்கு வியத்நாம், வடக்கு வியத்நாம், லாவோஸ், கம்போடியா என்ற பெயர்கள் உண்டு. இவை ஒவ்வொன்றும் உரிமைபெற்றுத் தனி நாடுகளாக இயங்கி வருகின்றன.

வட வியத்நாமுக்கு வியட்மின் என்ற பெயருண்டு. இதனுல் தெற்கு வியத்நாமை வியத்நாம் என்று மட்டும் சொல்வது வழக்கம். இந்தோசீனுவின் வளம் நிறைந்த பகுதி தெற்கு வியத்நாம். இதன் தலைநகரம் செய்கோன். இங்கு வாழும் நகரத்தார்கள் செய்துள்ள, செய்துவரும் தருமங்களைப் பற்றி இந்தக் கட்டுரையில் எனக்குத் தெரிந்த சில விவரங்களை எழுதுகிறேன்.

இந்த நாடு புத்த சமயத்தைச் சார்ந்த நாடு. ஆனுல் இந் நாட்டை ஆள்பவர்கள் கிறித்தவர்கள். இருந்தபோதிலும் இங்கு நகரத்தார்கள் இந்து மதத்தைப் பேணி வருகின்றனர். ஏறத்தாழ நூறு ஆண்டுகட்கு முன் நகரத்தார்கள் செய்கோனுக்கு வந்து அதுமுதல் தொடர்ந்து தொழில் செய்து வருகின்ருர்கள். எண்பது ஆண்டுகட்கு முன்னர் நகரத்தார்கள் செய்கோனில் தண்டாயுதபாணி கோயிலை அழகாகக் கட்டி முடித்தார்கள். அதற்கெனச் சொத்துக்களுண்டு. அந்தச் சொத்துக்களை மூலதனமாகக் கொண்டு, அவற்றிலிருந்து கிடைக்கும் வருவாயிலிருந்து நாள்தொறும் நான்கு காலப் பூசையும், ஒவ்வொரு மாதந்தொறும் கார்த்திகை முதலிய சிறப்பான நாட்களும், ஆண்டுதொறும் திருக் கார்த்திகை, தைப்பூசம் முதலிய திருவிழாக் களும் நடைபெறுகின்றன. இக்கோயில் மிகச் சீரிய முறையில் கண்காணிக்கப்பெற்று வருகிறது. பூசைகள் தமிழ்நாட்டுப் பண்பிலிருந்து அணுவளவும் வழுவாத வகையில் நடத்தப்பெறுகின்றன. தைப்பூச விழாவிற்குச் சுவாமி நகர்வலம் வருவது நலந்தரு காட்சியாகும். இத் திருவிழாவிற்காக ஒரு வெள்ளித் தேர் இருக்கிறது. இந்தத் தேர் சுமார் 30 ஆண்டுகட்கு முன்பு செட்டிநாட்டிலிருந்து செய்து கொண்டுவரப்பெற்றது என்பது குறிப்பிடத் தக்கது.

கார்த்திகைப் பூசை, தைப் பூசை நாட்களில் செய்கோன் நகரத்தார்கள் அங்குள்ள ஏழைகட்கு அன்னதானம் வழங்கி வருகிருர்கள். வியத்நாம் சுதந்திர தினத்தன்றும், வியத்நாம் குடியரசுத் தலைவரின் பிறந்த நாளன்றும் நகரத்தார்களின் பிரதிநிதிகள் குடியரசுத் தலைவரவர்களைப் பேட்டி கண்டு வியத்நாம் நாட்டு ஏழை மக்களுக்கு உணவும், உடையும் வழங்கும் பொருட்டுத் தாராளமாக நன்கொடைகள் கொடுத்து வருகிருர்கள். வியத்நாமியப் பெருநாளன்று வியத்நாம் நாட்டுப் பாதுகாப்புக்காகவும் பெரும் பொருள்

வழங்கிவருகிருர்கள். செய்கோனிலுள்ள பெரிய மருத்துவமனையில் நகரத்தார்களின் வள்ளன் மையால் அவர்களது பெயரால் ஒரு வார்டும் கட்டப்பெற்றிருக்கிறது.

சைவ மரபு தழைத்தோங்கச் செய்கோன் நகரத்தார்கள் ஒவ்வொரு திங்கட்கிழமை தொறும் சிவ புராணம் படித்துக் கூட்டு வழிபாடு நடத்தி வருகிருர்கள். சைவ சமய குரவர் நால்வருக்கும், திருவாரூர் தட்சிணுமூர்த்தி சுவாமிகட்கும்* குரு பூசை நடத்தி அந்நாட் களில் ஏழைகட்கு அமுது படைத்தலைப் பல்லாண்டுகளாக இவர்கள் செய்து வருகின் றனர்.

"தேமதுரத் தமிழோசை உலகமெலாம் பரவும் வகை செய்தல் வேண்டும்" என்ற பாரதியார் வாக்குப்படிச் செய்கோன் நகரத் தார்கள் தமிழறிஞர்களின் சொற்பொழிவுகள் நிகழச் செய்வதிலும், திருவள்ளுவருக்கு விழா எடுப்பதிலும் இந்தியா, இலங்கை, மலேயா ஆகிய நாடுகளிலிருந்து தமிழறிஞர்களை வர வழைப்பதிலும் செய்கோனிலுள்ள ஏனையத் தமிழர்களுடன் சேர்ந்து நல்ல முறையில் ஈடு பட்டு வருகிருர்கள். சுருங்கச்சொன்னல் எந்தப் பொதுக் காரியத்திலும் தமிழ் நாட்டுக்குப் பெருமை ஏற்படும் வகையில் எல்லாப் பொதுச் செயல்களிலும் செய்கோன் நகரத்தார்கள் கலந்து கொள்கிருர்கள்.

சைவ சமயத்தில் நகரத்தார்கட்கு அழுத்த மான பற்று உண்டு. ஆனலுங்கூட அவர்கள் பிற சமயங்களை வெறுப்பதில்லை. இதற்கேற்பச் செய்கோன் நகரத்தார்கள் புத்தர் கோயில் கட்கு நிதி வழங்கியுள்ளார்கள்.

காசி நகரச் சத்திரத்தின் விசாரணை இரங்கூன் நகரத்தார்கள் பார்வைக்கு வந்த தற்குப் பின், செய்கோன் நகரத்தார்களும் தங்களால் இயன்ற மகமையை எழுதிவந்திருக் கின்றனர். ஓரிருவர் காசிச் சத்திரம் மானேஜிங் சொசைட்டியின் பொதுச் சபையிலும் அங்கத் தினராய் இருந்து வருகின்றனர். இன்னும் செய்கோனிலிருந்து தாய்நாட்டிற்குத் திரும்பும் வழியில் நகரத்தார் பலர் காசியம்பதிக்குச் சென்று இறைவழிபாடு செய்தும் வருகின்றனர். வெளிநாட்டு நாணயக் கட்டுப்பாட்டுச் சட்டத்தின் கடுமையால் நாங்கள் விரும்பும் அளவு காசிச் சத்திரத்திற்கு நன் கொடையனுப்ப இயலா திருப்பதே எங்களுக்குள்ள பெருங் குறையாகும்.

காசிச் சத்திரம் மேன் மேலும் வளர்ந்து பலநூறு ஆண்டுகள் காசி விசுவேசு வரருக்குப் பணி புரிவதாக என்று எல்லாம் வல்ல இறை வனை வழிபாடு செய்கின் றேன்.




*இவரது சமாதி உள்ள திருவாரூர் வன்மீகபுரம் மடத்தில் அடியார் களுக்கு அன்னமளிப்பதிலும், மடத்தின் செயல்களிலும் நகரத் தார் பெரும் பங்குகொண்டுள் ளனர்.

—பதிப்பாசிரியர்

# சீர்மை நிலைக்கட்டும்

—நாகமுத்தையா பி. காம்.—

புணத்தின் பெருமையினைப் பாங்காய் உணர்ந்தோம்
குணத்தால் தொழில்புரிந்து கோடிப் பொருள்கண்டோம்.

தேடிச் சேர்த்த திரவியத்தைக் காட்டிலுமே
கோடிப் பெரிதாகும் கோவில் சமைப்பதென

வாரி இறைத்து வளஞ்சேர் தலமெல்லாம்
சீரான கோவில்கள் சிற்பக் கலைக்கூடம்

வந்தோர் வசதிக்காய் வாய்ப்பான சத்திரங்கள்
செந்தேன் கொழிக்கும் சிறப்பான பூஞ்சோலை

அத்தனையும் கட்டுவித்தோம். 'ஆகா' எனச் சொல்லி
மெத்தப் புகழ்ந்தவர்கள் மேதினியில் ஆயிரமாம்!

தன்னை வளர்ப்பதனைத் தானே விரும்பாமல்
பொன்னைப் பொருளைப் பிறர்க்காகத் தந்தபடி

மண்ணை வளர்த்தவர்கள் மாண்புடைய செட்டியரே!
தண்ணீருக் கஞ்சாமல் தாய்நாட்டை விட்டுப்பல்

நாடெல்லாம் சுற்றிவந்து நற்குடியைத் தோற்றுவித்துப்
பாடெல்லாம் மிகப்பட்டு, பண்பாட்டை வளர்த்தார்கள்.

பொருளுக்கு நல்ல தலையாகிப் போற்றும்
அருளுக் கடிபணிந்து வாழ்ந்துவரும் செட்டியர்தம்

நூறாண்டு காலம் நொடியாத கட்டடங்கள்
வேரோடி வெற்றி விழாவோடு இன்னும்பல்

நூறாண்டு வாழட்டும். நோற்ற நகரத்தார்,
நேராண்ட சீர்மை நிலைக்கட்டும்; நீளட்டும்.

# வித்தினுள் வித்து

( சௌந்தரா கைலாசம் )

சொல்லுக் கடங்கிடான் சோர்வுறும் நெஞ்செனும்
கல்லைப் பிசைந்து கனியெனச் செய்வான்
சொத்தினுள் சொத்தவன் சுகத்திற் சுகமவன்
வித்தினுள் வித்தவன், வேழ முகத்தனின்
தம்பியாய் வந்தவன் ; தன்னையே சரணென
நம்பிவந் தவரை நாடியே அணைவான்
நெஞ்சினிற் புகுந்து நிலைத்திருந் திடுவான் ;
கொஞ்சுவான் ; கொஞ்சிக் குலவுவான் : தீய
எண்ண மெழுந்தால் இதய வீட்டை
நண்ணிடேன் என்பான் ; நல்லவே எண்ணத்
தூண்டுவான் ; நீங்காத் துணையா யிருப்பான் ;
ஈண்டொரு துயரம் எதிர்ப்படு மாகில்
வேலொளி காட்டி விலக்கி அருள்வான் ;
ஞாலந் தனிலோர் ஞான பண்டிதா !
முருகா முருகா முருகா ! என்றே
உருகுவோர் நெஞ்சில் ஒளிமய மாகி
அருள்வழிந் தொழுகும் குறுநகை புரிவான்
கருதியே உருகுவார் கண்ணைநீர்க் காடாய்
மாற்றுவான் மகிழ்வான் மாயை
மாற்றவே வருவான் மயிலில் ஏறியே !

# நகரத்தாரின் சிவப்பணிகள்

தருமபுர ஆதீன வித்துவான், திருவண்ணாமலை ஆதீன விரிவுரையரசு, மதுரை ஆதீனச் சித்தாந்த சைவ வித்தகர், சித்தாந்தப் புலவர் மாமணி, பாலகவி வயிநாகரம் வே. இராமநாதன் செட்டியார் (தத்புருஷ தேசிகர்) தேவகோட்டை.

மகுட தன வைசியர்கள் என்றும் நாட்டுக் கோட்டை நகரத்தார்கள் என்றும் அழைக்கப் பெறுகின்ற நமது மரபினர்கள் தொன்று தொட்டுச் சிவப்பணி செய்தலையே தமது முதற் பெரும் கடமையாகக் கொண்டு வாழ்பவர்க ளாவார்கள். இமயம் முதற் குமரிவரை இவர்கள் செய்த சிவப்பணிகள் எல்லை யில்லாதன. பாரத நாட்டில் மக்கள் எண் ணிக்கை அளவில் மிகவும் குறைவானது நமது மரபு. ஆனல் அவ்வெண்ணிக் கையில் பெரு நிறைவை உடையனவாக உள்ள மற்ற எல்லா மரபுகளையும் விட நமது மரபு எங்கும் போற்றி ஏத்தப் பெற்றுவருகின்றது. இதற்கு மூலகாரணம் இவர்கள் செய்யும் சிவப் பணிகளும் அவற்றின் நெறிதவருத நேர்மை யான பாதுகாவல்களுமே யாகும்.

செல்வப்பொருளை ஈட்டுவதில் இவர்களுக்கு எவ்வளவு திறமையும் ஆர்வமும் இருந்து வரு கின்றனவோ அவ்வளவு திறமையும் ஆர்வமும் சிவப்பணிகள் செய்வதிலும், சிவதர்மங்களைப் பரி பாலனம் செய்வதிலும் இவர்களுக்கு உண்டு. "சிவத்துக்குமேல் தெய்வமில்லை" என்பதை உறுதியாகக் கடைப்பிடித்துத் திருநீறு உருத்தி ராக்கம் ஆகியபுறச் சாதனங்களையும் திருவைந் தெழுத்தாகிய அகச் சாதனத்தையும் வாழ்க் கையில் கைக்கொண்டு ஒழுகி வருபவர்கள் நாட்டுக்கோட்டை நகரத்தார்கள். பொருளை ஈட்டுவதற்குப் புண்ணிய நெறி இன்றியமை யாதது என்பதை உணர்ந்து அந்நெறியிற் பொருளை ஈட்டி அதனைச் செலவழித்தலிலும் அறநெறியைக் கடைப்பிடிக்கின்ற மேலான பண்பு நமது மரபினர்க்கு இயல்பாயமைந் துள்ளது.

தீவினைவிட்டு ஈட்டப்படுகின்ற பொருளே புண்ணிய வழியில் செலவிடுதற்குரியதாக அமையும். தீயவழியிலீட்டிய பொருள் அத்தீய வழிக்கே பயன்பட்டுச் செலவாகும். இதனை உலகியலில் துறைதோறும் நன்கு காணலாம்.

நகரத்தார்களைப் பற்றிய வரலாறு ஒன்று கல்வெட்டிலும் செப்பேட்டிலும் இருந்ததைப் பல ஆண்டுகளுக்கு முன்னர் அச்சுக்குக் கொண்டு வந்திருக்கிருர்கள். அதில் நகரத்தார் நிர்ணயம் செய்த "சாதிமுறை நியாயங்கள்" என்ற பகுதியில்

"மாதா பிதா குருதெய்வம் குலதேவதை இவர்களை வணங்கிப் பூசிக்கிறது. கோவில் களுக்கும் குரு நிலையங்களுக்கும் உள்ள கிராமம் முதலியவற்றை நகரத்தார் விசாரணை யில் வைத்துக்கொண்டு அவற்ருல் வரும் ஊதி யத்தை அந்தந்த தருமங்களுக்கே உபயோகப் படுத்துகிறது. சிவமதத்திலேயே இருக்கிறது. அந்நிய மதங்களில் சேரக்கூடாது" என்றும்,

"சீவவகையான வியாபாரங்கள் செய்கிற தில்லை. வாய்மை தவரு மேலோர்களிடத்தில் பணம் கொடுக்கல் வாங்கல் செய்கிறது திருட்டு வியாபாரம் செய்யக்கூடாது."

என்றும் இன்னும் இவைபோல்வன பிறவும் காணப் பெறுகின்றன. இவற்றிலிருந்து நமது மரபினர் பொருளீட்டத்திற்குக் கைக்கொண்ட அறநெறியும் அதனைச் செலவு செய்தற்கு மேற் கொண்ட சிவப்பணி, சிவதர்ம பரிபாலனங் களும் பண்டைக்காலந்தொட்டு நடைமுறையில் இருந்து வருவன என்பது தெற்றென விளங்கும்.

வாணிகத் துறையில் தாய்நாடேயன்றி அயல் நாடுகள் பலவற்றிற்கும் கடல்வழிப் பயணத்தை மேற்கொண்டு சென்று ஆங் காங்கே நெறிதவருது வாணிகம் செய்து முறை யாகக் கிடைத்த பேருதியத்தைக் கொண்டு

அந்நாடுகளில் நமது மரபினர் செய்திருக்கிற சிவப்பணிகளும் அவற்றிற்கான பொருள் அளவும் கணக்கிலடங்காதன. இங்ஙனம் தாங்கள் தோன்றிய பாரத நாட்டிலும் வாணிகத்தின் பொருட்டும் வருவாயின் பொருட்டும் இடையிடையே தங்கள் வாழ்க்கைக் குரியதாயிருந்த பிறநாடுகளிலேயும் பல கோடி ரூபாய்களைச் சிவப்பணிக்கெனச் செலவு செய்த நகரத்தார் மரபினரோடு ஒத்து நிற்கவோ அல்லது அவர்களை விட உயர்ந்து நிற்கவோ பாரத நாட்டில் வேறு எந்த மரபினராலும் முடியாதென்பது உபசாரமன்று உண்மையேயாகும்.

இவர்களது பெருஞ் சிறப்பைப் "பொருள் ஈட்டி அறம் பேணிப் புகழ் வளர்த்து நெறி நின்று பொருவில் ஈசன், அருளீட்டி வாழ்ந்து வரும் தனவணிகர்" என்று ஒரு பெரும் புலவர் கூறுவதிலிருந்து அறிந்து கொள்ளலாம். பொருளீட்டத்திற் பெருங் கவனமும் பேருழைப்பும் உடையவர்களாகப் பலர் இருக்கிறார்கள். அவர்கள்பால் அறம் பேணும் கேண்மை அமைவது அரிதாயிருக்கிறது. புகழ் அடைவதற்கு எத்தனையோ குறுக்குவழிகளைக் கையாளுபவர்களாகப் பலர் உள்ளனர். அறம் பேணினால் புகழ் அவர்களைத் தானே வந்தடையும் என்பதை அறியாது விரும்புகின்ற புகழுக்குப் பதிலாக அதற்கு எதிரான இகழை அடைவோரும் உளர். பசு புண்ணியங்களைச் செய்து உலகப் புகழை அடைவது நிலைத்ததாக ஆகாது என்பதை அறிந்து ஈசன் அருளை ஈட்டித்தருவதாகிய பதி புண்ணியங்களைச் செய்பவர்கள் தன வணிகர்கள் என்பது இப்பாடற் பகுதியால் அறியப் பெறுகின்றது.

நாட்டுக்கோட்டை நகரத்தார்களின் இப்போதைய நிலையான வாசஸ்தானம் பாண்டி நாட்டில் கடலுக்கு மேற்கு பிரான்மலைக்குக் கிழக்கு வைகைக்கு வடக்கு வெள்ளாற்றிற்குத் தெற்கு என்னும் இந்நான்கு எல்லைகட்குட்பட்ட பகுதியாகும். இவர்கள் கலி 3808 வரை சோழநாட்டில் காவிரிப்பூம் பட்டினத்தில் வாழ்ந்திருந்தார்களென்றும், அப்படி வருவதற்கு முன்னர் அம் மன்னரிடமிருந்து இளையாற்றங்குடி முதலிய ஒன்பது புராதனச் சிவாலயங்களைப் பரிபாலிக்கும் உரிமையைச் சாசனங்களின் மூலமாகப் பெற்றுக்கொண்டே வர இசைந்தார்களென்றும் வரலாறு கூறுகின்றது.

நகரத்தார்கள் பரம்பரைச் சைவர்கள் என்பதற்கும் சிவ தீக்ஷைகள் பெற்றுச் சிவநெறி வழுவாது ஒழுகிய சான்றோர்கள் என்பதற்கும் வரலாற்று நூல்களில் பல சான்றுகள் உள்ளன. இயற்பகை நாயனார், அமர்நீதி நாயனார், மூர்த்தி நாயனார், கலிக்கம்ப நாயனார், காரைக்காலம்மையார் ஆகிய ஐவரும் நமது மரபினர்கள். அவர்களது சிவப்பணி பெரிய புராணத்தில் சிறப்பாகப் பேசப்பெற்றுள்ளது. பெரும் சிவ ஞானியாகிய முற்றத் துறந்த பட்டினத்தடிகளும் நமது மரபினரே.

நாட்டுக்கோட்டை நகரத்தார்கள் செய்த சிவப்பணிகள் பலவற்றுள் தற்போது வரலாறு அறியக்கூடியனவாய் இருப்பவைகளுக்குள் காலத்தால் முற்பட்டதாகத் தெரிவது பழநி அன்னதான மடமாகும். அதனையொட்டித் தோன்றியன குன்றக்குடி அன்னதான மடமும் திருவண்ணாமலை ஓயாமாரி மடமும் ஆகும். பழநி அன்னதான மடம் தோன்றி ஏறக்குறைய இருநூறு ஆண்டுகளாகின்றன.

நகரத்தார்கள் கி. பி. 1805-இல் இலங்கைக்கும் 1824-இல் மலேயாவுக்கும் 1852-இல் பர்மாவுக்கும் பாய்க் கப்பல்களில் சென்று வாணிகம் செய்யத் தொடங்கினார்கள் என்று தெரிகிறது. அந்த நாடுகளில் இவர்கள் சென்று தங்கிய அந்தக் காலங்களிலேயே வழிபாட்டுக்கென மடங்கள், கோயில்கள் முதலியன அமைத்துச் சிவப்பணி செய்தலை மேற்கொண்டிருக்கிறார்கள். வியாபாரத் தலங்களில் எல்லாம் வேலூன்றிப் பூசையிட்டு அடியார்கள், ஏழைகளுக்கு அன்னதானம் செய்து வருவது பல்லாண்டுகளாக நிகழ்ந்து வருகிறது.

தாங்கள் குடியிருக்கும் ஊர்களிலும் தேவாரத் திருப்பதிகம் பெற்ற தலங்களிலும் ஏனைப் புராதனப் பெருந்தலங்களிலும் நமது மரபினர் செய்துள்ள சிவதர்மங்களும் பசு தர்மங்களும் கணக்கிலடங்காதன.

நகரத்தார்களின் உரிமைக்கோயில் ஒன்பதனுள் இரணியூர்க் கோயில் ஏறக்குறைய பன்னிரண்டு லட்சம் ரூபாய் செலவுசெய்து அமைக்கப் பெற்றது. இலுப்பைக்குடிக் கோயிலுக்கு நான்கு லட்சமும், இளையாற்றங்குடிக் கோயிலுக்குப் பதினாறு லட்சமும், சூரக்குடிக் கோயிலுக்கு இரண்டு லட்சமும், நேமங் கோயிலுக்கு

ஆறு லட்சமும், பிள்ளையார்பட்டிக் கோவிலுக்குப் பன்னிரண்டு லட்சமும், மாற்றூர்க் கோவிலுக்குப் பதினறு லட்சமும், வயிரவன் கோவிலுக்குப் பன்னிரண்டு லட்சமும் செலவாகியுள்ளன. இத் திருக்கோயில்களின் அங்கங்களாகப் பெருமாள் கோயில்கள், நந்தவனங்கள், பசுமடங்கள், திருக்குளங்களும் பல லக்ஷக்கணக்கான ரூபாய் செலவில் அமைக்கப் பெற்று உள்ளன. நகரத்தார்கள் வாழும் ஊரில் பெரும்பாலானவற்றில் சிவாலயங்கள் இருக்கின்றன. அவற்றிற்கும் பிள்ளையார் கோவில், சுப்பிரமணியர் கோவில், பிடாரி அம்மன் கோவில், அய்யனர் கோவில் ஆகியவைகளின் திருப்பணிகளுக்கும், அவற்றின் பரிபாலனங்களுக்கும் இன்றுவரை பல கோடிக்கணக்கான ரூபாய்களை நகரத்தார்கள் செலவு செய்திருக்கிருர்கள்.

இனி க்ஷேத்திர மிகுதியாற் சிறந்த தென்ளுட்டிலும் தீர்த்த மிகுதியாற் சிறந்த வடநாட்டிலும் இவர்கள் செய்துள்ள திருப்பணிகளைக் கணக்கெடுத்துச் சொல்ல முற்படுவது விண்ணிலே உள்ள நட்சத்திரங்களைக் கணக்கெடுத்துச் சொல்ல முற்படுவதை ஒக்கும். செந்தமிழ் மன்னர்களாகிய சேர, சோழ, பாண்டியர்கள் வானளாவிய கோபுரங்களுடன் பல சிவாலயங்களைக் கட்டிப் பரிபாலித்து வந்தார்கள் அவர்கள் காலத்திற்குப் பிறகு அத் திருக்கோயில்களுக்குக் காலப்போக்கினல் ஏற்பட்ட பழுதுகளைத் திருத்தவும் அங்கே நடைபெறவேண்டிய நித்திய நைமித்திகங்களை முறைப்படி நடத்திப் பரிபாலிக்கவும் புண்ணியம் செய்தவர்கள் நகரத்தார்களே.

நகரத்தார்கள் செய்த சிவப்பணிகளுள் தலையாயது திருக்கோயில் திருப்பணி. அதனுடன் அன்ன சத்திரங்கள், வேத பாடசாலைகள், சிவாகம பாடசாலைகள், தேவார பாடசாலைகள், குருபூசை மடங்கள், பசு மடங்கள், திரு நந்தவனங்கள், திருக்குளங்கள் ஆகிய சிவப்பணிகளும் நகரத்தார்களால் மேற்கொள்ளப்பெற்றவை ஆகும். எங்கள் வித்துவ சிரோமணி **வயினாகரம். அ. இராமநாதன் செட்டியார்** அவர்கள் தொகுத்து வைத்திருந்த நாட்டுக்கோட்டை நகரத்தார்கள் வரலாற்றில்,

"நான் எழுதியிருக்கும் தருமங்களைப் பற்றித் தொகை கூட்டிக் கணக்குப் பார்த்தேன். அது கணக்கிலடங்கவில்லையாதலின் இதனைப் படிக்கும் அன்பர்கள் யானையைக் கண்ணுல் பார்த்து நிறுத்தும் மரபினேர் வழியில் வந்த அளவிலா ஆற்றலுடையவராதலின் அதனை அவர்கள் மதிப்பிற்கே விட்டுவிட்டேன்."

என்று எழுதியிருப்பதிலிருந்து நகரத்தார்களின் சிவப்பணி அளவிலடங்காததென்பதை அறிந்து கொள்ளலாம்.

நாட்டுக்கோட்டை நகரத்தார்கள் தொழில் செய்யத் தொடங்கிய ஊர்களில் கல்கத்தாவும் ஒன்று. ஏறக்குறைய நூற்றைம்பது ஆண்டுகளுக்கு முன்னமேயே நகரத்தார்கள் கல்கத்தாவுக்கு வந்ததாகத் தெரிகிறது. இவர்களது சிவப்பணி சிவதர்ம பரிபாலனச் சிறப்பை நேரில் கண்டறிந்து, அந்நாளில் கல்கத்தாவில் வாழ்ந்த மோதிலால் ஷெல்வி என்பவர் அவரது சொந்தச் சிவன் கோவிலை இவர்களிடம் ஒப்படைத்தார். இப்பொழுது நூற்றுண்டு விழாக் கொண்டாடப்பெறுகிற காசி நாட்டுக் கோட்டை நகரச் சத்திரம், நகரேஸ்வரர் கோயில், விசாலாக்ஷி அம்மை கோவில், விஸ்வேஸுரருக்கு நாள்தோறும் நடைபெறும் திருவனந்தல், உச்சிக்காலம், அர்த்தசாமப் பூசைகள்; கல்கத்தா, பிரயாகை, கயா, அயோத்தி, தாடகேஸ்வரம், காளிகாட், கோதாவரி, நாஸிக்—பஞ்சவடி ஆகிய இடங்களிலுள்ள சத்திரங்கள் ஆகிய பணிகள் நாடறிந்தனவாகும்.

"செல்வத்துப் பயனே சிவப்பணி புரிதலே" எனத் தெளிந்து வரலாற்றுக் காலத்துக்கு முன்பிருந்தே சிவப்பணி செய்து வருகின்ற நாட்டுக் கோட்டை நகரத்தார்களும், அவர்களது சிவப்பணிகளும், சிவதர்ம பரிபாலனங்களும் நாளும் சிறந்து ஓங்கவும் இப்பொழுது நூற்றுண்டுவிழாக் கொண்டாடப் பெறுகின்ற காசி நாட்டுக்கோட்டை நகரச்சத்திரம் இன்னும் பல நூற்றுண்டு விழாக்கள் கொண்டாடப்பெற்று நல்லறம் பேணி விளங்கவும் அகிலலோக நாயகனுகிய **விசாலாக்ஷி அம்பா சமேத** விஸ்வநாதப் பெருமான் அருள் புரிவானுக! நலம் பெருகுக.

*With the best compliments of*

# AMBADI ENTERPRISES PRIVATE LTD.

52/53, Jehangir Street,

MADRAS-1.

# நூற்றாண்டு விழா

தமிழ்க்கடல் ராய. சொ.

நூற்றாண்டு விழா என்பது எளிதான ஒன்றல்ல. ஒரு நிலையம் கண்டு நூறு ஆண்டுகள் நிறைவுற வேண்டுமானால் அது விரைவில் நடக்கக்கூடிய காரியமல்ல. ஒவ்வோர் ஆண்டாக நூறு ஆண்டுகளைக் கடத்தல் வேண்டும். நூறு ஆண்டு என்று சொல்லும் பொழுது சுருக்கமாக இருக்கும். அது எவ்வளவு காலம் என்று எண்ணிப் பார்க்கும்போதுதான் அதன் பெருக்கம் தெரியும்.

ஒரு நிலையம் நூறு ஆண்டுகளைக் கடந்து நிற்பது என்பது மிக அரிய காரியம். உலகில் நூறு ஆண்டுகள் கடந்து நிற்கும் அறங்கள் மிகக் குறைவு. அப்படி நூறு ஆண்டுகளைக் கடந்து ஒரு நிலையம் நிலைத்துவிடுமானால் பின்னர் அந்நிலையம் ஆயிரக்கணக்கான ஆண்டுகளைக். கடந்து நிலைபெறுவதில் ஐயமில்லை.

தமிழ்நாட்டில் சிறப்புற வாழும் நாட்டுக் கோட்டைநகரத்தார் இந்திய நாட்டின் வட கோடியிலுள்ள புண்ணியத் திருத்தலமாகிய காசிமாநகரத்தில் 152 ஆண்டுகளுக்கு முன் அறம் செய்யத் தொடங்கினர். அந்த அறத்தை நிலைநிறுத்த நூறு ஆண்டுகளுக்கு முன் ஓர் கட்டிடத்தை எழுப்பினர். நாட்டுக்கோட்டை நகரத்தார் சத்திரம் என்ற அந்தக் கட்டிடம் பெருக்கம் பெற்று இன்று நிலவுகின்றது. அதினின்றும் நல்லறத்தை வளர்த்து வருகின்றார் நகரத்தார். காசி விசுவநாதப் பெருமானுக்கு நகரத்தார் இச் சத்திரத்தின் சார்பாக திருவனந்தல், உச்சிக்காலம், அர்த்த சாமம் ஆகிய மூன்றுபோதும் சிறப்பாகத் தமிழ் நாட்டு மேளத்துடன் வழிபாடு நடாத்தி வருகின்றனர்.

சத்திரத்தையொட்டி நகரேசுவரர் கோயில் என்ற பெயரோடு ஒரு நல்ல சிவன் கோயிலை நடத்தி வருகின்றார்கள். காசிச் சத்திரத்தின் தொடர்பாகக் காசி நகரத்தில் நல்ல நந்தவனம் ஒன்று நடைபெற்று வருகிறது. அதோடு கல்கத்தா, கயா, அயோத்தி, பிரயாகை, தாரகேசுவரம், காளிகட்டம், பஞ்சவடி, கோதாவரி ஆகிய எட்டு ஊர்களிலும் அறநிலையங்கள் நடைபெறுகின்றன. வட நாட்டில் இப்படியாக எவ்வளவோ காலமாக ஒன்பது ஊர்களில் நடத்தப்பெறும் அறத்தை யாரும் பாராட்டுவார்கள்.

தென்னாட்டில் நகரத்தார் கட்டிய கோயில்களும் செய்த வேறு பல அறங்களும் கணக்கிலடங்கா. பயண வசதிகள் இல்லாத அந்த நாளிலேயே வடநாடு சென்று இத்துணை இடங்களில் அறநிலையங்கள் கண்டது நகரத்தாரின் அறமன இயல்பைக் காட்டுகின்றது.

இரண்டு ஆண்டுகளுக்கு முன் காசி நகரம் சென்றிருந்தேன். அப்போது நகரச் சத்திரக் கட்டிடத்தில் கட்டிடம் நிறுவிய காலம் 1863 என்று பொறிக்கப் பெற்றிருந்ததைக் கண்டு நூற்றாண்டு நிறைவுற இன்னும் இரண்டு ஆண்டுகளே இருக்கின்றன என்று எண்ணி மகிழ்ந்து பாராட்டிச் சொன்னேன். அந்த இரண்டு ஆண்டுகள் முடிந்து நூற்றாண்டு விழாக் கொண்டாடி மலர் வெளியிடுவது கண்டு பேருவகை பூக்கின்றேன்.

நகரத்தார் பொதுவாகவும் தனித்தனியாகவும் சத்திரங்களும் கோயில்களும் பாடசாலைகளும் தமிழ் நாட்டில் ஏராளமாகக் கட்டியிருக்கின்றனர். தாங்கள் தொழில் கருதிச் சென்ற மலேயா, பர்மா, இலங்கை, இந்தோசைனா முதலிய நாடுகளிலும் கோயில்கள் நிறுவி மிக நல்ல முறையில் நடாத்தி வருகின்றனர். எனவே, அறம் நகரத்தாருக்குத் தொன்றுதொட்ட பரம்பரைச் சொத்து. இன்றைய காலநிலைக்கேற்பப் பல்கலைக் கழகங்கள், கல்லூரிகள், பள்ளிக்கூடங்கள்,

வைத்தியசாலைகள் முதலியவற்றையும் நிறுவி நகரத்தார் சமூகத்தைச் சேர்ந்தவர்கள் ஏராள மான பணத்தை வாரி வழங்குவதைக் காண் கின்றோம்.

பாண்டிய மன்னர்களுக்குப் பின் கோயில் திருப்பணிகளைப் பெருகிய அளவில் செய்து திருப்பணிச் செல்வர் என்ற பெயர் பெற்றவர் நாட்டுக்கோட்டை நகரத்தார். அதற்கு இன்று வானளாவி நிற்கும் எண்ணிறந்த கோபுரங் களும் கோயில்களும் சான்று பகர்கின்றன. கோயில்களிலெல்லாம் மிகப் பெரிது எனக் கருதப்படுகின்ற அழகிய மதுரைக் கோயிலின் செப்பனிடும் பணி இதுபோது நடந்துகொண் டிருக்கின்றது. எனவே, அக் கோயில் வரலாற்றை இங்குக் கூறுதல் பொருத்த முடைத்து.

**மங்கையர்க்கரசி வளவர்கோன் பாவை**
**வரிவ ளைக்கை மடமானி**
**பங்கயச் செல்வி பாண்டிமாதேவி பணி**
**செய்து நாள்தொறும் பரவப்**
**பொங்கழல் உருவன் பூதநாயகன் நால்**
**வேதமும் பொருள்களும் அருளி**
**அங்கயற்கண்ணி தன்னொடும் அமர்ந்த**
**ஆலவாய் ஆவதும் இதுவே,**

என்று திருஞானசம்பந்தப் பெருமான் ஆலவாய் அண்ணலைப் பாராட்டினர்.

**முளைத்தானை எல்லார்க்கும் முன்னே தோன்றி**
**முதிரும் சடைமுடிமேல் முகிழ்வெண் திங்கள்**
**வளைத்தானை வல்லசுரர் புரங்கள் மூன்றும்**
**வரைசிலையா வாசுகிமா நாணுக் கோத்துத்**
**துளைத்தானைச் சுடுசரத்தால் துவள நீருத்**
**தூமுத்த வெண்முறுவல் உமையோடு ஆடித்**
**திளைத்தானைத் தென்கூடல் திருவாலவ்வாய்ச்**
**சிவனடியே சிந்திக்கப் பெற்றேன் நானே,**

எனக் கூடற் பெருமானைத் திருநாவுக்கரசு அடிகள் பாடினர்.

**பண் சுமந்த பாடல் பரிசு படைத்தருளும்**
**பெண் சுமந்த பாகத்தன் பெம்மான் பெருந்**
**துறையான்**
**விண் சுமந்த கீர்த்தி வியன் மண்டலத்து ஈசன்**
**கண் சுமந்த நெற்றிக் கடவுள் கலி மதுரை**
**மண் சுமந்து கூலி கொண்டு அக்கோவால்**
**மொத்துண்டு**
**புண் சுமந்த பொன்மேனி பாடுதுங்காண்**
**அம்மானாய்,**

என்று மதுரைப் பெருமானைப் பாடி மகிழ்ந்தார் மணிவாசகப் பெருமான்.

இத்துணைச் சிறப்பு வாய்ந்த மதுரைக் கோயிலைப் பாண்டிய மன்னர்கள் எழுப்பி னார்கள். பின்னர் அக்கோயிலைப் பெரிது படுத்திப் பல அரிய பணிகளைத் திருமலை நாயக்கர் செய்தார். அதன்பின் நகரத்தார் செய்த பணி பெரிது. இன்று இக் கோயிலை ஓரளவு பழுது பார்ப்பதற்கே சுமார் இருபது லட்சம் செலவிடப்படுவதாக அறிகிறோம். இப் பணத்தை அளிப்பவர் பலர். இன்றைக்கும் திருமலை நாயக்கர் காலத்திற்கும் இடையில் இம் மதுரைக் கோயில் திருப்பணிக்கு நகரத்தார் வகுப்பைச் சேர்ந்த அமராவதிபுதூர் வயிநாகரம் குடும்பத்தார் இருபத்தைந்து லட்ச ரூபாய் செலவிட்டிருக்கின்றார்கள் என்பதை இக் காலத்தார் சிலர் அறியமாட்டார். ஆதலின் இங்கு நினைவுறுத்துகின்றேன். மொட்டைக் கோபுரத்தை முழுக் கோபுரமாக்கி, ஆடி வீதி முழுவதும் கருங்கல் பரப்பி, கல்யாண மண்டபம் கட்டி, திருமதிலைச் சுற்றிலும் இருந்த வீடுகளை யெல்லாம் அப்புறப்படுத்தி இரும்பு வேலி யெழுப்பி இன்ன பல பணிகள் செய்த பெருமை மேற்சொன்ன குடும்பத்தாரின் தனி உரிமை. அக் குடும்பத்திற் பிறந்து கல்வியிற் சிறந்து வாழ்ந்த பெரும் புலவர் அ. இராமநாதன் செட்டியார் அவர்கள் ஒரு சீட்டுக் கவியில்:—

**துஞ்சாத புகழ் மதுரை மீனாட்சி இறை சோம**
**சுந்தரேசர்க்கு**
**எஞ்சாத திருப்பணியைக் காற்கோடி பொருட்**
**செலவால் இயற்றியுள்ளோம்**

என்று பாடி மகிழ்ந்து பெருமைப்பட்டது பொருத்தமுடைத்து.

நகரத்தார் செய்த அறச் செயலுக்கு எடுத்துக்காட்டாக இன்றைய சூழ்நிலைக்கேற்ப இதைக் கூறினேன். நகரத்தார் அறப்பணி பலப்பல. அவற்றுள் மிக்க சிறப்புடைய ஒன்று காசிச் சத்திரம். காசியில் நகரத்தார் அறம் செய்யத் தொடங்கி 152 ஆண்டுகள் ஆனதும் நகரச் சத்திரத்திற்கு உரிய பெரிய கட்டிடம் கட்டப்பெற்று நூறு ஆண்டுகள் ஆனதும் மகிழ்ச்சிக் குரிய செயல்கள்.

நூறு ஆண்டுகளைக் கடந்து நூற்றாண்டு விழாக் காணும் இச் சத்திரம், இன்னும் பல்லாண்டு பல்லாண்டு பல்லாயிரத்தாண்டு, பல்கோடி நூறாயிரம் ஆண்டு கண்டு சிறப்புற்று ஓங்க விசாலாட்சியுடனாய பல்லாண்டென்னும் பதங்கடந்த காசி விசுவநாதப் பெருமான் அருள்வானாக.

★

# கண்டறியாதன கண்டேன்

தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான்
*(ஐ. ஏ. எஸ். ரிடையர்டு)*

கைலையைக் காண ஆசைப்பட்டார் அப்பர். அதுவும் இந்தப் பூத உடலோடேயே. ஆனால் அவருக்கு அந்தத் தள்ளாத வயதிலே அத்தனை தூரம் நடந்து சென்று கைலையைக் காண இயலவில்லை. அதற்காக ஏங்கினார். ஒரு நாள் அவரது கனவில் கைலாசபதியே எழுந்தருளி 'கைலையைக் காண நீ நீண்ட தூரம் நடக்க வேண்டியதில்லை, நீ தங்கி யிருக்கும் திருவையாற்றிலே உள்ள கோயில் திருக்குளத்திலேயே மூழ்கினால் கைலையைக் காணலாம்' என்று சொல்லிவிட்டு மறைகிறார். விடிந்ததும் அடியார்கள் புடைசூழ, அப்பர் ஐயாறப்பனும் அறம் வளர்த்தாளும் கோயில் கொண்டிருக்கும் அந்தக் கோயிலுக்குள்ளேயே நுழைந்து அங்குள்ள திருக்குளத்தில் முழுகு கிறார். அப்படி முழுகி எழுந்தபோது கைலையை நேரிலேயே காண்கிறார். அவர் கைலை சேர்ந்து கைலாசநாதனை அந்த லோகநாயகியுடன் கண்டு தொழுது பாடுகிறார்.

**மாதர் பிறைக் கண்ணியானை**
**மலையான் மகளொடும் பாடி**
**போதொடுநீர் சுமந்து ஏத்தி**
**புகுவார் அவர்பின் புகுவேன்**
**யாதும் சுவடு படாமல்**
**ஐயாறு அடைகின்ற போது**
**காதல் மடப்பிடி யோடும்**
**களிறு வருவன கண்டேன்**
**கண்டேன் அவர் திருப்பாதம்**
**கண்டு அறியாதன கண்டேன்.**

என்று கூத்தாடவே ஆரம்பித்துவிடுகிறார். ஆம், கைலையை, அங்குள்ள பெருமானையும் பெருமாட்டியையும் தெருவிலே வருகிற களிறிலே பிடியிலே, ஆடி வருகிற மயிலிலே பெடையிலே எல்லாம் கண்டு கண்டு மகிழ் கிறார். ஆம், சிவனும், சக்தியும் ஒன்றி நிற்கின்ற அந்த மாதிருக்கும் பாதியனையே அல்லவா கண்டுவிடுகிறார். இப்படி அப்பர் கண்ட கைலாச தரிசனம் ஞாபகார்த்தமாக ஐயாறப்பன் கோயிலுக்குள்ளே ஒரு சிறு கோயில் கைலாசநாதருக்கு.

இதைப் போலவே, அந்தக் காசி விஸ்வ நாதரும் விசாலாக்ஷியும், தமிழ் நாட்டுக் கோயில்களுக்குள் கோயில் தவறாமல் எழுந் தருளியிருக்கிறார்கள். இப்படி இவர்கள் தலம் தலமாக வந்து குடியேறுவானேன், விஷயம் இதுதான். நமது தமிழர்களுக்கு ஓர் ஆசை. இறப்பதற்கு முன் காசி சென்று, கங்கையில் மூழ்கி விசுவநாதரை — விசாலாக்ஷியைத் தரிசனம் செய்துவிட வேண்டும் என்று. ஏன்? அந்தக் காசியிலே இறந்தால் முத்தி நிச்சயம் என்பது நம்பிக்கை. ஆனால் எண்ணிய எண்ணத்தை நிறைவேற்ற, காலம், பொருளா தாரம், உடல் நலம் எல்லாம் இடந்தராமல் எத்தனையோ பேருக்குக் காசி செல்ல முடிகிற தில்லை. ஆதலால் அவர்கள் அந்த ஆசை நிறைவேற அவரவர்கள் இருக்கும் ஊரிலே உள்ள சிவன் கோயிலிலேயே விசுவ நாதரையும் விசாலாக்ஷியையும் பிரதிஷ்டை பண்ணி, வணங்கி, தங்கள் விருப்பத்தை நிறை வேற்றிக் கொள்கின்றனர். இமைப்பொழுதும் நெஞ்சைவிட்டு நீங்காத இறைவனைக் கோயிலில் வைத்துக் கும்பிட விரும்பும் பக்தர் களுக்கு, விசுவநாதன் காசியிலிருந்து விசாலாக்ஷியையும் அழைத்துக் கொண்டே வந்துவிடுகிறான். இப்படித்தான் தமிழ்நாட்டின் திருத்தலங்களில் எல்லாம் காசி விசுவநாதன் எழுந்தருளியிருக்கிறான். இப்படி 'டூப்ளிகேட்' காசி விசுவநாதர்களை எல்லாம் கண்டு தொழுத எனக்கு 'ஒரிஜினல்' விசுவநாதரையே கண்டு தொழும் ஆவல் எழுந்தது. அந்த ஆவல்

சென்ற ஆண்டில் என் வடநாட்டுத் திருத்தல யாத்திரையின்போது நிறைவேறவும் செய்தது.

காசி கங்கைக் கரையில் அமைந்த ஒரு திருத்தலம். பிரயாகையில், கங்கையும் யமுனையும் சரஸ்வதியும் சங்கமம் ஆகும் அந்தத் திரிவேணி சங்கமத்தில் நீராடிவிட்டு மேல் நடந்து காசிக்கு வந்தோம், நானும் நண்பர்களும். அங்கு கேதார கட்டத்தில் உள்ள திருப்பனந்தாள் குமாரசாமி மடத்தில் தங்கினோம். கங்கையில் பல தீர்த்தக் கட்டங்கள், முக்கியமான கட்டங்கள் சில வற்றில் நீராடினோம். படகு ஒன்று ஏற்பாடு செய்துகொண்டு எல்லாக் கட்டங்களையும் சென்று கண்டோம். கடைசியில் உச்சி வேளையில் காசி விசுவநாதர் ஆலயத்திற்கும் சென்றோம். மிகவும் குறுகிய தெருவின் வழியாகத்தான் கோயிலை அடைய முடிந்தது. கோயில் சிறிய கோயில்தான். ஆனால் எண்ணிறந்த பக்தர்கள்—மக்களும் மாக்களும் சேர்ந்தே கோயிலுள் செல்கிறார்கள் வணங்கு கிறார்கள் வருகிறார்கள். விசுவநாதர், ஜோதிர் லிங்கங்களில் ஒருவர் ஆயிற்றே. அவர் ஏதோ பிர்மாண்டமான வடிவில் இருப்பார் என்று எண்ணிக்கொண்டேதான் உள்ளே சென்றோம்; ஆனால் சிறிய வடிவிலே ஒரு மூன்று அடிச் சவுக்கமுள்ள ஒரு குழியினுள்ளே லிங்க உருவில் இருக்கிறார். நம் நாட்டுக் கோயில்களில் இருப்பது போல ஆவுடையாரில் எழுந்தருளி யிருக்கமாட்டார் அவர். அவரை அணுகி நாமே மாலை அணிவித்து அபிஷேகம் செய்து வழிபாடு செய்யலாம். அவரைத் தீண்டி மேனி புளகிக்கலாம். இது எல்லாம் புது அனுபவம் என்றால், இதைவிட ஒரு பெரிய புதிய அனுப வமும் கிடைத்தது எங்களுக்கு. எட்டாத் தொலைவில் உள்ள இக் காசி விசுவநாதருக்குத் தினசரி மூன்று நான்கு ஆராதனைகள் தமிழ் மக்கள் சார்பில் செட்டி நாட்டு அன்பர்களே நடத்துகின்றனர். உச்சிக்கால ஆராதனை யையே நாங்கள் காணும் பேறு பெற்றோம். அச்சமயம் அங்குள்ள பண்டாக்களுடன் நம் நாட்டு அர்ச்சகர்கள் கருவறையுள் புகுந்து காசி விசுவநாதரை அலங்கரிக்கின்றனர். வெள்ளெ ருக்கம் சடைமுடியான் என்பதற்கேற்ப, எருக்க மாலைகளையும் அவர் தலையில் சூடுகின்றனர். நம் நாட்டுச் சோற்றுடன் வடநாட்டு ரொட்டியை யும் நைவேத்தியப் பொருளாக வைக்கின்றனர். மணி அடிக்கிறது, திரை திறக்கிறது, கற்பூர ஆராதனை நடக்கிறது. இக் காட்சி கண் கொள்ளாக் காட்சியாக இருக்கிறது. எனக் கிருந்த ஒரு குறை அச்சமயம் தேவாரப்பாடல் அங்கு ஒலிக்கவில்லையே என்பதுதான். ஆனால் வெள்ளிக்கிழமை இரவு காசி விசுவ நாதர் சந்நிதியில் தேவாரம் பாட, திருப்பனந் தாள் மடத்து அதிபர் ஏற்பாடு செய்திருக்கிறார் களாம். அது போதாது. ஒவ்வொரு ஆராதனை யிலுமே தேவாரப் பாடல்கள் காசி விசுவநாதர் சந்நிதியில் ஒலிக்க வேண்டும். கண்டறியாதன கண்டோம் என்று குதூகலிப்பதுடன் கேட்டறி யாதன கேட்டோம் என்று எல்லோரும் பெரு மிதம் அடைய வேண்டும்.

நம் நாட்டுத் தலங்களில் அர்ச்சகர் களாலும் தீண்டாத் திருமேனியோடு விளங்கும் இறைவன், இங்கு எல்லோராலும் தீண்டும் திருமேனியோடு விளங்குகிறான் என்றால் எவ்வளவு எளியவனாக அவன் பக்தர்களுக்காக இரங்குகிறான் என்று தெரிந்து கொள்ளலாம் தானே. இப்படி 'எம்மானாக, எளிவந்த பிரானாக' எல்லாம் விளங்கும் காசி விசுவ நாதனோடு கோயில் கொண்டிருப்பவளே விசாலாக்ஷி. காஞ்சி காமாக்ஷியுடனும், மதுரை மீனாக்ஷியுடனும் ஒருங்கு வைத்து எண்ணப்படு கிறவள். மீனாக்ஷி விழித்த கண் விழித்தபடியே இருந்து அருள் புரிகிறவள் என்றால், இவள் கண்களை அகலத் திறந்து விரிந்த அருளையே அன்பர்களுக்குக் கொடுக்க வல்லவள் ஆகிறாள். ஆனால் காசியில் உள்ளவர்கள் இவளை விசாலாக்ஷி என்று வணங்குவதோடு அன்னை அன்னபூரணி என்றும் தொழுகிறார்கள். உண்மைதானே. மக்கள் பசிப்பிணி அகற்று வதுதானே அன்னையின் கடமை. 'உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே' என்ற உண்மைக்கு நிதரிசனமாக, பத்து மாதம் தன் வயிற்றில் சுமந்து, தன் இரத்தத்தாலேயே வளர்த்துப் பின் பெற்றெடுத்து, தன் முலைப் பாலால் அமுதூட்டி அதன்பின், உண்ண உணவை எல்லாம் அருளும் அன்னையை அன்னபூரணி என்று சொல்லுவதில்தான் எவ்வளவு பொருத்தம்.





COLLAPSIBLE GATE

# பர்மா நாட்டுக்கோட்டைச் செட்டியார் சங்கம்

## நிறுவியது 1923

ஆர். ரங்கனுதன் செட்டியார்,
*தலைவர், நாட்டுக்கோட்டைச் செட்டியார்கள் சங்கம், பர்மா.*

நமது சங்கம் ருத்ரோத்காரி வருஷம் ஆவணி மாதம் 7உ (23-8-1923) அன்று மங்களகரமாக ஸ்தாபிக்கப்பெற்றது. சங்கத்தைத்திறந்து வைத்த கனம் ஜே. ஆர். தாஸ். பாரிஸ்டரவர்கள் "சங்கம் மிக்க மேன்மையுடன் வாழக்கடவதென்று" ஆசீர்வதித்து முகவுரை கூறினுர்கள். சங்கம் 1924-25-ம் வருஷத்தில் 6-வது நம்பராக 1860-ம் வருஷத்துசொசைட்டி ரிஜிஸ்ட்டரேஷன் சட்டப்படி பதிவு செய்யப் பெற்றுள்ளது. திரு. அ. க. அ. முத்தையா செட்டியார் தலைவராகவும் சா. ராம. மு. சித. மு. வெங்கிடாசலம் செட்டியார் உப-தலைவராகவும், தீ. சொ. நாகப்ப செட்டியார் காரியதரிசியாகவும், அழ. அரு. சுப்பிரமணியன் செட்டியார் பொக்கிஷதாராகவும் மேலும் சா. அ. ச. இராமன் செட்டியார் முதலிய 17 பேர் நிர்வாக சபை அங்கத்தினர்களாகவும் கொண்டு தோன்றிய இச் சங்கம் இதுவரை 40 ஆண்டுகள் வாழ்ந்து 41-வது ஆண்டில் புகுந்துள்ளது.

முதலாவது அறிக்கையில் தெரிவித்துள்ள படி நம்மவர்களின் நன்மையையும் வியாபார அபிவிருத்தியையும் பாதுகாக்கவும் நமக்கேற்படக்கூடிய குறைகளை நேரிலாவது மனுமூலமாவது கவர்ன்மெண்டாருக்கு அறிவிக்கவும், நம்மவர்கள் சம்பந்தப்பட்ட விஷயங்களில் நமது நோக்கங்களையும் அபிப்பிராயங்களையும் வர்த்தமானப் பத்திரிகைகள் அல்லது துண்டுப்பிரசுரங்கள் மூலமாக வெளியிட்வும் ஏற்பட்ட இச் சங்கம் தனது கடமையை மிகவும் செவ்வனே நிறைவேற்றி வந்திருக்கிறது. சங்க நடவடிக்கைகளில் நம்மவர்கள் எல்லோரும் ஆர்வத்துடன் பங்கு கொண்டு வந்துள்ளார்கள்.

நீண்டகாலம் பதவி வகித்துச் சங்கத்தை ஊக்குவித்தவர்கள் திரு. சா. அ. ச. ராமன் செட்டியார், திரு. அ. மு. மு. வெள்ளையஞ் செட்டியார், திரு. ஆர். ரங்கனுதன் செட்டியார் முதலியவர்கள் ஆவார்கள். சா. அ. ச. ராமன் செட்டியார் முயற்சியில் வெயன் வட்டி எடுபட்டு வட்டி விகிதம் குறைக்கப்பெற்றதும், அ. மு. மு. வெள்ளையஞ் செட்டியார் முயற்சியில் குடியாண்மைச்சட்டம் கோர்ட்டுமூலம் தள்ளுபடி செய்யப்பெற்றதும் மறக்க முடியாதது.

நீண்டகாலம் உத்தியோகம் வகித்து சங்கத்திற்கு மிகவும் தொண்டு செய்தவர்கள் திரு. எஸ். கே. நாராயண அய்யர், திரு. பத்மனுபராசு, திரு. ஹரிஹர அய்யர், திரு. சொ. சுப. சுப்பிரமணியன் செட்டியார். சுப. தனுஷ்கோடி முதலியவர்களாவர்.

தம்பி என்ற முகம்மதியர், சங்கம் தோன்றிய காலம் முதல் சங்கத்தில் வேலை பார்த்து 1953 ஆம் ஆண்டு இறைவன் திருவடி சேர்ந்தார். அவருடைய மக்கள் இப்போது சங்கத்தில் வேலைபார்த்து வருகிருர்கள்.

சங்கத்தின் சட்டதிட்டங்கள் விரிவாகத் தயாரிக்கப்பெற்று 1936 ஆம் ஆண்டு நவம்பர் மாதம் 30உ அகில பர்மா நாட்டுக்கோட்டைச் செட்டியார்கள் மாநாட்டில் ஒப்புக்கொள்ளப் பெற்று அமுலிலிருந்து வருகிறது.

சங்கத்தின் சார்பில் 'தனவணிகன்' என்ற வார இதழ் ஆங்கிரச ஆண்டு மாசி மாதம் 26உ (9-3-1933)ல் தொடங்கப்பெற்றுப் பல்லாண்டுகள் வெளியிடப் பெற்றது. தனிச் சந்தா இல்லாமல் சங்க உறுப்பினர்களுக்கு வழங்கப்பெற்று வந்தது. இதில் நகரத்தார்கள் சம்பந்தமான எல்லாப் பிரச்னைகளும் விளக்கப் பெற்றதுடன் வியாபார சம்பந்தமான விளக்கங்கள், அறிக்கைகள், சர்க்கார் இலாகாக்களின் அறிக்கைகள், உலகச்செய்திகள் எல்லாம் இடம் பெற்றன. பலகாலம் கோட்டையூர் அ. ராம. அ. கருப்பஞ் செட்டியார் (ஏ. கே. செட்டியார்) ஆசிரியராகப் பணியாற்றினார்கள். விசு ஆண்டு ஆவணி மாதம் 12உ (28-8-1941) இரண்டாவது உலகப் போர் காரணமாக இப்பத்திரிகை நிறுத்திவிடப்பெற்றது.

சங்கம், விதிகளுக்கேற்ப பர்மாவில் தொழில் செய்யும் அல்லது ஸ்தாவர சொத்துக்கள் வைத்திருக்கும் எல்லா நாட்டுக் கோட்டைச் செட்டியார்களையும் அங்கத்தினர்களாகக் கொண்டு நடத்தப்பெற்று வருகிறது. சாதாரண பொதுக் கூட்டம் ஆண்டுக்கு ஒருமுறையும்அவசியத்தை ஒட்டி பலவிசேஷப் பொதுக்கூட்டங்களும் கூட்டப்பெறுகின்றன. இரங்கூனில் அறைக்கு ஓர் அங்கத்தினர் வீதமும், நாட்டுப்புறங்களில் ஏழு கடைகட்கு மேற்பட்ட ஊர்களில் ஏழு கடைகட்கு ஓர் அங்கத்தினர் வீதமும், ஏழு கடைகட்கு குறைவாக உள்ள ஊர்களில் ஊருக்கு ஓர் அங்கத்தினர் வீதமும் தேர்ந்தெடுக்கப்பெற்ற நிர்வாகசபை சாதாரணமாக மூன்று மாதங்களுக்கு ஒரு முறையும் மேற் கொண்டு அவசியத்தைப் பொருத்தும் கூடி நிர்வாகத்தை மேற்கொள்ளுகின்றது. நிர்வாக சபையிலிருந்து ஒரு தலைவரும், ஒரு உப-தலைவரும், இரண்டு காரியதரிசிகளும், ஒரு உப-காரியதரிசியும் மேலும் ஆறு அங்கத்தினர்களும் கொண்ட காரியசபை தேர்ந்தெடுக்கப்பெற்று மாதம் ஒரு முறை அல்லது அவசியம் நேர்ந்தபோதெல்லாம் கூடி அவ்வப்போதுள்ள வேலைகளைத் திறம்படச் செயலாற்றி வருகின்றது. அங்கத்தினர்களிலிருந்து தேர்ந்தெடுக்கப்பெறும் இரண்டு கணக்குப் பரிசோதகர்களும் கணக்குகளை மூன்று மாதத்திற்கு ஒருமுறை தணிக்கை செய்து அறிக்கை சமர்ப்பிக்கிறார்கள்.

1935 ஆம் வருஷத்திய பர்மா அரசியல் சட்டப்படி நம் சங்கத்திற்கு அரசாங்க சட்டசபையில் ஓர் இடம் கொடுக்கப்பெற்றது. நம் பிரதிநிதியாக அதை, திரு. அ. மு. மு. வெள்ளையஞ்செட்டியாரவர்கள் வகித்தார்கள். இரங்கூன் (நகரசபை) கார்ப்பரேஷனில் நம் சங்கத்திற்கு ஒதுக்கப்பெற்ற ஸ்தானத்தில் திரு. அ. க. அ. சித. அள. சிதம்பரஞ் செட்டியாரவர்கள் அங்கம் வகித்தார்கள். யுத்த ஆரம்பம் வரை இந்த இரண்டு பதவிகளும் திறம்பட வகிக்கப்பெற்று வந்தன. திரு. வெள்ளையஞ் செட்டியாரவர்கள் முயற்சியால் நிலச்சுவான்தாருக்குப் பாதகமான நிலச்சட்டங்கள் ஓரளவு சுணக்கப்பெற்று வந்தது குறிப்பிடத்தக்கது.

யுத்தத்திற்குப் பிறகு பர்மாவில் அரசியல் நோக்கும் பொருளாதார நோக்கும் பலவிதமாக மாறி, சொத்துரிமையாளர்களுக்குப் பாதகமாகப் பல சட்டங்கள் இயற்றப்பெற்ற போதும் நம் சங்கம் தன்னுடைய கடமையைச் சரிவரச் செய்து நம்மவர்களுக்கு இணங்கிய வரை ஆலோசனைகள் தெரிவித்தும் உதவிகள் செய்தும் வந்தது. 1948 ஆம் வருஷத்தில் நிலம் தேசியமாக்கும் சட்டம் பிறப்பிக்கப்பெற்றது. அதன்படி நஷ்ட ஈட்டையும் பட்டுவாடா முறையையும் நிர்ணயிக்க, பத்துப்பேர் கொண்ட கமிஷன் ஒன்று நியமிக்கப்பெற்றது. அதில் நம் சங்கப் பிரதிநிதியாக திரு. சொ. சுப. சுப்பிரமணியன் செட்டியார் அங்கம் வகித்தார்கள். சங்க முயற்சியில் பர்மா கவர்ன்மெண்டுடன் சமரசம் பேசி நஷ்டஈட்டைக் கூடுதலாகப்பெற வேண்டி இந்திய அரசாங்கச் சார்பில் இரண்டு தூதுகோஷ்டிகள் வந்தன. அவர்களுக்கு வேண்டிய தகவல்கள் எல்லாம் சேகரித்துக் கொடுத்து பர்மிய அரசினருடன் சமரசம் பேசச் செய்தோம். தூது கோஷ்டியில் இந்தியாவிலுள்ள நம் நகரத்தார்கள் மிகமிக அக்கறை காட்டிப் பல பிரதிநிதிகளை அனுப்பி வைத்தனர்.

முதலாவது தூதுகோஷ்டிக்குப் பர்மாவில் இந்தியத் தூதுவராக இருந்த டாக்டர் ரவூப்

அவர்களும் இரண்டாவது தூதுகோஷ்டிக்கு அப்போது இந்தியத் தூதுவராக இருந்த கே. கே. செட்டூர் அவர்களும் தலைமை வகித்தார்கள். தூதுகோஷ்டிகள் தங்களால் இயன்ற அளவு முயற்சி செய்தார்கள். பர்மிய அரசாங்கத்தின் கொள்கை அதிகமாக மாறவில்லை.

பர்மா நகரத்தார்களின் பிரச்சினை, நிலம் தேசியமாக்கும் சட்டம், சேவா குத்தகை நிர்ணயச்சட்டம், குடியாண்மை விநியோகச் சட்டம், விவசாயிகள் கடன் நிவாரணச்சட்டம், அயல்நாட்டுச் செலவாணிச் சட்டம் முதலிய சட்டங்களால் அதிகமாகப் பாதிக்கப்பட்டபடியால் நம் சங்கத்திற்கு பல விதங்களில் உதவி புரிய இந்தியாவில் பர்மா நாட்டுக்கோட்டைச் செட்டியார்கள் சங்க இந்திய ஆலோசனைக் கமிட்டி 23-1-1948-ல் செட்டி நாட்டு ராஜா சர். மு. அ. முத்தையா செட்டியாரவர்களைத் தலைவராகவும், தேவகோட்டை அழ. சுப. பள. சுப்பிரமணியன் செட்டியாரவர்கள், மிதிலைப்பட்டி ந. பழ. சித. முத்தையா செட்டியாரவர்கள், சக்கந்தி உல. கயி. ராம. ராமனுதன் செட்டியாரவர்கள், பள்ளத்தூர் அ. மு. மு. முருகப்ப செட்டியாரவர்கள் உப—தலைவர்களாகவும், கானாடுகாத்தான் மு. சித. மு. சிதம்பரஞ்செட்டியாரவர்கள் பொக்கிஷதாரராகவும், கானாடுகாத்தான் சா. ராம. சித. அ. அண்ணாமலை செட்டியாரவர்கள், பள்ளத்தூர் சொ. மு. ராம. சோலையப்ப செட்டியாரவர்கள், கானாடுகாத்தான் க. வெ. ராம. அழகப்ப செட்டியாரவர்கள் காரிய தரிசிகளாகவும்கொண்டு தொடங்கப்பெற்று பல வருஷங்கள் திறம்பட தன்னுடைய வேலையைச் செய்து வந்தது. பலமுறை பிரதிநிதிகள் புது டெல்லிக்குப்போய் இந்திய அரசாங்கத்தினரிடம் நம் கோரிக்கைகளைத் தெரிவித்துக் கொண்டார்கள். பர்மாவிற்கும் விஜயம் செய்து பர்மா அரசாங்கத்தினரிடம் எடுத்துச் சொன்னார்கள். அவர்களுக்கு நாம் மிகவும் கடமைப்பட்டுள்ளோம்.

பர்மாவில் இப்போது அயல் நாட்டவர்களுக்கு இருந்த சலுகைகள் எல்லாம் நிறுத்தப் பெற்று வருகின்றன. லேவாதேவித் தொழில் செய்யும் உரிமை, இந்தியாவிற்குப் போய்வர ரி-என்ட்ரி பெறும் உரிமை, குடும்பச் செலவுக்கு பணம் அனுப்பும் உரிமை எல்லாமே நாளடை

## காசியில் கருடனும் பல்லியும்

இலங்கையில் இராவணனைக் கொன்று மீண்ட இராமர், தம் பாவத்தைப் போக்கிக்கொள்ள விரும்பி, இராமேச்சுரத்தில் சிவலிங்கப் பிரதிட்டை செய்து வழிபடக் கருதினர். சிவலிங்கம் ஒன்று கொண்டு வரும்படி அனுமாரைக் காசிக்கு அனுப்பினர்.



அனுமார் காசிக்குச் சென்றார். அங்கே கருடன் வட்டமிட்டுப் பறந்ததும், பல்லி திருவுளம் சொல்லியதுமான இடத்தில் உள்ள சுயம்பு லிங்கத்தை எடுத்துக் கொண்டு இராமேச்சுரம்திரும்பினர்.

காசியும் அதன் சுற்றுப்புறமும் வயிரவர் காவலுக்கு உரியவை. வயிரவர் இசைவு இன்றி இலிங்கத்தை எடுத்தபடியால் அனுமாருக்கும் வயிரவருக்கும் போர் மூண்டது.





அப்பொழுது அனுமார் கருடன் வட்டமிட்டதையும், பல்லி திருவுளம் சொல்லியதையும் கூறினர்.

அதுகேட்ட வயிரவர், அன்று முதல் கருடனும் பல்லியும் காசியில் பறக்கவும், திருவுளம் சொல்லவும் கூடாது என்று சாபமிட்டார். இன்றும், காசியில் கருடன் பறப்பதில்லை. பல்லி திருவுளம் சொல்லுவதுமில்லை.

## முருகன் பொலிவு



'முத்தமிழால், வைதாரையும் அங்கு வாழ வைப் போன்' என்னுந் திருவாக்கால் தமிழுக்கும் முருகனுக்கு முள்ள இயைபு நன்கு விளங்குதல் காண்க.

தமிழ்மொழி பேசும் அன்பர்களே! உங்களுக்கும் முருகனுக்குமுள்ள தொடர்பை உன்னுங்கள்; உங்கள் மொழியின் மாண்பை உணருங்கள்; இவ்வினிய மொழியால் முருகனைப் பாட்டால் பாடி மகிழ எழுங்கள்; இயற்கையில் முருகன் தமிழாய்ப் பொலிவதைப் பாருங்கள்; இன்ப நுகருங்கள்.

— திரு. வி. க.

---

வில் நீக்கப்பட்டு விட்டன. சங்கம் இத்துறைகளில் எல்லாம் தன்னுலான முயற்சியைச் செய்தது. இன்னும் செய்து வருகிறது.

நிலங்களைத் தேசியமயமாக்கியதற்கு சர்க்கார் ஓரளவு நஷ்டஈடு கொடுத்து வருகிறுர்கள். பல நிலச் சுவான்தார்களுக்குப் பர்மாவில் பிரதிநிதிகள் இல்லாமல் இருப்பதால் சங்கத்து மூலம் நஷ்டஈடு பெற விரும்புபவர்களிடம் பவர்பெற்று அவர்களுக்காக இரங்கூனிலோ அல்லது ஜில்லாப்புறங்களிலோ நஷ்டஈடு மனுக்கள் தாக்கல் செய்து விசாரணைக் காலங்களில் ஆஜராகி மனுவை ருசுச்செய்து நஷ்டஈடு பெற்று வருகிறது. பிறகு பர்மிய அரசாங்கத்திற்கு மனுச் செய்து அவர்கள் கேட்கும் தஸ்த்தவேசுகளை வரவழைத்துக் கொடுத்துஎக்ஸ்சேஞ்சு கண்ட்ரோல் ஆர்டர் வாங்கிப் பணங்களை இந்தியாவிற்கு அனுப்பி வருகிறது. அதுபோல் சுமார் 1500 நிலச்சுவான்தார்களுக்கு நம் சங்கம் பிரதிநிதியாக இருந்து வருகிறது. பர்மாவில் வேறு தொடர்பு இல்லாத பல நிலச்சுவான்தார்களுக்கு இதனுல் பெரும்பயன் ஏற்பட்டுள்ளது.

பர்மாவில் நகரத்தார்களின் எண்ணிக்கை குறைந்து கொண்டே வருகிறது. அவர்கள் ஏற்றிருந்த பொறுப்புக்களில் ஒரு பகுதியைச் சங்கம் ஏற்றுப் பணியாற்றி வருவது அவ்வப்போது அறிக்கைகள் மூலம் தெரிவிக்கப்படுகிறது.

இவ்வாண்டில் திருவாளர்களான தலைவர் ஆர். ரங்கனுதன் செட்டியார், உப-தலைவர் சி. ராம. நா. நா. ராமசாமி செட்டியார், காரியதரிசிகள் சொ. சுப. சுப்பிரமணியன் செட்டியார், சுப. மு. நா. குமரப்ப செட்டியார், உப-காரியதரிசி சுப. மு. அண் சன்ஸ் க. வே. சீனிவாசன் செட்டியார், கணக்குப் பரிசோதகர்கள் ராமானுஜம் அண் கோ நாராயணன் செட்டியார், கண. சொ. ராமனுதன் செட்டியார் இவர்கள் பதவி யேற்றுப் பணியாற்றி வருகிறுர்கள்.

# தண்ணீர்மலை யாண்டவர் தைப்பூச விழா

பினங்கு, தண்ணீர் மலையாண்டவரின் அடிவாரக் கோயில் 1857 - ம் ஆண்டு டிசம்பர் மாதம் 12-ம் நாள் நாட்டுக் கோட்டைச் செட்டியார்களால் நிறுவப் பெற்றது. இவ்வாலயத்தின் மேற் புறம் அமைந்துள்ள குன்றும், பூங்காவும் இயற்கையின் எழிலைக் காட்டுகின்றன...மேற்புறம் ஓடிவரும் ஆற்றின் அண்மையில் அவ்வாற்றைத் தனக்குள் அடக்கிய தோட்டம் ஒன்றுண்டு. அதில் நகரத்தார் விழாக் காலங்களில் தங்குவதற்காக ஓர் அழகிய கட்டிடமும், நந்தவனமும் அமைத்திருக்கிறார்கள். இவ்வியற்கைத் தோற்றங்களின் எல்லைக்குள் மயிலேறும் பெருமானுக்கு அமைக்கப்பெற்றிருக்கிறது பெரியதோர் ஆலயம். அதனுள் பழநிமலையில் இருப்பதைப்போல பார்வதி பாலன், பத்த ருக்குற்றவன், பால தண்டாயுதன், தண்ணருட் சீலன், தண்ணீர்மலை யாண்டவன் தங்கி யிருக்கின்றான்...இச் சிறப்பு வாய்ந்த இளங் குமரனுக்கு ஏராளமான விழாக்களை நகரத்தார்கள் நடத்துகிறார்கள். அவைகளில் தைப்பூச விழாச் சிறந்தது. அவ்விழா வன்று பினங்கு நகரத்திலுள்ள மக்கள் பல்லோரும் அங்கு வந்து கூடி விடுவர். அவர்களோடு வெளியூர் அன்பர்கள் பலர் வந்து சேருவர். இவர்கள் அனைவோரையும் வரவேற்று உபசரிப்பார்கள் நாட்டுக்கோட்டை நகரத்தார்.

இவ்விழா நான்கு நாட்கள் கொண்டாடப்பெறும். அந்நாட்களில் தைப்பூசத்துக்கு முதல் நாள் காலை பினங்கு ஸ்ட்ரீட்டில் நகரத்தார்களால் அமைக்கப் பெற்றுள்ள தனது ஆலயத்திலிருந்து சக்திவடிவேலன் வெள்ளி ரதமேறி வீதிகளில் உலாக் கொள்வான். அப்போது மாசற்ற வெண்டாமரை மலரைப் போன்று பல வயிர அணிகளால் அலங் காரங் கொண்ட கந்தனை அன்பர்கள் பல்லோர் சூழ்ந்து வருவர். சிலர் காவடி தூக்குவர்! சிலர் தேவார திருவாசகங்களை ஓதுவர்! சிலர் பஜனை பாடுவர்! சிலர் பூதங்களைத் தூக்கி ஆடுவர்! பலர் பல வாத்தியங்களை முழக்குவர்! பலர் ஆலவட்டம், சுருட்டி, குடை தோரண விருதுகளைப் பிடிப்பர்! பல போலீஸ் வீரர் எல்லாவற்றையும் பாதுகாப்பர்! அத்துடன் ஒரு தெருச் சந்திப்பில் புறப்பட்ட இரதம் மறு சந்திப்பைச் சேரும்வரை அந்த வழியில், கார், ரிக்ஷா, டிராம், பஸ்கள் வராமல் தடுப்பர்! எலக்டிரிக், டிராம் கம்பெனிக் காரர் மின்சாரக் கம்பிகள் இரதத்தின் மேற்படா வண்ணம் தங்கள் ஆட்களைக் கொண்டு தூக்கிக் கொடுப்பர்! இவ்வைபவங்களோடு இரதம் செல்லும் வீதிகள் எங்கும் முனிசிபா லிட்டியார் தண்ணீர் தெளிப்பர். இத்தகைய சிறப்புடன் விழாக் கொண்ட கந்தன் பகற் போதில் தண்ணீர் மலையிலுள்ள தனது ஆலயத்தைச் சார்ந்து தன்னை நாடிவரும் அன்பர் களுக்குத் தண்ணருள் சுரப்பான். அவனை நாடிவரும் அன்பர்களுக்கும் விழாக்காண வரும் மேலோர்களுக்கும் அங்கு நகரத்தார்களால் அன்னமளிக்கப் பெறும்.

—சுங்குரும்பை, திரு. பெ.நா.மு. முத்துப் பழநியப்பசெட்டியார், ஜே. பி.,
அவர்கள் இயற்றிய 'மலாயாவின் தோற்றம்' பக். 111 - 113. (1938)

# கம்பை தனவைசியர் கல்விக் கழகம், இரங்கூன்

**நிறுவியது 1928**

ப. மு. முத்தையா செட்டியார், *தலைவர்*
சுப. க. அ. நா. நல்லப்ப செட்டியார், *காரியதரிசி*

**நம்** தாயகத்திலிருந்து பொருளீட்டும் நோக்கத்தில் வந்து பர்மிய நாட்டின் தொடர்பு கொண்டுள்ள நம்மவர்களில் நம் சமூக இளைஞர் சங்கத்தின் நற்பெரு முயற்சியால் அறம் வளர்க்கும் நமது நாட்டுக்கோட்டைச் செட்டியார்கள் சலியாது வாரி வழங்கிய நன்கொடை நிதியைக் கொண்டு இற்றைக்கு 35-ஆண்டுகளுக்கு முன்னர் இந்தக் கல்விக் கழகம் நிறுவப்பெற்றது.

இக்கழகத்தின் அலுவலகம் மொகல் வீதி 74ஆம் இல்லத்தில் இருந்து வருகிறது.

இதன் நோக்கம் "நமது நாட்டுக்கோட்டைச் செட்டியார் சமூகப் பிள்ளைகளுக்கு, மதானுசார தேசானுபவ முறைகளைப் பயிற்றுவிக்கும் பாடசாலைகளைப் பர்மாவிலாவது இந்தியாவிலாவது ஸ்தாபிப்பது."

நமது கழகம் அதன் தோற்றுவாய் நோக்கத்திற் கிணங்க நமது நாட்டுக்கோட்டைச் செட்டியார் சமூகச் சிறுர்களின் கல்வி அபிவிருத்தி கருதி, பர்மாவின் தலைநகராகிய இரங்கூனில் மூன்றும் வகுப்பு வரையுள்ள ஓர் ஆரம்பப் பள்ளிக்கூடம் நிறுவி ஏறத்தாழ 60-மாணவர்களுக்கு ஆங்கிலம்—தமிழ்ப் பாடங்கள் கற்பிக்கப் பெற்று வந்தன.

சிறுவர்களின் எண்ணிக்கை கூடிவர ஆரம்பித்த காரணத்தாலும், நம் சமூகம் முன்னேற்றமடைவதற்கு இத்தகையதொரு நிறுவனம் வளம்பெற்றுயர்ந்து விளங்கச்செய்வது நன்மை பயக்கும் என்ற உயர்ந்த நோக்கத்தாலும், தலைநகரிலிருந்து சுமார் 6-மைல் தூரத்திலுள்ள "கம்பை" என்கிற ஊருக்கு அப்பள்ளிக்கூடம் மாற்றப் பெற்றது. மாணவர்களின் எண்ணிக்கைக்கும் வகுப்புகள் உயர்வுக்கும் தகுந்தவாறு தேவையான இடவசதியும், கட்டிடங்களும் அமைத்துக் கொள்ளப்பெற்றன. மாணவர்கள் படிப்பதற்கும், இருப்பதற்கும், சாப்பிடுவதற்கும், விளையாடுவதற்கும் தேவையான எல்லா வசதிகளும் செய்து கொடுக்கப்பெற்றன. ஆசிரியர்கள், வேலைக்காரர்கள் வசிப்பதற்குக் கட்டிடங்களும் கட்டிக் கொடுக்கப் பெற்றன.

மாணவர்கள் தக்க வயதோடு மேல்படிப்புகளைத் தொடர்ந்து படிப்பதற்கு உதவியாக ஆறு மாத காலத்திற்கு ஒரு முறை இறுதித் தேர்வுகள் நடைபெறச் செய்து, வகுப்பு மாற்றம் அனுமதிக்கப்பெற்றது. இதனால் பள்ளிக்கூடம் தொடங்கிய இரண்டாம் ஆண்டிலேயே உயர்நிலைப்பள்ளியாக அமைந்து விட்டது. 1933-ஆம் ஆண்டு ஜூன் மாதத்தில் "செட்டியார்ஸ் ரெசிடென்ஷியல் ஹைஸ்கூல்" என்ற பெயரால் அரசாங்கக் கல்வித்துறையினரிடம் பதிவு செய்து கொள்ளப்பெற்றது.

முதல் முறையாக 1934-ஆம் ஆண்டில் ஹைஸ்கூல் பைனல் தேர்வு எழுதிய நமது

பள்ளிக்கூட மாணவர்கள் மூவரும் தேர்வு பெற்றது, நமது பள்ளியின் ஆட்சிச் சிறப்பையும் மாணவர்களின் திறமையையும் எடுத்துக் காட்டுவதாகும்.

நமது பள்ளிக்கூடம் தொடர்ந்து நல்ல முறையில் நடைபெற்று வந்தமையால், அதில் கற்ற மாணவர்களில் பெரும்பாலோர் பட்டதாரிகளாகவும் நல்ல அறிஞர்களாகவும் திகழ்வது குறித்து நமது கல்விக் கழகம் மிகவும் பெருமையடைகிறது.

காலப்போக்கை அனுசரித்து நமது பள்ளியில் இந்திய பர்மிய ஏனைய சமூகச் சிறுர்கள் "டே ஸ்காலர்களாக"வும் "போர்டர்களாக"வும் அனுமதிக்கப் பெற்றனர்.

இரண்டாம் உலகப் போரின் காரணமாக நமது பள்ளிக்கூடத்தைத் தொடர்ந்து ஹைஸ்கூலாக நடத்திவர இயலவில்லை. எனவே "போர்டிங், லாட்ஜிங்" வசதி இல்லாத மிடில் ஸ்கூலாகவே நடத்தி வந்தோம். பாடத்திட்டங்களும் அரசாங்க முறையை அனுசரித்து மாற்றி அமைத்து ஆங்கிலத்திலும் பர்மிய மொழியிலும் போதிக்கப்பெற்று வந்தன.

1952-ஆம் ஆண்டில் ஆசிரியர் போதனு முறைப் பள்ளியைப் பெரிதாக்கி இடம் மாற்றம் செய்ய வேண்டிய அவசியம் ஏற்பட்டது. இதனுல் பர்மிய அரசாங்கத்தின் கல்வி மந்திரி அவர்களும் ஏனையோரும் நமது பள்ளிக்கூடக் கட்டிடங்கள் இடம் ஆகியவற்றைப் பார்வையிட்டு அவைகளைக் கொடுத்துதவும்படி நம் கழகத்திற்கு அரசாங்கம் அதிகாரப் பூர்வமாக அறிவித்தது. அதற்கிணங்க நமது கல்வி நிலையக் கட்டிடங்கள் இடம் முதலிய யாவும் 21-6-52 முதல் அரசாங்க ஆசிரியர் பயிற்சிக் கல்லூரி உபயோகத்திலிருந்து வருகின்றன.

அக்காலத்திய கல்வி மந்திரி அவர்களை நம் கழகம் கேட்டுக் கொண்டதற்கிணங்க அப்போது நம் கழகத்தால் நடத்தப்பெற்று வந்த மிடில் ஸ்கூல் நிர்வாகத்தையும் ஒப்புக்கொண்டு "ஸ்டேட் மிடில் ஸ்கூல்" என்ற பெயரால் அதை இப்போது பர்மிய அரசாங்கத்தார் நடத்தி வருகின்றனர்.

அதன்பின்னர் நமது கல்விக் கழகம் அதன் கல்வித் தொண்டை எவ்வாறு புரிந்து வருவது என்பது பற்றி நம் சமூகப் பெருமக்கள் அறிஞர்கள் ஆகியோரைக் கேட்டோம். அவர்தம் அறிவுரை பெரிதும் பயன்பட்டது. கழகப் பொதுக் கூட்டங்களின் தீர்மானங்களுக்கேற்ப "ஸ்காலர்ஷிப்" திட்டம் ஒன்று உருவாக்கப்பெற்றது; ஆண்டுதோறும் நம் சமூக மாணவர்களில் வெளிநாடு சென்று படிப்பதற்கு ஒருவருக்கும், இந்தியாவில் மேல்படிப்புப் படிப்பதற்கு ஐவருக்கும் திரும்பச் செலுத்தக்கூடியதாகவும், பர்மிய மாணவர்களில் இந்தியாவில் மேல்படிப்புப் படிப்பதற்கு இருவருக்கு இனமாகவும் ஸ்காலர்ஷிப் வழங்குவதெனவும் முடிவு செய்யப் பெற்றது.

அதற்கிணங்கவிளம்பரங்கள்ஒவ்வோராண்டும் செய்யப்பெற்றன. அதற்கென சப் கமிட்டி ஒன்று நிறுவி, கழகத் தேர்தல் காலங்களில் அக் கமிட்டிக்கும் தேர்தல்கள் நடைபெற்று வந்தன.

1953-54ஆம் வருடம் முதல் 1955-56ஆம் வருடம் வரை மூன்றுண்டுகளில் நம் கழக உதவிபெற விரும்பி, விண்ணப்பித்துக்கொண்ட மாணவ மாணவிகளின் விண்ணப்பங்கள் ஒவ்வோர் ஆண்டிலும் மேற்படி கமிட்டியாரால் பரிசீலிக்கப் பெற்றுத் தேர்தல் செய்யப்பெற்றது. 1953-54ஆம் ஆண்டு படிப்பிற்கென அனுமதிக்கப் பெற்ற தொகைக்கு அரசாங்கத்தில் "ரெமிட்டென்ஸ்" அனுமதிக்கப்பெற்று, அனுப்பி சென்னையிலும் இலண்டனிலும் சம்பந்தப்பட்ட மாணவர்களுக்கு வழங்கப் பெற்றது. பிந்திய ஆண்டுகளுக்கான தொகைகளுக்குச் சர்க்காரின் "ரெமிட்டென்ஸ்" அனுமதி கிடைக்கப்பெருததால் 1956-57-ஆம் ஆண்டு முதல் இத்திட்டம் சர்க்கார் வெளிநாட்டு "ரெமிட்டென்ஸ்களை" சரளமாக அனுமதிக்கும் காலம்வரை தற்காலிகமாக நிறுத்தி வைக்கப்பெற்றுள்ளது.

இந்நிலையில் நமது கல்வித் தொண்டைப் பர்மிய நாட்டிலேயே செய்துவர முற்பட்டு அதற்கான திட்டங்கள் வகுத்து 1958-ஆம் ஆண்டு முதல் பர்மாவில் கல்வி பயிலும் நம் சமூக மாணவர்களுக்கும், நம் சமூக மற்றைய

பிள்ளைகளுக்கும், நம் சமூக வழித்தோன்றலாக வந்த பிள்ளைகளுக்கும் ஆரம்பம், நடுநிலை உயர்நிலைப் பள்ளிப் படிப்புகளுக்கும் காலேஜ் படிப்பிற்கும், எஞ்சினியரிங், மெடிக்கல், காமார்ஸ் முதலிய தொழிற் படிப்புகளுக்கும் இலவசச் சம்பளமாக வழங்கப்பெறுகிறது. இத்திட்டப்படி ஆண்டுதோறும் சுமார் 150 பேர்கள் நம் கழக உதவிபெற்றுப் பயனடைந்து வருகின்றனர்.

நம் கழக நிதி அபிவிருத்தி கருதி 30—10—1952 முதல் தங்க நகை ஜாமீன் பேரில் கொடுத்து வாங்கும் தொழில் தொடர்ந்து நல்ல முறையில் நடைபெற்று வருகிறது.

தலைநகரமாகிய இரங்கூனுக்குச் சமீபத்தில் நிர்மாணிக்கப் பெற்றுள்ள புதிய நகர்களில் ஒன்ருன "வட ஒவ்கலாபா" நகரில் நம் கழகத்து நன்கொடை கியா. 20,000/ த்தைக் கொண்டு "ஸ்டேட் பிரைமரி ஸ்கூல்" கட்டிடம் இரங்கூன் நகராட்சி மன்றத்தாரால் கட்டி முடிக்கப் பெற்றது. அக்கட்டிடத் திறப்பு விழா 19—8—62ல் மிகச் சிறப்பாக நிகழ்ந்தது.

நம் சமூக நன்மை கருதிப் பர்மா நாட்டுக் கோட்டைச் செட்டியார்கள் சங்கத்திற்கும், ஸ்ரீ காசி நாட்டுக் கோட்டை நகரச் சத்திரம் மானேஜிங் சொசைட்டிக்கும் தங்கநகைஜாமீன் பேரால் சகாய வட்டிக்கு ஸ்தாபனம் ஒன்றுக்கு கியா ஒரு லட்சம்வரை நம் கழகத்திலிருந்து கொடுத்து வாங்கப் பெற்றுவருகிறது. மேற் கண்ட இரு நிறுவனங்களுக்கும் இத்திட்டம் பேருதவியாக இருந்து வருகிறது.

சைவசமயக் கல்வி வளர்ச்சிக்கென ஸ்ரீ காசி நாட்டுக்கோட்டை நகரச் சத்திரம் மானேஜிங் சொசைட்டிக்கு நம் கழக நன்கொடையாக கியா ஒரு லட்சம் சென்ற ஆண்டில் வழங்கியுள்ளோம்.

இந்திய பர்மிய அரசினர் வெளிநாட்டு "ரெமிட்டென்ஸ்களை" சரளமாக அனுமதிக்கப் பெறும் காலத்தில் நம் கழகத் தீர்மானங்களின் படி காரைக்குடி அழகப்பா கல்லூரி, கொப்பனு பட்டி கலைமகள் கல்லூரி, மதுரை நகரத்தார் சங்கம் இந்த ஸ்தாபனங்களுக்கும் நம் கழக நன்கொடைகள் அனுப்பி வழங்கப்பெறும்.

உலகம் போற்றும் தெய்வத் திருமறையாம் திருக் குறள் நூலை, பர்மிய மக்களும் படித்துப் பயனடையும் வண்ணம் பர்மிய மொழியில் சிறந்த மொழி பெயர்ப் பாளரைக் கொண்டு மொழிபெயர்க்கப் பெற்றிருக்கிறது. இந்நூல் அச்சில் இருந்து வருகிறது. கூடிய விரைவில் நம் கழக இலவச வெளியீடாக இது வெளியிடப்பெறும்.

1933 - இல் மகாத்மா காந்தியடிகள் கம்பையில் நடந்த கல்வி நிலையத்துக்கு வருகை புரிந்து, இதன் பணிகளைப் பாராட்டியிருக்கிருர் கள். நேத்தாஜி சுபாஷ் சந்திரபோஸ், தம் படை முகாமின் தலைமை நிலையத்தை கம்பைக் கல்வி நிலையத்தில்தான் நடத்தி வந்தார்.

இத்தகைய சிறப்புகளுடைய இக் கல்விக் கழகம் மேன்மேலும் வளர்ச்சிபெற்று இதன் நேர்க்கங்கள் இனிது நிறைவேறி என்றென்றும் நடைபெற்றுவர எல்லாம் வல்ல பரம்பொருளா கிய ஸ்ரீ காசி விசாலாட்சி விசுவேசுவரர் திரு வருள் பாலிப்பார்களாக.

---

## காசியின் சிறப்புக்கள்



கங்கையில் நீர் யானைகள் மிகுதி. எனினும், அவை காசி எல்லைக்குள் பக்தர்க ளுக்கு ஊறு பயப்பதில்லை.

# தனவைசிய இளைஞர் சங்கம், இரங்கூன்

## நிறுவியது 1923

அ. பழனியப்பன், செயலாளர்

இச் சங்கம் 1923 ம் ஆண்டு இரங்கூனில் நிறுவப் பெற்று 10-10-1934ல் பதிவு செய்யப் பெற்றது. ஆரம்ப காலத்தில் சமூகச் சிறுவர்களின் கல்வி வளர்ச்சியே இதன் நோக்கமாக அமைந்திருந்தது. அந்த நோக்கமானது பெரியோர் பலரது ஆதரவுடன் 1928ம் ஆண்டு கம்பைக் கல்வி நிலையமாக உருவம் பெற்றது. அது ஆண்களுக்கு மட்டுமே ஆக்கம் தந்தது. பெண்களும் கல்வியில் முன்னேற்றம் காண வேண்டுமென்ற முயற்சி 1935ம் ஆண்டு கொப்பனாபட்டியில் திரு. அ. மெய்யப்ப செட்டியாரவர்களின் பேருக்கத்தாலும் நகரத்தார்களின் தாராளமான நன்கொடையாலும் கைகூடிக் கலைமகள் கல்லூரியாகத் திகழ்கிறது.

இளைஞர் உள்ளம் படைத்த அனைவரும் அங்கத்தினர்களாக ஏற்றுக் கொள்ளப்பட்டு இச் சங்கத்தில் சுமார் 250 பேர் அங்கம் வகித்து வருகிறார்கள்.

ஆண்டு தோறும் தீபாவளித் திருநாளன்றும், தைப் பொங்கலன்றும் முறையே பாடல் போட்டியும், பேச்சுப் போட்டியும் நடத்தி, மாணவ, மாணவிகளுக்குச் சைவ சமயத்தில் ஆழ்ந்த பற்றுண்டாகும் பொருட்டுப் பரிசுகள் வழங்கி வந்திருக்கிறது.

1959 லிருந்து 62 வரை இளைஞர் சங்கத்தின் பெருமுயற்சியால் இரங்கூன் நாட்டுக்கோட்டைச் செட்டியார்களின் கோவில்கள் தருமபரிபாலன சபையிலிருந்தும், கம்பை தனவைசியர் கல்விக்கழகத்திலிருந்தும் நன்கொடை பெற்று திருவாளர்களான கலைமகள் ஆசிரியர் கி. வா. ஜகந்நாதன், பேராசிரியர் அ. ச. ஞானசம்பந்தன், தமிழ்க்கடல் ராய. சொக்கலிங்கம் பாலகவி வயிநாகரம் வே. இராமநாதன் செட்டியார் ஆகிய பெரியோர்கள் தாயகத்திலிருந்து வரவழைக்கப்பட்டனர். சிறப்பாக நடத்தப்பெற்று வரும் நமது தைப் பூச விழாவில் கலந்து கொண்டு சைவ, சமய இலக்கியச் சொற்பொழிவுகளை அவர்கள் நிகழ்த்தி வந்திருக்கிறார்கள். பர்மாவாழ் தமிழ் மக்களுக்குச் சைவ சமய, இலக்கியச் சொற்பொழிவுகளைக் கேட்டுமகிழும் வாய்ப்பினைத் தொடர்ந்து நான்கு ஆண்டுகள் ஏற்படுத்திய பெருமை இச்சங்கத்தையே சாரும்.

பல ஆண்டுகளாக திரு. அ. சா. அண்ணாமலை செட்டியாரவர்கள் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டு இச்சங்கத்தை இனிது நடத்தி வருகிறார்கள்.

கம்பை தனவைசியர் கல்விக் கழகத்திற்கு ஆண்டு தோறும் இச் சங்கத்திலிருந்து ஏழு அங்கத்தினர்களைத் தேர்ந்தெடுத்தனுப்பி, அவர்கள் அச் சங்க ஆக்க வேலைகளில் பங்கு கொண்டு கவனித்து வருகிறார்கள்.

ஆண்டு தோறும் ஆவணித் திங்களில் பொதுக் கூட்டம் நடைபெறும். அவ்வமயம் புதிய ஆண்டின் தலைவர், செயலாளர், துணைச் செயலாளர், கணக்காய்வாளர், செயற் குழு உறுப்பினர் எழுவர் தேர்ந்தெடுக்கப்படுவர்.

இவ்வாண்டில் கீழ்க் கண்டவர்கள் பதவி வகிக்கின்றனர்.

தலைவர்:-
திரு. அ. சா. அண்ணாமலை செட்டியார்.

செயலாளர்:-
திரு. அ. பழனியப்ப செட்டியார்.

துணைச்செயலாளர்:-
திரு. சொ. சுப்பையா செட்டியார் (கோமகன்).

கணக்காய்வாளர்:-
திரு. கரு. ச. நடராஜன் செட்டியார்.

நகரத்தார் அமைப்புக்களின் வரலாறு (4)

# இரங்கூன் நாட்டுக்கோட்டைச் செட்டியார்களின் கோவில்கள் தர்ம பரிபாலன சபை

## நிறுவியது 1935

கண. மெ. நா. சொக்கலிங்கம் செட்டியார், *காரியதரிசி*

தெய்வ வழிபாட்டில் ஆர்வமுடைய நம் நகரத்தார்கள் தொழில் செய்ய வந்த ஊரான இரங்கூன் மாநகரில் சுமார் 70 ஆண்டுகளுக்குமுன் மொகல் வீதி 112.122 நம்பர் ஆறறைக் கட்டிடம் கட்டி முதன் மாடியில் ஸ்ரீ முருகப் பெருமான் ஆலயம் விமானத்துடன் அலங்காரமாக அமைக்கப் பெற்றிருக்கிறது. அதோடு சுமார் 60 ஆண்டுகளுக்கு முன் இரங்கூன் பசுமந்தானில் ஸ்ரீ தண்டாயுதபாணிக்காக இராஜ கோபுரத்துடன் கூடியதொரு கோயிலும் அதை அடுத்து மாதா மாதம் கார்த்திகைச் சாப்பாடு நடத்துவதற்காகவும், ஆண்டுக்கொரு முறை தைப்பூசத் திருவிழா நடத்துவதற்காகவும் இசை மன்றமும் உணவு மண்டபமும் அமைந்த ஒரு பெரியமடமும் கட்டப்பட்டிருக்கிறது.

சென்ற மகாயுத்த காலத்தில் பசுமந்தான் கோவில் சேதப்பட்டுவிட்டபடியால் சுவாமியை மடத்தில் ஸ்தாபிதம் செய்திருக்கிறார்கள். பசுமந்தான் ஆலயத்தில் ஸ்ரீ தண்டாயுதபாணியுடன் விநாயகர், சுவாமி, அம்மனையும் பிரதிஷ்டை செய்து வழிபாடு செய்யப்பட்டு வருகிறது. புசுமந்தான், ஆறறை இரண்டு ஆலயங்களிலும் இரண்டு காலப் பூசை நல்ல விதமாக நடைபெற்று வருகிறது. கார்த்திகை தோறும் மற்ற விசேட நாட்களிலும் அபிஷேக ஆராதனைகள் சிறப்பாகச் செய்யப்பட்டு வருகின்றன.

மேற்படி கோவில்களுடன் நம்மவர்களின் சௌகரியத்துக்காக இரங்கூன் நாட்டுக்கோட்டைச் செட்டியார்கள் இரங்கூனை அடுத்து சுமார் 6 மைலிலுள்ள கம்பையில் ஒரு பெரிய மடமும், சென்னையில் நம்மவர்கள் தங்கிச் செல்வதற்காக பவளக்காரத் தெரு 3/4 நம்பரில் ஒரு நகர விடுதியும் கட்டியிருக்கிறார்கள்.

நகரத்தார்களுக்குச் சொந்தமான மேற்கண்ட ஆலயங்கள் இரண்டும் 1935-ம் வருஷம் ஆரம்பம் வரை பெரும்பாலும் சா. அ. முதலியவர்களால் கவனிக்கப்பட்டு வந்திருக்கிறது. அதன்பின் அவைகளைப் பரிபாலனம் செய்ய ஒரு சபையை ஏற்படுத்துவது என 1935-ம் வருஷம் ஜூலை மாதம் 24வ யில் நடைபெற்ற இரங்கூன் நாட்டுக்கோட்டைச் செட்டியார்களின் கூட்டத்தில் முடிவு செய்யப் பெற்றது. இச்சபை, 1935-ம் வருஷம் செப்டம்பர் மாதம் 16வ யன்று, "இரங்கூன் நாட்டுக்கோட்டைச் செட்டியார்களின் கோவில்கள் தர்ம பரிபாலன சபை" என்ற பெயருடன் பதிவு செய்யப்பட்டது. முதல் ஆண்டின் சபைத் தலைவராக சா. ராம. மு. சித. மு. நாச்சியப்ப செட்டியார் அவர்களும் காரியதரிசியாக ராம. பெ. முருகப்ப செட்டியார் அவர்களும் தேர்ந்தெடுக்கப்பெற்றார்கள். அது முதல் சபை கோவில், நகரவிடுதி நிர்வாகங்களை நடத்தி வருகிறது.

வருடம் ஒரு முறை பொதுக் கூட்டம் கூடி தலைவர், உபதலைவர், காரியதரிசி, உபகாரிய

தரிசி, கணக்குப் பரிசோதகர்கள், காரிய சபை, நிர்வாக சபை அங்கத்தினர்களைத் தேர்ந்தெடுக்கிறது.

கோவில் நிர்வாகச்செலவுக்காக இரங்கூன் நாட்டுக்கோட்டைச் செட்டியார்களிடமிருந்து ஆண்டுதோறும் தைப்பூசத்தில் மகமை வசூலிக்கப்பெறுகிறது. ஒவ்வோராண்டும் தைப்பூசத் திருவிழா சிறப்பாக நடைபெற்று வருகிறது. தை மாதத்தில் புனர்பூசத்தன்று அதிகாலையில் ஸ்ரீ ஆறறை முருகப்பெருமான் ஆறறையிலிருந்து இரதத்தில் எழுந்தருளி அன்று பகல் பசுமந்தான் சேர்ந்து மடத்தில் தங்கியிருக்கும். அன்றும், பூசத்தன்றும் பக்தர்களுக்குக் காட்சி நல்கி மூன்றும் நாள் திரும்ப இரதத்தில் எழுந்தருளி அன்று பகல் ஆறறை வந்து சேர்வது பார்க்கக் கண்கொள்ளாக்காட்சியாகஇருக்கும். புனர்பூசம், பூசம் இரண்டு நாட்களும் பசுமந்தான் மடத்தில் பக்தர்களுக்கு அன்னதானம் செய்யப்படுகிறது. இருநாட்களிலும் கதை, கச்சேரி, சொற்பொழிவு முதலியவைகளும்மிகச்சிறப்பாகநடத்தப்பட்டு வருகின்றன. 1959, 60, 61, 62 நான்கு ஆண்டுகளிலும் இந்தியாவிலிருந்து உயர் திரு. கி. வா. ஜகந்நாதன், அ.ச. ஞானசம்பந்தன், தமிழ்க்கடல் ராய சொக்கலிங்கனுர், பாலகவி வயிநாகரம் வே. இராமநாதன் செட்டியார் ஆகிய பெரியார்கள் தைப்பூச விழாவில் சைவ சமயச் சொற்பொழிவுகள் நிகழ்த்தியது குறிப்பிடத்தக்கது.

சென்ற மகாயுத்த காலத்தில் சேதமடைந்திருந்த பசுமந்தான் கோவிலைப் புதுப்பித்துக் கட்ட வேண்டியது அவசியமென 6—4—63-ல் நடைபெற்ற மகாசபைக் கூட்டத்தில் முடிவு செய்யப்பெற்றது.அதன்படிசோபகிருதுவருஷம் வைகாசி மாதம் 23உ யன்று கோவில் வேலை ஆரம்பிக்கப்பெற்று நடைபெற்று வருகிறது. கோவில் வேலையும் இன்னும் ஐந்தாறு மாதங்களில் பூர்த்தியாகக்கூடும். பூர்த்தியானதும் மடத்தில் இருக்கிற சுவாமியைக் கோவிலில் கொண்டுபோய்ப் பிரதிட்டை செய்து கும்பாபிஷேகம் நம் சபையாரால் நடத்தப் பெறவிருக்கிறது.

2500 வது வருட புத்த ஜெயந்தி, பர்மிய சுதந்திர விழா, தமிழ்நாடு புயல் நிவாரண நிதி போன்ற பல விசேஷ நிகழ்ச்சிகளுக்கும் இராமகிருஷ்ண மிஷன் ஆஸ்பத்திரி, அகில பர்மா தமிழர் சங்கம் போன்ற நிறுவனங்களுக்கும் சபை நன்கொடை வழங்கி வந்திருக்கிறது.

சித்தி விநாயகர் கோயில், ஸ்ரீ காளியம்மன் கோயில், சமரசசமாஜம் போன்ற கோவில்களில் இரங்கூன் நாட்டுக்கோட்டைச் செட்டியார்களின் பெயரால் உபயங்கள் சபையால் செய்யப்பெற்று வருகின்றன.

நடப்பு ஆண்டில் சா. ராம. மு. சித. மு. பழநியப்ப செட்டியார் அவர்கள் சபையின் தலைவராகவும் ராம. பெ. அழ. அ. சொக்கலிங்கம் செட்டியார் அவர்கள் உப தலைவராகவும் கண. மெ. நா. சொக்கலிங்கம் செட்டியார் அவர்கள் காரியதரிசியாகவும் சுப. சுப. ராமநாதஞ் செட்டியார் அவர்கள் உபகாரியதரிசியாகவும் தேர்ந்தெடுக்கப் பெற்றிருக்கிருர்கள். கோவில் புதுப்பித்துக் கட்டுவதற்காக மேற்கண்ட உத்தியோகஸ்தர்கள் நால்வருடன் ராம. வீர. ராமசாமி செட்டியார் அவர்களையும் அரு. சு. சுப்ரமணியம் செட்டியார் அவர்களையும் கமிட்டி மெம்பர்களாக நியமித்து மேற்கண்ட அறுவரும் திருப்பணிச் செயல்களை இரங்கூன் நாட்டுக்கோட்டைச் செட்டியார்களின் அரிய ஆலோசனைக்கிணங்க நிறைவேற்றி வருகிருர்கள்.

இரங்கூன் எட்வர்ட் வீதி காளியம்மன் கோவிலில் அப்பாயிண்ட்மெண்ட் கமிட்டியில் செட்டியார்களுக்கு மூன்று ஸ்தானங்களும் ஷை கோவில் டிரஸ்ட்போர்டில் ஒரு ஸ்தானமும் இருந்து வருகின்றன. இரங்கூன் ராஜா ராமனுத ரெட்டியார் பள்ளிக்கூட டிரஸ்ட் போர்டில் நம் சபையின் அவ்வப்போதுள்ள தலைவரை நிரந்தர டிரஸ்டியாக நியமித்திருக்கிருர்கள்.

# ஈசுவர வருஷத்து மதுரைக் கும்பாபிஷேகம்

சென்ற ஈசுவர வருஷம் (1877) மதுரையில் ஸ்ரீமீனாட்சி சுந்தரேசுவரருக்கு மகா கும்பாபிஷேகம் நடைபெற்றது. அமராவதி புதூர் வயிநாகரம் குடும்பத்தினர் லக்ஷக் கணக்கான ரூபாய் செலவிட்டுத் திருப்பணி செய்வித்தார்கள். கும்பாபிஷேகம் மிகவும் சிறப்பாக நடைபெற்றது. மதுரைக்கு அக்காலத்தில் வந்த ஜனக் கூட்டம் கணக்கில் அடங்காது. காசி முதல் கன்னியாகுமரி வரையிலுள்ள இடங்களிலிருந்து லக்ஷக்கணக் கானவர்கள் வந்திருந்தனர். திருவாவடுதுறை யாதீனத்தின் தலைவராக இருந்த மேலகரம் ஸ்ரீசுப்பிரமணிய தேசிகர் தனவைசியர்களுடைய அழைப்பிற்கு இணங்கித் தம்முடைய பரிவாரங்களுடன் வந்திருந்தனர். அவர்களோடு வந்தவர்கள் 500 பேர்களுக்கு மேல் இருக்கும். திருவாவடுதுறை யாதீனத்தில் அப்போது சின்னப்பட்டத்திலிருந்த ஸ்ரீநமச் சிவாய தேசிகரும் கல்லிடைக்குறிச்சியிலிருந்து வந்திருந்தார். அக்காலத்தில் நான் சுப்பிரமணிய தேசிகரிடம் பாடம் கேட்டுக் கொண்டும், திருவாவடுதுறை மடத்தில் உள்ளவர்களுக்குத் தமிழ்ப் பாடஞ் சொல்லிக் கொண்டும் இருந்தேன். ஆதலின் நானும் தேசிகருடன் மதுரை சென்றிருந்தேன்.

   

தேவஸ்தான சபையைச் சேர்ந்த ஸ்ரீமான் வேங்கடசாமி நாயுடு என்பவர் வைகை யாற்றங் கரையிலுள்ள தம்முடைய பங்களாவில் தேசிகருக்கும் அவரைச் சார்ந்தவர் களுக்கும் இடம் அமைத்துக் கொடுத்திருந்தார். பங்களாவைச் சுற்றி நெடுந்தூரம் பந்தல் போட்டிருந்தார். அதன் மேல் மெத்தையிலும் பந்தல் அமைக்கப்பட்டிருந்தது. ஒரு பெரிய சைவாதீனத்துத் தலைவரென்பதற்கு ஏற்றபடி சுப்பிரமணிய தேசிகருக்குச் சிறிதும் குறைவின்றி உபசாரங்கள் நடைபெற்று வந்தன.

   

நகரத்தில் எள் போட்டால் விழ இடமின்றி ஜனங்கள் நிறைந்திருந்தனர். அங்கங்கே சமாராதனைகளும், மகேசுவர பூஜைகளும் செவ்வையாக நடைபெற்றன. கும்பாபிஷேக சமயத்தில் கோயிலுக்குள்ளே செல்ல யாவருக்கும் இடங்கிடைப்பது அரிதாயிற்று. ஆதலின் தக்கவர்களுக்கு மாத்திரம் சீட்டு அளித்து உள்ளே விட்டார்கள். சேலம் முதலிய இடங்களிலிருந்து வந்த மிட்டாதார்களும் வேறு பலரும் ஸ்ரீசுப்பிரமணிய தேசி கருடன் சொல்லித் தங்கள் தங்களுக்குரிய அனுமதிச் சீட்டுக்களைப் பெற்றுக் கொண் டனர்.

   

அக்காலத்தில் மதுரையில் கலெக்டராக இருந்த க்ரோல் துரை என்பவர் (நகர சபை கமிஷனர்) மணி ஐயருடைய பெருமையை நன்கு அறிந்து அவரிடம் மிக்க அன்பு பாராட்டி வந்தார். மதுரைத் திருக்கோயிலைச் சுற்றியுள்ள மதிலுக்கு வெளியில் பல

ஜனங்கள் குடிசைகள் கட்டிக் கொண்டிருந்தனர். சிலருடைய வீடுகளும் இருந்தன. அவர்களால் பலவகை அசுத்தங்களும் உண்டாயின. அக்கோயிற் கும்பாபிஷேகம் செய்வித்த அமராவதி புதூர் வயிநாகரம் குடும்பத்தைச் சேர்ந்த நால்வருள் ஒருவராகிய வேங்கடாசலஞ் செட்டியார் அதுகண்டு மனம் வருந்தினர். நிவர்த்தி பண்ணுவதற்கு முயன்று பார்த்தார். அவரால் இயலவில்லை. மணி ஐயர் மிக்க இரக்கமும் அன்பும் உடையவரென்பதை அறிந்து அவரிடம் சென்று, "திருமதில் சிவபெருமான் வடிவமாயிற்றே! அதைச் சுற்றி ஜனங்கள் அசுத்தம் செய்கிறார்களே! இதைக் காண எனக்கு மனம் பொறுக்கவில்லை. நீங்கள் இதற்கு ஏதாவது வழி செய்யவேண்டும்" என்று முறையிட்டு வந்தார்.

மணிஐயர் அவர் கூறுவதன் உண்மையையும் அவருடைய சிவபக்தியையும் உணர்ந்தார். உடனே க்ரோல் துரையினுடைய உதவியைப் பெற்று மதிற்புறத்தே இருந்தவர்களுக்கு வேறிடங்கள் வாங்கித் தந்தும் வீடு கட்டப் பணம் உதவியும் நிலத்துக்கு விலை தந்தும் அவர்களைத் திருப்தி செய்வித்தார். பின்னும் வசதியான இடங்களிலே அவர்களைக் குடியேற்றிப் பாதுகாத்தார். அப்பால் திருமதிலைச் சுற்றி நந்தவனம் அமைக்கச் செய்தார். அதைப் பாதுகாக்க அதைச் சுற்றி இரும்புக் கிராதியால் ஒரு வேலி போடச் செய்தார். அன்றியும் உள்ளே கிணறுகளை வெட்டுவித்துப் பூஞ்செடிகளுக்கு நீர் பாய்ச்சுவதற்குரிய ஏற்பாடுகளும் செய்வித்தார். அந்த நந்தவனம் இன்றும் சிறப்பாக விளங்குகின்றது. கோயிலும் நந்தவனமும் சேர்ந்துள்ள அமைப்பு ஒரு பெரிய புஷ்பத் தோட்டத்தின் மத்தியில் அவ்வாலயம் இருப்பது போலத் தோற்றும். மணி ஐயர் அமைத்த நந்தவனத்தைக் கண்டு சிவநேசச் செல்வர்கள் யாவரும் மனம் குளிர்ந்தார்கள். வேங்கடாசலம் செட்டியார் எல்லையற்ற மகிழ்ச்சி கொண்டு அவரை வாயார வாழ்த்தினர்.

—மகா மகோபாத்தியாய தாக்ஷிணாத்ய கலாநிதி டாக்டர் உ. வே. சாமிநாதையரவர்கள். (நினைவு மஞ்சரி முதற்பாகம், மணி ஐயர் பற்றி எழுதியுள்ள 9வது கட்டுரையில் 1957-ம் ஆண்டில் வெளிவந்த நான்காம் பதிப்பில் பக்கம் 63, 64, 65, 72, 73. ஸ்ரீ தியாகராச விலாஸ் வெளியீடு, திருவல்லிக்கேணி, சென்னை.)

---

## சிறந்து வாழி!

நெற்குப்பை இராமசுப்பிரமணியன்

முருகனிடம் நீங்காத பக்தி கொண்டார்.
முத்தமிழைச் சைவத்தைப் பேணி நின்றார்.
தருமத்தை வளர்க்கின்ற முறையாய்க் கோயில்,
சத்திரங்கள், சாவடிகள் கட்டி வைத்தார்.
அருமைபெறும் காசிநகர் தன்னில் அன்னார்
அமைத்திட்ட சத்திரத்தின் நூறும் ஆண்டாம்.
திருவுயரும் சமூகமெனும் நாட்டுக் கோட்டைச்
செட்டியார் சமூகமிகச் சிறந்து வாழி!

# மதுரைக் கோயிலில் நகரத்தார் திருப்பணி

கவிஞர் அரு. சோமசுந்தரன், எம். ஏ

"ஆலயம் தொழுவது சாலவும் நன்று" என்பது பழமொழி. "கோயிலில்லா ஊரில் குடியிருக்க வேண்டாம்" என்று பெரியோர்கள் கூறுவர். "எல்லாம் அவனருள்" என்ற கொள்கையில் ஆழ்ந்த நம்பிக்கையுடைய தமிழ் மக்கள் அவனருளாலே அவன் தாள் வணங்கினர். இறைப்பணியையே தம் வாழ்க்கைக் குறிக்கோளாகக் கொண்ட நகரத்தார்கள் திருப்பணி புரிவதில் சிந்தை செலுத்தினர். சோழ வேந்தர்களும், நாயக்க மன்னர்களும் விட்டுப்போன திருப்பணிகளைத் தொடர்ந்து நிறைவேற்றிய பெருமை நகரத்தார்களையே சாரும்.

பழங்காலத்தில் கோயில்கள் மரத்தாலும், செங்கலாலும் கட்டப்பட்டன. அவை உறுதி படைத்தவையல்ல. எனவே, விரைவில் அழிந்தன. கி. பி. ஏழாம் நூற்றுண்டில் வாழ்ந்த பல்லவப் பேரரசன் மகேந்திரவர்மனுல் முதனில் குகைக் கோயில்கள் கட்டப்பெற்றன. மண்டகப்பட்டு, மகேந்திரவாடி, மாமண்டூர் முதலிய ஊர்களில் அவன் கட்டிய குகைக் கோயில்களைக் காணலாம். அவனுக்குப் பின் அவனது மகன் நரசிம்ம வர்மன் ஒற்றைக் கற் கோயில்களை அமைத்தான். "பஞ்சபாண்டவ ரதம்" என்று வழங்கப்படும் அத்தகு கோயில்களை மாமல்லபுரத்தில் இன்றும் காணலாம். பின் இராசசிம்ம பல்லவன் காலத்தில் கருங்கற்களை ஒன்றன்மேல் ஒன்ருக அடுக்கிக் கட்டும் கற்றளிகள் ஏற்பட்டன. காஞ்சியிலுள்ள கயிலாசநாதர் ஆலயம் அவனது திருப்பணிக்கு நல்ல சான்ருகும். பின்னர் சோழர்கள் நாடெங்கும் பல்வேறு வகைப்பட்ட கோயில்களைக் கட்டினர். அவர்களைப் பின்பற்றி நாயக்க மன்னர்கள் திருப்பணி செய்தனர்.

பத்தொன்பதாம் நூற்றுண்டு முதல் நகரத்தார்கள் திருப்பணி செய்வதில் ஈடுபட்டனர். மாபெரும் மதுரை மீனுட்சி அம்மன் கோயிலைப் புதுப்பித்துப் பல சீர்திருத்தங்கள் செய்து குடமுழுக்கு நடத்துவித்த வள்ளல் திரு வயிநாகரம் நாகப்ப செட்டியார் அவர்களே ஆவார். நகரத்தார்களிலேயே முதன் முதலாக இத்தகு மாபெரும் திருப்பணியில் ஈடுபட்டு வழிகாட்டிய சான்றோர் அவரே ஆவார் என்று பெரியோர் பலர் கூறுகின்றனர்.

நகரத்தார்கட்கு உரிய 96 ஊர்களில் அமராவதி புதூர் என்பதும் ஒன்று. அது காரைக்குடிக்குக் கிழக்கே மூன்று கல் தொலைவில் உள்ளது. அங்கு வயிநாகரம் இராமநாதன் செட்டியார் என்ற பெரியார் ஒருவர் வாழ்ந்து வந்தார். அவருக்கு நாகப்பன், வெங்கடாசலம், அண்ணுமலை, சுப்பிரமணியன் என்ற நன்மக்கள் நால்வர் தோன்றினர். அவர்களுள் மூத்தவர்களான நாகப்ப செட்டியாரும், வெங்கடாசலம் செட்டியாரும் வாணிகம் செய்யும் பொருட்டு மதுரைக்குச் சென்றனர். மீனுட்சி அம்மன் கோயிலுக்கு அருகே உள்ள சடாமுனி தெருவில் நூல் வியாபாரமும், அறுவை (ஜவுளி) வியாபாரமும் செய்தனர். காலப் போக்கில் செல்வம் குவிந்தது. "எல்லாம் மீனுட்சி அம்மனின் அருள்" என்ற கருத்துடையராய் இருந்த சகோதரர்களின் கவனம் கோயிலின் பக்கம் திரும்பியது.

அந்நாளில் மீனுட்சி கோயில் பெருமளவு பழுதடைந்து காணப்பட்டது. ஆலயத்தில் ஒளியில்லை. ஒரே இருள்! தேள், நட்டுவாக்காலி, பாம்பரணை, பெருச்சாளி, உண்ணி, சுண்டெலி முதலிய உயிர்ப்பிராணிகள் யாண்டும் நடமாடின! கோபுரங்களில் உள்ள மரங்கள்

மைத்திருந்தன. தளவரிசைகள் தகர்ந்தும் பிளந்தும் இருந்தன. மண்டபக் கால்கள் சாய்ந்து காணப்பட்டன. சுருங்கச் சொன்னால் ''என் கோயிலைப் புதுப்பிப்பார் எவருமே இல்லையா?'' என்று மீனாட்சி அன்னையே இரங்கிக் கேட்கும் துயரநிலை தோன்றியிருந்தது. அந் நிலையைக் கீழ்க் காணும் பாட்டினால் நாம் ஒருவாறு உணரலாம்.

'' தேளும்பல் நட்டுவக்கா லிகளும்பாம்
பரணைகளும் செறிந்த தன்றி
நீளும்பல் லுடையபெருச் சாளிகளும்
ஞாளிகள்போல் நிறைவுற் றேங்கத்
தூளிகளில் உண்ணிகளும்
சுண்டெலிக்கா
டுகளுமெங்கும் துலங்கி வாழும்
கேளுமின்னம் அவைசெய்யும்
கேடெல்லாம்
விரிவாகக் கிளத்து வேனால்''.

நாள் தோறும் மீனாட்சி அம்மன் கோயிலுக்குச் சென்று அன்போடு வழிபடும் நாகப்பச் செட்டியாருக்குக் கோயிலின் பழுதுபட்ட நிலை வருத்தத்தை உண்டு பண்ணியது. எனவே, தம் தம்பியரைக் கலந்தாலோசித்தார். மன்னர்களே முற்காலத்தில் செய்து முடித்த மாபெரும் திருப்பணியில் இறங்கினார். அவருக்குப் படை, குடி, கூழ், அமைச்சு, நட்பு, அரண் ஆகியவற்றின் துணையில்லை. ஆனால் துணிவிருந்தது. எடுத்த காரியத்தைத் தொடுத்து முடிப்போமா? என்று சிந்தித்தார், தம் முயற்சி திருவினையாகும் என்பதில் அவருக்கு ஐயமில்லை; அதனால் அளவு கடந்த ஆர்வம் இருந்தது. அம்மனின் அருள் மிகுதியும் இருந்தது. செயல்கள் விரைந்து நடந்தன.

முதலில் சித்தி விநாயகர் கோயில் திருப்பணி இனிது முடிந்தது. பின்னர் முதற் பிரகாரத்தில் சாய்ந்திருந்த மதில் திருத்தம் செய்யப் பெற்றது. திருப்பள்ளியறை புதுப்பிக்கப் பெற்று ஊசலுக்குப் பொற்றகடு போர்த்தப் பெற்றது. கோயில் முழுவதிலும் தட்டோடுகள் பழுதுபார்க்கப்பட்டன. மண்டபங்களின் இடைகளில் பலகணிகள் அமைக்கப்பெற்றன. எனவே ஆலயத்தில் செறிந்து கிடந்த இருள் நீங்கி ஒளி புகுந்தது. கோபுரத்தில் அடைந்து கிடந்த குரங்குகள் பெருஞ்செலவில் தந்திரமாக அப்புறப்படுத்தப்பட்டன. பன்னிரண்டு கோபுரங்களுக்கும் சுதை வைத்து வண்ணந் தீட்டப் பெற்றது. அதற்கு மட்டும் செலவு எட்டு இலட்சம் ரூபாய். பின்னர் திருமதிலைச் சுற்றியிருந்த கழிவிடங்கள் தூய்மைப்படுத்தி, நந்தவனம் அமைத்து கம்பி வேலி பொருத்தப் பெற்றது. இவ்வாறு சித்திரை வீதியைச் சீர்திருத்த ஆன செலவு ஒரு இலட்சம் ரூபாய் ஆகும். அதன்பின் பதினாறு கால் மண்டபம், நூற்றுக்கால் மண்டபம், ஆயிரக்கால் மண்டபம் அட்டசத்தி மண்டபம், பசுத்தொழு மண்டபம், ஆனைமால் மண்டபம், கிளி மண்டபம், வசந்தராயர் மண்டபம், முத்துராமலிங்கையர் மண்டபம், கழுவேற்று மண்டபம், துவசத்தம்ப மண்டபம் ஆகியவை புதுப்பிக்கப்பெற்றன. திருக்கல்யாண மண்டபம் அழகான முறையில் புதிதாகக் கட்டப் பெற்றது. அம்மண்டபத்தில் நிலைக்கண்ணாடி முதலிய அழகுப் பொருள்கள் வைக்கப் பெற்றன.

தெப்பக்குள மைய மண்டபம், பொற்றாமரைக் குளத்தங்கரைத் தளவரிசைகள், படித்துறைகள், கைப்பிடிச்சுவர்கள். ஆடிவீதிகளின் தள வரிசைகள் ஆகியன செப்பனிடப் பெற்றன. சுவாமி கோயில் முதற்பிரகார, இரண்டாம் பிரகாரத் தள வரிசைகள் புதிதாகப் போடப்பெற்றன. சுவாமிக்கும் அம்மனுக்கும் தங்க விமானங்களும், தங்கத்தாலும் வெள்ளியாலும் ஆன திருவாபரணங்களும் செய்யப் பெற்றன. திருவிளையாடற் புராணச் சித்திரங்கள் கண்கவர் வனப்பினவாய்த் தீட்டப் பெற்றன. நிறைவு பெறுதிருந்த மொட்டைக் கோபுரம் சொக்கேசன் திருவருளால் முழுக் கோபுரம் ஆக்கப்பெற்றது. இங்ஙனம் ஏறத்தாழ 25 இலட்சம் ரூபாய் செலவில் மாபெரும் திருப்பணியை இனிதே செய்துமுடித்த நாகப்பச் செட்டியார் 6. 2. 1878-ல் கும்பாபிடேகம் நடத்தி மகிழ்ந்தார். நாடெல்லாம் அவருக்கு நன்றி செலுத்தியது! அம்மனும் அகங் களித்தாள்!!

நாகப்பச் செட்டியாரும் அவர்தம் இளவல் வெங்கடாசலம் செட்டியாரும் செய்த திருப்பணிப் பெருமையைக் கீழ்க்காணும் பாடலால் அறியலாம்.

சீர்செய்த சித்திரைவீ திகள் நான்குக்
குட்பட்ட தெய்வக் கோவில்
ஆர்செய்தது? அரைக்காசு பெறும்கதவா
ணியும்பிறர்வந் தடித்த துண்டோ?
பேர்செய்த நாகப்ப பாண்டியனும்
அவனுடனே பிறந்த கீர்த்தி
வேர் செய்த வேங்கடா சலச்செழிய
னும்செய்த விளங்கி னூரால்.

பின்னர் நாகப்பச் செட்டியாரைப் பின் பற்றித் தேவகோட்டை முத்து கரு. வெ. அழகப்பச் செட்டியாரவர்கள் மதுரைக் கோயில் ரிசீவராக இருந்தபொழுது 1. 7. 1923-ல் ஒரு கும்பாபிடேகம் செய்தார்கள். கீழப்பூங்குடி கூ. க. சித., சு. க. அரு. குடும்பத்தார் மதுரைக் கோயிலில் பசுமடம் நிறுவி அபிஷேகத்துக்குப் பால் வழங்கி வருகின்றனர். ஒக்கூர் சி. கரு. சி. லெ. குடும்பத்தார் தேவாரப்பாடசாலையும், கானாடுகாத்தான் க. வெ. குடும்பத்தார் வேத பாடசாலையும் ஏற்படுத்தி இருக்கின்றனர்.

கூடல் நகரின் பணிசெய்து
கோயில் முழுதும் சீர்செய்து
பாடல் பெற்றார் நாகப்பர்
பார்தை காட்டிப் புகழ்பெற்றார்.
அவரைத் தொடர்ந்து நகரத்தார்
அருள்சால் பணியை மேற்கொண்டார்
இவரைப் போலத் திருப்பணிகள்
எவரும் செய்தார் இலரன்றோ!

   

கம்பத்தடி மண்டபம் எனப்படும் நந்தி மண்டபம், சுவாமி கோயிலுக்கு முன் உளது. இது கிருஷ்ணப்ப நாயக்கர் காலத்தில் நான்கு தூண்கள் கட்டிய அளவில், துவார பாலகருடன் கூடியதாக மட்டுமே இருந்தது; அந்நாளில் மண்டபம் அமைக்கப் பெறவில்லை. 1877-இல், நகரத்தார்கள் அனைவரும் பொருளுதவி எட்டுத் தூண்களைப் புதிதாக அமைத்து ஒரு மண்டபம் உருவாக்கி இடைவெளியை நிரப்பினர்.

சிற்பக் களஞ்சியமாக உள்ள இம்மண்டபத்தைப் போன்ற பல திருப்பணிகளை நகரத்தார்கள் மதுரைக் கோயிலில் செய்திருக்கிறார்கள். இவை பற்றிய எல்லா விவரங்களையும் தொகுப்பதற்கு, முறையான ஆராய்ச்சி இன்றியமையாதது.

வயிநாகரம் குடும்பத்தார் மேற்கொண்ட திருப்பணி முயற்சிகளில் அவர்கட்கு உறுதுணையாக இருந்த குட்டைய ஐயா அவர்களைப் பற்றிய விவரங்களும் சேகரிக்கப்படவேண்டும். நகரத்தார் மரபினரும் துறவியுமான இப்பெருமகனார் தோற்றுவித்த 'குட்டைய ஐயா மடம்' மதுரையில் தெற்கு வெளி வீதியில் இருந்து வருகிறது.

1877-ல் நடைபெற்ற குடமுழுக்கு விழா நினைவாக நகரத்தார்கள் ஒவ்வொன்றும் 179 ரூபாய் எடையுள்ள தங்கக் குடங்கள் இரண்டைக் கோயிலுக்கு வழங்கினர்.

தேவகோட்டை அழகப்பச் செட்டியாரவர்கள் சுவாமி அம்மைக்குத் தங்கத்தால் ஜடிபந்தனம் செய்து கோயிலில் அப்போதிருந்த சில சிறிய பழுதுகளைச் செம்மை செய்தார்கள். மூன்று இலட்சம் ரூபாய் செலவு செய்து குடமுழுக்கு நடத்தப்பெற்றது. அந்நாள் விலைவாசிகளை இன்றைய நிலையுடன் ஒப்பிட்டுப் பார்த்தால், இது பெரிய தொகையாகும். மேலும், நகரத்தார்கள் எதையும் செட்டாகச் செய்ய வல்லவர்கள்.

— ***பதிப்பாசிரியர்***



ஸ்டிராண்டுச்சாலை நகரேசுவரர் கோயில் சந்நிதி.

The main shrine of the Nagareswarar (Siva) Temple, Strand Road, Calcutta.

नागरेश्वर (शिव) मंदिर का गर्भगृह-स्ट्रैंड मार्ग, कलकत्ता

உ
நீலமாமிடற்றாலவாயிலான் பாலதாக
ஊர்நாலமால்வரமேமங்களம்
நாட்டுக்கோட்டை தனவைசிய
நகரத்தார்கள் தொழிலமுறைமுத
ல்முதலில் செய்யமுயன்றதுரமுகஊ
ர்கள் ஐந்து: அதாவது, நாகூர் சென்னை.
கல்கத்தா, காலி, பிரநங்குமேயாகும்,
இவடத்திற்கு நம்மிட பிள்ளைகள் வந்து
சந்திவேல் ஸ்த்தாபித்துதொழில் ஆரம்பி
த்துநடந்துவருகிறதும் நூவாஇல்லமாவ
ஆகிறது * நாட்டுக்கோட்டை
நகரத்தார் பெரிய வீடு. 1921

உ
சிவமயம்
நாட்டுக்கோட்டை
தனவைசியநகரத்தார்
பெரியவீடு
கிரகப்பிரவேசம் 2-11-1921
(नाट्टुक्कोट्टै चेट्टि वैश्य नगरत्तार)
बड़ा बाड़ी
নাট্টুকোট্টে চেট্টী বৈশ্য/নাগরত্তার
বড়বাড়ী
BIG.CHETTY BROTHERS.

கல்கத்தா நகரத்தார் விடுதியில் தமிழிலும், தமிழ், வங்காளி, ஹிந்தி, ஆங்கிலத்திலும் உள்ள கல்வெட்டுக்கள்.

Inscriptions in the Nagarathar House, Calcutta.

नगरत्तार गृह. कलकत्ता में तमिष, बंगाली, हिन्दी अंग्रेजी में शिलालेख

# சைவசமய விளக்கம்

மகாமகோபாத்தியாய முதுபெரும் புலவர்
சைவசித்தாந்த வித்தகர் பண்டிதமணி
மு. கதிரேசச் செட்டியார்

சமயவாழ்க்கையின் நோக்கம்: சமய நிலையில் நம் வாழ்க்கைச் செயல்களெல்லாம் இன்ப வடிவினனாகிய இறைவனைப் பற்றியே நிகழ்தல் வேண்டும். நம் உடலுறுப்புக்களெல்லாம் அப் பெருமானை வழிபடற்கே அமைந்தன வென்பதை

" வாழ்த்த வாயும் நினைக்க மடநெஞ்சும்
தாழ்த்தச் சென்னியுந் தந்த தலைவனே "

என்னும் தமிழ் மறையானும் உணர்ந்துளோம். நம் நாட்டுச் செயலனைத்தும் அப் பெருமான் நினைவே முன்னிற்கச் செய்தல் வேண்டு மென்னும் ஆன்றோராசாரம் எத்துணை நல முடையது: நம் வாழ்க்கை மலர் தெய்வ மணங்கமழுமேல் சிறந்ததாகப் பாராட்டப் படும். அந் நன்மணமின்றேல்,

" பாழுக்கிறைத்தேன் பரம்பரனைப் பணியாதே "

யென்றருளியாங்குப் பயனற்றதாக முடியும்.

சமயஇலக்கணம்: உலகத்துள்ள பல் வகைச் சமயங்களினும் கூறப்படுந் தத்துவங் களையெல்லாம் தன்னுள் அடக்கி அவற்றோடு முரணாது தழீஇக்கொண்டு அவ்வத் தத்துவ நிலையினின்று முடிவில் தன்னைச் சார்ந்தாரை உலப்பிலாப் பேரின்ப நுகர்ச்சியில் தலைப் படுத்தும் இயல்நலம் அமைந்தது சிவ நெறி யாகிய சைவ சமயமேயாகும்.

இறைவனை அடைதற்குரிய நெறிகள்: உயிர் கட்டறுத்து வீடுபெறுதற்கு நம் அரிய சமயத் தில் அமைந்த சாதனங்கள் மிகச் சிறந்தன வாம். சரியை முதலிய நான்கு வழிகள் ஆன்மாக்களின் பக்குவ நோக்கி அமைந்தன. அவற்றினியல்கள் மிக்க விரிவுடையன. சரியை முதலிய நான்கு வழிகளையும் ஒன்றுக்கொன்று சாதன சாத்திய முறையில் வைத்து இறுதியி லுள்ள ஞானத்தால் வீட்டின்பம் அடையலா மென உணர்த்தப்பட்டது. இவ்வுண்மையைச் சிவயோகியராகிய தாயுமான அடிகள்,

" விரும்புஞ் சரியைமுதல் மெய்ஞ்ஞான நான்கும்
அரும்புமலர் காய்கனி போல் அன்றோ
பராபரமே "

என்று கூறியருளினர்.

[உரைநடைக்கோவை—சமயக் கட்டுரைகள்: என்ற நூலிலிருந்து திரு. செ. மெ. பழனியப்பச் செட்டியார் அவர்களின் இசைவுடன் எடுக்கப்பெற்றது.]

# திருநீற்றின் சிறப்பு

கா. இராமநாதன், பி. ஏ., பி. எல்.,
கோலாலம்பூர்

பெயர்: சைவச் சின்னங்களில் திருநீறு மிகச் சிறப்புடையது. அது ஆன்மாக்கள் செய்யும் பாவங்களை நீருக்கி விடுவதால் அதற்கு பஸ்பம் அல்லது திருநீறு என்றும் பெயர்; அது அந்தமில் இன்பத்து அழிவில் வீடாகி முத்திச் செல்வத்தைத் தருவதால் விபூதி (மேலான செல்வம்); ஆணவம் முதலிய மலங்களை அறுப்பதால் க்ஷாரம் (தடைகளை அறுப்பது); சிறு தெய்வங்களால் வரும் துன்பங்களைத் தடுப்பதால் காப்பு அல்லது ரட்சை; அறியாமையை நீக்கி எளிமையைத் தருதலால் பசிதம் (ஒளியைத் தருவது).

தத்துவம் : விபூதி சில தத்துவக் கருத்துக்களை நினைவூட்டுகிறது. வெண்மை சுத்தத்திற்கு அடையாளம். விபூதியைப் போல் நம் உள்ளம் சுத்தமாக வேண்டும். நாம் இட்டுக் கொள்ளும் விபூதி வெண்மையாக இருக்க வேண்டும். நெருப்பு அழுக்கைப் போக்குவது; நெருப்பின் உதவியால் ஆக்கப் பெறும் விபூதியும் அழுக்கற்றது. ''சுத்தமதாவது நீறு''.

திருநீறு, உலக அழிவையும் உடல் அழிவையும் காட்டுகிறது. முடி சார்ந்த மன்னரும் முடிவில் ஒருபிடி சாம்பராகின்றனர். உலகம் அநித்தியம் என்று உணர்ந்து உன் வாழ்க்கையை நடத்த வேண்டுமெனத் திருநீறு ஞாபகப் படுத்துகிறது.

ஆண்டவனை வழிபட்டால் நம் மலங்களை நீருக்குவான் என்ற எண்ணமும் ஏற்படுகிறது.

பெரியோர் வாக்கு: விபூதி அணிவதின் அவசியத்தைப் பல பெரியோர்கள் வற்புறுத்தி உள்ளார்கள். ''தக்கோர் புகழ்வது நீறு''. உபநிஷதங்கள் அதன் பெருமையைப் பேசுகின்றன. நால்வரும் இதனை வற்புறுத்தியுள்ளனர். ஞானசம்பந்தப் பெருமான் ஒரு பதிகமே இதற்காகப் பாடியுள்ளார், மணிவாசகனுர் திருநீறே கவசம் என்றும், ''வெண்ணீறு அணிகிலாதவரைக் கண்டால், அம்ம! நாம் அஞ்சுமாறே!'' என்றும் அருளியுள்ளார்.

> கங்காளன் பூசும் கவசத் திருநீற்றை
> மங்காமல் பூசி மகிழ்வரே யாமாகில்,
> தங்கா வினைகளும்; சாரும் சிவகதி;
> சிங்கார மான திருவடி சேர்வரே

என்ற திருமந்திரத்தைக் காண்க.

> ''ஆதிபகவன் ஞானவடி வழலிற் பூத்து
> நித்தியமாய்,
> அணிந்தோர் தமக்கு வசிகரமாய்,
> அருந்திஞேர்கட்காரமுதாய்,
> நீதி அறியும் பசுமலத்தை நீக்கும் ஒரு
> நற்குறி காட்டி,
> நிகழ் பேரின்பக் கடலூட்டி, நின்ற
> புகழ்வெண் திருநீறே.''

திருப்போரூர் சந்நிதி முறையிலே சிதம்பர சுவாமிகள் பிள்ளைத் தமிழ் காப்புப் பருவத்திலே திருநீற்றுக்கு ஒரு பாட்டு அமைத்து, அதில் இவ்வாறு கூறுகிருர்.

'' நீறில்லா நெற்றி பாழ்'' என்பது நல்வழி.

> '' திருநீறு அணிந்து யார் கெட்டார்?
> சிவனை மறந்து யார் உய்ந்தார்?''

என்ற பழமொழியும் ஆன்ரோர் வாக்குகளை வற் புறுத்துகிறது.

சில நிகழ்ச்சிகள்: உபதேசம் மட்டுமன்றி அடியார்கள் வாழ்க்கையில் நடந்த பல சம்ப வங்கள் விபூதியின் பெருமையை எடுத்துக் காட்டுகின்றன. சம்பந்தப் பெருமான் திரு நீற் ருல் பாண்டிய மன்னன் வெப்பு நோயை நீக் கினுர். திருவாளன் திருநீற்றைத் திலகவதி யார்ரிடமிருந்து திருநாவுக்கரசர் பெறும்போது பெருவாழ்வு வாழ்க எனப் பெற்று உய்ந்தார். உவர் மண் தோய்ந்த வண்ணுனை நீறு நீறையப் பூசிய அடியானென நினைத்துச் சேர மான் பெருமான் விழுந்து வனங்கினுர், அரசு ஏற்று அரி அணை ஏறும்போது திருநீற்றையே அபிஷேகப் பொருளாகக் கொண்டார் மூர்த்தி நாயனுர். திருநீறு இட்டார்க்குத் தீங்கிழை யாதவர் ஏனுதிநாத நாயனுர். அதிசூரன் திரு நீறிட்டு வந்தபோது அவன் வாளுக்கு இரை யாகச் சம்மதித்தார். திருநீறிட்டுக் குருவேடந் தாங்கிக் கொலை செய்தவனை மெய்ப்பொருள் நாயனுர் 'தமர்' என்றும், அவனுக்குத் தீங் கிழைக்கக் கூடாதென்றும் கூறினுர். திரு நீற்றில் அடியார்கள் வைத்த அன்பு அளவிடற் பாலதா?

யார் அணிவது ? புண்ணியர் பூசுவது வெண் ணீறு. "கரிய மேனிமிசை வெளிய நீறு சிறிதே இடும் பெரிய கோலத் தடங் கண்ணன்" என்று நம்மாழ்வார் கூறியிருப்பதிலிருந்து திருமால் திருநீறு அணிவது தெரிகிறது. மேலும் அவர் "நீறு செவ்வே இடைக்காணில் நெடுமால் அடி யார் என்று ஓடும்" என்பதால், வைஷ்ணவர் கள் திருநீறு அணிந்திருந்தார்களெனத் தெரி கிறது. இராமபிரான் அணிந்திருந்தார். இரா மேஸ்வரம் திருக் கோயில் கட்டிய சிவபக்தர். தேவர்கள் அணிந்தனர்; வானவர் அணிந் தனர். "வானவர் மேலது நீறு". இராக் கதர்களின் தலைவனுகிய இராவணன் திருநீறு அணிந்த பெருமையைப் பாராட்டுகிருர் சம்பந் தப் பெருமான். "இராவணன் மேலது நீறு". முழுநீறு பூசியவர் முனிவர். அவர்கள் தொகை அடியார் கூட்டத்தில் ஒரு பகுதி. கிறிஸ்தவர் கள் சாம்பல் புதன் (Ash Wednesday) என்ற பண்டிகை கொண்டாடுவார்கள். ஜயினர்கள் பாடிய நாலடியாரில் நீறு விஷத்தைப் போக்கு மென்பர்.

அணியும் விதம். இவ்வளவு சிறந்த திரு நீற்றை எவ்வாறு அணிவது?

ஜலத்தொடு கூட்டாது உத்தூளனமாக அணியலாம். ஜலத்தோடு கூட்டிக் குழைத்து அணியலாம்.

உத்தூளனம் பரவப் பூசுதல். திரிபுண்டரம் மூன்று குறியாகத் தரிப்பது.

மூன்று குறி இச்சா, கிரியா, ஞானமெனும் மூன்று சக்திகளையும் பதி, பசு, பாசம் எனும் மெய்ப்பொருள் மூன்றையும், உருவம், அருவம், ரூபா ரூபம் எனும் கடவுள் நிலை மூன்றையும், ஆணவம், கன்மம், மாயை என்ற மூன்று மலங் கள் அறுவதையும், அ உ ம் என்ற பிரணவ எழுத்துக்கள் மூன்றையும் காட்டு மென்று கூறுவர்.

குழைத்துப் பூசும் இடங்களாவன: தலை, நெற்றி, மார்பு, கொப்பூழ், இரண்டு முழந்தாள், இரண்டு தோள், இரண்டு முழங்கை, இரண்டு மணிக்கட்டு, இரண்டு விலாப்புரம், முதுகு, கழுத்து ஆகிய பதினுறு.

இப்பதினுறு இடங்களும் பதினுறு பேறு களைக் குறிக்கும். அவையாவன; ஒழுக்கம், அன்பு, அருள், ஆசாரம், உபசாரம், உறவு, சீலம், தவம், தானம், வந்தித்தல், வணங்கல், வாய்மை, துறவு, அடக்கம், அறிவு, அருச் சித்தல்.

செயல் தொடங்கும் போது, காலையிலும், நடுப்பகலிலும், மாலையிலும், ஸ்நானம் செய்த வுடனும், பூசைக்கு முன்னும் பின்னும், நித்தி ரைக்கு முன்னும் பின்னும் திருநீறு பூச வேண்டும்.

பூசும்போது இஷ்ட மூர்த்தியின் நாமத்தை உச்சரித்து, விபூதி நிலத்தில் வீழாமல் அண் ணுந்து, நடுவிரல் மூன்றினுலும் பூசவேண்டும்.

பலன் : திருநீறணிந்தால் ஒரு அழகு தோன்றுகிறது. நீறணிந்த கோலம் நெஞ்சம் பறிக்கும்.

உடல் நோய் தீரும்; தோல் வியாதிகள் நீங்கும். உளநோய் விலகும். "வெந்துயர் தீர்ப்பது நீறு", "அவலம் அறுப்பது நீறு".

சுடலைப் பொடி பூசியை நினைப்பூட்டி உயிர் நோயைப் போக்கும். "மந்திரமாவது நீறு". முத்தி தருவதும் நீறு.

எல்லாவிதமான இடையூறுகளுக்கும் திரு நீறே காப்பு. "வேறுபல காப்பு மிகை" என் பர் சேக்கிழார்.

சிவகருமம் செய்யார்; திருநீறு சாத்தார்;
தவநிலையாம் சைவ நெறிசாரார்;—அவனிதனில்
கான்பரந்த பச்சை களா நிழலைக் கைதொழார்
ஏன் பிறந்தார் மானிடராய் இன்று?

(கான்--வாசனை)

—திருக்கருவை வெண்பா வந்தாதி.

---

## குமரகுருபர சுவாமிகள்

17-ஆம் நூற்றுண்டு முற்பகுதியினர். காசிக்குச் சென்று காசி நாதரை வழிபட்டுக் காசிக்கலம்பகம் பாடினுர். இந்துஸ்தானி அறிய சகலகலாவல்லிமாலை பாடினுர். டெல்லி பாதுஷாவின் இசைவு பெற்று, கேதார மந்திரம், கேதாரத்துறை முதலியவற்றை அமைத் தார். குமாரசாமி மடத்தை நிறுவினுர். அம்மடத்தில் நீண்ட காலம் தங்கியிருந்து இந்துஸ்தானிலும், தமிழிலும் புராணப் பிரசங்கம் செய்து வந்தார்; கம்ப ராமாயணத்தை இவரிடம் கேட்டறிந்தே துளசிதாசர் ராமாயணம் செய்தார் என்பர். காசியிலிருக்கும்போதே ஒரு முறை தருமபுரம் வந்து தம் ஞானசிரியரை வணங்கிவிட்டுச் சென்றுர்; காசியிலே முக்தி பெற்றுர்.

சகலகலாவல்லி மாலை மிக அழகிய பத்துப் பாடலாகிய சிறு நூல். தமக்கு இந்துஸ்தானி நன்கு பயிலும் ஆற்றலைத் தரவேண்டும் என்று கலையின் தெய்வத்தை வேண்டிப் பாடியதாகக் கூறப்பெறும் இந்த நூல் உருவகத்திலே சிறந்தது. பாடுகின்ற தெய்வத்தை மற்றையத் தெய்வங்களிலும் மேம்பட்ட தெய்வமெனக் கொண்டு பாடுவது புலவர் மரபாகலின் கலைமகளை இவர் 'கண் கண்ட தெய்வம் நின்போல் உளதோ' என்று பாராட்டுகிறுர்.

—கலைக்களஞ்சியம்.

# சமயமும் வாழ்வும்

ச. மெய்யப்பன், எம். ஏ.,
அண்ணுமலைப் பல்கலைக் கழகம்

உலகத்துச் சமயங்களில் மிகவும் தொன்மையானது சைவ சமயம். சைவ சமயத்துக்கு நாட்டுக்கோட்டை நகரத்தார் ஆற்றியிருக்கும் அரும் பணிகள் அளவிடற்கரியன. சிவநேசச் செல்வர்களாகிய அவர்களின் சமயத் தொண்டுக்குச் சிகரம் போன்றது காசி நாட்டுக் கோட்டை நகரச் சத்திரப்பணி. இச்சத்திரத்தின் நூற்றுண்டுத் திருத்தொண்டின் சிறப்பினை நினைவுகூர மலர் வெளியிடுதல் மிகப் பொருத்தமேயாகும். சமயப் பணிக்கு ஆலயங்கள் எப்படி மையங்களாக விளங்குகின்றனவோ அது போலவே அப்பணிக்குத் துணைத் தூண்களாக நகரத்தார் சத்திரங்கள் விளங்குகின்றன. இறை பணியாற்றும் இத்தகு நிலையங்கள் என்றும் நிலைத்த அறப்பணியாற்றிச் சிறந்தோங்கி வளர்வதாக.

சமயங்கள் மனித சமுதாயத்தில் செழித்து வளர்தற்குக் காரணம் என்ன? நிதியின் குவைகளைக் கொட்டிக் குவித்தாலும், நிலவிலே சென்று குடியேறினுலும் மனித மனம் ஏதோ ஒரு குறைபாட்டைக் கொண்டதாகவே அமைந்துள்ளது. தனக்கு எட்டாத ஒன்றைத் தாவித் தொடத் துடிக்கின்றது. தெளிவாகச் சொன்னுல் மன நிறைவை நாடி மனித நெஞ்சம் முயற்சிக் கரங்களை நீட்டிக் கொண்டிருக்கின்றது. ''எல்லையொன்றின்மை எனும் பொருளதனை'' எட்டிப்பிடிக்கும் அந்த இயற்கை நாட்டதைத் தான் சமயம் என்கிருேம். மன நிறைவையும் அமைதியையும் நாடிப் பாயும் இன்ப நினைவைத்தான் சமயம் என்கிருேம். எனவேதான் "ஒன்றியிருந்து நினைமின்கள் உந்தமக்கோர் ஊனமில்லை'' என்று அடியாரும் பாடினர்.

சமயம் எவ்வாறு மனித வாழ்வுக்குப் பயன் தருகின்றது? இன்பமே உயிர்களின் நாட்டம். அந்த இன்பத்தை அடையும் ஆர்வத்தினுல் தீமைகளையும் மனிதன் செய்ய நேர்ந்து விடுகின்றது. அத்தகைய சூழ்நிலையில் சமய உணர்வு மனிதனின் சிந்தனைக் கதவுகளைத் திறந்து கீழ்மைக் குப்பைகளை அகற்றி எறிகின்றது. மனிதனுக்கும்மேல் உயர் பொருள் ஒன்று உண்டு என்பதையும், அறமும் அன்புமே இன்பத்தை அடையும் நெறிகள் என்பதையும் சமயம் எடுத்துக் காட்டுகின்றது. அது மட்டுமின்றி இழைக்கும் தீய செயல்களினுல் பழியும் பாவமும் குவிகின்றன என்றும் அந்தப் பாவத்தின் விடுதலை, வருந்தி இறைவழிபாடு செய்வதிலும் திருந்தி வாழ்வதிலுமே அமைந்துள்ளது என்றும் சமயம் இடித்துக் கூறுகின்றது. இந்நாள் உளவியல் அறிஞர்களும் குற்ற உணர்ச்சிகள் குறைவதற்குச் சமயம் பெருந்துணையாகும் என்றே கருதுகின்றனர்.

''பூமியிலே கண்ட மைந்து மதங்கள் கோடி'' என்று கவியரசர் பாரதியார் பாடினுர். கொள்கையினுல், குறிகளினுல், கோயில் அமைப்புக்களினுல் சமயங்கள் பல்கிப் பெருகிப் பிளவுற்றுக் கிடக்கின்றன. வழிகள் பலவாயினும் இலக்கு ஒன்றே; விளக்குகள் பலவாயினும் ஒளி ஒன்றே; நதித் திரள் பலவாயினும் கூடும் வாரிதி ஒன்றே; அதுபோலவே பல் பெருஞ் சமயம் சொல்லும் பொருளும் ஒன்றே. ஆயினும் சமயம் திசைமாறிச் சென்ற நிலையை வரலாறு காட்டுகின்றது. ''என் தெய்வம் உன் தெய்வம் என்று எதிர் வழக்கிட்டு'' நின்ற சமயங்களின் காட்சியையும் "ஒன்றே பொருளெ

னின் வேறென்றும் அன்றெனின் ஆமென்றும்'' போராடிய வல்லாளர்களின் வாதங்களையும், வெறும் சமயக் குறிகளையே சமய நெறிகள் என்று பூசலிட்டு நின்றவர்களையும் சரித்திரம் தெள்ளத் தெளிவாகச் சுட்டிக் காட்டுகின்றது. இவ்வாறு அன்பை அடிப்படையாகக் கொண்ட சமயம் வன்முறையில் ஈடுபடும்பொழுதெல்லாம் மெய்ஞ்ஞானியர்கள் தோன்றிச்சமயத்தின் உள்ளார்ந்த உண்மையினை வலியுறுத்தி வந்துள்ளனர்.

உயிர்க்குயிராய்த் தழைத்த உண்மை இறைவனை அறிந்ததாயுமானாரும், இன்பத் திருவாசகத்தில் ஊன் கலந்து உயிர் கலந்த இராமலிங்கரும் காட்டிய காழ்ப்பற்ற அன்பு மேவிய பொதுமை நெறியே உலகை உய்விக்கும் நன்னெறி ஆகும். இந்தப் பொதுமை நெறியே சமுதாய நல்வாழ்வுக்குக் காலந்தோறும் ஒளியூட்டும் மணி விளக்கம் எனலாம்.

சமய ஞானிகளின் பெருவாழ்வு நமக்குக் கற்றுத்தரும் பாடம் என்ன? தன்னை மறந்த காதல், தன்னை மறந்த தொண்டு, தன்னை மறந்த தியாகம் ஆகிய பண்புகளை நாம் தனித் தனியாக மனிதர்களிடம் காணுகின்றோம். இத்தனையும் ஒன்றுகூடித் தன்னை மறந்த பக்தியாக மலர்ந்திருப்பதைத்தான் காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கிய அடியார்களின் வாழ்வு நமக்குச் சொல்கின்றது. முதிர் ஞானச் செல்வர்களாகிய மாணிக்க வாசகரும், திருநாவுக்கரசரும் வாழ்ந்த வாழ்க்கை இக்கருத்தினை நமக்குத் திறம்பட விளக்குகின்றது.

இவ்விரு மெய்யடியார்கள் வாழ்வினையும் வாக்கினையும் உற்று நோக்குவார்க்கு ஓர் உண்மை புலனாகிறது. புனிதத்தைத் தேடிப் புறப்பட்ட பயணத்தில் ஒவ்வோர் அணுவையும் போராடிப் போராடியே அவர்கள் கடந்தனர். அமைச்சுத் தொழிலும் அரண்மனைச் சுவர்க்க போகங்களும் தரமுடியாத குறைவிலா நிறைவினை எய்த மாணிக்கவாசகர் உள்ளம் பட்ட பாட்டினை அவர் பாட்டெல்லாம் நமக்குக் காட்டுகின்றது. அழுது அடியடைந்து அனுபூதி பெற்ற பக்திக் கடலான மாணிக்க வாசகரே இறைவனைப் பார்த்து, ''என்னை அடையாளம் கண்டுகொள்'' என்று விம்மி யழும் துயர்க் குரலைக் கேட்கும்போது நம் நெஞ்சம் சிலிர்க்கின்றது. மனிதரில் புனிதரான மணிவாசகர் பல நிலைகளில் உழன்று உழன்று தம் குற்றங்களையெல்லாம் ஓலமிட்டுரைத்துக் கண்ணீரில் கழுவி உய்தி பெறுகின்றார்.

தத்துவங்களிலும் தருக்க நெறிகளிலும் புறச் சமயத்திலும் புகுந்து இறைவனைத் தேடியடைய முயன்றார் நாவுக்கரசுப் பெருந்தகையார். அதற்காகஅவர் மேற்கொண்ட தொண்டு நெறித் தூய்மையைக் காணுகின்றோம். அருட்பேரொளியைக் காணத் துடித்த துடிப்பினை அவர் பாக்களில் கேட்கின்றோம். நிலையற்ற நினைவின் அலைகளினால் உந்தப்பட்டு, இறைவன் தன்னையாட்கொள்ளும் பக்குவம் தனக்கு வரவில்லையோ என்று ஒவ்வொரு நிகழ்ச்சியிலும் தன்னைப் பரிசோதனைக் கருவியாக்கிக்கொண்டு வருந்தும் குரல் நம்மை நெகிழ்விக்கின்றது. தன்னைப் புனிதப்படுத்திக்கொள்ளும் சோதனை நெறியினாலும் தொண்டு வாழ்க்கையினாலும் இறைவனை நெருங்க முடியும் என்று கோடிட்டுக் காட்டுகின்றது இவ்வடியார்களின் வாழ்க்கை.

மண்ணில் நல்ல வண்ணம் வாழக் கடவுள் நம்பிக்கை வேண்டும். தெய்வம் என்னும் சிந்தை உண்டாகுமேயானால் மனித குலம் உய்வது உறுதி. சமயங்களின் உட்கிடைதான் (Essence of Religion) மிகவும் இன்றியமையாதது. இவ்வாறு ஊனினைச் சுருக்கி உள்ளொளி பெருக்க ஞானியர்கள் நமக்கு விட்டுச் சென்றுள்ள பெருஞ் செல்வம் தேவாரத் திருவாசகங்களே.

---

# சைவ நெறி

கருமுத்து தி. மாணிக்கவாசகம் செட்டியார்
ஆசிரியர், 'தமிழ் நாடு'

உலகச் சமயங்களில் மிகவும் பழமையானது இந்து சமயம். இந்து என்ற சொல் சிந்து என்பதன் திரிபாகும். சிந்து என்பது சிந்து நதிப் பகுதியைக் குறிக்கும். வரலாற்றுக் காலத்துக்கும் முன்னரே சிந்துச் சமவெளியில் நாகரிகத்தோடு வாழ்ந்தவர்கள் தமிழர்கள் என்பது புதைபொருள் ஆராய்ச்சியால் விளங்குகிறது. அப்பகுதிகளில் இலிங்கம் முதலிய சிவ நெறிக்குரிய அடையாளப் பொருள்கள் கண்டெடுக்கப்பட்டுள்ளன. இவற்றை நோக்கும்போது மிகப்பழங் காலத்திலேயே அங்குச் சைவ சமயம் பரவியிருந்தது என்பது விளங்கும். எனவே இந்து சமயம் என்று சொல்லும்போது, அது சைவ சமயத்தையே முதன் முதலில் குறித்தது. பின்னர் வைணவம் அதனின்றும் கிளைத்தது. சைவம், வைணவம் இரண்டும் சேர்ந்து இக்காலத்தில் இந்து சமயம் என்று வழங்கி வருகிறது.

இந்து சமயத்தின் காலத்தை வரையறுத்துக் கூற முடியாது. மற்றச் சமயங்களின் தோற்ற காலத்தையும் அவற்றைத் தோற்றுவித்த பெரியார்களையும் கூறிவிட முடியும். ஆனால் இந்து சமயத்திற்கு இவ்விரண்டையும் கூறமுடியாது. இந்து சமயத்தைத் தோற்றுவித்தவர் யார்? அதன் காலம் என்ன? இவைகளைக் கூற முடியாது. காரணம் வரலாறு காணாத மிகப்பழமை வாய்ந்தது இந்து சமயம்.

### சைவம்

இன்று இந்து சமயத்தில் ஒரு பிரிவாகக் கொள்ளப்படும் சைவ சமயமும் வரலாற்றுக்கு முற்பட்டது. சைவம் என்னும் சொல் சிவ சம்பந்தமுடையது எனப் பொருள்படும். சிவம் என்னும் சொல் முழுமுதற் கடவுளைக் குறிப்பதாகும். 'அரிக்கும் பிரமற்கும் அல்லாத தேவர்கட்கும், தெரிக்கும் படித்தன்றி நின்ற சிவம்' என்பது திருவாசகம். இத்தகைய சிவமாகிய செம்பொருளைக் குறிக்கும் எல்லாக் கொள்கைகளையும் சைவம் என்ற சொல்லால் குறிப்பிடலாம். சைவ நெறியின் அடிப்படையான கோட்பாடு கொலை மறுத்தலும், புலால் மறுத்தலும். இன்று உலகியலில் 'நான் சைவம்' என்று கூறும்போது 'சைவம்' என்பது சைவ சமயத்தைக் குறிப்பதற்கு பதிலாகப் புலால் உணவு கொள்ளாமையையே வெளிப் படையாகக் குறிக்கும். இதனால் சைவ சமயத்தின் ஆணிவேர் உயிர் பாதுகாப்பாகும் என்பது தெளிவு. மற்றொரு இன்றியமையாத பண்பு அன்பாகும். 'அன்பே சிவம்' என்பது யாவரும் அறிந்தவொன்று.

### கோவில்கள்

சைவ உலகில் கோவில்கள் பெரிதும் மதிக்கப் படுவனவாகும். 'கோவில் இல்லா ஊரில் குடியிருத்தலாகாது' என்ற பழமொழியும் இது பற்றியே எழுந்தது. கோவிலின் அமைப்பு முறை பல சமய தத்துவங்களைக் கொண்டதாகும். ஆண்டவனை அடைய கோவில் ஒரு வாயிலாகக் கொள்ளப்பட்டுள்ளது. சுருங்கச் சொல்லின், மக்கள் உயிர் தங்குவதற்கு உடம்பு அமைந்திருத்தல் போல, எங்கும் நிறைந்த இறைவனுக்கும் ஒரு கோயில் கட்டித் தங்க வைத்து மகிழ்ந்தான் பழந்தமிழன். இத்தகைய கோயில்கள் நாடெங்கும் எண்ணிலவாய்க் காட்சி அளிக்கின்றன. பண்டைக் காலத்திலும் கோயில்கள் தமிழர் சமய வாழ்விலும், சமுதாய வாழ்விலும்

நன்கு இடம் பெற்றிருந்தன. சிலப்பதிகாரம் பல வேறு கோயில்களையும் சித்தரித்துக் காட்டு கிறது.

"பிறவா யாக்கைப் பெரியோன் கோயிலும்
அறுமுகச் செவ்வேள் அணிதிகழ் கோயிலும்
வால்வளை மேனி வாளயோன் கோயிலும்
நீலமேனி நெடியோன் கோயிலும்
மாலை வெண்குடை மன்னவன் கோயிலும்"

என்று பல்வேறு கோயில்கள் கூறப்பட்டுள்ளன. அக்காலத்துக் கோயில்கள் சுடுமண்ணாலும் சாந்தாலும் அமைந்தவை. உள்ளத்தை உருக்கி தெய்வ பக்தியில் திளைக்கச் செய்யும் சிறந்த சாதனங்கள் அவை.

இறைவன் எங்கும் இருப்பவன். தூணிலும் இருப்பான் துரும்பிலும் இருப்பான். உருவம் இல்லாதவன். பெயர் இல்லாதவன். இப்படி யிருக்க ஆண்டவனுக்குக் கோயில் கட்டுவது ஏன்? இவ்வாறு சிலர் கேட்கிறார்கள். இது அறி யாமை. மின்சாரம் நீர்த்தேக்கங்களில் உற்பத்தி செய்யப்படுகிறது. ஆனால் அத்தண்ணீரைத் தேக்கி வைத்து உயரத்திலிருந்து சில எந்திரங் களை அமைத்துப் பின்னர்தான் மின்சாரம் எடுக்க முடிகிறது. மின்சாரம் ஒளிதருவது. ஆனால் அவ்வொளியை ஒரு 'பல்பின்' மூலமாகத்தான் நாம் பெற்று மகிழமுடிகிறது. நெல்மணி மிக வும் முக்கியமானது. அதுதான் உணவுக்குரிய முக்கியப்பொருள், ஆனால் அதனை ஏன் உமி மூடியிருக்கிறது. அவ்வுமி இல்லாவிட்டால் அதனை முளைக்க வைக்க முடியுமோ? அது போலத்தான் ஆண்டவனும் ஓர் இடத்தில் மக் களால் எழுந்தருளச் செய்து காணத்தக்கவன். எனவே, கோயிலில் சென்று இறைவனை வணங் குவதும், மனத்தூய்மை பெறுவதும் இன்றி யமையாத சைவ சமயச் செயல் முறை களாகும்.

ஆனால் கோயிலுக்குச் செல்லும் அன்பர்கள் கவனிக்கத்தக்கவை பல உள. அவற்றுள் மிக முக்கியமானது ஆண்டவனிடம் நாம் விடுக்கும் வேண்டுகோள் ஆகும். தூய்மையான எண் ணத்துடன் ஆண்டவனை மனத்தில் அமைத்துத் திருமுன்பு நின்று உலக நலமும் அருளும் பெருக வேண்டுதல் வேண்டும்.

"யாம் இரப்பவை
பொருளும் பொன்னும் போகமும்
அல்ல நின்பால்
அருளும் அன்பும் அறனும் மூன்றும்
உருளிணர்க்கடம்பின் ஒலி தாரோயே"

என்று உலக நலத்தின் பொருட்டு ஆண்டவனை நினைந்து வேண்டுதல் இன்றியமையாப் பண் பாடாம். பிறர் கெடவேண்டும் என நினைந்து ஆண்டவனைப் பணிவது தன்னையே கெடுத்துக் கொள்ளும் கொடூரச் செயலாகும்.

இராமலிங்க அடிகளார் ஆண்டவனை நோக்கி விடுக்கும் வேண்டுகோள் உண்மை யான கடவுளன்பர்க்கு மிகவும் பயனுடைய தாகும்.

அவர் வேண்டுகிறார் :

"அப்பா நான் வேண்டுதல் கேட்
டருள்புரிதல் வேண்டும்
ஆருயிர்கட் கெல்லாம் நான்
அன்பு செயல் வேண்டும்
எப்பாரும் எப்பதமும்
எங்கணும் நான் சென்றே
எந்தைநின தருட்புகழை
இயம்பியிடல் வேண்டும்
செப்பாத மேனிலைமேற்
சுத்தசிவ மார்க்கம்
திகழ்ந்தோங்க அருட்சோதி
செலுத்தியிடல் வேண்டும்
தப்பேதும் நான் செயினும்
நீ பொறுத்தல் வேண்டும்
தலைவநினைப் பிரியாத
நிலைமையும் வேண்டுவனே"

இப்பாடலில் தன்னல மற்ற வேண்டுகோள் அமைந்திருப்பது மகிழத்தகும்.

### அன்புநெறி

சைவத்தின் அடிப்படை அன்பு என்று கண்டோம். 'அன்பகத்தில்லா உயிர் வாழ்க்கை வன்பாற்கண் வற்றல் மரந்தளிர்த்தற்று' என் பது வள்ளுவர் வாய்மொழி. ஆண்டவன்பால் இடையறாத அன்பு செலுத்துவதன் மூலம் அவ னது திருத்தாளினை அடையலாம் என்பது சைவ

N. S. S. MANRADIAR
(Pattagar of Palayakottai)
Minister for Co-operation

FORT ST. GEORGE
MADRAS-9
30-5-'63

சிவத்தொண்டு என்பது, வெறும் இறைவழிபாடு மட்டும் அல்ல. ஏழை எளியவர்பால் அருள் சுரந்து, அவர்களது பசியாற்றுவதும் கடவுளுக்குச் செய்யும் தொண்டே ஆகும். இந்த அறநெறியை நாட்டுக்கோட்டைச் செட்டியார்கள் வாழ்க்கையில் பக்தியோடு போற்றிக் கடைப்பிடித்து வருவது மகிழ்ச்சிக்குரிய விஷயம். காசியில் ஸ்ரீ விஸ்வேஸ்வரருக்குக் கடந்த 152 ஆண்டுகளாகப் பூஜா கைங்கர்யங்கள் செய்து வருவதையும், நகரச் சத்திரம் ஏற்படுத்திக் கடந்த நூறு ஆண்டுகளாக அறப்பணிகள் ஆற்றி வருவதையும் மிகவும் பாராட்டுகிறேன். நூற்றுண்டு விழா மலர் சிறப்பாக அமைய எனது நல்வாழ்த்துக்கள்.

**மன்றுடியார்**

அடியார்களின் கோட்பாடு. கண்ணப்ப நாயனர் குடுமித்தேவராய சிவபெருமானின் திருவருள் அனுபவம் பெற்றது அவரது அசைக்க முடியாத அன்பேயாகும். இத்தகைய தூய அன்பினை வியந்த திருவாதவூரடிகளாகிய மாணிக்க வாசகர் தமது திருவாசகத்தில் மனமுருகிப் பாடியுள்ளார். அப்பாடல் வருமாறு:—

'கண்ணப்பன் ஒப்பதோர்
அன்பின்மை கண்டபின்
என்னப்பன் என்னொப்பில்
என்னையும் ஆட்கொண்டருளி
வண்ணப் பணித் தென்னை
வாவென்ற வான்கருணைச்
சுண்ணப்பொன் நீற்றற்கே
சென்றூதாய் கோத்தும் பீ'

'அன்பிற்கும் உண்டோ
அடைக்கும் தாழ்'

இவ்வன்பு சாதி குலம் முதலியவற்றை எல்லாம் கடந்து எவ்விடத்தும் எவ்வுயிரிடத்தும் பாய வல்லது. சைவ சமய குரவர்களோ அன்றி அடியார்களாகிய நாயன்மார்களோ தமக்குள் எவ்வித வேறுபாடுகளையும் கொள்ளவில்லை. சிவபெருமான் திருமுன்பு யாவரும் ஒன்று என்று எண்ணினர். திருநாவுக்கரசர் வேளாளர். அப்பூதி அடிகளார் அந்தணர். அவ்விருவரிடையேயும் இருந்த அன்பு உலகறிந்தது. கீழ் குலத்தவரான நந்தனர் தில்லைத் திருமுன்பு முத்திபெற முடிந்தது. ஆண் பெண் பேதமும் இல்லை. காரைக்கால் அம்மையார் இதற்குச் சான்று.

"ஆவுரித்துத் தின்றுழலும் புலையரேனும்
கங்கைவார் சடைக்கரந்தார்க்கு
அன்பராகில்
அவர்கண்டீர் யாம் வணங்கும்
கடவுளே"

என்ற சமரச நெறியைச் சைவ சமயத்தில் நன்கு கண்டு தெளியலாம்.

எனவே சைவ சமயம் மிகவும் தொன்மை வாய்ந்தது என்பதும், திருக்கோவில்கள் மக்கள் சமுதாயத்தில் உயரிய இடம் பெறத்தக்கவை என்பதும், அன்பும் அறிவும் ஆகிய இரு சாதனங்களும் ஆண்டவனை அடைய உதவுகின்றன என்பதும், சமரச சன்மார்க்கமே உயிர்கள் உய்ய உறுதுணையப்பது என்பதும் இதுகாறும் நாம் கண்டோம். சைவம் ஓங்குக.

"அன்பம் பெருக்கி
இருளகற்றி எஞ்ஞான்றும்
துன்பம் தொடர்வறுத்துச்
சோதியாய் - அன்பமைத்துச்
சீரார் பெருந்துறையான்
என்னுடைய சிந்தையே
ஊராகக் கொண்டான் உவந்து"

TRAYONS

# ட்ரேயான்ஸ் ட்ரேயோபேன்

## கொண்டு நவீன முறையில் பொருள்களை பாக் செய்து உங்கள் விற்பனை பிரச்னையை தீர்த்து கொள்ளவும்



ஒரு பொருளை வாங்கு முன், அதைக்கையிலெடுத்து நன்கு பரிசீலனை செய்யாமல் யாரும் முடிவுக்கு வருவதில்லை. வாடிக்கைக்காரரின் பரிசீலனைக்கேற்ப, கைக்கெட்டியவாறு பொருள்களைக் கடையில் வைப்பது சிறந்த முறை தான். ஆனால், அடிக்கடி ‘‘கைபடுவதால் பொருள்களின் மேல் அழுக்கும், கறைகளும் பட்டு விடுகிறது. பிறகு அதை வாங்குவார் யார்? இக்காரணத்தினால்தான் பெரும்பாலான உற்பத்தியாளர்கள் தம் பொருள்களை ட்ரேயான்ஸ் ட்ரேயோபேன் கொண்டு பாக் செய்கின்றனர்.

ஸ்டாக்கிஸ்டுகள்:

Rt

**ரேயான் டிரேடர்ஸ் பிரைவேட் லிமிடெட்**

61, செம்புதாஸ் தெரு,
சென்னை-1.
போன் 21641-தந்தி CELYARN.

கிளைகள்:

போன் 3253-தந்தி CELYARN 68/416 மெயின் ரோடு, செவ்வாப்பேட்டை, சேலம்.
போன் 2598-தந்தி CELYARN 114/A, தெற்கு மாசி வீதி, மதுரை.
போன் 3441-தந்தி RAYONS யுனைடெட் இந்தியா பில்டிங், அவனாசி ரோடு, கோயமுத்தூர்.

6731SA

# வைசியத்தில் தேசிகம்

பழ. ஷண்முகம்
இராமச்சந்திரபுரம்

**பொ**ழுது புலர்ந்து கண்விழித்தது முதல் இரவு தூங்கப்போகும் வரை எவ்வளவோ காட்சிகள்! எவ்வளவோ அநுபவங்கள்! அவையனைத்தும் அழியும் இயல்பினவே. இன்பமும் துன்பமும் கலந்தனவே. ஆனால் நிலைபேறான இன்பம் பெறவே நாம் முயற்சி செய்கிறோம். இம் முயற்சியில் வெற்றி அடைகிறோமா?

வாழ்வில் பசி இரண்டு வகை. ஒன்று உடற்பசி, மற்றது உயிர்ப்பசி. உடற்பசி உணவு உண்டால் தீருகிறது. உயிர்ப்பசி எப்படித் தீரும்? உடற்பசிக்கு இரை ஊட்டுவது போல உயிர்ப்பசிக்கு இரை ஊட்டவேண்டும். அது செமிக்கக்கூடிய வகையில் அமைய வேண்டியது மிகமிக இன்றியமையாதது.

உயிர்ப்பசிக்கு உணவூட்டுவதில் ஒவ்வொருவரும் ஒவ்வொரு வகையைப் பின்பற்றுவது கண்கூடு. பெற்றோர்கள் வழி அல்லது கூட்டுறவாளர்களின் வழியாகப் பற்பல துறைகளில் தோத்திரங்களோ, திருக்கோயில் வழிபாடோ அல்லது தியானமோ மக்கள்பால் அமைந்து விடுகிறது. இதுவும் ஆசான் காட்ட அமைவதாகப் பெரும்பாலும் இல்லை. ஒருவாறு அங்ஙனம் அமைந்தாலும் இறைவன் கட்டளையாகிய சிவாகம முறைக்குப் புறம்பாகவே அவை நடைபெற்று வருகின்றன.

முறைதவறாத உணவு உடலுக்கு ஊறுபாடு செய்யாது பசியை நீக்கும். அங்ஙனமே மாறுபாடு இல்லாத இறைவழிபாடு உயிர்ப்பசியை நீக்கி இன்புறுத்தும்.

உள்ளத்தின் செயலாகிய தியானத்திற்குக் கூட புறக்கருவி கரணங்களின் ஒத்துழைப்பும் உறுதியாக வேண்டப்படும் சொல் செயல் இரண்டின் ஒத்துழைப்பும் இல்லாமல் உள்ளத்தை ஒருநிலைப் படுத்த இயலாது. இது அநுபவத்திற்கண்ட உண்மை.

"பண்ணேன் உனக்கான பூசையொரு வடிவிலே பாவித்திறைஞ்ச வாங்கே பார்க்கின்ற மலரூடு நீயே இருத்தியப் பனிமல ரெடுக்க மனமும், நண்ணேன்" என்பார் தாயுமான அடிகள். புறத்தே திருவுருவத்தில் இறைவனைக்கண்டு பூசை செய்து முற்றிமுதிர்ந்து மலரினும் இறைவனைக் காணும் பெற்றி பெறும்போது தானாகவே பூசை நழுவி விடும். இப்படித் தானாகவே பூசை நழுவும் ஞானநிலை தமக்கு வந்ததாக நடித்து வருகின்றனர். மும்மலச்சேற்றில் அழுந்திப் பிணைந்திருக்கும் ஒரு சிலர், சொல்லளவில் அந்தப் பெறற்கரும் பேற்றைச் சொல்லி புறப்பூசை இல்லாது தியானத்தில் அழுந்தி விடுவோம் என முயல்வது முடிவு காணமுடியாத முயற்சியாகும்.

சைவத்துறையில் முறையாகப் படிகள் ஏறி விண்ணகத்தானைக் காண வழிவகுக்கப் பெற்றுள்ளது. சைவ தீக்ஷைகள் சமயம், விசேடம், நிர்வாணம் எனவும் ஆசாரிய அபிடேகம் எனவும் நால்வகைப்படும். இவற்றிற்குரிய சாதனங்கள் அனைத்தும் மனம், வாக்கு, காயம் ஆகிய மூன்றும் செயற்படுதற்குரிய நெறியிலேயே அமைந்திருக்கின்றன. இதில் இரண்டாவதாகிய விசேட தீக்ஷைக்கு அங்கமாக

ஆன்மார்த்த சிவபூசை எழுந்தருளச் செய்து கொடுக்கப் பெறுகிறது. இச்சிவ பூசையில் புறப்பூசையோடு அகத்துச் செய்யும் தியானம், பூசை, ஹோமம் ஆகியவைகளும் அருளப் பெற்று உணர்த்தப் பெறும். அப்பரடிகள்,

''பெரும்புலவர் பாலே மூழ்கிப்
பித்தர்க்குப் பத்த ராகி
அரும்பொடு மலர்கள் கொண்டாங்
கார்வத்தை உள்ளே வைத்து
விரும்பி நல் விளக்குத்தூ பம்
விதியினால் இடவல்லார்க்குக்
கரும்பினில் கட்டி போல்வார்
கடவூர் வீரட்டனுரே''.

என்று அருளி உய்யும் வகையை நல்கியிருக்கிருர்கள். இத்திருப்பாடலில் ''விதியினுல்'' என்பது உயிர் நாடியாய் அமைந்திருக்கிறது. விதிமுறை தெரிந்து பூசை செய்யாத பொழுது பயன் சித்திக்காது. இவ்விதிமுறையை உணர்த்த வல்லவர்கள் ஆசாரிய அபிஷேகம் பெற்றுக்கொண்ட ஞானசிரியர்கள். இவர்கள் சிவபெருமானின் அதிட்டானத் திருமேனியாக விளங்குபவர்கள்.

இவர்களுள் சிவாகமங்களைத் தெளிவு பெறக் கற்பான் வேண்டி நேபாளம் வரை சென்று பல்லாண்டுகள் தங்கியிருந்து வேதாகம நுணுக்கங்களை அறிந்து வந்து அவ்வாகம நெறியில் சிறிதும் பிறழா தொழுகி அண்மையில் சிவ பரிபூரணம் அடைந்த சித்தாந்த சைவஞான பானுவாகிய பழநி சிவ ஸ்ரீ ஈசான சிவாசாரிய சுவாமிகளிடம் முறையே நான்கு தீக்ஷைகளை யும் பெற்று சிவநெறிக் குரவராகவும் சித்தாந்தப் பேராசியராகவும் விளங்கிவரும் தனவைசிய திலகத்தைத்தான் இங்கே குறிப்பிட விரும்பு கிறேன்.

தன வைசியச் செல்வர்கள் திரைகடல் ஓடியும் திரவியம் தேடும் பெற்றியை உடையவர்கள். தேடிய பொருளைச் சிவப்பணிக்குச் செலவு செய்து சிவ புண்ணியத்தைக் கைக்கொள்ளுபவர்கள். மன்னர் மன்னர்களால் நிறுவப்பெற்றும், கண்காணிக்கப் பெற்றும் வந்த வானளாவிய கோபுரங்களை உடைய மிகப் பெரிய சிவாலயங்கள் பல தனவைசியச் செல்வர்களால் பிற்காலத்தில் நன்ருகப் பேணப்பட்டுச் சிறந்து விளங்குகின்றன.

சிவாலயப்பணிக்கும் வழிபாட்டுக்கும் எனவே பிறந்த நகர தனவைசிய மரபில் இதுகாறும் சமயம், விசேடம், நிர்வாண தீக்ஷைகளைப் பெற்றுக் கொண்டவர்கள் பலராவர். நகரத்தார்களின் உறைவிடங்களில் சிவாகமச் சிறப்பால் உயர்ந்து விளங்குவது தேவகோட்டை. இவ்வூர் வைசிய மணிகளே சிவபூஜை செய்யும் தனவைசியர்களில் எண்ணிக்கையில் மிகுதியாகஉள்ளவர்கள். வாழ்வெல்லாம் சிவபூசைக்கு அர்ப் பணித்து சிவபூசைச் செல்வத்தைக் காப்பாற்றி வரும் சைவ சித்தாந்தப் புரவலர், தமிழ் வள்ளல், சிவபாத சேகரர் மெய்யப்ப செட்டியார் அவர்கள் வாழும் நகரம், தேவகோட்டையே. இந்நகரில் தான் நமது கட்டுரை நாயகமான வைசியகுல தேசிக திலகமும் வாழ்வு பெறுகிறது. புரவலர் பெருமாஞன இவர்களும் குரவரர் பெருமாஞன ''தத்புருட தேசிகரும்'' ஒருங்கே சிவபூசை செய்யும் காட்சி காணற்கினியது.

சைவ சமயிகளின் உயிர்நாடியாகிய சிவ பூசை தனவைசியர்களிடத்தில் முன்னுளில் மிகுந்திருந்தது என்பது நகரத்தார் குலப்பெண் மணிகள் இன்புறப் பாடிவரும் தாலாட்டிலுள்ள,

''மலரெடுத்துப் பூசை செய்யும்
மகராசா பேரேனோ!
அரும்பெடுத்துப் பூசைசெய்யும்
அர்ச்சுனவா பேரேனோ!
பூவெடுத்துப் பூசைசெய்யும்
புண்ணியவா பேரேனோ!
மொட்டெடுத்துப் பூசைசெய்யும்
முதலாளி பேரேனோ!''

என்ற வரிகள் காட்டுகின்றன.

தனவைசியர் அனைவரும் அநுட்டானத்தில் கொண்டிருந்த இந்தச் சிவபூசை இந்நாளில் என்ன காரணத்தினுலோ குறைவடைந்து விட்டது. தேவ கோட்டையில் பரவியுள்ள சிவ பூசைச் செல்வம் நகரத்தார் அனைவரிடமும் பரவுமேல் வந்த வினையும் வருகின்ற வல் வினையும் நீங்கி இன்பம் கிடைக்கும் என்பது உறுதி.

நகரத்தார் சமூகத்தில் தேவகோட்டையில் சுப்பிரமணியன் செட்டியார் என்ற ஒருவர் ஆசாரிய அபிஷேகம் பெற்றுக் கொண்டு வாழ்ந்து வந்தார்கள். அவர்கள் காலத்திற்கு முன்பு நகரத்தார்களில் அபிஷேகம் பெற்றுக் கொண்டவர்களைப் பற்றிய குறிப்பு நமக்கு ஏதும் கிடைக்க வில்லை.

இப்பொழுது ஆன்மீக நேய ஒருமைப்பாடு வளரப் பல ஆன்மீக சந்ததிகளைப் பெற்று உதவி புரிந்து வருபவர்கள் இங்கு குறிக்கப்பெறும் ஞானசிரியர் ஆவார்கள். இவர்கள் இளமையிலேயே தென்றமிழும் வடமொழியும் சிறக்கக் கற்றுப் பல தமிழ் நூல்களை இயற்றியுள்ளார்கள். இவர்களுக்குப் ''பா'' இயற்றும் பெற்றி பாவியத்திலே அமைந்ததை இவர்கள் பட்டம் குறிக்கும். இவர்கள் முத்தமிழ்த்துறையிலும் வித்தகராய் அமைந்திருப்பதோடல்லாது சைவ சித்தாந்த ஞான நூல்களையும் துறைதுறையாகக் கற்று இக்கால மக்களுக்கு உண்டாகும் ஐயம் திரிபுகளுக்குத் தக்க தற்கால அநுபவச்சான்றுகளை எடுத்துக் காட்டி விளக்கும் நிலையில் பெரும் பேறு பெற்றிருப்பவர்கள். நம் ஞானசிரியர் நமது சைவ உலகுக்கே ஓர் ஒளி விளக்கமாய் விளங்குகிறார்கள்.

'மகாதேவ', 'மகாதேவ' என்று இடைவிடாது பயின்ற பெற்றோர் நோற்ற தவப்பயனால் ஆலவாய்ப் பெரும் பிராட்டியாகிய அங்கயற்கண் அம்மையின் அருட்கடாக்ஷமும் பிரத்தியக்ஷ தெரிசனமும் பெற்றுயர்ந்த திருவருட் செல்வரின் வழித்தோன்றலாய் வந்தமர்ந்திருக்கும் பாலகவி, வயிநாகரம் வே. இராமநாதன் செட்டியாரை அறியாதார் செந்தமிழ் வளர்க்கும் திருநாட்டில் யாருமிருக்க மாட்டார்கள். இவர்கள் இதுகாறும் பல விருதுகளால் பொதுவாக அறிமுகப் படுத்தப் பெற்றிருக்கிறார்கள். சிறப்பாக இவர்களுக்கென அமைந்துள்ள "தத்புருஷ தேசிகர்" என்ற அபிஷேக தீக்ஷா நாமத்தால் இவர்களை இங்கு அறிமுகம் செய்து வைப்பதில் நான் மிகமிகப் பெருமை அடைகிறேன்.

ஆதிசைவ மரபில் ஆசாரிய அபிஷேகம் பெற்றவர்களைச் சிவாசாரியார் என்பதும், மற்ற மரபில் ஆசாரிய அபிஷேகம் பெற்றவர்களை தேசிகர் என்பதும் நமது மரபு. "தத்புருஷ" தேசிகப் பெருமானால் இன்று வரை இந்தியா, மலேயா, பர்மா முதலான நாடுகளில் சற்றேறக்குறைய நானூறு மெய்யன்பர்கள் சிவதீக்ஷை செய்து வைக்கப் பெற்றுச் சைவானுட்டானம், சிவபூசை முதலிய சாதனங்களை மேற்கொண்டொழுகி நலம்பெற்று வருகின்றார்கள்.

மூர்த்தி தலத்தீர்த்தச் சிறப்பால் முன்னணியில் விளங்கும் ஸ்ரீகாசியம்பதியில் சர்வலோக நாயகனாகிய விஸ்வேஸ்வரப் பெருமானுக்கு நாட்டுக்கோட்டை நகரத்தார்கள் சிறப்பாக நடத்தி வரும் சிவபூசைக்குரிய வழிதுறைகளை வகுத்து தர்ம சத்திரம் கண்டு அதற்கென மலர்விக்கும் இந்த நூற்றாண்டு விழா மலரில் அத்திருமரபில் வந்துதித்து ஆன்மார்த்த சிவபூசை மேம்பாட்டாலும் அன்பர்களுக்கு வழங்கும் சிவதீக்ஷைப் பேற்றாலும் மேலோங்கித் திகழும் "தத்புருஷ தேசிகரை" அறிமுகம் செய்து வைப்பது பொருத்தமேயன்றோ?

ஆசையறுப் பாசம்விடாய்
ஆனசிவ பூசைபண்ணாய்
நேசமுடன் ஐந்தெழுத்தை
நீ நினையாய்—சீசீ
சினமே தவிராய்
திருமுறைகள் ஓதாய்
மனமே உனக்கென்ன வாய்.

—சிவபோகசாரம்.

## காசிக்குச் சமமாகக் கருதப்படும் தலங்கள்

திருவையாறு

திருமயிலாடுதுறை (மாயூரம்)

திருச்சாய்க்காடு

திருவாஞ்சியம்

திருவிடைமருதூர்

திருவெண்காடு

# சைவ சமய வரலாறு

மயிலை. சீனி. வேங்கடசாமி
தலைவர், தமிழ் எழுத்தாளர் சங்கம், சென்னை.

"தென்னாடு உடைய சிவனே, போற்றி!
எந்நாட்டவர்க்கும் இறைவா, போற்றி!"

என்று அருளிச் செய்தார் மாணிக்க வாசகப் பெருமான். சிவபெருமான் தென்னாட்டுத் தமிழரின் (திராவிடரின்) பழம் பெருங் கடவுள். தமிழர் சிறு தெய்வங்களையும் வணங்கினார்கள். ஆனால், அச் சிறு தெய்வங்களுக்கெல்லாம் ஒரு பெருந் தெய்வமாக, முழு முதற் கடவுளாகச் சிவபெருமானைத் தமிழர் வணங்கிப் போற்றினார்கள். பழங்காலத்தில் சிவபெருமானை வணங்கியவர்கள் உருவம் இல்லாத ஒரு அடையாளத்தை வைத்து வணங்கினார்கள். உருவம் இல்லாத அந்த அடையாளத்திற்குப் பெயர் இலிங்கம் என்பது. சிவலிங்கத்துக்குத் தமிழர் வழங்கிய பெயர் கந்தழி என்பது. இலிங்கம் என்னும் பெயர் பிற்காலத்தில் வழங்கத் தொடங்கிய பிறகு, பழைய கந்தழி என்னும் பெயர் மறைந்துவிட்டது. கந்தழியாகிய சிவலிங்க வழிபாடு மிக மிகத் தொன்மையானது. சிவபெருமானுக்குப் பல பெயர்கள் உண்டு. ஆதிரை முதல்வன், ஆதிரையான், ஆலமர் கடவுள், ஆனேற்றுக் கொடியான், ஈர்ஞ்சடையந்தணன், எரிதிகழ் கணிச்சியான், ஏற்றூர்தியான், கறைமிடற்றண்ணல், காரியுண்டிக் கடவுள், சடையன், செல்விடைப்பாகன், தாழ்சடைக் கடவுள், நீர் சடைக் கரந்தோன், நீலமிடற்றொருவன், புதுத் திங்கட் கண்ணியான், மணிமிடற்றண்ணல், மழுவாள் நெடியோன், முக்கட்செல்வன் முதலிய பெயர்கள் சங்க நூல்களில் காணப்படுகின்றன.

தமிழ் நாட்டிலும் பாரத தேசத்தின் பல பாகங்களிலும் ஆதிகாலம் முதல் சிவபெருமானுக்குத் திருக் கோவில்கள் இருந்து வருகின்றன. காசி முதல் இராமேசுவரம் வரையில்,—ஏன்? இமயம் முதல் கன்னியாகுமரி வரையில் உள்ள சிவபெருமானின் திருக்கோவில்களுக்குக் கணக்கில்லை.

சிவபெருமானுக்கு அடுத்தபடியாகத் திருமால் (பெருமாள்) வழிபாடு ஆதிகாலம் முதல் இருந்து வந்தது. பழங்காலத்தில் சிவபெருமானுக்கும் திருமாலுக்கும் திருக்கோவில்கள் ஒரே இடத்தில் அமைந்திருந்தன. பல இடங்களில், சிவனும் திருமாலும் ஒரே கோவிலில் வழிபடப்பட்டனர். பிற்காலத்திலே சைவ சமயம் என்றும் வைணவ மதம் என்றும் தனித் தனி மதங்களாகப் பிரிக்கப்பட்டது போல, பழங்காலத்தில் பிரிக்கப்படாமல் இரண்டு தெய்வங்களும் ஒரே சமயக் கடவுளர்களாக வழிபடப்பட்டனர். ஆழ்வார்கள் நாயன்மார்கள் காலத்தில்கூட சைவ வைணவ மதப் பிரிவு ஏற்படாமல், சிவன்—திருமால் வழிபாடு ஒன்றாகவே நிகழ்ந்து வந்தது. ஏறத்தாழ கி. பி. 10-ஆம் நூற்றாண்டு வரையில் இவ்விதமாக இருந்தது. சிவனும் திருமாலும் ஏற்றத் தாழ்வில்லாமல் வழிபடப்பட்டதற்குச் சான்றுகள் நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத்திலும் தேவாரத்திலும் காணப்படுகின்றன.

"தாழ்சடையும் நீள்முடியும் ஒள்மழுவும் சக்கரமும்
சூழ் அரவும் பொன்னாணும் தோன்றுமால்,—
சூழும்
திரண்டருவி பாயும் திருமலைமேல் எந்தைக்கு
இரண்டுருவும் ஒன்றாய் இருந்து"

என்று பேயாழ்வார் அருளிச் செய்தார்.

"தேசனைத் தேசமாகுந் திருமாலோர் பங்கன்
தன்னைப்
பூசனைப் புனிதன்தன்னைப் புணரும் புண்டரீகத்
தானை."

என்றும்

'' வடிகொண்டார்ந் திலங்கு மழுவான் கைக்
கொண்டார்
மாலே இடப்பாகத்தே மருவக் கொண்டார்.''

என்றும்

'' சீரேறு திருமாலோர் பாகத்தான்காண்
திருவாரூரான்காண் என் சிந்தையானே ''

என்றும்

''தீர்த்தன்காண் திருமாலோர் பாகத்தான்காண் ''

என்றும் அப்பர் சுவாமிகள் அருளிச் செய்தார்.

இதனுல், சிவன் வேறு திருமால் வேறு என்னும் பிரிவுகள் தோன்றிக் கொண்டிருந்த ஆழ்வார்கள் நாயன்மார்கள் காலத்திலுங்கூட சிவபெருமானும் திருமாலும் ஆகிய இரு பெருங் கடவுளர் ஒரு தன்மையராக வழிபடப்பட்டனர் என்பது தெரிகின்றது.

கி. மு. மூன்ரும் நூற்ருண்டிலே ஜைன சமயமும் (சமண சமயம்), பௌத்த மதமும் தமிழ் நாட்டிற்கு வந்தன. சந்திரகுப்த மௌரிய அரசன் காலத்தில் ஜைன சமயத் துறவிகள் தமிழ் நாட்டுக்கு வந்தார்கள். சந்திரகுப்தனின் பேரனுன அசோக சக்கர வர்த்தி காலத்தில் பௌத்த மதத் துறவிகள் தமிழ் நாட்டுக்கு வந்தார்கள். ஏறத்தாழ அக் காலத்திலேயே வைதிக மதத்தராகிய பிராமணர் (வடமொழி வேதமதம்) தமிழ் நாட்டில் வந்திருந்தார்கள். ஆனுல், வைதிகப் பிராமணர் சிறு தொகையினராக இருந்தார்கள். தமிழ் நாட்டுக்கு வந்த ஜைன முனிவர்களும் பௌத்த பிக்குகளும் ஜைன, பௌத்த மதங் களைப் பிரசாரம் செய்து தமிழர்களைச் சமணர் களாகவும், பௌத்தர்களாகவும் மதம் மாற்றி ஞர்கள். இந்த மதத்தாருக்குச் சாதி வேறு பாடுகள் கிடையா. வைதிகப் பிராமணர்

---

தமிழ் இலக்கியத்தில் காசி

# மணிமேகலேயில் வாரணுசி

வாரணுசி என்று கூறப்படும் காசிப்பதியில் அபஞ்சிகன் என்னும் மறையவன் ஒருவன் இருந்தான். அவன் வேதம் ஓதுவிக்கும் தொழில் செய்பவன். அவன் மனேவி சாலி என்னும் பெயருடையவள். இவள் தன் கணவனே வஞ்சித்துத் தவறிய தீய ஒழுக்கத்தால் கருவுற்ருள். அப் பாவந் தீர்தற்பொருட்டுத் தென்றிசைக்கண் உள்ள குமரித் தீர்த்தத்தில் நீராடச் சென்ருள். செல்லும் வழியில், பாண்டியர் கொற்கை நகர்க்குக் காத தூரத்தி லுள்ள ஆயர் சேரியில், ஒரு நாள் நள்ளிரவில், ஓர் ஆண் குழந்தையைப் பெற்று, அக்குழந்தையினிடம் சிறிதும் இரக்கம் காட்டாமல் அங்கு ஒரு தோட்டத்தில் போட்டுவிட்டுப் போயினுள். அக் குழந்தையின் அழுகுரலேக் கேட்ட பசு வொன்று ஏழுநாள் வரை அக் குழந்தைக்குப் பாலூட்டிக் காப்பாற்றிக் கொண் டிருந்தது. வயனங்கோடு என்னும் ஊரில் வாழும் இளம்பூதி என்னும் பார்ப்பனன் தன் மனேயாளுடன் அவ்வழியிற் செல்லுங்கால் இச் சிறு குழந்தை அழுத குரல் கேட்டுத் திகைத்து நின்று தேடினுன். பசு பாலூட்டிக் கொண்டிருப்பதைப் பார்த்தான். இவன் பசுவின் மகன் அல்லன் என்மகனே என்று விரைந்து சென்று குழந்தையை எடுத்தான். மகப்பேறு இல்லாத நமக்குக் கடவுளே இக் குழந்தையைத் தந்திருக்கின்ருர் என்று கூறி மகிழ்ச்சியுடன் தன் மனேவி கையிற் கொடுத்தான். இருவரும் ஆராக் காதலுடன் தம் இல்லத்திற் கொண்டுவந்து இவ் அருமை மகனே அன்போடு வளர்த்தனர். உரிய பருவத்தில் பூணுநூல் புனேவித்தனர். வேதம் முதலிய நூல்களேக் கற்பித்தனர். இவன் எல்லாக் கலேயும் எளிதிற் கற்று வல்லவனுய் விளங்கினுன். இவன் ஆபுத்திரன் என்று கூறப்படுகின்ருன். (மணிமேகலே 13-ஆம் காதை.) இவன் வாழ்க்கையில் நடைபெற்ற பல்வேறு நிகழ்ச்சிகளும், இவனது மறுபிறப்புப் பற்றிய செய்திகளும் பின்னர் இந்நூலில் விரிவாகக் கூறப்பட்டுள்ளன.

வைதிக மதப் பிரசாரம் செய்து தம்முடைய வைதிக மதத்தைப் பரப்பவில்லை. காரணம் என்னவென்ருல், பிறப்பினுல் உயர்வு தாழ்வு பாராட்டிய வைதிகப் பிராமணர், மற்றவர் களைத் தம்முடைய மதத்தில் சேர்த்தால் தங்கள் சாதி கெட்டுப்போகும் என்று கருதியதுதான். சாதியில் உயர்வு தாழ்வு கற்பித்துக்கொண்டு குறுகிய கொள்கையுடையவர்களாக இருந் தனர் சிறு கூட்டத்தினராகிய வைதிகப் பிராமணர்.

தமிழ் நாட்டுக்கு வந்த பௌத்த ஜைன மதங்கள் நாளுக்கு நாள் வளர்ந்து வந்தன. வைதிகப் பிராமண மதம் வளராமல் குறுகிக் கொண்டிருந்தது. மேலும், இம் மூன்று மதத் தாரும் பிறவிப் பகையுடையவராக இருந்தனர். ஆகவே, இவர்களுக்குள் சமயப் பகை வேரூன்றி இருந்தது. இவர்கள் ஒருவருக் கொருவர் எதிரி மதங்களைப் பழித்துப் பேசி ஞர்கள்.

வைதீகப் பிராமணர், மற்ற ஜாதியாரைத் தம்முடைய மதத்தில் சேர்க்காமல் இருந்த தோடு அமையாமல், பௌத்த ஜைன மதங் களுடன் பகைமை பாராட்டிக் கொண்டிருந்த படியால் பௌத்த ஜைனர்கள் இவர் களைத் தாக்கி எதிர்ப் பிரசாரம் செய்து இவர்கள் செல்வாக்கைக் குறைத்துவிட்டனர்.

மேலும், அக்காலத்து வைதிகப் பிராமணர், சைவ சமயத்தையும் வெறுத்தார்கள். சைவ ரின் சிவலிங்க வழிபாடு அக்காலத்து வைதீகப் பிராமணருக்குப் பிடிக்கவில்லை. "சிசன தேவர்" என்று சிவபெருமானை அவர்கள் நிந்தித்து இகழ்ந்தார்கள். இதனுல், அந்தக் காலத்தில் வைதீகப் பிராமண மதம் மங்கி மடங்கிக் கிடந்தது. வைதீக மதத்தார் சைவ சமயத்தை எதிர்த்த செய்தியைச் சண்டேசுர நாயனுர் புராணத்திலிருந்து நன்ருக அறியலாம்.

திருச்சேய்ஞலூர் கிராமத்தில், அக்காலத் தில் வைதீகப் பிராமணர் சிலர் வாழ்ந்து வந்தனர். அவர்களில் எச்சதத்தன் (யாகம் செய்யும் வைதீகப் பிராமணன்) ஒருவன். அவனும் அவ்வூர்ப் பிராமணரும் சிவலிங்க வழி பாட்டை எதிர்த்தவர்கள். ஆனுல், எச்சதத்த னுடைய மகன் சிவலிங்க வழிபாடு செய்து கொண்டு சைவனுக மாறினுன். அதைக் கண்டு பொருமல் வைதீகப் பார்ப்பனர் தந்தையாகிய எச்சதத்தனுக்குத் தெரிவித்து அவனைக் கண்டித் தார்கள். எச்சதத்தன், தன் மகன் சிவலிங்க பூசை செய்யும்போது அங்குச் சென்று காலினுல் இடறிச் சிதைத்தான். அவன் மகன் கோபங் கொண்டு அவன் காலைக் கோடரியால் வெட்டினுன். கடைசியில் சிவபெருமான் தோன்றித் தன் பக்தனுக்கு அருள் செய்தார்.

---



தமிழ் இலக்கியத்தில் காசி

## கலித்தொகையில் வாரணவாசி

பிறர் வருத்தத்தைத் தம் வருத்தமாகக் கொண்டு இரக்கங் காட்டும் அருளுடைமை, வாரணவாசியில் வாழ்பவர்க்கு இயல்பு என்ற குறிப்பு

"தெருவின்கண்,
காரண மின்றிக் கலங்குவார்க் கண்டுநீ
வாரண வாசிப் பதம்பெயர்த்தல் ஏதில
நீ நின்மேல் கொள்வது எவன்."

என்ற குறிஞ்சிக்கலி 24-ஆம் செய்யுட் பகுதியில் கபிலரால் கூறப்பட்டுள்ளது.



இந்த வரலாற்றிலிருந்து அக்காலத்தில் வைதீகப் பார்ப்பனர் சைவ சமயத்தை வன்மையாகக் கண்டித்தனர் என்பது தெரிகின்றது.

ஆனால் வைதீக சமயப் பார்ப்பனர் தங்களுடைய இக்கட்டான நிலைமையை விரைவில் உணர்ந்து கொண்டார்கள். தங்கள் சொந்த வைதீக மதத்தைப் பரப்புவதற்கு வழியில்லாமலும் அதே சமயத்தில் ஜைன பௌத்த மதங்களின் பகைமையை வளர்த்துக்கொண்டு அம் மதங்களின் பிரசாரத்தினால் தாக்குண்டு செல்வாக்கு இல்லாமலும் இருந்துகொண்டு, மேலும் சைவ சமயத்துடன் விரோதம் பாராட்டிக் கொண்டிருந்தால் தாங்கள் வாழ முடியாது என்னும் உண்மையை வைதீகப் பார்ப்பனர் உணர்ந்து கொண்டார்கள். ஆகவே, அவர்களுக்குச் சைவ சமயத்துடன் ஒன்றுபட்டு வாழவேண்டிய கட்டாயம் ஏற்பட்டது. பௌத்த சமண சமயங்களின் தாக்குதலுக்கு ஈடுகொடுக்க முடியாமல் வைதீகப் பிராமணர், தாங்கள் முன்பு பகைமை பாராட்டிய சைவ சமயத்தவரோடு சேர்ந்துகொண்டு, தங்களுக்குப் பக்க பலத்தைத் தேடிக்கொள்ள வேண்டிய நிலைமை ஏற்பட்டது. ஆகவே, அவர்கள், தங்களைவிடப் பல மடங்கு பலமுடைய சைவ சமயத்துடன் கலந்து இசைந்து போக வேண்டியவர்கள் ஆனார்கள். அதனால் திராவிட-ஆரிய சமயத் தொடர்பு ஏற்பட்டது. வைதீகப் பிராமணர் தங்களுடைய வைதீக சமயத் தெய்வங்களைத் தமிழர்களின் (திராவிடரின்) கடவுளர்களோடு இணைத்துத் தொடர்பு ஏற்படுத்திக் கொண்டார்கள். அதற்கு ஏற்பப் புராணக் கதைகளைக் கட்டிக்கொண்டார்கள்.

சைவருடைய சிவபெருமான் வைதீகருடைய உருத்திரனுடன் பொருத்தி இணைத்துக் கூறப்பட்டார். சிவபெருமானுடைய அருட் சக்தியாகிய அம்மனுடன் (தேவியுடன்) மலையரசனாகிய இமவானின் மகளாகிய உமையைப் பொருத்தினார்கள். பிறகு, சிவனுக்கும் உமைக்கும் பிறந்த பிள்ளை சண்முகன் (ஆறுமுகன்) என்று கற்பித்தார்கள். பின்னர், ஆறுமுகனும் தமிழருடைய முருகனும் ஒருவரே என்று கற்பித்தனர். முருகனுக்கு வள்ளி என்னும் தமிழ மனைவி இருக்கவும், அதனோடு திருப்தியடையாமல், ஆரிய திராவிட உறவைப் பலப்படுத்தும் பொருட்டு முருகனுக்குத் தேவயானி என்னும் ஆரியப் பெண்ணை மனைவியாகக் கற்பித்துக் கொண்டார்கள். அக் காலத்தில் பிள்ளையார் (கணபதி) வணக்கம் தமிழ் நாட்டில் ஏற்படவில்லை. பிற்காலத்தில் பிள்ளையார் வணக்கம் ஏற்பட்ட பிறகு,

---

தமிழ் இலக்கியத்தில் காசி

## பெருங்கதையில் வாரணவாசி

அடவி என்னும் அரசன் வாரணவாசி என்னும் நகரை ஆண்டுவந்தான் என்றதொரு செய்தி, பெருங்கதையில்,

"வாரண வாசி வளந்தந்து ஓம்பும்
... ... ... ...
அடவி அரசெனும் ஆண்டகை"

என்னும் பகுதியால் (மகதகாண்டம்—17. இரவெழுந்தது. 13—16) அறியப்படுகின்றது.

அவரையும் சிவபெருமானுடைய மகன் என்று இணைத்துவிட்டார்கள். தமிழருடைய திருமால் என்னும் பெருமாளுடன் விஷ்ணு என்னும் வைதீக தெய்வத்தைப் பொருத்திவிட்டார்கள். விஷ்ணுவையும் திருமாலையும் ஒன்றுக்கிய பிறகு கிருஷ்ணன், பலராமன், இராமன் முதலியவர்களையும் விஷ்ணுவுடன் இணைத்து இவர்கள் அவருடைய அவதாரங்கள் என்று கற்பித்துவிட்டார்கள். இவ்வாறு திராவிடத் தெய்வங்களுடன் ஆரியத் தெய்வங்கள் பொருத்தப்பட்டு இரண்டும் ஒரே மதத் தெய்வங்கள் என்று சொல்லப்பட்டன. இந்தத் திராவிட ஆரிய உறவைத்தான் பிற்காலத்தில் வந்த ஆழ்வார்களும் நாயன்மார்களும் கூறியுள்ளனர்.

**" புரையாய்க் கனமாய்த் தாழ்வானைப்**
**புதியனவுமாய் மிகவும் பழையான் தன்னை "**
என்றும்,
**" ஆரியன் கண்டாய் தமிழன் கண்டாய்**
**அண்ணுமலை யுறையும் அண்ணல் கண்டாய்"**
என்றும்,
**" மூலநோய் தீர்க்கும் முதல்வன் கண்டாய்**
**முத்தமிழும் நான்மறையும் ஆனுன் கண்டாய்"**
என்றும்,
**" செந்தமிழோடு ஆரியனைச் சீரியானை "**
என்றும்,
**" வடமொழியும் தென்றமிழும் மறைகள் நான்கும்**
**ஆனவன்காண் "**
என்றும் கூறுவது இந்தத் திராவிட — ஆரிய உறவைத்தான்.

கடைச்சங்க காலத்துக்குப் பிறகு, கி. பி. மூன்ரும் நூற்ருண்டுக்குப் பிறகு, பௌத்த மதமும் சமண சமயமும் சிறப்படைந்துவிட்டன. அவை பொதுமக்களின், ஆதரவைப் பெற்றுச் செல்வாக்கடைந்துவிட்டன. அப்போது சைவ சமயம் தாழ்வடைந்தது. ஆகவே, சைவ சமயம், முன்னைய உயர்நிலையை அடைவதற்குப் பௌத்த சமண சமயங்களுடன் போராடவேண்டியிருந்தது. அதற்காகப் பக்தி இயக்கம் என்னும் ஒரு புதிய இயக்கம் தொடங்கப்பட்டது. பக்திக் கொள்கையை நாடெங்கும் பிரசாரம் செய்வதன் மூலமாகச் சைவ சமயம் மேன்மையடைய முடியும் என்பதை உணர்ந்தனர். ஆகவே, பௌத்த— சமண சமயத்துக்கு எதிராகப் பக்திக் கொள்கைப் பிரசாரம் செய்யப்பட்டது. அக் காலத்தில்தான் ஆழ்வார்களும் நாயன்மார்களும் தோன்றிப் பக்தி இயக்கத்தைப் பரப்பி, பௌத்த சமண சமயங்களை ஒடுக்கினுர்கள். கி. பி. ஏழாம் நூற்ருண்டிலிருந்து பத்தாம் நூற்ருண்டு வரையில் ஏறத்தாழ முந்நூறு ஆண்டுகள் சைவ வைணவ ஆழ்வார்கள்

**தமிழ் இலக்கியத்தில் காசி**

## காசியைப்பற்றிய தமிழ் நூல்கள்

காசி காண்டம்—காசி மகாத்மியம் கூறிய நூல். இது அதிவீரராம பாண்டியனுல் தமிழில் மொழி பெயர்க்கப்பட்டது.

காசி இரகசியம்—காசியின் சிறப்புக் கூறிய நூல். இது தமிழில் திரிசிரபுரம் மகாவித்வான் மீனுட்சிசுந்தரம் பிள்ளை அவர்களால் இயற்றப்பெற்றது.

காசிக்கலம்பகம் — குமரகுருபரர் ஆக்கிய சிற்றிலக்கியம்.

காசிக்கதிர்காமவேலவர் திருவருட்பா — ஆறுமுக நாவலர் இயற்றியது.

பிரசாரம் செய்த பிறகுதான் பௌத்த சமண சமயங்களின் செல்வாக்கு அழிந்து அந்த மதங்கள் வீழ்ச்சியடைந்தன.

பௌத்த—சமண சமயங்கள் தமிழ் நாட்டில் வீழ்ச்சியடைந்த பிறகு, சைவ—வைணவப் பிரிவு அதிகப்பட்டுவிட்டது. ஏறத்தாழ கி. பி. 10-ஆம் நூற்றுண்டிலிருந்து சைவமும் வைணவமும் வெவ்வேறு தனி மதங்களாகப் பிளவுண்டன. கி. பி. 7-ஆம் நூற்றுண்டிலிருந்து 9-ஆம் நூற்றுண்டு வரையில் நிகழ்ந்த மதப் போராட்டத்தின்போது, ஆழ்வார்களும் நாயன்மார்களும் முறையே திருமாலையும் சிவபெருமானையும் போற்றியபோதிலும் பொது எதிரிகளாகிய சமண — பௌத்த மதங்களை வீழ்த்துவதிலேயே முக்கியமாக ஈடுபட்டிருந்தபடியால், அவர்கள் சைவ சமயம் வைணவ சமயம் என்னும் வேறுபாட்டுக்கு அதிக முக்கியத்துவம் கொடுக்காமல் சைவ வைணவ உறவைப் போற்றி வந்தார்கள். பௌத்த—சமண சமயங்கள் தோல்வியுற்று வீழ்ச்சியடைந்த பிறகு, சைவ—வைணவப் பிரிவுகள் தோன்றலாயின. கி. பி. 10-ஆம் நூற்றுண்டுக்குப் பிறகு சைவ—வைணவம் இரண்டும் தனித் தனி மதங்களாகப் பிரிந்துபோயின. சிவபெருமானுக்குத் தனிக் கோயில்களும் திருமாலுக்குத் தனிக் கோயில்களும் தோன்றலாயின.

சைவ சமயமும் வைணவ மதமும் தனித் தனி மதங்களாகப் பிரிந்து போன பிறகுதான், சிவன் கோவில்களில் சிவ சக்தியாகிய அம்மனுக்குத் தனி ஆலயங்கள் புதிதாகக் கட்டப்பட்டன. இதற்குச் சாசனச் சான்றுகளும் கிடைத்துள்ளன. பிற்காலச் சோழர் ஆட்சியில், அதாவது கி. பி. 10-ஆம் நூற்றுண்டுக்குப் பின்னர், பழைய சிவன் கோவில்களில் புதிதாக அம்மன் கோவில்கள் அமைக்கப்பட்டன என்னும் செய்தி கல்வெட்டெழுத்து ஆராய்ச்சியினுல் அறியப்படுகிறது. இக்காலத்திலேதான் சேக்கிழாரின் பெரிய புராணம் தோன்றியது. இக்காலத்திலேதான் பன்னிரண்டு சைவத் திருமுறைகள் தொகுக்கப்பட்டன. இக்காலத்திற்குப் பிறகுதான் சிவ ஞானபோதம் என்னும் சைவ சித்தாந்த சாஸ்திரத்தை மெய்கண்ட தேவ நாயனுர் இயற்றினுர். இவருக்கு முந்தி ஏறத்தாழ கி. பி. 5-ஆம் நூற்றுண்டில் திருமூலநாயனுர், திருமந்திரம் என்னும் சைவ சமய சாஸ்திரத்தை இயற்றினுர். ஆனுல், தெளிவான சித்தாந்த சாஸ்திரத்தை இயற்றியவர் மெய்கண்டதேவ நாயனுரே. இவருக்குப் பிறகு சிவஞான சித்தியார்,

**தமிழ் இலக்கியத்தில் காசி**

## பாரதியார் கவிதை

'கங்கை நதிப்புறத்துக் கோதுமைப் பண்டம்
காவிரி வெற்றிலைக்கு மாறுகொள்ளுவோம்
காசி நகர்ப்புலவர் பேசும் உரைதான்
காஞ்சியில் கேட்பதற்கோர் கருவி செய்வோம்.'

திருக்களிற்றுப்படியார் முதலிய சித்தாந்த சாத்திரங்கள் எழுதப்பட்டன.

கி. பி. 10-ஆம் நூற்றாண்டிற்குப் பிறகு, சோழ அரசர் காலத்திலும் அதற்குப் பிற்காலத்திலும், சைவ சமயம் நன்கு வளர்ந்து சிறப்படைந்தது. சோழ அரசர் சைவ சமயத்தைச் சேர்ந்தவராகையால் அவர்கள் பழைய சிவன் கோவில்களைப் புதுப்பித்ததோடு புதிய கோவில்களையும் கட்டினார்கள். கோவில் பூசை முதலியவற்றுக்கு வேண்டிய நிலபுலங்களையும் பொன்னையும் பொருளையும் வாரி வழங்கினார்கள். அக்காலத்திலிருந்த சிற்றரசர்களும் பிரபுக்களும் கோவில்களுக்குக் கைங்கரியங்களைச் செய்தார்கள்.

கி. பி. 15-ஆம் நூற்றாண்டுக்குப் பிறகு சோழ அரசர்களும் பாண்டிய அரசர்களும் மறைந்துவிட்டனர். தமிழ்நாடு அந்நியர் ஆட்சிக்குள்ளாயிற்று. முஸ்லிம் மதத்தினரான நவாப்புகளும், பாளையக்காரர்களும் நாட்டையரசாண்டனர். போர்ச்சுகீசியர், ஒல்லாந்தர், பிரெஞ்சுக்காரர், ஆங்கிலேயர் ஆகிய ஐரோப்பியர் வர்த்தகத்தின்பொருட்டு நமது நாட்டுக்கு வந்து அரசியலில் தலையிட்டுக் கட்சிகளையுண்டாக்கினர். அதனால், அரசியல் குழப்பங்களும் சண்டைகளும் கலகங்களும் நாடெங்கும் பரவி நாட்டில் அமைதியில்லாமற் போயிற்று. பொருளுக்கும் உயிருக்கும் பாதுகாப்பு இல்லாமற்போயிற்று. தடியெடுத்தவன் தண்டல்காரன் என்னும் கதையாயிற்று. 15-ஆம் நூற்றாண்டு முதல் 19-ஆம் நூற்றாண்டு வரையில் இந்தக் குழப்பங்களும் கலகங்களும் போர்களும் அராஜகமும் நாட்டில் இருந்தன. அந்தக் குழப்பக் காலத்தில் சைவ சமயத்தைப் போற்றிப் பாதுகாத்தவர்கள் மடாதிபதிகளே. திருவாவடுதுறை ஆதீனம், திருப்பனந்தாள் ஆதீனம், தருமபுர ஆதீனம் முதலிய ஆதீனங்களின் மடாதிபதிகள் அக்காலத்தில் சைவ சமயத்தைப் போற்றி வளர்த்தார்கள்.

பின்னர், 19-ஆம் நூற்றாண்டிலே நாட்டில் புதிய ஆட்சி ஏற்பட்டு அமைதியும் பாதுகாப்பும் நிலைத்தன. ஆங்கில ஆட்சி அந்நிய ஆட்சியாக இருந்தபோதிலும் நாட்டிலே அமைதியும் பொருளுக்கும் உயிருக்கும் பாதுகாப்பும் நம்பிக்கையும் நிலைநாட்டப்பட்டன. ஆனால், இந்தக் காலத்தில் பல கோவில்கள் பழுதடைந்து கிலமாய்க் கிடந்தன. அதற்குக் காரணம் முன்னைய நூற்றாண்டுகளில் இருந்த குழப்பக் காலத்தில் கோவில்கள் பழுது பார்க்கப்படாதது தான். பழுதடைந்து கிலமாகிக் கிடந்த

---

**தமிழ் இலக்கியத்தில் காசி**

## ‘ பனாரஸ் ’

கன்னட நாட்டில் வசவன் பசவன் ஆகின்றான். வங்க நாட்டில் வங்காளம் பெங்கால் ஆகிறது. அந்த முறையில் வாரணாசி என்ற சொல் பாரணாசியாகி மருவி பனாரஸ் எனச் சிதைந்தது. எனினும் பழந்தமிழ்க் கவிதையில் வாரணாசி என்ற பெயர் அழகாக வழங்குவதறிந்து அகமகிழ்கின்றேன்.

—சொல்லின் செல்வர், டாக்டர் ரா. பி. சேதுப்பிள்ளை.

கோவில்களைப் புதுப்பித்துப் புதிதாகக் கட்டியவர்கள் நாட்டுக்கோட்டைச் செட்டியார் மரபைச் சேர்ந்த பிரபுக்களேயாவர். சென்ற நூற்றுண்டிலே நாட்டுக்கோட்டை நகரச் செட்டியார்கள் பல இலட்சக்கணக்கான ரூபாய் செலவு செய்து புதுப்பித்துக் கட்டிய கோவில்கள் பல. சென்ற நூற்றுண்டில் அவர்கள் சைவ சமயத்துக்குச் செய்த பெருந் தொண்டுகள் பற்பல.

சில ஆண்டுகளுக்கு முன்பு இந்து மத அறநிலைய பரிபாலனச் சட்டம் அமைக்கப்பட்டு அதன் பலனுக இந்துமதக் கோவில் பரிபாலன போர்டு என்னும் அலுவலகம் ஏற்படுத்தப்பட்டுக் கோவில் பரிபாலனங்கள் முறையாக நடைபெற்று வருகின்றன. இந்தப் போர்டில் சைவ சமயக் கோவில்களும் அடங்கியுள்ளன.

இது இரண்டாயிரம் ஆண்டுகளாக உள்ள சைவ சமயத்தின் சுருக்கமான வரலாறு. விரிவாக எழுதினுல் இடம் பெருகும் ஆகையினுலே மிகச் சுருக்கமாக எழுதப்பட்டது.



## அண்ணுமலையார் கோயிலுக்கு

தனவணிகரின் ஆலயத் திருப்பணி தர்மங்கள், நாடெங்கும் பிரசித்தமாகும். திருவண்ணுமலை அண்ணுமலையார் கோயிலுக்கு அச்சமூகத்தினர் செய்துள்ள தர்மங்களின் விவரம் :



| | | |
|---|---|---|
| கோயில் திருப்பணி | ரூ. | 19,55,000 |
| கோயில் ஊழியருக்கு இல்லங்கள் | ,, | 10,000 |
| இறைவனுக்கும், இறைவிக்கும் நகை | ,, | 10,000 |
| விமானம், கவசம், அபயஸ்தம் முதலியன | ,, | 16,165 |
| வாயிற்படிக்கு வெள்ளித்தகடு பட்டுச் சரிகை உடைகள் | ,, | 8,800 |
| ஒருவரால் கொடுக்கப்பட்ட நகைகள் | ,, | 1,00,000 |
| பலருடைய கைங்கரிய நகைகள் | ,, | 6,81,365 |
| வாகன அலங்காரம் | ,, | 76,701 |
| மாதவருடச் செலவுகள் | ,, | 1,640 |
| உற்சவகால மண்டகப்படி | ,, | 5,650 |
| வேதபாடசாலைகள், சாதுக்கள் மடம் முதலியன | ,, | 5,25,000 |
| இதர வருமானம் | ,, | 8,815 |
| கட்டட ரிப்பேர்களுக்குப் பலரால் பல தடவை செய்யப்பட்ட செலவு | ,, | 2,00,000 |
| ஆகமொத்தம் | | 35,99,136 |

குமரன், நவம்பர் 1940.

சக்தி: விக்கிரம, மார்கழி. பக்கம் 283. டிசம்பர் 1940.



காசியில் கங்கைக் காட்சி.

Ganges Scene, Varanasi.

काशी में गंगा

# சைவ சமய மறுமலர்ச்சியில்
# நாட்டுக்கோட்டையார் பங்கு

வெ. சு. அழகப்பன், எம். ஓ. எல்.
முதல்வர், கணேசர் செந்தமிழ்க் கல்லூரி,
மேலைச்சிவபுரி.

*முன்னுரை :*

திரைகடல் ஓடித் திரண்ட பொருள் சேர்த்துச் செட்டாக வாழும் இயல்பினர் நகரத்தார்கள். ஈட்டிய பொருளை எண்ணிச் செலவிட்டுக் காப்பதிலே கருத்தாயிருந்தாலும் சைவ சமய வளர்ச்சிக்காகச் சுமார் இருபது கோடி வரை செலவிட்டுள்ளனர், கட்டிடப் பொருளும் கூலி முதலியனவும் குறைவாக இருந்த அந்தக் காலத்தில் இத்தனை கோடி, கோவில் திருப்பணிக்காகவும் அறப்பணிக்காகவும் செலவிட்டுள்ளனர் எனின் அவற்றின் மதிப்பு இன்றைய அளவில் பன்மடங்காகும். இவ்வாறு இவர்கள் இயற்றியுள்ள சமயப் பணியைத் திரட்டிக் காண்பதே இக்கட்டுரையின் நோக்கம்.

## இறைப்பற்றும் அறப்பற்றும் :

சங்க காலம்: சங்க காலம் தொட்டே வணிகர்கள் அற உணர்வினராய் வாழ்ந்தனர். தேவரைப் பூசித்தும் வேள்வி இயற்றியும், ஆவும் ஏறும் போற்றியும் வந்தனர்.[1] அறநெறி பிழையாது அறம் ஆற்றினர்.[2] இவ்வணிகரின் அற மனத்தையும், ஈகைத் திறத்தையும் இடைக் காலத்தில் வாழ்ந்த சேக்கிழாரும் பாராட்டிப் புகழ்கிறார்.[3] இவ்வியல்புகள் இன்றளவும் தொடர்ந்து நிலவுவதைக் காணலாம்.

இடைக்காலம்: வணிகராய் இருந்து துறவியான பட்டினத்தாரின் சைவப் பணியும், தமிழ்ப் பணியும் அளப்பரிதாகும். மாதொரு பாகனிடம் ஏதமில் அன்பு வைத்ததால் ஐந்து தன வணிகர் அறுபத்து மூன்று நாயன்மார்கள் பட்டியலில் இடம்பெற்றுள்ளனர். ஆறுமுக நாவலர் இப்படிக் கொள்ளப் பல சான்றுகள் பகர்வர்.[4] இப்பட்டியலில் பெண்டிர் இடம் பெற்றிருப்பதையும் காணலாம். இவ்வாறு ஆடவரோடு மகளிரும் சரிநிகராய் நின்று சைவம் வளர்த்தனர்.

அண்மைக்காலம்: மேலே கண்ட நெறிகளைப் போற்றிய செய்திகளைப் பூங்கொன்றைக் கல்வெட்டிலும், துளாவூர்ச் செப்பேட்டிலும் காணலாம் "சிவ மதங்களிலேயே இருக்

1. அமரர்ப் பேணியும் ஆவுதி அருத்தியும் நல்லானொடு பகடு ஓம்பியும்.........பட்டினப்பாலை. 200
2. அறநெறி பிழையாது ஆற்றின் ஒழுக்கி......பட்டினப்பாலை...500
3. (அ) வந்த செல்வத்தின் வளத்தினால் வரும் பயன் கொள்வார்...அமர். நீதி...3
(ஆ) வேண்டும் யாவையும் இல்லையென்னாதே...முன் கொடுத்துஇயல்பின் நின்றவர்......இயற்பகை......2
4. (அ) இயற்பகை நாயனார் (ஆ) அமர்நீதி நாயனார் (இ) மூர்த்தி நாயனார் (ஈ) காரைக்கால் அம்மையார் (உ) கலிக்கம்ப நாயனார்.....திருத்தொண்டர் வரலாறு...திருத்தொண்டர் பெரிய புராணம் 8-ஆம் பதிப்பு. ஆறுமுக நாவலர்.

கிறது. அந்நிய மதங்களில் சேரக்கூடாது'' என்பது அவற்றில் காணப்படும் விதியாகும். இதனுல் நகரத்தாரின் அழுத்தமான சைவப் பற்றை அறியலாம். சைவ உலகம் உச்சி மேல் வைத்து உவந்து பாராட்டும் சைவப் பெரியார் திரு. சொக்கலிங்க ஐயா இதனைக் கூறி யுள்ளார்.[1]

பிற மதங்கள் எவ்வளவு செல்வாக்குப் பெற்ற போதிலும் அவற்றின் தாக்குதல்களால் நகரத் தார்கள் ஒருவரேனும் சிவமதத்தைக் கை விட்ட தில்லை. வேற்று மதத்தைத் தழுவியதுமில்லை. காரைக்குடியில் தென்னிந்தியத் திருச்சபையின் தேவாலயமும் கத்தோலிக்கத் தேவாலயமும் உள்ளன. தேவகோட்டையில் கத்தோலிக்க மிசினரிமார் கல்வி நிலையம் அமைத்தும், திருப் பத்தூரில் சுவிடிசு மிசினரிமார் மருத்துவ மனை நிறுவியும் இவ்வேலைகளுடன் மதமாற்றும் பணி யையும் மேற்கொண்டுள்ளனர். இவர்களின் வலையில் சிக்காத ஒரே சமூகம் நகரத்தார் சமூ கம் ஆகும்.

''டி பிரித்தோ'' என்ற கத்தோலிக்கப் பெரி யாரின் வாழ்க்கையில் முக்கியமான நிகழ்ச்சி கள் பாகனேரியில் நடைபெற்றன. இக்காரணத் தால் இவ்வூரில் சிறந்ததோர் உயர்நிலைப் பள்ளி தொடங்கக் கத்தோலிக்கப் பாதிரிமார் சில ஆண்டுகளுக்குமுன் முயன்று வந்தனர். அவர் களுடைய வேண்டுகோளுக்குச் செவி சாய்த் தால் கிருத்துவ மதம் பாகனேரியில் ஊன்றிக் கொள்ளும் என்று எண்ணி, பாகனேரி நகரத் தார்கள் பாதிரிமார்களின் முயற்சிக்கு முட்டுக் கட்டை போட்டது அவர்களுடைய அழுத்த மான சைவப் பற்றுக்குச் சான்ருகும்.

சைவம் தழைக்கப் பாடுபட்ட சமய குரவர் நால்வரிடமும் நகரத்தார்களுக்கு நிறைந்த ஈடு பாடு உண்டு. நேமத்தான்பட்டியில் திருநாவுக் கரசர்பெயரால் ஒருவித்தியாசாலையும், மாணிக்க வாசகர், சுந்தரர், அப்பர் பெயர்களால் தெருக் களும் உள்ளன. தேவகோட்டையில் சம்பந்தர் தெரு உள்ளது.

திருவாசகம் என்னும் சீரிய நூல் பல பதிப் புக்களாக அச்சிடப்பெற்றிருக்கிறது. இவற்றுள் பழமையானது 1836-இல் வெளிவந்தது இப் பதிப்பின் படியைக் கல்கத்தா தேசிய நூலகத் துக்கு வழங்கியவர் கோட்டையூர் ரோசா முத் தையா என்ற நகரத்தார் ஆவார். காரைக்குடி யில் திருவாசக மடம் நிறுவி, சைவமும் தமிழும் தழைத்தினிதோங்கச் செய்துள்ளனர். இப் பெயருடைய மடம் வேறு இடங்களில் இருப் பதாகத் தெரியவில்லை.

தேவகோட்டை நகரம் சைவ மணம் கம ழும் திருநகரமாகும். அங்கு சமயத்தொண்டு புரிந்து வரும் கழகங்களுள் தலைமையானது சேக்கிழார் திருநாட் கழகம் ஆகும். இக்கழகத் தாரால் ஆண்டுதோறும் சேக்கிழார் நாளில் நகரச் சிவன் கோயிலில் சமயாச்சாரியார், அறு பான்மும்மை நாயன்மார்கள், சேக்கிழார் பெரு மான் ஆகியோருக்கு விசேட பூசை வழிபாடு கள் நடத்தப்படுகின்றன. இரவு வெள்ளி யானைமீது சைவத் திருமுறைகளுடன் சேக் கிழார் சுவாமிகள் திருவீதிவுலா நிகழ்கிறது. இவ்விழாக்கள் பாலகவி இராமநாதன் செட்டி யார் அவர்களின் செம்மையான மேற்பார்வை யில் இனிது நடைபெற்று வருகின்றன.

நகரத்தார்களில் சிவ தீட்சை பெற்றவர்கள் பலர் உள்ளனர். இவர்கள் தொகை ஒரு நூறு இருக்கலாம் என்று தெரிகிறது. இவர்களது இல்லங்களில் நிகழும் திருமணம் முதலிய நிகழ்ச் சிகளையொட்டிச் சிவ பூசைகளும் மகேசுவர பூசைகளும் நடைபெறுகின்றன.

நகரத்தார்களுடைய சைவப் பற்றை இவர் கள் மேற்கொள்ளும் செயல்கள் அனைத்திலும் காணலாம். இன்னும் எந்த விசேடத்திலும் திருநீற்றை முன்னர் வைத்துத்தான் எந்தச் செயலையும் தொடங்குவர். கோவில் வாசலில் தான் சாதி நியாயம் பேசுவர்; இது 'நகரக் கூட் டம்' எனப்பெறும். உள் நாட்டிலும் அயல் நாடுகளிலும் தொழில் செய்யும் ஊர்களிலும் இவ்வாறே இறைவன் சந்நிதியில் கூடி, மகமை முதலியன எழுதுவார்கள். நகரக் கூட்டங்கள் யாவும் இறைவனுக்குத் தீபாராதனை காட்டி நகரத்தார் வழிபட்ட பின்னரே முடிவடையும். புதுக் கணக்குப் போடும்போது சுவாமிகள் வரவு வைப்பது வழக்கம்.

1 நாட்டுக்கோட்டை நகரத்தார் என்னும் மகுடதனவைசியரின் மரபுவிக்கும்.........பக்...6. ராம. செ. சொக்கலிங்க ஐயா.

“கோயில்களுக்கும் குரு நிலையங்களுக்கும் உள்ள கிராமம் முதலியவற்றை நகரத்தார் விசாரணையில் வைத்துக்கொண்டு அவற்றால் வரும் ஊதியத்தை அந்தந்தத் தருமங்களுக்கே உபயோகப்படுத்துகிறது” என்பது கல்வெட்டில் காணப்படும் மற்றொரு செய்தி ஆகும். இதனால் இவர்கள், அறம் தடையின்றி என்றும் நடக்க மூலதனம் வைக்கும் பழக்கத்தினர் என்பதும் அதனை அவர்களே சோர்வின்றி நடத்தும் உள்ளத்தினர் என்பதும் அறியப் பெறும்.

கொள்வினைக் கொடுப்பினைக்காக, கோத்திர மாகப் பிரிந்திருப்பது போல இவர்களிடையே கோத்திர வகுப்பு என்பது, கோவில் அடிப் படையில் பிரிக்கப்பட்டுள்ளது, சமயப் பற்றைக் காட்டும். இன்னும் கலாமடம், துளாவூர் மடம், பாதரக்குடி மடம் ஆகியவை நிறுவி ஆண்களும் பெண்களும் தனித்தனி மடங் களில் “சமய தீட்சை” பெற்று வருகின்றனர். இதனைத் தனி விழாவாக நடத்துதலும் உண்டு. இத்தீட்சை பெறும் மடங்கள் தவிர திருவண்ணா மலை ஓயாமடம், குன்றக்குடி சிவாமடம், பழனி அன்னதான மடம் ஆகியவை நிறுவிப் பசிப் பிணி போக்கி உள்ளனர். இவையே பிற பன் னூறு மடங்கள் தோன்ற மூலமாயின. சிதம் பரம், காவிரிப்பூம்பட்டினம், கோவிலூர் முத லிய இடங்களில் மிகப்பெரிய மடங்கள் பணி யாற்றி வருகின்றன. கோவிலூர் மடத்தின் தலைமை இடம் நகரத்தார் துறவிகளுக்கே உரி யது. துறவியர் இயற்றும் தொண்டு சிறந்த தெனக் கருதினர் போலும். தமிழ் நாடெங்கும் கோவிலூர் மரபைப் பின்பற்றி நடக்கும் பல மடங்களும் உள்ளன. அத்தகைய மடங்களில் உள்ள துறவிகளுக்குத் தனி மரியாதை உண்டு.

சோழர்கள் காலத்துக் கல்வெட்டுக்களில் என்னென்ன அறங்கள் காணப்படுகின்றனவோ அவற்றை எல்லாம் பிற்காலத்தில் அவ்வண் ணமே செய்த பெருமை நகரத்தாருக்கு உண்டு. இச்செய்தியினை, “சைவ சமயத்தைப் பற்றிய வரையில் செட்டிநாடு இல்லை என்றால் பிற் காலத்தில் சைவ சமயம் சிறந்திராது” என்று மகாவித்துவான் சைவ சித்தாந்தப் புலவர் ச. தண்டபாணிதேசிகர் அவர்கள் கூறியதால்[1] உணரலாம். இது தமிழ்நாட்டுச் சமய வாழ்வில் ஈடுபாடும் அநுபவமும் உடைய துறவிகள், அறிஞர்கள், அலுவலர்கள் ஆகியோர் அனை வரும் ஒப்புக்கொள்ளும் கருத்தாகும்.

### காசி என்ற சொல்லின் பொருள்

கா-தேஜஸ் அல்லது ஒளி. சி-ஸ்ரீ அல்லது திருமகள். முத்தித் திருமகள் மிக்க தேசுடன் பொலிந்து வாழும் தலமா தலால் “காசி” என்னும் பெயர் பெற்றது.

“தேசொடும் பொலிந்து முத்தித் திருமகள்
உறைதல் தன்னால்
காசி யென்றுரைப்பர்.”

—காசி காண்டம்

கல்வெட்டுக்களில் நாள் நியமங்கள் பற்றி யும் திருவிழாக்களைப் பற்றியுமே குறிப்பு உண்டு. குடமுழுக்கு, திருக்குளப்பணி இவற்றை அர சரோ குறுநில மன்னரோ செய்தனர். தனி நபர் செய்யவில்லை. ஆனால் இத்தகைய பணி களை நகரத்தாரில் தனியொருவர் செய்ததுண்டு.

நகரத்தார் செய்திருக்கும் பிற பணிகளாவன:

1. கோயில் திருப்பணி...பழுது பார்த்தல் ...குடமுழுக்குச் செய்தல்.
2. தேவாரம், திருவாசகம் ஓதுவித்தல், அதற்காக மடங்கள் கட்டுதல், அவற்றைக் கருங்கல்லில் பொறித்தல்.
3. தலங்கள் தோறும் தங்கும் விடுதிகள் ஏற்படுத்தல்.
4. பசுமடம் கட்டுதல்
5. அன்னதான மடங்கள் அமைத்தல்
6. குளம் வெட்டுதல்
7. தண்ணீர்ப் பந்தல் நிறுவுதல்
8. பூசை மலருக்காகப் பூங்காக்கள் உண் டாக்குதல்.

1. செட்டிநாடும் தமிழும் 51. 2-ஆம் பதிப்பு. ‘சோமலெ’.

9. திருவிழாக்கள் நடத்துதல்

10. விளக்கேற்றுவித்தல்

11. நாள் நியமனக் கட்டளை நியமித்தல்

12. பெரிய புராணம், கந்தபுராணம் ஆகியவற்றைச் சொற்பொழிவாகவோ கதாகாலட்சேபமாகவோ நிகழ்வித்தல்.

13. சமய அறிவு சாத்திர அறிவு பெருக மடங்கள் தோற்றுவித்தல்.

14. பூசைக்குரிய பொருள்களை நன்கொடையாக வழங்குதல்.

இத்தகு தொண்டுகளை இன்றளவும் தொடர்ந்து செய்து வருகின்றனர். பாடல் பெற்ற தலங்களில் அந்தணருக்கு விடுதிகள், குரு பூசை மடங்கள், தெய்வங்கட்கு வெள்ளி, தங்க ஊர்திகள், பொன்னாலும், மணிகளாலும் அங்கிகள், திரு அணிகள் ஆகியவற்றையும் நல்கியுள்ளனர்.

தேவார திருவாசகப் புகழ் பெற்ற பல தலங்களிலும் நகரத்தாரின் திருப்பணியை இன்றும் காணலாம். பாண்டிப் பதி பதினான்கும் மற்றத் தலங்கள் பலவும் இவர்கள் வளம் பெற்றுள்ளன.[1] கோயில் என்று சிறப்புப் பெற்ற தில்லையில் பல அறங்கள் இவர்கள் இயற்றியனவே.[2]

"கோயில் இல்லா ஊரில் குடியிருக்க வேண்டாம்" என்ற பழமொழிப்படி இவர்கள் வாழ்கின்ற இன்று நிலவும் ஊர்களில் அருமையான அழகு தவழும் நகரச்சிவன் கோவில்கள் எழுப்பப் பெற்றுள்ளன. இதற்கு எல்லா நகரத்தாரும் புள்ளி வரி கொடுத்தல் வேண்டும். இவை தவிர சிறு தெய்வங்களுக்கும் கோயில்கள் கட்டியுள்ளனர். இக்கோயில் விழாக்களில் பல மண்டகப்படிக் கட்டளையும் ஏற்படுத்தியுள்ளனர். சுருங்கச் சொன்னால் தமிழ்நாடெங்கும் காணப்படும் கோவில்களிலும் அவற்றின் தொடர்பான பிறவற்றிலும், நகரத்தாருக்கு எவ்விதத்திலேனும் ஆக்கிய தொடர்போ பெருக்கிய தொல்புகழோ அமைந்திருக்கும்.

வடநாட்டிலும் அயல் நாட்டிலும் இவர்கள் ஆற்றியிருக்கும் அரும்பணிகள் பற்றி இம்மலரில் வெவ்வேறு இடங்களில் பரக்கக் காணலாம். ஆகையால் விரிக்காது விடுத்தேன்.

அயல்நாடுகளில் பெருஞ்செலவில் கோயில்கள் நிறுவியதோடு அவற்றிற்கு நிலையான மூலதனமும் இறைவடிவங்களுக்கு ஊர்திகளும் வழங்கி, திருவிழாக்களும் எடுத்து வருகின்றனர். மலேயாவில் தைப்பூசமும் இலங்கையில் ஆடிவேலும் இவர்களால் எவரும்போற்றும் வகையில் கொண்டாடப்படுகின்றன. இந்நாட்களில் அங்கெல்லாம் வங்கி விடுமுறையும் உண்டு. வெள்ளைக்கார கவர்னர் முதல் எளிய காவலாளி வரை அனைவரும் இவ்விழாவில் பங்கு கொண்டு வழிபடுவர். தமிழ்க் கடவுளான முருகனுக்கு அயல்நாடுகளிலும் இங்கும் கோவில் கண்டு, "காவடி" எடுத்துச் சிறப்பிக்கும் சீர்மை குறிக்கத் தக்கதாகும்.

### சமயவளர்ச்சியில் பிற தொண்டு

சமய குரவர் நால்வர், நாயன்மார்கள், முருகப் பெருமானின் பலவகைப்பட்ட பெயர்கள் ஆகிய பெயர்களைத் தம் மக்களுக்கு இட்டுச் சைவ மறுமலர்ச்சிக்கு நகரத்தார் வழிகோலி உள்ளனர். இவர் தம் பெண்டுகளும் சமயப்பற்று மிக்கவராவர். ஆச்சிகளாகக் கட்டிய கோவிலும், நிகழ்த்தும் மண்டகப்படிகளும் நிரம்பவுண்டு. மேலும் தம் மக்களுக்குப் பாலூட்டித் தாலாட்டும்போது இறைப்பற்றையும் கலந்தூட்டி வருகின்றனர்.

"சாமி தந்த தவப் பயனோ? குளிக்கக் குளம் வெட்டி, கும்பிடவும் கோயில் கட்டி, அயராமல் அன்னமிடும் அருச்சுனவா தந்த கண்ணோ?"

எனப்பாடிப் பாராட்டுவர். இன்னும் சொக்கரின் திருவிளையாடலும், வள்ளி திருமணச் செய்தியும் தாலாட்டாக ஒலிப்பதை நகரத்தார் வீடுகளில் கேட்கலாம்.

சைவ சமயத்தின் கொள்கைகளைப் பரப்புவதற்கென்று மேலைச்சிவபுரி வ. பழ. சா.

---

1. நாட்டுக்கோட்டை நகரத்தார்...பக்கம்...288—289
2. ,, ,, ,, ...பக்கம்...190—192

குடும்பத்தார் சன்மார்க்க சபையை நிறுவி நடத்தி வருகின்றனர். சன்மார்க்கசபை, திரு நாவுக்கரசர் பிறந்த நன்னாளில் கணேசர் கோயிலில் கணேசர் முன்னிலையில் தொடங்கப் பெற்றது. இதன் உறுப்பாகிய கலாசாலை கணேசர் செந்தமிழ்க் கல்லூரி எனவும் பெயர் கொண்டது. நால்வர்க்கும் காரைக்கால் அம்மையாருக்கும் குருபூசைகள் ஆண்டுதோறும் நிகழ்கின்றன. இப்பூசைகள் ஒரு நாளும் இடையருதபடி வைப்பு நிதியையும் வழங்கி உள்ளனர். ஆடு கோழி அடைக்கல விண்ணப்பம், சைவசமயிக்கும் பாதிரியார்க்கும் நடந்த உரையாடல், சிவாலய வழிபாடு என்றின்ன பிற துண்டு வெளியீடுகள் ஆயிரக் கணக்காய் வழங்கப்பட்டன. தக்கோரால் சைவச் சொற்பொழிவுகள் நிகழ்த்தப்படுகின்றன.

சைவ சமய இலக்கியங்களைப் பதிப்பித்தும், பரிசிலாக வழங்கியும், அவற்றிற்கு உரை எழுதியும், தாமே பக்தி இலக்கியங்கள் யாத்தும் பிறரைக் கொண்டு நூல்கள் செய்வித்தும், பக்தி நெறி பரப்ப இதழ்கள் நடத்தியும், சைவ சமய இலக்கியம் பெருகவும் இச்சபையார் தொண்டு செய்துள்ளனர்.

தர்ம பூசணம் என்று போற்றப்படுகிற இராமச்சந்திரபுரம், தீ. நா. மு. முத்தையச் செட்டியார் அவர்கள் அருட்பா, திருவாசகம் ஆகிய நூல்களைச் சுத்தப் பதிப்பாக வெளியிட்டும், பரிசாக வழங்கியும் உள்ளனர். டாக்டர் உ. வே. சா. நூல்கள் வெளிவரவும் துணை புரிந்துள்ளனர்.

தமிழ்த் தென்றல் திரு. வி. க. எழுதிய முருகன் அல்லது அழகு வெளிவர குமரன் ஆசிரியர் முருகப்பா துணை நின்றனர். சைவ சித்தாந்த வித்தகர், முதுபெரும் புலவர், மகாமகோபாத்தியாய பண்டிதமணி மு. கதிரேசச் செட்டியார் திருவாசகத்தின் பல

## முத்தித் தலம் ஏழு

"காசி மாயாபுரி அவந்தி காஞ்சி மற்று
ஓசைகொள் அயோத்தி வண் துவரை ஒப்பறும்
ஏசிலா மதுரை என்றிசைக்கும் ஏழ்பதி
மாசறு முத்தியை வழங்கும் என்பவே"

(துவரை - துவாரகை.)

பகுதிகளுக்கு அரிய உரை வகுத்துள்ளனர். மேலும் அவர்கள் "சமயக் கட்டுரைகள்" என்றே ஒரு தொகுதி வெளியிட்டனர். பாடுவார் முத்தப்பச் செட்டியார் பல பக்திப் பாடல்கள் செய்துள்ளார். வன்றொண்டர் எனச் சிறப்பித்துத் திருவாவடுதுறை ஆதீனம் பாராட்டிய நாருயண செட்டியார் "சிவஞானபோத லகு வசனம்" இயற்றினர். மகாவித்துவான் மீனுட்சி சுந்தரம் பிள்ளையைக் கொண்டு அரிமளம் நகரத்தார் அவ்வூர்க்குத் தல புராணம் செய்வித்தனர்.

தமிழ் வள்ளல் சிவபாதசேகரர் சேவு. மெய்யப்பச் செட்டியார் அவர்கள் தல யாத்திரைப் படங்களை அச்சிட்டு அன்பளிப்பாக வழங்கியுள்ளனர். 'சிவநேசன்' என்ற சமய இதழும் நகரத்தார் சிலரால் பல்லாண்டுகள் நடத்தப் பட்டது. சிவநேசர் திருக்கூட்டம் என்ற இயக்கமும் செம்மையாய்ப் பணி புரிந்தது.

இவ்வாறு எல்லாத் துறையாலும் 'சைவம்' மறுமலர்ச்சி பெறச் சோழருக்குப் பிறகு நகரத்தார்களே முன்னின்று நிறைவு செய்தனர். மல்குசீர் தொல்காப்பியர் "மன்னர் பின்னேர்" என்று[1] மொழிந்ததை இன்றளவும் இவர்கள் நிலைநாட்டி வருகிறுர்கள்.

1. தொல் பொருள். சூ. 32.

# சிவலிங்க வழிபாடு



திருவாவடுதுறை ஆதீன
மகாவித்துவான் செஞ்சொற்சிங்கம்
குலசை வீர. சிவசுப்பிரமணியம்
கன்னியாகுமரி மாவட்ட பேஷ்கார்
திருவாவடுதுறை ஆதீனம், சுசீந்திரம்.

"காணுத அருவினுக்கும் உருவினுக்கும்
காரணமாய்
நீள்நாகம் அணிந்தார்க்கு நிகழ்குறியாம்
சிவலிங்கம்" (பெரிய புராணம்)

திருக்கோபுரம் (ஸ்)தூலலிங்கம். திருக்கோயிலின் உள்ளே கருவறையிலே விளங்குவது சூக்குமலிங்கம்.

எதை வழிபட்டாலும் பலன் ஒன்றே.

எல்லாப் பொருள்களையும் கடந்தும்—கட—எல்லாப் பொருள்கள் உள்ளும் நிறைந்தும் கடாவுதலைச் செய்யும்—உள்—கடவுள் பேராற்றலை மக்கள் தெய்வம் இயவுள், இறைவன், தெய்யோ (சிங்களம்) God (ஆங்கிலம்) என்ற சொல்லால், குறித்து வழிபடுகிருர்கள்.

பிரித்துப் பிரித்துப் பார்க்கும் திண்ணக்கமுடைய ஒருவன் 'God is nowhere', என்று தனது அறையில் தடித்த எழுத்தில் எழுதிப் போட்டிருந்தான்.

அவனது குழந்தை தளிர் நடை போட்டு அந்த அறைக்குள் வந்து ஒவ்வொரு எழுத்தாகச் சொல்லிக் கூட்டி 'God is now Here' என்று படித்தது.

கேட்ட தந்தை வியந்து மெய்யை உணர்ந்தான்.

நன்ருக மழை பொழியும்போது தண்ணீரைப் பாத்திரங்களில் பிடித்து வைத்துப் பயன்படுத்துகிருேம்.

மழையாகத் தரையில் விழுமுன், மேகமாக இருக்கும் அதைக் கண்ணுல் காண முடியுமே தவிர அதில் குளிக்கவோ, அதைக் குடிக்கவோ முடியாது.

மழை மேகமாகத் தோன்றுவதற்கு முன்ஞல் மிக நுண்ணியதாக இருக்கிறது. அது புறக் கண்ணுக்குத் தெரியாது.

அந்த நிலையை வானிலை ஆராய்ச்சியாளர் தான் முன்னரே அறிய முடியும். அறிந்துதான் வான் நிலை பற்றி—மழை எப்பொழுது எங்கே பெய்யும்—என வானெலி மூலம் முன் அறிவிப்புச் செய்து வருகின்றனர்.

அந்த அணுக்களுக்கும் முந்திய நிலை—தன்னிலை—அது யாருக்கும் அறிய முடியாத நிலை.

இது பருப்பொருளாகிய மழையைப் பற்றிய செய்தி.

கருணை மழையாகிய இறைவனே, சிந்தையும் செல்லாச் சேட்சியன் 'உள்ளத்து உணர்ச்சியில் கொள்ளவும் படான்.'

ஓங்கி ஆழ்ந்து அகன்ற நுண்ணியன்.

அவன் நம் மீது கொண்ட பெருங் கருணையாலே இறங்கி அருவ நிலையிலே—ஞானியர்களாலே—அவன் அருளே கண்ணுகக் காண்பவர்கள் மட்டும் காண்பார்கள்—அருளுகிருன்.

மேலும் கருணை கொண்டு சதாசிவ மூர்த்தத்திலே — சதாசிவம் — சிவலிங்க வடிவிலே அருள் பாலிக்கிருன்.

அது உருவமும், அருவமும் இயைந்த நிலை.

### சிவலிங்க வடிவம்

நிமிர்ந்து நீண்டு காட்சி தருவது சிவலிங்கம்.

லிம்—கம் என்ருல் எது எல்லாம் தோன்றக் காரணமாயிருக்கிறதோ, எதில் எல்லாம் சென்று ஒடுங்குகின்றனவோ, அதுதான் சிவக்குறி—சிவலிங்கம் என்றும் பெரியோர்கள் கூறுகிருர்கள்.

**S. RAMASWAMY**
*Parliamentary Secretary,*

MINISTRY OF FINANCE
FULLERTON BUILDING
5TH FLOOR,
SINGAPORE, 1.

நம் முன்னோர்கள் திரவியம் தேடுவதுடன் தெய்வத் தொண்டை வாழ்க்கையின் முக்கிய அம்சமாகக் கருதி நாடெங்கணும், அவர்கள் சென்றவிடமெல்லாம் தெய்வ வழிபாட்டையும் சிவத் தொண்டையும் தொடர்ந்து செய்து கொண்டே வந்தனர். அதனால்தான், நாம் இங்கிலையிலாவது இருக்கிறோம். நமது தொண்டின் எடுத்துக் காட்டாக பல நாடுகளிலும் உள்ள எத்தனையோ கோயில்கள், திருப்பணிகள், தர்மங்கள், உள்ளன. இவற்றில் தலையாயது காசி நாட்டுக்கோட்டை நகரச் சத்திரம் என்றால் மிகையாகாது. காசி நாட்டுக் கோட்டை நகரச் சத்திரமும் ஏனைய பல்லாயிரக்கணக்கான தர்மங்களும் தொடர்ந்து நடைபெற்று நம்மையும், நம் சமூகத்தையும், உலக சமுதாயத்தையும் உய்விக்க வேண்டுமென இறைவனைப் பிரார்த்திக்கிறேன்.

இங்ஙனம்,

**செ. ராமசாமி.**

---

இலிங்கத்தின் அடிப்பாகம் சச்சவுக்கமானது. அது பிரம்ம பாகம். அது தரைக்குள் அமையும்.

அதற்கு மேற் பகுதி எண்கோணமுடையது. அது விஷ்ணு பாகம். அதைச் சுற்றிக் கோமுகியோடு கூடிய ஆவுடை விளங்குகிறது. அதற்கும் மேலுள்ள, ஆவுடைக்கு மேலுள்ளது (உ)ருத்திர பாகம்.

ஆவுடை இல்லாத நிலையில்தான் முன்னம் காட்சி தந்திருக்கிறது.

அப்பர் சுவாமிகளும் தேவாரத்தில் 'நடுதறி' என்று பாடியருளுகிறார். 'கன்றுப் பூர் நடுதறியைக் காணலாமே' என்பது தேவாரம்.

இறைவன் கட்டு அற்றவன். கந்தழி— கட்டற்றது என்று தமிழர்—நாகரிகத்தின் மலை விளக்காக ஒளி வீசும் தொல்காப்பியம் இயம்புகிறது.

இன்றைய தமிழ்நாட்டுக்குத் தெற்கே கடல் கொண்ட இலெமூரியா கண்டத்திலும் அன்னையிலும் சிறந்த சென்னைக்கு வடக்கே —அதற்கு அப்பாலும் இந்த சிவலிங்க வழிபாடு வரலாறு எழுத மனிதன் கற்பனை செய்வதற்கு முன்னரே இந்த வழிபாடு எங்கும் பரவி இருந்தது.

வழிபாடு என்பது இறைவனிடம் நாம் காட்டும் அன்பின் செயற்பாடு. அவனுக்கு நன்றி செலுத்துவது, அவன் மெய்ப்புகழ் பாடுவது 'உன் பாட்டே திருப்பாட்டு'. பிற வெல்லாம் தெருப்பாட்டு.

நெக்கு நெக்கு நினைபவர் நெஞ்சுளே புக்கு நிற்பான் பொன்னார் சடைப் புண்ணியன்.

பொக்கம் மிக்கவர் பூவும் நீரும் கண்டு நக்கு நிற்பன் அவர் தம்மை நாணியே.

அகப்பூசை

**காயமே கோயிலாகக் கடிமனம் அடிமையாக**
**வாய்மை தூய்மையாக மனமணி இலிங்கமாக**

**நேயமே நெய்யும் பாலா நிறையநீர் அமைய ஆட்டிப்**
**பூசனை ஈசனார்க்குப் போற்றவிக் காட்டினோமே.**

நாதன் நாமமாகிய 'நமசிவாய' ஓதி நெஞ்சக் கன கல்லை நெகிழ்விக்க வேண்டும்.

அவன் அருளாலே அவன் தாளை வணங்க வேண்டும். தாள் என்பது உபசார வழக்கு. தாள் என்பது அவனது அருளே. 'அருளது சக்தியாகும் அரன் தனக்கு' (சிவஞான சித்தியார்).

முதலில் நெஞ்சினுள்ளே வழிபாடு செய்ய வேண்டும். பின்னர் புறப்பூசை செய்ய வேண்டும்.

அவரவர் ஆர்வத்துக்கு ஏற்ப வழிபாடு செய்யலாம்.

முதலில் வழிபாடு செய்யும் இடத்தையும், வழிபாட்டுக்குரிய பொருள்களையும் தூய்மை செய்யவேண்டும்.

மலர்கள், தூப தீபங்கள், திருப்படையல் (நைவேத்தியங்கள்) பழம், சர்க்கரை, பொங்கல் முதலியன, திருமஞ்சனத்திற்குப் பால், தயிர், நெய், தேன் இளநீர் முதலியன.

'எங்கும் விளங்கும் பெருமானே அடியேன் முன் இச்சிவலிங்கத்தில் எழுந்தருளி, அடியேனது பூசையை, வழிபாட்டை, வந்தனையை ஏற்று உய்யக் கொள்வாய்' என விண்ணப்பித்துப் பூசை செய்யவேண்டும்.

குருவை நாடி முறைப்படி சமய, விசேட, நிருவாண தீக்கைகள் பெற்று, உடையவரை 'பழனஞ்சேர் அப்பனை என் கண் பொருந்து போதத்தும் கைவிட நான் கடவேனே' எனக் குருவிடம் வாக்குக் கொடுத்து—. சிவலிங்கத்தைக் குருவிடமிருந்து பெற்று, நாள் தோறும் 'நின்றும் இருந்தும் கிடந்தும்' எந்நிலையில் நின்றாலும் எக்கோலம் கொண்டாலும் "மன்னிய சீர்ச் சங்கரன் தாள் மறவாமை பொருள்" என்றே வழிபாடு செய்யவேண்டும்.

வேண்டுவார்க்கு வேண்டுவதை ஈவதே அவனது வள்ளன்மை.

வேண்டத் தக்கது அறியும் அவன், வேண்டிப் பணி கொண்ட அவன், வேண்ட முழுதும் தருவான். வேண்டும் பரிசு ஒன்று உண்டென்னில் அதுவும் அவனது விருப்பே.

சுசீந்திரத்தில் தாணுவாய், மாலாய், அயனாய்—சங்கரன் கோவிலில் சங்கரநாராயணனாய் விளங்குகிறான்.

திருவாரூரில் நிலனாய், திரு ஆனைக்காவில், நீராய், திருவண்ணாமலையில் தீயாய், திருக்காளத்தியில் காற்றாய், சைவத்தின் எல்லையாகிய தில்லையில் வானாய் இறைவன் கருணை பாலிக்கிறான்.

நீலத் திரைக் கடலோரத்திலே நித்தம் நின்று தவம் செய்கிறாள் அன்னை பராசத்தி. அவள் என்றும் கன்னியாகுமரி. அவளே பிரம்மசாரி.

"அகிலாண்டகோடி ஈன்ற அன்னை பின்னும் கன்னி என மறை பேசும்" தாயுமானார்.

'பால்மொழிக் கன்னியாகும், பவன் பிரமச்சாரி' சிவஞானசித்தியார்.

பிறக்கத் திருவாரூரும், நினைக்கத் திருவண்ணாமலையும், நீராடத் திருவிராமேச்சுரமும், பூசிக்கத் தில்லையும், இறக்கக் காசியும் வேண்டும்.

காசியிலே யாரும் அவனை அண்டலாம்—நீர் ஆட்டலாம்—மலர் சூட்டலாம்—மிட்டாய் ஊட்டலாம்.

குழந்தை போலக் கொஞ்சுகிறது தெய்வம்.

சப்தரிஷி பூசை வேளையிலே ஓங்கார ஒலியிலே—ஓசை ஒலி எலாம் ஆனாய் நீயே—விசுவநாதனாய் விளங்குகிறான்.

நகரத்தார் அபிஷேக வேளையிலே—நினைக்கிற இப்பொழுதுகூட மேல் புல்லரிக்கிறது—எந்நாட்டவர்க்கும் இறைவன், தென்னாடுடைய சிவனாகத் திருவருள் சுரக்கிறான்.

அவனைக் கண்ட கண்களே, கண்கள்:

வழிபாடு சிறந்து, மையம் துயர் நீங்க, சதாசிவமாகக் காட்சி தரும் சொக்கலிங்கமே துணை, காசிலிங்கமே துணை, தாணுவே—பரனே: யார் எனக்கு உறவு? அமரர்கள் ஏறே.

"திருக்கோவில் உள் இருக்கும் திருமேனி தன்னைச் சிவன் எனவே கண்டவர்க்குச் சிவன்" உறைவன் அங்கே.

**—சிவஞான சித்தியார்.**

# நகரத்தாரும் திருமுறைப் பணியும்

க. வெள்ளைவாரணன்
துணைப் பேராசிரியர், தமிழ் ஆராய்ச்சித்துறை
அண்ணாமலைப் பல்கலைக் கழகம்

தமிழ் மக்களது தவப்பயனாகத் தோன்றி எல்லாம் வல்ல இறைவனது திருவருளை நிரம்பப் பெற்று அதன் பயனாகத் தாம் பெற்ற பெரு நலங்களையெல்லாம் உலக மக்கள் அனைவரும் பெற்று இன்புற வேண்டும் என்னும் பெருங் கருணைத் திறத்தால் சிவபெருமானது பொருள் சேர் புகழ்த் திறங்களையெல்லாம் தேனினும் இனிய செந்தமிழ்ப் பாடல்களால் விரித்து அருளிச் செய்தவர்கள் திருமூலர், காரைக்காலம்மையார், திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர், மாணிக்கவாசகர் முதலிய அருளாசிரியர்கள் ஆவர். இவர்கள் திருவாய் மலர்ந்தருளிய தெய்வத் தமிழ்ப் பாடல்களே சைவத் திருமுறைகள் பன்னிரண்டெனப் போற்றிப் பயிலப்பெறுவனவாகும்.

முற்றுணர்வுடைய இறைவன் அருளே திருமேனியாகக்கொண்டு தோன்றி அருளிச் செய்தனவும் தனது திருவருட்டிறத்தால் ஐம்புலன்களை வென்றுயர்ந்த செம்புலச் செல்வர்களாகிய அடியார்களின் உள்ளத்தில் எழுந்தருளியிருந்து அவர்கள் வாயிலாக வெளிப்படுத்தியருளினவும் ஆகிய மெய்ந்நூல்களே அறிவனூல்கள் எனப் போற்றப்பெறுவன. இம்மை வாழ்வுக்குரிய உலக நூல்களைக் காட்டிலும் இம்மை, மறுமை, அம்மை ஆகிய மும்மை நலங்களையும் ஒருங்கே தரவல்ல அறிவனூல்கள் மிகவும் சிறப்புடையனவாகும். சைவ சமயத்தினராற் போற்றிப் பயிலப்பெறும் பன்னிரு திருமுறைகளும் எல்லாம் வல்ல சிவபெருமான் தன் அடியார்களது சிந்தையே கோயிலாகக் கொண்டெழுந்தருளியிருந்து அவர்கள் வாயிலாக வெளியிட்டருளிய மெய்ம்மொழிகளாதலின் இத் திருமுறைகளை அறிவனூல் எனப்படும் அருமறைகளாகவே கருதிப் போற்றுவர் பெரியோர்.

இறைவன் அருளிச் செய்தனவாகப் பாராட்டப்படும் வடமொழி வேதங்களை 'எழுதாக் கிளவி' எனவும், இறைவனது திருவருள் பெற்ற திருஞானசம்பந்தர் முதலிய அருளாசிரியர்கள் அருளிச் செய்த திருமுறைகளை 'எழுதுமறை' எனவும் மதித்துப் போற்றுதல் மரபு. 'வண்டமிழால் எழுதுமறை மொழிந்த பிரான்' எனப் பெரிய புராணமும், 'எழுதுமறை மொழிந்த கழுமல முனிவன்' எனத் தில்லைக் கலம்பகமும் திருஞானசம்பந்தப் பிள்ளையாரைப் போற்றுதலால் இம்மரபு இனிது புலனாதல் காணலாம்.

இன்ன தன்மையன் என அறியவொண்ணாத இறைவனை இயலிசைத் தமிழ்ப் பாடல்களால் உளமுருகிப் போற்றுமுகமாக அம்முதல்வனை அடைந்து இன்புறுதற்குரிய எளிய இனிய வழிதுறைகளை அறிவுறுத்தியருளிய பெருமக்கள் திருமுறையாசிரியர்களாவர். 'ஆறதேறுஞ் சடையான் அருள்தேற அவனியர்க்கு, வீறதேறுந் தமிழால் வழிகண்டவன்' எனத் திருஞானசம்பந்தரையும், 'பதிகப் பெருவழி' என அவர் தம் திருப்பதிக வாயிலாக உலகத்தார்க்கு அறிவுறுத்திய பத்தி நெறியினையும் நம்பியாண்டார் நம்பி பரவிப் போற்றியுள்ளார். வேதங்கள் ஐயா என ஓங்கி

ஆழ்ந்தகன்ற நுண்ணியனுகிய முழுமுதற் கடவுளைப் 'பீடுடைய பிரமா புரமேவிய பெம்மான் இவனன்றே' எனத் திருஞான சம்பந்தப் பிள்ளையார் தம் தந்தையார்க்கு ஒரு விரலாற் சுட்டிக்காட்டிய எளிமையும் இனிமையும் உடைமையானும், அடியார்கள் இறைவன்பால் வேண்டிய வேண்டியாங்குப் பெறுதற்குத் துணை புரிந்தும் உலக மக்களது தீராத நோயினைத் தீர்க்கவல்ல மருந்தும் மந்திரமுமாக விளங்கியும் காணுதற்கரிய கடவுளை அயரா அன்புடையார் காணக் காட்டியும் இவ்வாறு இறைவனது திருவருளை யாவரும் தெளிய விளக்கும் சிறப்புடையன ஆதலானும் வேத நூல்களினும் மேம்பட்டு விளங்குவன இத் தெய்வத் தமிழ்த் திருமுறைகள் என்பர் பெரியோர். திருவருளிலக்கியமாகத் திகழும் இத் திருமுறைகளைத் தன்பாற் கொண்டது நம் தமிழாதலின், 'ஞாலமளந்த மேன்மைத் தெய்வத் தமிழ்' எனச் சேக்கிழார் பெருமானுற் போற்றப்பெறும் பெருஞ் சிறப்பினையுடையதாயிற்று.

திருநாரையூர்ப் பொல்லாப்பிள்ளையாரின் திருவருள் பெற்ற நம்பியாண்டார் நம்பியின் உதவிபெற்றுத் தில்லையில் தேவாரத் திருமுறைகளைக் கண்டு வெளிப்படுத்திய சோழ மன்னனைத் திருமுறை கண்ட சோழன் எனப் போற்றுவர். அவ்வேந்தர் பெருமானது நன் முயற்சியால் திருமுறைகள் தேடித் தொகுக்கப் பெற்ற வரலாறு திருமுறை கண்ட புராணத்தில் விரித்துக் கூறப் பெற்றுள்ளது. திருஞான சம்பந்தர் அருளிச் செய்த தேவாரத் திருப் பதிகங்கள் முதல் மூன்று திருமுறைகளாகவும் திருநாவுக்கரசர் அருளியவை நான்கு, ஐந்து, ஆறுந் திருமுறைகளாகவும், சுந்தரர் அருளியவை ஏழாந் திருமுறையாகவும் இவ்வாறு மூவரருளிய தேவாரப் பதிகங்கள் யாவும் முதல் ஏழு திருமுறைகளாக வகுக்கப்பெற்றன. மாணிக்கவாசகர் அருளிய திருவாசகம் திருக்கோவை என்னும் இரண்டு நூல்களும் எட்டாந் திருமுறை எனவும், திருமாளிகைத் தேவர், சேந்தனர், கருவூர்த்தேவர் முதலிய ஒன்பதின்மர் அருளிய திருவிசைப்பாப் பதிகங்கள் இருபத்தெட்டும் திருப்பல்லாண்டுப் பதிகம் ஒன்றும் ஒன்பதாந் திருமுறை எனவும், திருமூலர் அருளிய திருமந்திரமாலை பத்தாந் திருமுறை எனவும், திருவாலவாயுடையாராகிய சோமசுந்தரக் கடவுள் முதலாக நம்பியாண்டார் நம்பி யீருகவுள்ள பன்னிருவர் அருளிய நாற்பது பிரபந்தங்களும் பதினொராந் திருமுறை எனவும் சேக்கிழார் அருளிய திருத்தொண்டர் புராணமாகிய பெரிய புராணம் பன்னிரண்டாந் திருமுறை எனவும் பின்வந்த பெருமக்களால் முறைப்படுத்தப்பெற்றன. இத் திருமுறைகள் பன்னிரண்டனையும் அருளிச் செய்த பெருமக்களுள் காலத்தால் முற்பட்டவர்கள் பத்தாந் திருமுறையாகிய திருமந்திரத்தை அருளிய திருமூல நாயனரும் பதினொராந் திருமுறையிலுள்ள சில பிரபந்தங்களை யருளிய காரைக்கால் அம்மையாரும் ஆவர். இவர்கள் நம் தமிழ் நாட்டில் தோன்றி வாழ்ந்த காலம் கி. பி. ஐந்தாம் நூற்றுண்டினை யொட்டியதாகும் என்பர் ஆராய்ச்சியாளர். பன்னிரு திருமுறையாசிரியர்களுட் காலத்தாற் பிற்பட்டவர் பன்னிரண்டாந் திருமுறையாகிய திருத்தொண்டர் புராணமியற்றிய சேக்கிழாரடிகள் ஆவர். இவர் வாழ்ந்த காலம் கி. பி. பன்னிரண்டாம் நூற்றுண்டாகும். எனவே கி. பி. ஐந்தாம் நூற்றுண்டு முதல் பன்னிரண்டாம் நூற்றுண்டு முடிய அமைந்த காலப் பகுதியே சைவத் திருமுறைகள் பன்னிரண்டும் தோன்றிய காலமாகும். இப் பன்னிரு திருமுறைகளையும் அருளிச்செய்த ஆசிரியப் பெருமக்கள் திருமூலர் முதல் சேக்கிழார் ஈருகவுள்ள இருபத்தெழுவராவர். இக் குழுவில் காலங் கடந்த பெருமுதல்வனுகிய ஆலவாயில் அவிர் சடைக் கடவுளும் ஒருவராக அமைந்துள்ளார். பன்னிரு திருமுறைகளிலும் இப் பெருமக்களாற் பாடப்பெற்றனவாக இப்பொழுது நமக்குக் கிடைத்துள்ளவை பதினெண்ணுயிரம் திருப் பாடல்கள் உள்ளன. நிறைமொழி மாந்தர் அருளிய மறை மொழிகளாகிய இத் திருப் பாடல்கள் உலக மக்கள் நன்மை பெருகவும் தீமை நீங்கவும் உதவவல்ல தமிழ் மந்திரங்களாகத் திகழ்கின்றன.

தெய்வநெறிச் சிவம் பெருக்கும் இத் திருமுறைகளை நம் தமிழ் நாட்டிலும் கடல் கடந்து இலங்கை, கடாரம் முதலிய வெளிநாடுகளிலும் நிலைபெற்று வழங்கச் செய்த பெருமை கி. பி.

9-ஆம் நூற்றுண்டு முதல் 12-ஆம் நூற்றுண்டு முடிய நம் நாட்டினை ஆட்சிபுரிந்த பிற்காலச் சோழ மன்னர்களுக்கு உரியதாகும். விசயாலயன், ஆதித்தன், பராந்தகன், முதல் இராசராசன், கங்கைகொண்ட சோழன், முதற் குலோத்துங்க சோழன் முதலிய பெருவேந்தர்கள் திருக்கோயில்களில் நாள்தோறும் திருப்பதிகம் ஓதுதற்கும் திருமுறையாசிரியர்களாகிய திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், நம்பியாரூரர், திருவாதவூரடிகள் முதலிய அடியார்களின் திருவுருவங்களை எழுந்தருளச் செய்து நாள்தோறும் வழிபடுதற்கும் வேண்டும் நிபந்தங்களை அளித்தும் பழைய கோயில்களைக் கருங்கற் கோயில்களாகப் புதுப்பித்தும் தஞ்சை இராசராசேச்சுரம் முதலிய புதிய கோயில்களைக் கட்டியும் நாட்டு மக்கள் மனத்திலே தெய்வ நம்பிக்கையும் பகைவரைப் புறங்காண வல்ல வீரவுணர்ச்சியும் நிலைபெறும்படி திருமுறைப் பணிபுரிந்துள்ளார்கள். இவர்களது திருமுறைத் தொண்டினுல் நம் நாடு அயலவர் ஆட்சியினின்றும் நீங்கித் தமிழ் வேந்தர்களால் ஆளப்பெறும் உரிமை நிலையைப் பெற்றது.

இவ்வாறு சோழமன்னர்கள் செய்துவந்த திருமுறைப்பணி பிற்காலத்திற் சிதைந்து மறையவே நம் நாடு மீண்டும் அயலவர் ஆட்சிக்கு உட்பட்டுத் தன் உறுதியை யிழப்பதாயிற்று. இந்நிலையில் தமிழ் நாட்டிலுள்ள தேவாரப் பாடல்பெற்ற திருக்கோயில்கள் பலவற்றைச் சிதைவு நீக்கிச் சிறந்த கருங்கற் கோயில்களாகப் புதுப்பித்தும், இமயம் முதல் குமரிவரையுள்ள சிவபெருமானுக்குரிய திருக்கோயில்களில் நாள்வழிபாடும் திருவிழாக்களும் சிறப்பாக நிகழ்வதற்கு ஆவன செய்தும் நம் நாட்டுச் சமய அறநிலையங்களைப் பேணி வளர்த்தவர்கள் நம் செந்தமிழ் நாட்டு வணிகர்களாகிய நாட்டுக்கோட்டை நகரத்தாராவர்.

தனவணிகச் செல்வர்களாகிய இப் பெருமக்கள் வணிகத்தின் பொருட்டுக் கடல்கடந்து பர்மா, மலேயா, இலங்கை முதலிய வெளி நாடுகளில் தங்கித் தாம் அரிதின் முயன்று ஈட்டிய பெரும் பொருளனைத்தையும் தம்முடைய குடும்ப நலத்திற்கென்றே வைத்துக் கொள்ளாமல் அறநிலையங்கள் பலவற்றிற்கும் உளமுவந்து செலவிட்டுள்ளார்கள். பழுதடைந்து சிதைந்திருக்கும் கோயில்களைச் சிதைவு நீக்கிப் புதுப்பித்தல், அன்ன சததிரம் வைத்தல், பசுமடம் அமைத்தல், நந்தவனம் தண்ணீர்ப்பந்தல் முதலியன அமைத்தல், தேவார பாடசாலைகளையும் வேத சிவாகம பாடசாலைகளையும் நிறுவி அங்குப் பயிலும் மாணவர்களுக்கு உணவும் உடையும் உறையுளும் தந்து ஆதரித்தல் முதலிய சமயத் திருப்பணிகளுக்கு நகரத்தார்களாகிய தனவணிகச் செல்வர்கள் சென்ற நூற்றுண்டிலும் இவ்விருபதாம் நூற்றுண்டின் முற்பகுதியிலும் பெரும் பொருளை நிரம்பச் செலவிட்டுள்ளார்கள். சென்ற நூற்றுண்டிலும் இவ்விருபதாம் நூற்றுண்டிலும் நம் நாட்டில் சைவமும் தமிழும் தழைத்தினிதோங்குதற்கும் கட்டிடக்கலை சிற்பக்கலை முதலியன வளர்தற்கும் தேவார பாடசாலை, வேத சிவாகமப் பாடசாலை, உயர் நிலைப் பள்ளிகள், கல்லூரிகள், பல்கலைக் கழகம் முதலிய கல்வி நிலையங்கள் பல தோன்றி நிலை பெறுதற்கும் நாட்டுக்கோட்டை நகரத்தார்கள் மிகவும் உறுதுணை புரிந்து வருதலைத் தமிழகம் நன்குணரும்.

தில்லை முதலிய தலங்களில் நகரத்தார்களால் நிறுவப்பெற்றுள்ள தேவார பாடசாலைகள் திருமுறை வளர்ச்சிக்குப் பெருந்துணை புரிந்தன எனலாம். திருவாதவூரடிகளாகிய மாணிக்கவாசகருக்கு இறைவனே குருமூர்த்தியாக எழுந்தருளி வந்து உபதேசித்தருளிய தலம் திருப்பெருந்துறையாகும். ஆவுடையார் கோயில் என வழங்கப்பெறும் இத்திருத்தலத்தில் அரிமழம் அ. அரு. அண்ணமலைச் செட்டியார் அவர்கள் தேவார திருவாசக பாடசாலையினை நிறுவி அங்குப் பலவூர்களிலிருந்தும் ஏழை மாணவர்களைச் சேர்த்துத் திருமுறையினை இசையுடன் பயிலச் செய்தார்கள். இங்குப் பயிலும் மாணவர் ஒருமுறை திருப்பெருத்துறையில் தங்கியிருந்தபோது ஒருநாள் இரவு ஏதோ விடந்தீண்டப்பெற்ற நிலையில் அதற்கு விரைந்து மருத்துவரை நாடி மருத்துவஞ் செய்துகொள்ளுதலை விரும்பாமல் 'சடையாயெனுமால்' எனத்தொடங்கும் திருமருகல் தேவாரத் திருப்பதிகத்தினை மாணவர்களாகிய எங்களைக் கொண்டு ஓதுமாறு

S. M. A. MAJID

MINISTER FOR MUNICIPAL ADMINISTRATION

FORT ST. GEORGE
MADRAS

அன்னதானப் பணி ஆண்டவனுக்குகந்த பணிகளில் ஒன்றுகும். சைவமெய்யன்பர் குமரகுருபரர் காசி நகர் சென்று ஆதினம் நிறுவி தமிழ் மக்களின் உதார குணத்தை எடுத்துக் காட்டினர். அதுபோல் ரங்கூன் தமிழர்களாகிய நாட்டுக்கோட்டை நகரத்தார்கள் ஆண்டவன் பூஜையுடன் கடந்த நூறு ஆண்டுகளாகக் காசி நகரில் அன்னதானக் கைங்கரியமும் செய்து வருவதை அறிந்து பாராட்டுகிறேன். தமிழ் மக்களின் தர்ம சிந்தனைக்கு இது ஒரு சிறந்த எடுத்துக்காட்டு. இந்தப் பணிகள் தொடர்ந்து நடந்து வரவேண்டுமென்று வாழ்த்துகிறேன்.

(Sd.) S. M. A. MAJID

---

பணித்து அப்பதிகத்தினை அன்போடு செவி மடுத்திருந்து முழு நலம் பெற்ற செய்தியினை அங்கு மாணவனாகப் பயிலும் பேறுபெற்ற யான் நேரிற் கண்டு மகிழ்ந்திருக்கின்றேன்.

மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்களுடைய மாணவருள் ஒருவரும் நகரத்தார் மரபினரும் ஆகிய வன்றொண்டச் செட்டியார்பால் முறையாகப் பயின்றவரும் திருமுறைகளிலும் சைவசித்தாந்த சாத்திரங்களிலும் நல்ல பயிற்சியும் புலமையும் உறுதியான பற்றும் கொண்ட தனவணிகப் பெரும் புலவர் காரைக்குடி சொக்கலிங்க ஐயா அவர்கள் தில்லையில் மெய்கண்ட வித்தியா சாலையை நிறுவி மாணாக்கர்களுக்குப் பாடம் சொல்லியும் பல நூல்களை எழுதியும் சொற்பொழிவுகள் பல நிகழ்த்தியும் திருமுறைப் பணிபுரிந்துள்ளார்கள். அவர்கள்பால் மாணவராகப் பயின்ற தனவணிகச் செல்வர் பலர் சிவநேசத் திருக்கூட்டத்திற் சேர்ந்து திருக்கோயிற் பணியும் திருமுறைப் பணியும் சிறப்புறச் செய்துள்ளார்கள். தேவகோட்டைச் சிவாகம சங்கத்தார் சைவாகமங்கள் சிலவற்றைத் தக்க பெரும் புலவர்களைக் கொண்டு தமிழில் மொழிபெயர்த்து வெளியிட்டுள்ளார்கள்.

நாட்டுக்கோட்டை நகரத்தார்களால் நிறுவி வளர்க்கப்பெற்ற அறநிலையங்கள் பலவற்றுள் வடநாட்டில் வாரணசியெனப் போற்றப்பெறும் காசியம்பதியிலுள்ள விசுவநாதர் கோயில் பூசைக் கட்டளையினைத் தொடர்ந்து நடத்திவரும் ஸ்ரீ காசி நாட்டுக்கோட்டை நகரச் சத்திரத்தின் நூற்றாண்டு விழா இனிது நடைபெறுவது தனவணிகச் செல்வர்களாகிய நகரத்தாரது உறுதியான சமயப் பற்றினையும் நல்லறச் செயல்களையும் பாரத நாட்டார் உணரச் செய்யும் நல்ல நிகழ்ச்சியாகும். நம் நாட்டில் நகரத்தார்கள் நிறுவி வளர்த்த நல்லற நிலையங்கள் சிலவற்றுக்குரிய முதற்பொருள்கள் பர்மா, மலேயா முதலிய வெளிநாடுகளில் தங்கிவிட்டமையால் முன்போல் தொடர்ந்து நடத்துதற்கு இயலாத நிலையில் சில தடைப்பட்டுள்ளன. நகரத்தாரது பெரும் புகழுக்குக் காரணமாக விளங்கும் நல்ல அறநிலையங்கள் எக்காலத்தும் தடையின்றி நிகழ்தற்கு ஏற்ற வழிதுறைகளைச் சிவபுண்ணியச் செயல்களில் ஆர்வமுடைய தனவணிகச் செல்வர்கள் ஒருங்கு கூடிச் சிந்தித்துச் செயலாற்றுதல் நம் நாட்டின் சமய நிலையங்களைப் பேணிக் காத்தற்குரிய சிறப்புடைய கடமைகளுள் ஒன்றாகும்.



## உருண்டோடுகிறதா உங்கள் பணம்?

வாழ்வின் தேவைகள் நாளுக்குநாள் பெருகுகின்றன. எனவே, குடும்பத் தலைவரின் பொறுப்பு அதிகமாகிறது. குடும்பத்தினருக்கு உணவு, உடை, உறையுள் ஆகியவற்றிற்கு வழிவகுப்பதுடன், குழந்தைகளின் கல்விச் செலவு, மகளின் திருமணம், நோய் நொடி வந்தால் வைத்தியச் செலவு, பிரயாணச் செலவு என்று எத்தனையோ செலவினங்களுக்கு வகை செய்ய வேண்டியிருக்கிறது அவர்.

## சீரானதா உங்கள் சேமிப்பு?

உங்கள் வரவு செலவுத் திட்டத்தை நீங்கள் எவ்வாறு தயாரிக்கிறீர்கள்? முன்யோசனையுடன் வகுக்கப்படும் வரவு செலவுத் திட்டத்தில் சேமிப்புக்கு முதல் இடம் உண்டு. வருமானத்தில் ஒரு பகுதி சேமிப்பிற்கு ஒதுக்கப்பட வேண்டும். ஒழுங்கான சேமிப்புப் பழக்கமே உங்களுக்கு உள்ள ஒரே பாதுகாப்பு. ஒரு சேவிங்ஸ் பாங்கு கணக்கு அல்லது ரிகரிங் டிபாசிட்டுக் கணக்கு மூலம் இன்றே சேமிக்கத் தொடங்குங்கள். நாளடைவில் பெருகும் பாங்கிக் கணக்கு அளிக்கும் பாதுகாப்பையும் மனமகிழ்வையும் நீங்கள் அடையமுடியும்.

எங்கள் பாங்கின் எந்த அலுவலகமும், எங்களது பல ரக சேவிங்ஸ் திட்டங்கள் பற்றிய முழு விவரங்களையும் உங்களுக்குத்தரக் காத்திருக்கிறது.



# இந்தியன் பாங்க் லிமிடெட்.

(ஸ்தாபிதம்: 1907)

பதிவு அலுவலகம்: இந்தியன் சேம்பர் பில்டிங்ஸ் எஸ்பிளனேட் மதராஸ்-1.

(இந்தியா முழுவதும் கிளைகள்) காரியதரிசி: G. S. சுந்தரம்

நகரத்தார் என்றென்றும் செல்வத்துடன் திகழ வேண்டும்
என்று கேட்டுக்கொண்டதற்கு இணங்கிப்

## பாடுவார் *முத்தப்ப செட்டியார்* பாடியது

1. காடுவெட்டிப் போட்டுக் கடிய நிலந்திருத்தி
வீடு கட்டிக் கொண்டிருக்கும் வேல்வணிகர் வீடுகட்(கு)
அன்றைக்கு வந்தளங்கள் அம்மா! இலக்குமியே
என்றைக்கும் நீங்கா திரு.
2. நின்மேலுமாணை நின்மகன்மேலு மாணைநின் மாக்கொழுநன்
தன்மேலுமாணை தமிழ்மேலுமாணை தவமா வணிகச்
சின்னஞ் சிறுவர் தெரியாத காளையரென் செயினும்
பின்னும் பொறுத்திருப்பாயே! பெரிய இலக்குமியே!
3. நீங்காது நின்மகனும் நெடிய திருமாலும்
பாங்காக அன்றுவந்த பாற்கடல்போல்—தேங்காமல்
நன்றாக நீஇருந்து நாளும் வளம்பெருக்கி
என்றைக்கும் நீங்கா திரு.

————: o :————

நகரத்தார்களின் நன்மையைக் கோரி, செயங்கொண்ட சோழீசர்மீது
பாடுவார் **முத்தப்ப செட்டியார்** இயற்றிய பாக்கள்

## *பஞ்ச வர்க்க பூஷணம்*

1. நன்றே பெருக நவிலுங்கு போர் நகர்வணிக
ரென்றே யுலகம் புகழ அவர்க்கீண் டிருநிதியம்
நின்றே நிலவ அறமும் கனமும் நெடிதுபெறத்
தொன்றேசோ ழீசர் செயங்கொண்டார் பாதம் துதிக்குமே.
2. மன்னும் பெருமை பெருகிக் குபேரர் நகர்வணிக
ரென்னும் மகிமை யுறவும் வறியவர்க் கீந்திடவும்
பொன்னும் பொருளும் புவியுமுப் போகம் பொருந்திடவும்
துன்னும்சோ ழீசர் செயங்கொண்டார் பாதம் துதிக்குமே.
3. சிவனு லயமும் திருமால் பணியும் சிறப்புறத்தான்
நவமாப் புதிக்கியு மாக்கியும் மேலோர் நவிலுநல்ல
தவமா மிதெனத் தரணியில் ஓங்கவும் தாங்குமகத்
துவமாசோ ழீசர் செயங்கொண்டார் பாதம் துதிக்குமே.
4. வந்தார்க் குதவும் வணிகர் குபேரனும் வள்ளலுக்கும்
பிந்தார் தனத்தி லிவரே யுலகில் பெரியரெனச்
சிந்தார் புரமினை யாத்தங் குடியார் சிறப்புறவும்
சொந்தார்சோ ழீசர் செயங்கொண்டார் பாதம் துதிக்குமே.
5. யவனங் கலிங்கந் தமிழ்சிங்களம்பல யாண்டுமுள்ள
புவனம் எலாமிவர் வர்த்தகம் ஓங்கவும் புண்ணியஞ்சேர்
தவமும் தருமமும் தங்க வணிகர்தரம்பெறவும்
துவசசோ ழீசர் செயங்கொண்டார் பாதம் துதிக்குமே.

# ஆண்டருளும் பரிசு

சுப. அண்ணாமலை, எம்.ஏ., எம்.லிட்.,
தியாகராசர் கல்லூரி, மதுரை.

"அன்போடு இயைந்த வழக்கு என்ப ஆருயிர்க்கு என்போடு இயைந்த தொடர்பு" என்பது திருவள்ளுவர் வாக்கு. உயிருக்கு உடல் கிடைத்ததன் நோக்கமே பிற உயிர்களுக்கு அன்பு செய்து இன்பம் சேர்த்தலும் தம் உயிர்க்கு உயிராய் நின்று எல்லாவற்றையும் அறிவிக்கும் இறைவன் திருவடிக்கு அன்பு செய்து காதல் மிகுதியால் கண்ணீர் பெருக்கி உள்ளம் உருகித் தொழுது பிறவி வட்டத்திலிருந்து விடுதலை பெறுதலும் ஆகும். உயிர்களுக்கு அன்பு செய்தலில் இறைவனை மறவாச் சிந்தை உடைய அடியார்களுக்கு அன்பு செய்தல் சிறப்புடையது. இந்நெறியில் வாழ்ந்து காட்டிய பெரியவர்களின் வரலாற்றைக் கூறுவது பெரிய புராணம். அதில் அறுபத்து மூன்று அடியார்களின் வரலாறும் ஒன்பது தொகையடியார்களின் (அடியார் குழுவினர்) வரலாறும் கூறப்படுகின்றன. உயர்கதி அடைவதற்குச் சைவ சமயம் விதிக்கும் குரு, லிங்க, சங்கம பத்திகளில் தலைசிறந்து நின்ற அடியவர்கள் வாழ்ந்த பான்மையையும் தம் வாழ்வின் இறுதியில் சிவபிரானுல் அருளைப் பெற்று நற்கதி அடையும் சிறப்பையும் அந் நூலிற் காண்கின்றோம். இவர்கள் அருளைப்பெற்ற முறைகளும் அருள்வலியார் அடைந்த முத்தி நிலைகளும் பற்றி ஆராய்வதே இக்கட்டுரை.

பெரிய புராணத்தில் சுந்தரமூர்த்தி நாயனுர் காப்பிய நாயகராதலின் அவர் வரலாறு தொடங்கிய பின் முதன்முதல் விரிக்கப்படும் வரலாறு தில்லை வாழந்தணருடையதாகும். இறைவனே சுந்தரருக்குத் திருத்தொண்டத் தொகை பாட அடியெடுத்துக் கொடுத்தபோது இவர்களையே நினைந்து, "தில்லை வாழந்தணர் தம் அடியார்க்கும் அடியேன்" என்று தொடங்கி வைத்தனன் என்ருல் இவர் பெருமையை என்னென்பது? "செம்மையால் தணிந்த சிந்தைத் தெய்வ வேதியர்களாக விளங்கிய அவர்கள் தம் வழிபாட்டு வலிமையால் தில்லைக் கூத்தனை இப்பிறப்பிலேயே பூசிக்கும் பேறு பெற்றிருக்கிருர்கள் ; இனிப் பெறவேண்டிய பேறு இல்லையென்பர் சேக்கிழார் பெருமான். இனி மனைவியார் கூறிய "தீண்டிஞல் திருநீலகண்டம்" என்ற சொல்லிற்கு அஞ்சிப் பிரமசாரியாகவே வாழ்ந்து, இறைவன் தம்மைச் சோதனை செய்வதற்காகத் தந்துவைத்த திருவோட்டினை இழந்து, தாம் திருடவில்லை என்று சத்தியம் செய்தற்காக மனைவியாரின் கைதொடவும் மாட்டாராய்க் கோல் ஒன்றை அவருர் தாமுமாகப் பிடித்துக் கொண்டு குளத்தில் மூழ்கித் தெய்வ இளமைக் கோலத்தோடு எழுந்த திருநீலகண்டர் சிவனருளால் சாலோகம் என்னும் முத்தி பெற்றுச் சிவலோகம் சேர்ந்தார். விருந்தாய் வருபவர்களுக்கெல்லாம் அரசோபசாரம் செய்து, வறுமை வந்துற்றபோது, அன்று விதைத்த நெல்லை அரித்துவந்து, வீட்டுக் கூரையை வெட்டி விறகாக்கிச் சோறு சமைத்து விருந்தாளியாக வந்த இறைவனுக்கு இடத்துணிந்த இளையான்குடிமாறர் சிவலோகம் சேர்ந்தார். கொடையில் வல்ல அமர்நீதியாரும் குழலில் வல்ல ஆனயரும் சேர்ந்தது சிவலோகமே. ஆனல் வாழ்க்கையில் வீரங்காட்டித் தீரம் விளைத்த எறிபத்தரும் விறன்மிண்டரும் சிவலோகத்தில் பூதகணங்களுக்குத் தலைவர்களாகும்படி இறைவனுல் பணிக்கப் பெற்றனர். எறிபத்தர் சிவனுக்கு ஓர் அடியவர் கொண்டு சென்ற பூமாலைகளைச் சிதைத்த பட்டத்து யானையைக் கொன்று பாகர்களையும் கொன்றவர். விறன்மிண்டரோ அடியார்களை வணங்காத சுந்தரர் சைவத்திற்குப் புறம் என்றும் அவருக்கு அருளிய சிவனும் சைவத்திற்குப் புறமே என்றும் கூறியவர். இவர்களின் மறத்திற்கும் அன்பே காரணமன்றோ?

இவர்கள் அடைந்த முத்தி பதமுத்தி என்று சொல்லப்படும். அதாவது சிவலோகத்தில் இவர்கள் குறிப்பிட்ட பதவிகளை அடைந்தார்கள். இவர்களைப் பிடித்திருந்த மறைப்புச் சத்தியாகிய ஆணவமலம்முற்றும் நீக்கப் பெற

# CARBORUNDUM UNIVERSAL
## COATED AND BONDED
# ABRASIVES

COATED ABRASIVES

Flint (Sand), Garnet, Emery, 'Aloxite' Silicon Carbide, Rolls, Belts, Discs, Converted Shapes, Reamstock in paper and cloth, SiliconCarbide Waterproof Abrasive Paper, etc.



CARBORUNDUM UNIVERSAL manufacture a comprehensive range of Coated and Bonded Abrasive products required by modern industries.

Made by most up-to-date manufacturing methods, under expert supervision, using the highest quality raw materials, Carborundum Universal Abrasive products have been found to be consistent in quality, ensuring quicker stock removal and better finish.

By constant research and development work, and quality control at every stage of manufacture, Carborundum Universal Abrasive products have proved themselves to be equal to the best manufactured anywhere else in the world.




BONDED ABRASIVES

Grinding Wheels, Segments, Cut-off wheels. Sharpening Stones, finished and unfinished sticks and bricks, floor polishing blocks valve grinding compound etc.

CUZ-938




**CARBORUNDUM UNIVERSAL LTD.**



*Head Office*: 52/53, Jehangir Street, Madras-1.

Telephone: 29141 (8 lines)

*Works*: Tiruvottiyur.

வில்லை. அவர்கள் வாழ்ந்த வாழ்க்கையின் பயனாகப் பெற்றது அவ்வளவே. ஆனால் ஆணவ மலம் முற்றும் அறுக்கப்பெற்ற அடியார் களின் வரலாறுகளும் பெரிய புராணத்தில் உள்ளன. முத்தநாதனால் வஞ்சகமாகக் குத்தப் பட்டுச் சிவவேடமே மெய்ப்பொருள் எனத் தொழுது உயிர் நீத்த மெய்ப்பொருள் நாயனார் தேவர்கட்கும் எட்டாத சிவன் திருவடிகளை அடைந்தார். முத்தநாதனின் வாளே அவரது ஆணவ மலத்தை அறுக்குமாறு இறைவன் அருள் புரிந்தார். பதியாகிய இறைவனின் அருள்பெறும் காலம் கிட்டினால் பகைவனின் கைவாளும் பாசம் அறுக்கும் கருவியாகும். ஏனாதிநாதர் என்னும் வாட்போர் வீரரும் பகை வனை அதிசூரனோடு பொருதபோது அவனது நெற்றியில் திருநீற்றைக் கண்டு, போரிடுவதை நிறுத்தி, அவனால் கொல்லப்பட்டுத் திருவடி முத்தி அடைந்தார். நந்தனார் என்னும் திரு நாளைப்போவார் தீக்குளித்துத் தில்லைப் பொற் சபைக்குள் நுழைந்து சிவன் கழல் சேர்ந்தார். இவ்வடியார்களின் அன்பு முன் சொன்னவர்க ளினதைவிட ஏற்றம் வாய்ந்தது.

அடியவர் எல்லாருள்ளும் அன்பில் தலை சிறந்தவர் கண்ணப்பரே, கொடுமை தவிர வேறு அறியாத வேடர் குலத்தில் பிறந்த அவர் காளத்தி மலையில் சிவனது இலிங்க வடி வத்தைக் கண்டவுடன் மோகமாய் ஓடிச் சென்று தழுவி, உச்சி மோந்து, தம்மை மறந்து நின்றார். அவர் அம்மலைமேல் ஏறும் போதே சிவனின் திருக்கண்ணோக்கம் அவர் மீது பட, அவர் இணையில்லாத அன்புருவமாக மாறிவிட்டார். இப்பேறு இவர் ஒருவருக்கே கிடைத்தது. இது கருதியே மாணிக்கவாச கரும் "கண்ணப்பன் ஒப்பதோர் அன்பு இன்மை கண்டபின்" என்று உண்மை செப் பினார். இப்பேற்றினால் "சார்வருந்தவங்கள் செய்து முனிவரும் அமரர்தாமும் கார்வரை அடவி சேர்ந்தும் காணுதற்கு அரியாரைக்" கண்ணப்பர் நேரே கண்டு உருகினார்; ஊன் அமுது படைத்தார்; உறக்கம் விட்டார். இவர் இறைவனை "நேர்பெற நோக்கி நின்றார், நீளிருள் நீங்க நின்றார்" என்று வரும் சேக் கிழார் வாக்கிற்கு இரண்டு வகையாகப் பொருள் செய்யலாம். ஒன்று: இரவெல்லாம் காவல் காப்பவராய் இறைவனை நேராகப் பார்த்தவாறு நீண்ட இரவு நீங்கும் வரை நின்றார் என்பது. ஒன்று: மற்ற நினைவுகள் இன்றிச் சிவத்தையே கருதி நின்றார்; அந்த அளவில் அவரைப் பிடித்த ஆணவ இருள் நீங்கிற்று என்பது. இது நீங்குமாறு இறைவன் அவரைப் பார்த்த பார்வை ஓர் இரசவாத வித்தையே செய்து விட்டது என்பர் சேக்கிழார்.

"முன்பு திருக்காளத்தி முதல்வனார்
அருள்நோக்கால்
இன்புறு வேதகத்து இரும்பு பொன்னானாற்
போல் யாக்கைத்
தன்பரிசும் வினையிரண்டும் சாருமலம்
மூன்றும்அற
அன்புபிழம்பாய்த் திரிவார் அவர்கருத்தின்
அளவினரோ"

என்று வரும் அவர் பாடலில் கண்ணப் பரின் சிவபோதம் (உயிர் அறிவு) நீங்கிச் சிவ போதம் (சிவனது அறிவு) வரும் முறை விளக் கப்பட்டுள்ளது. இவ்வாறு அன்புப் பிழம்பாய் மாறிவிட்ட கண்ணப்பர் தம் வாயில் அடைத் துக்கொண்டுவந்த எச்சிலான பொன்முகலித் தண்ணீர் இறைவனுக்குக் கங்கை நீரினும் சிறந்த அபிடேகமாயிற்று. கண்ணப்பரின் செருப்படி இளமுருகன் மிதித்த மிதியை விட இன்பமாக இருந்தது. இலிங்க உருவின் கண்ணில் இரத்தம் வடிந்தபோது தம் கண் ணைப் பிடுங்கி அப்பும் துணிவும், அதன் இரண் டாம் கண்ணிலும் குருதி கொட்டியபோது தமது மற்றொரு கண்ணையும் எடுக்கத்துணியும் பரிவும் கண்ணப்பருக்கு அன்றி யாருக்கு வரும்? அவருக்குத் திருவடி முத்தி கொடுத்தது மன்றி "என்றும் என் வலப்பக்கத்தில் இரு" என்றும் இறைவன் அருள் செய்தார்.

கண்ணப்பரும் மெய்ப்பொருளும் ஏனாதி நாதரும் நந்தனாரும் பெற்ற முத்திக்குப் பர முத்தி என்று பெயர். இவ்வாறு சிவனை அன் பால் போற்றி வழிபடும் அடியார்களின் அன்பு நிலைக்கு ஏற்பத் தரவாரியாகச் சிவன் அவர்களை ஆண்டருளுவான் என்னும் உண்மை பெரிய புராணத்தால் அறியப் படுகிறது.

பதமுத்தியைவிடப் பரமுத்தியே உயர்ந்தது. சிவன் அருளால் ஆணவமலம் அறுக்கப் பெறாதவரை பரமுத்தி கிடைக் காது. ★

# நகரத்தார் வாழ்த்து

(ரெ. முத்துக்கணேசன்)

1. உலகருளும் திருமகளின் இல்லந் தானே!
   ஒளிர்கின்ற கலைமகளின் கோயில் தானே!
இலகுபுகழ் உயர்அறத்தின் பிறப்புத் தானே!
   இசைப்பயனே! பண்தமிழின் இன்பந் தானே!
திலகமெனத் தமிழ்நாட்டில் மணம் பரப்பித்
   திகழ்கின்ற நகரத்தார் உள்ளம் காண்பீர்!
குலம்வழியே அறங்காத்துக் கொண்ட உள்ளம்
   குவலயம்போல் பல்லாண்டு வாழி நன்றே!

2. தனக்கிணையாய் யாவரையும் மதித்துக் காண்பர்;
   தனதகத்தை நாடிடுவார் தன்மை கண்டு
மனக்கினிய உணவுபல படைத் தளிப்பர்;
   மாண்புமிகு குணச்செல்வர்; ஒழுக்க மிக்கார்;
வினைக்குரியர்; நாடுபல கடந்து சென்று
   வினைத்திறத்தால் பொருளீட்டும் வணிகர்; வாழ்வில்
தினைத்துணையும் குறையறவே செய்யும் வீரர்!
   தேர்ந்துழைக்கும் தாளாண்மைத் திறமே வாழி!

3. திருமடமும் கோயிலுமே எழுப்பிப் போற்றித்
   தேன்தமிழாம் திருமுறைகள் பரப்பி நிற்பர்;
வருசுற்றம் பசியாறித் தங்குதற்கு
   வனப்புடைய சத்திரங்கள் பல அமைப்பர்;
திருஅனைய கலைவளரக் கல்வி ஓங்கத்
   திசையனைத்தும் பெருநிலையம் கண்ட சான்றோர்;
திருஅனைய நகரத்தார் தலைகமைப் பண்பு
   தாயன்பாம் இவ்வுலகில் தழைத்து வாழி!

4. சீர்மணக்க மணப்பருவம் செழிப்பதே போல்
   செந்தமிழில் பண்சேர்ந்து சிறப்பதே போல்
கார்மணக்க நெறகதிர்கள் களிப்பதே போல்
   கடிமணத்தில் சீர்வரிசை வைத்துக் காண்பர்;
ஊர்மணக்கத் திருமணங்கள் ஒளிரச் செய்தே
   ஒப்புரவால் தனவணிகர் ஒன்றி வாழ்வர்;
பேர்மணக்கக் குடிவழியைப் பேணிக் காக்கும்
   பெற்றியினுக் கிவ்வுலகம் ஈடோ வாழி!

5. ஊரமைத்து நகராக்கி உண்மை நிற்க
   ஒப்பரிய தமிழ்வேந்தர் ஆண்ட நாட்டில்
சீரமைத்துக் கோயிலெலாம் சிவமாய்க் கண்டு
   தேரோடும் திருவிழாக்கள் எடுத்த நாட்டில்
பேரமைத்து அறப்பணிகள் கோடி ஆற்றிப்
   பேரமுதத் தமிழோடு சைவம் வாழத்
தேரமைத்த கைவினைபோல் தொண்டு செய்வார்
   திருப்பணிசெய் செட்டிமார் சிறந்து வாழி!

# பட்டினத்துப் பிள்ளையார்

மு. அருணாசலம் பிள்ளை,
தமிழ்த் துணைப் பேராசிரியர்,
அண்ணாமலைப் பல்கலைக் கழகம்.



திருவொற்றியூரில் அடங்கியுள்ள பட்டினத்தடிகள் நகரத்தார் மரபினர் என்பது தமிழ் மக்கள் அனைவரும் ஏற்றுக்கொள்ளும் கருத்தாகும். பட்டினத்தடிகள் மரபினர் என்னும் ஒரு கோத்திரத்தார் நகரத்தார்களுள் இளையாற்றக்குடிக் கோயிலாருள் உள்ளனர்; இவர்கள் பட்டினசாமி வகுப்பினர் என்ற பெயரால் விளங்கி வருகின்றனர்.

பட்டினத்தடிகளின் உறவால், நகரத்தார்களுக்குத் திருவொற்றியூர்த் தலத்தில் ஈடுபாடு மிகுதியாக உண்டு. ஏழு ஏக்கர்ப் பரப்பில் பெரியதொரு நகர விடுதி திருவொற்றியூரில் கட்டப்பட்டிருக்கிறது.

திருவொற்றீசர் கோயிலில் நிகழும் மாசி மகத் திருவிழாக் காலத்தில் சென்னை பவளக்காரத்தெரு 27, 34 - ஆம் எண்களில் உள்ள இருகோயில் வீடுகளிலிருந்தும் தண்டாயுதபாணி இறையுருவங்கள் இரு இரதங்களில் எழுந்தருளித் திருவொற்றியூர் நகரவிடுதியில் தங்கிக் காட்சி கொடுப்பது வழக்கமாக இருந்து வருகிறது: மகிழடி சேவைக்கு மூன்று நாள் முன்னரே இவ் விறையுருவங்கள் சென்று, மகிழடிசேவைக்கு மறுநாள் சென்னைக்குப் புறப்படுகின்றன. இந்நான்கு நாட்களிலும் நகரத்தார்களுக்கும் ஏழைகளுக்கும் அன்னதானம் வழங்கப்பெறுகிறது.

ஆடித்திங்கள் தோறும் பட்டினத்தார் கோயிலில் குருபூசை நிகழ்கிறது. பெரும்பாலும் நகரத்தார்களின் பொருளுதவியால், அது பெரிய விழாவாகக் கொண்டாடப்படுகிறது. ஆயிரக்கணக்கான ஏழை மக்களுக்கு அமுது படைக்கப்படுகிறது. பட்டினத்தார் திருவுருவம், திருவொற்றீசர் கோயிலைச் சுற்றித் திருவுலா வருகிறது.

பட்டினத்தார் கோயில், நெடுங்காலமாக சா. ராம. மு. குடும்பத்தாரின் மேற் பார்வையில் இருந்து வருகிறது. நாள்தோறும் இரண்டு காலப் பூசை உண்டு. சிராவயல் மு. சோமசுந்தரம் செட்டியார்

அவர்கள் மானேஜிங் டிரஸ்டியாக இருந்து வருகிருர்கள். அவர்களும் தேவகோட்டை P. அருணசலம் செட்டியார் அவர்கள், சென்னை வி. என். சுப்பராயன் அவர்கள், எம். ஆர். ஜி. விசுவநாத முதலியார் அவர்கள், குளத்து ஐயர் அவர்கள் ஆகிய பெருமக்களைக் கொண்ட திருப்பணிக்குழு ஏற்பட்டிருக்கிறது. 500 ஆண்டுகளுக்கு முன் கட்டப் பெற்றுச் சிறிது கிலமடைந்திருக்கும் இக்கோயிலை, ஒரு லட்சம் ரூபாய் செலவில் கல் திருப்பணியாகக் கட்ட திருப்பணிக் குழுவினர் ஆவன செய்து வருகின்றனர்.

நகரத்தார் மரபினர் எவரும் சென்னையில் உயிர் நீத்தால் அவர்களுடைய இறுதிச் சடங்குகள் திருவொற்றியூரிலேயே செய்யப் படுகின்றன.

பட்டினத்துப் பிள்ளையார் ஒருவரல்லர்; மற்ருெரு பட்டினத்தாரும் இருந்தார் என்பதைக் கட்டுரையாளர் தம் சீரிய புலமையாலும் ஆராய்ச்சித் திறத்தாலும் இங்கு விளக்குகிருர்.

— பதிப்பாசிரியர்

பூம்புகார் எனப்படும் காவிரிப்பூம் பட்டினத்தில் பெருங்குடி வணிகர் மரபிற் பிறந்தவர் பட்டினத்துப் பிள்ளையார். இவர் கல்வி கேள்விகளிற் சிறந்தவர்; கடவுட் கொள்கையைக் கடைப்பிடித்து ஒழுகியவர்; வணிகத் தொழிலாற் பெரும் பொருள் ஈட்டி மனையறத்தை மேற்கொண்டு மாண்பு மிக்க வாழ்க்கை நடத்தியவர்; இரந்து வந்தோர்க்கு இல்லையென்னுது வழங்கும் வள்ளண்மையை இயல்பாகப் பெற்றவர்; இறை உயிர் கட்டு என்னும் முப்பொருள்களின் உண்மையை உணர்ந்தவர்; தேவாரம் திருவாசகம் முதலாய சிவநெறிப் பனுவல்களில் சிறந்த பயிற்சியுடையவர். இங்ஙனம் அறிவும் திருவும் இறையன்பும் மருவி நல் வாழ்வு நடாத்திய இவர், பண்டைப் பிறப்புக்களிற் செய்த பதி புண்ணிய மேம்பாட்டால் உலக நிலையாமையை யுணர்ந்து தாமும் தம் முன்னேர்களும் தேடித் தொகுத்த செல்வங்கள் அனைத்தையும் அருவருத்து ஒதுக்கித் தள்ளித் துறவறத்தை மேற்கொண்டார். இது பற்றியே "பாரனைத்தும் பொய்யெனவே பட்டினத்துப் பிள்ளையைப்போல், ஆரும் துறக்கை அரிதரிது" என ஆன்றேர் இவரை வியந்து பாராட்டுவாராயினர். இவர், பட்டினத்து அடிகள் எனவும், பட்டினத்தார் எனவும் கூறப்பெறுவர். இவர் இயற்றிய நூல்கள் கோயில்நான் மணிமாலை, திருக்கழுமல மும்மணிக் கோவை, திருவிடை மருதூர் மும்மணிக் கோவை, திருவேகம்பம் உடையார் திருவந்தாதி, திருவொற்றியூர் ஒருபாஒருபது என்பனவாம். இவ்வைந்து நூல்களும் பதினேராந்திருமுறையில் சேர்க்கப் பெற்றுள்ளன. இவர் பாடல்கள் எல்லாம் செவ்விய இனிய சொற்களால் இயன்றன; சீரிய பொருட் செறிவுடையன; கற்பவர் மனமாசு போக்கிக் கழி பேரின்பம் பயப்பன. சித்தாந்த சைவநுண் கருத்துக்கள் ஆங்காங்கு ஒளி வீசிக் கொண்டிருத்தலை இவர் பாடல்களிற்காணலாம். இவர் பரந்துபட்ட உலகியலறிவும் சிறந்த தமிழ்ப் புலமையும் உடையவர் என்பதை இவர் இயற்றிய செய்யுட்கள் புலப்படுத்தா நிற்கும். இவர் "வித்தகப் பாடல் முத்திறத்து அடியரும் திருந்திய அன்பிற் பெருந்துறைப் பிள்ளையும், சித்த மார்சிவ வாக்கிய தேவரும், பெரிய அன்பின் வரகுண தேவரும்" என ஆளுடைய பிள்ளையார் முதலானவர்களைத் தமது பாடலில் (திருவிடை மருதூர் மும்மணிக் கோவை. செய்யுள்—28) குறிப்பிட்டிருத்தலால் காலத்தால் அவர்களுக்குப் பிற்பட்டவராவர். இவர் வாழ்ந்த காலம் கி. பி. பத்தாம் நூற்ருண்டு என்னலாம்.

**புராணங்கள் கூறும் வரலாறுகள்**

காவிரிப்பூம்பட்டினத்தில் வாழ்ந்த சிவநேசர் ஞானகலாம்பிகை என்னும் இருவர்க்கும், சிவபிரான் ஆணையால் அளகை வேந்தனு

கிய குபேரனே அருமை மகவாகப் பிறந்தான். அம்மகவிற்குத் திருவெண்காடர் எனப் பெயரிட்டு வளர்த்தனர். இளம் பருவத்திலேயே தந்தையை இழந்த திருவெண்காடர்க்கு, அந்தணர் வேடத்தில் வந்த சிவபிரான் சிவதீக்கை செய்து ஒரு சிவலிங்கத் திருவுருவையும் நல்கினர். சிவ வழிபாடு செய்து வந்த இவர், சிவகலையென்னும் மங்கை நல்லாளை மணந்து மனையறம் நடத்தினர். நெடுங்காலம் மகப்பேறின்மையால் அரிய பல நோன்புகளை மேற்கொண்ட இவர்களுக்குச் சிவ மறையவர் ஒருவர் வாயிலாக ஒரு குழந்தை கிடைத்தது. சிவபிரானே அக்குழந்தையாகத் தோன்றினர். அக்குழந்தையின் எடையளவு பொன் கொடுத்துப் பெற்ற இவர்கள் அக்குழந்தைக்கு மருதவாணர் எனப் பெயரிட்டுப் பாராட்டிச் சீராட்டி வளர்த்தனர். தக்க பருவம் எய்திய மருதவாணர், வணிகர் சிலருடன் மரக்கலமேறிக் கடல் கடந்து வெளிநாடு சென்று பொன்னும் மணியும் பிறவுமாய பொருள்கள் பலவற்றை ஈட்டினர். அவற்றுள் பொற்கட்டிகளைச் சிறு சிறு துண்டுகளாக வெட்டி அவல் கடலையுடன் கலந்தும், மணிகளைச் சாணத்துடன் கலந்து வரட்டிகளாகத் தட்டியும் அவற்றைக் கைக்கொண்டு நண்பர்களுடன் ஊர்க்குப் புறப்பட்டார்: இவரது செயல் உடன் வந்த நண்பர்களுக்கு வியப்பையும் திகைப்பையும் உண்டாக்கிற்று. இவர் அறிவு மயங்கியிருப்பதாக மற்றையோர் கருதினர். இவர்கள் எல்லோரும் ஏறி வந்த மரக்கலம் நடுக்கடலில் தோன்றிய கடும் புயலில் அகப்பட்டுச் செல்லுந் திசையறியாது கலக்கமுற்று நின்றது. அதன்கண் இருந்தார் பலரும் பசியாலும் குளிராலும் வருந்தினர். அப்போது மருதவாணர் உதவிய அவல்கடலைகளைத் தின்றும் வரட்டிகளில் நெருப்புமூட்டியும் பசியையும் குளிரையும் போக்கிக் கொண்டு, இவரது நுண்ணறிவைப் பாராட்டினர். ஊர் வந்து சேர்ந்த பின்னர் மருதவாணரது செயல்களைக் கேள்வியுள்ள திருவெண்காடர் இவரது மனநிலை பற்றி ஆராய்ந்து வரலாயினர். ஒரு நாள் மருதவாணர், ''காதற்ற ஊசியும் வாராது காணும் கடைவழிக்கே'' என்ற ஒரு வரியை ஓர் ஓலை நறுக்கில் எழுதி, அதனுடன் காதறுந்த ஊசியொன்றையும் வைத்து விட்டு மறைந்தருளினர்.

திருவெண்காடர் தம் அருமை மகனை எங்கும் தேடினர். கண்டாரில்லை. அவர் ஓலை நறுக்கில் எழுதி வைத்திருந்த குறிப்பைப் படித்துப் பார்த்தார். அவ்வொரு மொழியே குரு மொழியாய் மெய்யுணர்வு பெறச் செய்தது. இவ்வுடலை விட்டு உயிர் நீங்குங் காலத்து, ஒன்றுக்கும் பயன்படாத காதறுந்த ஊசியும் உயிர்க்குத் துணையாய் உடன் வருதல் இல்லை என்ற உண்மையை உணர்ந்தார். தம் செல்வங்கள் அனைத்தையும் வறியவர்க்கு வாரி வழங்கினர். பொது மக்கள் தாமே கவர்ந்து செல்லுமாறு கருவூலங்களைத் திறந்து விட்டார். தம் மனைவியை அழைத்துச் சிவப் பணியும் திருத்தொண்டர் வழிபாடும் செய்து கொண்டு காலம் போக்குமாறு பணித்தார். தம் தாயாரது விருப்பத்திற்கு இணங்கி அவரது வாழ்நாள் முடிவில் அங்கு வந்து அவர்க்குச் செய்யத்தகும் இறுதிக் கடன்களைச் செய்வதாக உடன்பட்டார். கீளும் கோவணமும் உடையராய் இல்லத்தினின்றும் வெளியேறினர். இவரைப் பின்பற்றி இவரது கணக்கராய சேந்தனரும் துறவு மேற்கொண்டார். இங்ஙனம் முற்றுந் துறந்த பட்டினத்துப் பிள்ளையார், தாம் சீரும் சிறப்புமுற வாழ்ந்த புகார் நகரின் கண்ணேயே இல்லந்தொறும் சென்று ஐயமேற்றுண்பாராயினர். இவ்விழி செயலைக்கண்ட இவரது தமக்கையார் இவரைச் கொல்ல நினைந்து நஞ்சு கலந்த அப்பஞ் செய்து அதனை இவர் உண்ணக் கொடுத்தார். திருவருளாலே அதனைத் தெரிந்து கொண்ட அடிகள் ''தன்வினை தன்னைச் சுடும் ஓட்டப்பம் வீட்டைச் சுடும்'' என்று கூறிக்கொண்டு அவ்வப்பத்தைத் தம் தமக்கையார் வீட்டின் இறப்பில் செருகினர். உடனே அவ்வீடு தீப்பற்றியெரிந்தது.

பின்னர்ப் பல தலங்களுக்கும் சென்ற அடிகள், உஞ்சேனை மாகாளம் என்னும் நகரையடுத்துள்ள மூத்த பிள்ளையார் கோயிலுட் சென்று நிட்டையில் அமர்ந்தார். அந்நகரைப் பத்திரகிரி என்னும் மன்னன் ஆண்டு வந்தான், அவனது அரண்மனையிற் புகுந்து கவர்ந்துவந்த பொருள்களைப் பங்கீடு செய்த கள்வர்கள், தாம் முன்பு வேண்டுகோள் செய்தவாறே பிள்ளையார்க்கு ஒரு முத்த மாலையைச் சூட்டக் கருதி ஆங்கு நள்ளிருளில் நிட்டையிலிருந்த அடிகள் கழுத்திவிட்டுச் சென்றனர். அரசனது ஏவலால் தேடி வந்த காவலர், அரண்மனையிற்

களவு போய முத்தமாலை அடிகள் கழுத்திற் கிடப்பது கண்டு இவரை அடித்து இழுத்துக் கொண்டு சென்று அரசன் முன்பு நிறுத்தினர். இவரே கள்வரெனத் துணிந்த அரசன் இவரைக் கழுவில் ஏற்றுமாறு கட்டளையிட்டான். அப்போது, "என்செய லாவது யாதொன்றுமில்லை இனித்தெய்வமே, உன்செய லேயென்றுணரப் பெற் றேனிந்த ஊனெடுத்த பின் செய்த தீவினை யாதொன்று மில்லை பிறப்பதற்கு முன்செய்த தீவினை யோஇங்ங னேவந்து மூண்டதுவே'' என்று பாடினர். உடனே, அக்கழு மரம் தீப்பற்றியெரிந்து சாம்பராயிற்று. இந்நிகழ்ச்சியைக் கேள்வியுற்ற மன்னவன், ''வையமும் தவமும் தூக்கில் தவத்திற்கு ஐயவி யனைத்தும் ஆற்றாது'' என்பதை உணர்ந்து தம் அரசைத் துறந்து அடிகளையே ஞானாசிரியராகக் கொண்டு அவரைப் பின் தொடர்ந்து சென்றான். இவ்வரசனே பின்பு பத்திரகிரியார் என்னும் மெய்யடியாராக வழங்கப் பெற்றான். சிலகாலம் சென்ற பின்னர்த் தம் அன்னையார் சிவபதம் எய்திய செய்தி தெரிந்து காவிரிப் பூம்பட்டினம் சென்று அவர்க்குச் செய்யத் தகும் இறுதிக் கடன்களைச் செய்து விட்டுத் திருவொற்றியூரை யடைந்தார். ஆங்கு வியத்தகு செயல்கள் பல வற்றைச் செய்து முடிவில் சிவலிங்கத் திருவுருவாயினர் எனப் பட்டினத்தார் புராணமும் புலவர் புராணமும் கூறுகின்றன.

இப்புராண வரலாற்றில், வடதிசைக் காவலனாகிய குபேரனே திருவெண்காடராகப் பிறந்தான் என்பதும், சிவபிரானே இவர்க்கு மகவாகத் தோன்றி மருதவாணரெனப் பெயர் பூண்டு வணிகத் தொழில் நடத்தி மறைந்தார் என்பதும் புராண மரபு பற்றிச் சிறிது புனைந்துரைக்கப்பட்டன என்னலாம். திருவெண்காடர் துறவு பூண்ட செய்தி, கோவலன் கண்ணகி ஆகிய இருவரும் இவ்வுலக வாழ்வு நீத்தமையறிந்து ஆற்றாமை மிகுதியால் அவ்விருவருடைய தந்தையர் இருவரும் தம் செல்வங்களைத் தானமாக வழங்கி விட்டுத் துறவு மேற்கொண்ட வரலாற்றை நினைவுபடுத்துகின்றது. மருதவாணர் எழுதி வைத்ததாகப் புராணம் கூறும், காதற்ற ஊசி பற்றிய செய்தி, ''காதற்ற ஊசியைத் தந்தனனேயென்றன் கைதனிலே'' எனவும், ''காதற்ற ஊசியும் வாராது காணும் கடைவழிக்கே'' எனவும் பட்டினத்தார் பாடல்களில் 'பொது' என்ற தலைப்பின் கீழ் உள்ள 9, 10-ஆம் பாடல்களின் ஈற்றடிகளில் கூறப்பட்டுள்ளது. இவற்றுள், மருதவாணர் ஓலையில் எழுதி வைத்த ஓர் அடி, அவர்க்குத் தந்தை முறையினரான பட்டினத்தார் இயற்றிய ஒரு பாடலின் (பொது—10) இறுதியடியாகவும் அவர் கூற்றாகவும் அமைந்திருப்பது ஆராய்தற்குரியது.

### பட்டினத்தார் ஒருவரா இருவரா ?

அதியமான் நெடுமா னஞ்சி இறந்த காலத்தில் "சிறியகள் பெறினே யெமக்கீயும் மன்னே......என்பொடு தடிபடு வழியெல்லாம் எமக்கீயும் மன்னே'' என்று கையறுநிலை பாடிய ஔவையாரும், ''நோன்பென் பதுவே கொன்று தின் னாமை'', ''புலையும் கொலையும் களவும் தவிர்'' என்று கொன்றை வேந்தனில் அறவுரை பகர்ந்த ஔவையாரும் ஒருவராதல் அமையாது. எட்டுத் தொகை பத்துப் பாட்டுக்களில் பல பாட்டுக்களை இயற்றியுள்ள கபிலர், பரணர், கல்லாடர், நக்கீரர் என்னும் சங்கத்துச் சான்றோரும், பதினோராம் திருமுறையில் சேர்க்கப் பெற்றுள்ள கயிலைபாதி காளத்தி பாதி அந்தாதி முதல் பல அந்தாதிகள் இரட்டை மணிமாலை, மும்மணிக் கோவை, ஈங்கோய்மாலை எழுபது, திருவெழு கூற்றிருக்கை, கோபப் பிரசாதம் என்னும்இவை முதலிய பதினைந்து நூல்களை இயற்றிய நக்கீர தேவர், கல்லாட தேவர், கபில தேவர், பரண தேவர் என்னும் நாயன்மார்களும் வேறு வேறு காலத்தவரேயாவர். பெயர் ஒற்றுமை கொண்டு ஒருவரேயெனக் கூறல் இயலாது. இதனை இவ் விருதிறத் தாரும் இயற்றியுள்ள பாடல்களின் சொல்நடை பொருள் அமைதி முதலியவற்றால் நன்கு அறியலாம். இவ்வாறே, பதினோராந்திருமுறையில் சேர்க்கப் பெற்றுள்ள கோயில் நான் மணிமாலை முதலாய ஐந்து நூல்களை இயற்றிய பட்டினத்துப்பிள்ளையாரும் கோயில் திரு அகவல், கச்சித் திரு அகவல், திருவேகம்ப மாலை, திருத்தில்லைமாலை, பொது, பூரணமாலை, நெஞ்சொடுபுலம்பல், நெஞ்சொடு மகிழ்தல், உடற்கூற்று வண்ணம் என்பவற்றையும் பிற தனிப்பாடல்களையும் இயற்றிய பட்டினத்தாரும் ஒருவராயிருத்தல்ஒல்லாது. இவ்விருவரும், உலக நிலையாமை, கடவுட் கொள்கை, மக்கள் கைக் கொண்டொழுகத்தகும் ஒழுக்கங்கள், அறநெறிகள் ஆகியவற்றை வற்புறுத்திக் கூறுதலில் ஒரு

தன்மையரே யெனினும் இவர்கள் பாடற்போக்கில் பெரிதும் வேறுபாடு காணப்படுகின்றது.

பட்டினத்துப் பிள்ளையார் பாடல்களில் அமைந்துள்ள உயர்ந்த சொல் நடையும் கருத்தாழமும் பின்னவராகிய பட்டினத்தார் பாடல்களில் இல்லை; உலக வழக்கிலுள்ள எளியசொற்களே பெரும்பாலும் காணப்படுகின்றன. "அன்ன விசாரம் அதுவேவிசாரம் அதுவொழிந்தால், சொன்ன விசாரம்—தொலையா விசாரம்" "பருத்திப் பொதியினைப் போல வயிறு பருக்கத் தங்கள், துருத்திக்கு அறுசுவை போடுகின்றீர்" "ஊற்றைச் சரீரத்தை ஆபாசக்கொட்டிலை ஊன் பொதிந்த பீற்றல் துருத்தியைச் சோறிடுந் தோற்பையை" என்னும் இவை போல்வனவற்றை இவரது எளிய நடைக்குச் சில எடுத்துக்காட்டாகக் கொள்ளலாம். மேலும் "வாய் நாறுங் கூந்தல் மயிர்ச்சிக்கு நாறிடும்", "கைப்பிடி நாயகன் தூங்கையிலே" என்ற பாடல்களிலும், பிற செய்யுட்களிலும் மகளிர் உடலுறுப்புக்களையும் ஒழுக்கத்தையும் கேட்டோர் அருவருக்குமாறு வெளிப்படையாக இவர் கூறியிருப்பது போல் முன்னவராகிய பட்டினத்துப் பிள்ளையார் யாண்டும் கூறவில்லை.

கோயில் நான்மணி மாலை 28-ஆம் செய்யுளில், "கண்டனமறையும் உண்டன மலமாம், பூசின மாசாம் புணர்ந்தன பிரியும், நிறைந்தன குறையும்,உயர்ந்தன பணியும், பிறந்தன இறக்கும் பெரியன சிறுக்கும், ஒன்றொன் றொரு வழி நில்லா" என்று கூறப்பட்டிருப்பவை, பின்னவர் பாடிய கோயில் திரு அகவல் முதற்பாட்டில், "பிறந்தன இறக்கும் இறந்தன பிறக்கும், தோன்றின மறையும் மறைந்தன தோன்றும், பெருத்தன சிறுக்கும் சிறுத்தன பெருக்கும், உணர்ந்தன மறக்கும் மறந்தன உணரும், புணர்ந்தன பிரியும் பிரிந்தன புணரும், அருந்தின மலமாம் புனைந்தன அழுக்காம்" என்றவாறு சிறிது விரித்தும் விகற்பித்தும் கூறப்படுகின்றன.

திருக்கழுமல மும்மணிக்கோவை 7-ஆம் செய்யுளில், "யாரும் யாவையும்எனக்குத்தனித் தனித் தாயராகியும் தந்தையராகியும் வந்திலாதவர் இல்லை யான் அவர், தந்தையராகியும் தாயராகியும் வந்திலாததும் இல்லை முந்து, பிறவா நிலனும் இல்லை அவ்வயின், இறவா நிலனும் இல்லை பிறிதில், என்னைத் தின்னா உயிர்களும் இல்லை யான் அவை, தம்மைத் தின்னா தொழிந்ததும் இல்லை அனைத்தே காலமும் சென்றது." என முன்னவர் கூறியிருப்பவற்றைச் சுருக்கி "பிறந்தன பிறந்தன பிறவிகள் தோறும், கொன்றனை யனைத்தும் அனைத்தும் நினைக் கொன்றன தின்றனை யனைத்தும் அனைத்தும் நினைத் தின்றன, பெற்றனை யனைத்தும் அனைத்து நினைப் பெற்றன"என்று கோயில் திரு அகவலில் பின்னவர் கூறியுள்ளார். இவ்வாறாக இன்னும் பலவுள.

இவ்வெல் லாவற்றையும் நோக்கும்போது பட்டினத்துப் பிள்ளையார் வாழ்ந்து பலநூற்றாண்டுகள் கழிந்த பின்னர்க் காவிரிப்பூம்பட்டினத்திற் பிறந்து வாழ்ந்து துறவு பூண்ட பெரியார் ஒருவர், கற்றவரும் மற்றவரும் விரும்பிக் கற்கும் வண்ணம் தம் உள்ளக்கிடக்கையை எளிய பாடல்களாக வெளியிட்டிருக்கலாம். அவற்றையறிந்த மக்கள் இவரையும் நன்கு மதித்துப் பட்டினத்தார் எனவும், பட்டினத்து அடிகள் எனவும் அழைத்திருத்தல் கூடும். இவ்விருவர் வாழ்க்கையில் நடத்த நிகழ்ச்சிகளையும், பிற வரலாற்றுக் குறிப்புக்களையும் அக்காலத்தார் வேறு வேறாக நன்கு அறிந்திருப்பர். ஆயினும் காலம் செல்லச் செல்லச் செவி வழியாகக் கேட்கப் பெற்று வரும் செய்திகளால் உண்மையான நிகழ்ச்சிகள் மறைந்தும் மறந்தும் போயின. எனவே, இருவரையும் ஒருவராக்கி இருவர் வாழ்க்கை வரலாறுகளையும் பின்னிப் பிணைத்துக் கற்பனைகளையும் கலந்து பிற்காலத்தார் புராணங்கள் இயற்றினர் எனத் தெரிகிறது.

இப்போது நமக்கு கிடைத்திருக்கும் பட்டினத்தாரைப் பற்றிய வரலாற்றுக் குறிப்புகளில் முன்னவர்க்கு உரியன இவை. பின்னவரைச் சார்ந்தன இவையெனப் பிரித்தறிதல் எளிதான செயல் அன்று. இதற்குத் தகுந்த சான்றுகள் வேண்டும். தாயின் சிதையில் தீ மூட்டுங்கால் பட்டினத்தார் கூறியனவாக வழங்கிவரும் பல பாடல்கள், இவ்விருவருள் யாரால் இயற்றப் பெற்றன எனவும் அறிய முடியவில்லை. எனினும், பட்டினத்தார் இருவர் இருந்தனர் என்பதும் பதினோராந்திருமுறை தொகுத்த காலத்துக்கு மிக முற்பட்டவர் பட்டினத்துப் பிள்ளையார் என்பதும், பின்னவராகிய பட்டினத்

தார் சில நூற்றுண்டுகளேனும் பிற்பட்டவராதல் வேண்டும் என்பதும் உறுதி. பின்னவர் பாடல்கள் பதினோராந்திருமுறையில் சேர்க்கப் பெருமையே இதனை வலியுறுத்தும். பின்னவர் பாடல்கள் பொதுமக்களிடைப் பரவிய அளவு, முன்னவர் பாடல்கள் பரவவில்லை. இதற்குக் காரணம் முறையே எளிய நடையில் அமைந்திருத்தலும், ஏறுநடை போன்ற உயர்ந்த நடையிற் சேரலுமேயாகும்.

இனி, முன்னவராகிய பட்டினத்துப் பிள்ளையார் இயற்றிய நூல்களிலிருந்து சில பாடல்களின் சிறப்பியல்புகளை இங்கே காண்போம். ஒருவர் தம் மனமொழிமெய்களால் பல ஆண்டுகள் அழுந்தியறிந்த எண்ணமும் சொல்லும் செயலுமே அவருடைய பேச்சிலும் எழுத்திலும் பயின்று வருதல் இயல்பாகும். அம்முறை பற்றி இவர் பாடல்களின் வாயிலாகச் சில உண்மைகளை உணரலாம்.

### மன்னவர் மதிக்கும் வளமிகப் படைத்தவர்

பேரரசன் ஒருவனை அவன் தேவியுடன் தம் இல்லத்திற்கு வருமாறு அழைப்பார் ஒருவர் அவ்வரசனும் அரசியும் வந்து தங்குதற்கு ஏற்றதோர் இடத்தை பல்லாற்றுலும் தூய்மை செய்து நன்னீர் தெளித்து மின் விளக்கேற்றி விதானங்கள் புனைந்து விரிந்த அறையும் சிறந்த இருக்கைகளும் அமைத்துக் கொண்டு அழைத்தல் உலகியலிற் காணப்படுவது. அவ்வாறே தேவ தேவனாகிய சிவபிரானை உமையம்மையுடன் தமது அகத்திற்கு வருமாறு அழைக்கின்ற இவர், தாம் முன்னேற்பாடாகச் செய்துள்ள செயல்களையும் அவ்விறைவனிடம் எடுத்துக் கூறி அழைக்கின்றார்.

தாயினுடைய கருவில் தங்கிய நாள் முதல் கீழான எண்ணங்களால் பாழ்ப்பட்டிருந்தது என் சிந்தையாகிய அறை. அதில் இடையறவின்றிக் கிடந்த காமம் வெகுளி பொய்யென்னும் குப்பைகளைப் போக்கினேன். அங்குக் கட்டப்பெற்று ஒன்றோடொன்று சினந்து மோதிக் கொண்டிருந்த ஐம்புலன்களாகிய எருமைக்கடாக்களைக் கட்டவிழ்த்துத் துரத்தினேன். பின்னர் அன்பென்னும் நீரால் மெழுகித் துன்ப இருள் நீங்குமாறு அருள் விளக்கேற்றி, மெய்ம்மையெனும் விதானம் விரித்து, நீ தங்குதற்கேற்ற பள்ளியறையாக்கி, அதன்கண் உள்ளத் தாமரையாகிய பூந்தவிசும் இட்டிருக்கிறேன். அதனால் செல்வச் சிலம்பு மெல்லென மிழற்ற, அமையாக் காட்சி இமையக் கொழுந்துடன், எழுந்தருளத்தகும் எம்பெருமானே என அழைக்கின்றார். (திருக்கழுமல மும்மணிக்கோவை—செய்யுள்–4) இதனால், இவர் துறவு மேற்கொள்ளுமுன் நாடாளும் மன்னர் போன்ற பெருந்தலைவர்களைத் தம் இடத்திற்கு வரவழைத்து உபசரித்த பெருந்தகைமையாளராயிருந்தனர் என்பது அறியப்படும்.

### இல்லறத்தின் ஏற்றமும், திருவைந்தெழுத்தின் சிறப்பும்

மலர்தலையுலகத்து வாழும் பலர், மக்களை மனைவியை ஒக்கலை நீங்கி, நெடுநிலை மாடம் முதலிய செல்வங்களைத் துறந்து, காடு மலைகளிற் புகுந்து, கோடைநாளில் ஐவகைத் தீயின் நடுவில் நின்றும், மாரிக்காலத்தும் பனிக்காலத்தும் நீரில் மூழ்கியும், சடையைப் புனைந்தும், தலையைப் பறித்தும், உடையைத் துறந்தும் உண்ணாது உழன்றும், காயும் கிழங்கும் கனியும் சருகும் காற்றும் நீரும் அருந்தியும், களரிலும் கல்லிலும் கண்படை கொண்டும், உடம்பை வருத்தி, மறுமையில் இன்பம் பெறுதற் பொருட்டு இம்மையில் தம்மைத் தாமே ஒறுத்துக் கொள்வர். யாங்கள் இவ்வாறு செய்யாமல், பழுதின்றி உயர்ந்த எழுநிலை மாடத்தும் செந்தாது உதிர்ந்த நந்தவனத்தும் தென்றல் இயங்கும் முன்றிலகத்தும், ஓவிய மண்டபத்தும் வாவிக்கரையிலும் வேண்டியதோர் இடத்து, யானை மருப்பால் இயன்ற சிங்கஞ் சுமந்த கட்டிலின் மீது இடப்பட்ட ஐவகை அமளியில், மலர் மணங்கமழும் வெண்மடி விரித்துப் பட்டாலியன்ற நெட்டணை சேர்த்த படுக்கையின்கண், அஞ்சொல் மகளிர் ஆகந்தோய்ந்தும், அறுசுவையடிசில் சிறிதே அருந்தியும், ஆடிவந்தோர்க்கும் பாடிவந்தோர்க்கும் வாடி நின்றோர்க்கும் வரையாது கொடுத்தும், பூசுவன பூசியும், புனைவன புனைந்தும், ஐம்புல இன்பமும் ஆரத் துய்த்து, மைந்தரும் சுற்றமும் மனமகிழ்ந்தோங்கச் செல்வச் செழிப்புடன் நல்வாழ்வு நடாத்தினேம். ஆயினும், திருவைந்தெழுந்தை மறவாது ஓதிச் சிந்தையை நின்

யாற் செலுத்தினேம் ஆகலின், இம்மை மறுமை வீடென்னும் மும்மையின்பமும் முறையாகப் பெற்றேம். இஃது எதுபோலும் எனின், உடல் வலியுடையான் வானத்தில் ஓங்கி வீசிய கல்லும், வலியில்லாதான் எளிதின் எடுத்தெறிந்த கல்லும் நிலத்தில் வந்து வீழ்தல் தப்பாதவாறு போலும். எனவே, நின் திருவைந்தெழுந்தை ஓதுபவர் நலத்தின் நீங்கார். எனத் திருவிடைமருதூர் மும்மணிக்கோவையில் 19-ஆம் செய்யுளிற் கூறியுள்ளார்.

இதனுல் இவர், பெருஞ்செல்வக் குடும்பத்திலிருந்து பேரின்ப வாழ்வு நடத்தியவர் என்பதும், அந்நிலையினும் இறைவழிபாட்டிற் சிறிதும் வழுவாதவர் என்பதும் தெரிகின்றன அன்ருே! இப்பாட்டு, "அறத்தாற்றின் இல்வாழ்க்கை யாற்றில் புறத்தாற்றில் போஒய்ப் பெறுவது எவன்" என்ற திருவள்ளுவர் கருத்திற்குச் சிறந்ததோர் எடுத்துக் காட்டாகவும் திகழ்கின்றது.

### மரக்கல வணிகர்

மாயம் என்னும் பெயர் பெற்ற இவ்வுடம்பாகிய மரக்கலம் பேதைமையும் பொய்யும் பிணிக் கூட்டமும் துன்ப ஈட்டமுமாகிய பல சரக்குகளை ஏற்றிக் கொண்டு, ஊழ்வினையென்னும் மீகாமன் செலுத்தத், தாயின் கருப்பையென்னும் மூதூரினின்றும் நீத்தமாகிய ஒரு துறையின் வழியே, பிறப்பென்னும் பெருங்கடலிற் செல்லப் புறப்பட்டது. அப்போது, ஐம்புலன்களாகிய சுறு மீன்கள் அல்லற்படுத்த, அடுத்தடுத்து வரும் துயரமாகிய பேரலைகளினூடே யகப்பட்டுத், தான் செல்லும் இடம் அறியாது திகைத்து குடும்பம் என்னும் நங்கூரம் இடப்பட்டு நிற்கின்றது. இந்நிலையில் இம்மரக்கலம் நிறையென்னும் பாய்மரம் முறிய அறிவென்னும் பாய் கிழியச் சிதைந்து கவிழ்ந்து போவதற்கு முன்பே, தில்லையம்பலவாண, நின் திருவருள் என்னும் நல்ல சங்கிலியைப் பூட்டி யிழுத்துத் திருவடியாகிய நெடுங்கரையிற் சேர்த்துவாயாக," என்று கோயில் நான்மணிமாலை 16-ஆம் செய்யுளில் தில்லைக் கூத்தப்பிரானை வேண்டுகின்ருர். பிறவித் துன்பங்களை இவ்வாறு உருவகித்துக் கூறியிருப்பினும், இவர் தமக்கென உரிய மரக்கலங்கொண்டு வணிகத் தொழில் நடத்தியவர் என்பதை இப்பாட்டு நன்கு தெரிவிக்கின்றது.

### தலைவனையறிந்தால் தன்னை அறியலாம்

காணப்படும் இவ்வுடம்பின்கண், யான் யார்? என்னும் ஆராய்ச்சியில் தலைப்பட்டு, உடம்பிலுள்ள உரோமமோ தோலோ புலாலோ செந்நீரோ எலும்போ மூளையோ, நிணமோ புழுவோ மலமோ நரம்போ பிணிக்கூட்டமோ என்று ஒவ்வொன்றையும் துருவித்துருவித் தேடினேன். இவற்றுள் எதன்கண்ணும் என்னைக்கண்டேனில்லை. மங்கைபங்க, கங்கை நாயக நின் தெய்வத் திருவருள் கைவந்து கிடைத்தமையால் மாயப்படலங் கீறித் தூய ஞான நாட்டம் பெற்றேன். பெற்றபின். நின் பெருந்தன்மையும் கண்டேன் என்னையும் கண்டேன். பிறரையும் கண்டேன். நின்னிலையனைத்தையும்கண்டேன். எனவே, நின்னைக் காணுமாந்தர் தம்மையுங் காணுதவரேயாவர் என்று திருவிடைமருதூர் மும்மணிக்கோவை 13-ஆம் செய்யுளிற் கூறியுள்ளார்.

சிவஞானபோதம் ஒன்பதாம் நூற்பாவில், "ஊனக் கண் பாசம் உணராப் பதியை ஞானக் கண்ணினிற் சிந்தை நாடி" என்னும் முதற் பகுதியும், அதற்கு எடுத்துக் காட்டாய 'நாடியோ என்போ நரம்புசீக் கோழையோ தேடி யெனையறியேன் தேர்ந்தவகை நாடியரன் தன்னாலே தன்னையுங் கண்டு தமைக்காணுர் என்னும் என அறிவார் இன்று" என்னும் வெண்பாவும் இக்கருத்தை வலியுறுத்தும்.

### உலகமும் கடவுளும் ஒருங்கு புலப்படா

புகலிநாயக, இகல்விடைப் பாக மறந்து நோக்கும் என் புல்லிய அறிவு கொண்டு நின்னைக் காணத் தொடங்கினேன். நீ யாண்டும் நிறைந்துள்ளா யாயினும் நின்னைக் கண்டேனில்லை. தோற்றக் கேடுகள் உடையனவாய்ப் போதல் வருதல்களைப் புரியும் பலகோடி உலகத்தையே கண்டேன். அது, கட்புலன் தெரியாது தடுமாறும் ஒருவனுக்குக் குழி வழியாகி வழி குழியாகத் தோன்றுதல் போன்று காணப்பட்டது. நின் திருவருள் நாட்டம் கருணையிற் பெற்றபின், அவ்வுலகமெல்லாம் பொய்ப் பொருளாய்ப் புலப்படாமல் போயின. நீ மட்டுமே மெய்ப்பொருளாக விளங்கித் தோன்றினை. இச்செயல், கையெழுதுமாறு வல்லான் ஒருவன் எழில் பெற எழுதிய ஓவியங்கள், காடு நாடு கடல் மலை முதலிய பொருள்களாகக் காணப்பட்

டாலும் கையால் தடவிப் பார்த்தவர்க்கு அவற்றுள் ஒன்றும் இன்றி வெறும் சுவராய்த் தோன்றுதல் போல்வதாயிற்று என்று திருக்கழுமல மும்மணிக்கோவை 10-ஆம் செய்யுளிற் கூறியுள்ளார்.

இது, உயிரறிவு முனைத்துத் தோன்றுங்கால் கடவுள் தோன்றாது; திருவடி ஞானத்தால் கடவுள் முனைத்துத் தோன்றுங்கால் உலகந் தோன்றாது எனும் உண்மையை உணர்த்தியதாகும். இக்கருத்து, "பரத்தை மறைத்தது பார்முதல் பூதம் பரத்துள் மறைந்தது பார்முதற் பூதம்" எனத் திருமந்திரத்தும் காணப்படுதல் இங்கு நினைக்கத்தகும்.

### சிவன் அருள் பெருமை தீவினைப் பாலதே

அறுசுவை அடிசில் அட்டு இனிது இருப்ப, அதனை ஒருவன் அருந்தாது பசியால் வருந்துதல் அவ் அடிசிலின் குற்றமன்று. வெயிலில் வைத்து ஆற்றி நறுமணம் ஊட்டப் பெற்றுத் தெளிந்த நன்னீர் இருப்ப, அதனைப் பருகாமல் ஒருவன் நீர் வேட்கையால் வருந்துதல் அந் நீரின் குற்றமன்று. தேன்துளி சிதறிப் பூங் கொத்துக்கள் நெருங்கி நுண்ணிய மணற்பரப்புடைய தண்ணிய சோலை நிழல் இருப்ப, அதன் கட் செல்லாது ஒருவன் வெயர்வை உண்டாக வெயிலிற் சென்று வருந்துதல் அந் நிழலின் குற்றமன்று. இவைபோல, அருட் பெருங் கடலாகிய நின்னை நினைந்தால், எண்ணற்ற இடர்ப்பகைகளைக் களைந்து காலனை வென்று இறப்பையும் பிறப்பையும் கடந்து சிறப்போடு காமதேனுவின் கன்றெனக் களித்துத் திரியலாம். அங்ஙனம் திரிய முயலாது இறந்தும் பிறந்தும் வருந்துதல் பாவிகள் குற்றமேயன்றி நின் குற்றமன்று எனத் திருவிடைமருதூர் மும்மணிக்கோவை 16-ஆம் செய்யுளில் இறைவனது பேரருள் திறத்தை இனிது விளக்கியுள்ளார்.

### உமையொருபாகனைக் கண்டு உளம் உருகல்

திருவிடைமருதூர் மும்மணிக் கோவையில் 'தெய்வத் தாமரை' என்று தொடங்கும் முதற் செய்யுளில், சிவபிரான் உமையொரு கூறனாயிருக்கும் தோற்றத்தினை, அமுததாரை போன்ற அழகிய சொற்களால் ஓவியமாகத் தீட்டிக் காட்டியிருக்கும் திறம் படித்துப் படித்துச் சுவைத்துப் பயன் பெறத்தக்கதொன்றாகும். அதன்கண், இறந்தும் பிறந்தும் இளைத்தனம். இனி மறந்தேனும் கருப்பையில் மறித்தும் புகுதாத வாழ்வு பெறற்பொருட்டு நின் திருவடி பரவுதும் என அம்மையப்பரை வேண்டுதல் செய்திருப்பது கல் நெஞ்சையும் உருக்குவதாகும்.

### இறையடி சேர்தற்கு எளியதோர் வழி இது

இறைவனது திருவடித் தாமரையைச் சேர்தற்கு எல்லோரும் மேற் கொள்ளும் எளிய உபாயமாக "போதும் பெறுவிடில் பச்சிலையுண்டு புனலுண்டு எங்கும், ஏதும் பெறுவிடில் நெஞ்சு உண்டன்றே" என அருளிச் செய்திருப்பது நம்மாட்டுவைத்த பெருங்கருணையாலேயாம்.

இதுகாறுங் கூறியவற்றால், பட்டினத்து அடிகள் என்று கூறப்பெறுவோர் இருவர் இருந்தனர்; அவருள் முன்னவராகிய பட்டினத்துப் பிள்ளையார் மரக்கல வணிகத்தால் பெரும் பொருள் ஈட்டியவர்; அது கொண்டு ஈதலும் துய்த்தலும் செய்தவர்; இறையன்பின் வழுவாது இல்லறம் நடத்தியவர்; மன்னவர் போன்ற பெருந்தலைவர்களை வரவேற்று மகிழ்வித்த மாண்பு மிக்கவர்; எனினும், அத்தனை செல்வங்களையும் அறவே துறந்து அருள் நெறியாகிய சிவநெறியில் அழுந்தி நின்றவர்; பதி ஞானத்தாலன்றி இறைவனையும் தன்னையும் உணர்தல் இயலாது. உயிரறிவு முனைத்துத் தோன்றுங்கால் கடவுளையும், கடவுள் முனைத்துத் தோன்றுங்கால் உலகத்தையும் காண முடியாது என்ற சைவ நுண் கருத்துக்களை அழகுற விளக்கியவர்; அருள் வள்ளலாகிய சிவபிரானைச் சார்ந்து பேரின்பம் துய்க்கப் பெறாமை பாவிகள் குற்றமேயாம் என உணர்த்தியவர்; அம்மையப்பரது திருவுருவக் காட்சியில் ஆராக் காதலுடன் ஈடுபாடு உடையவர்; இறைவன் திருவடி சேர்தற்கு அவனை நினைத்தல் ஒன்றே போதும் என்ற எளிய உபாயத்தை நமக்கு அறிவுறுத்தியவர். என்னும் இவையும் பிறவும் நன்கு அறியப்படும். இன்னும் அரும்பெறல் மணி போன்ற அரிய நுண் கருத்துக்கள் பலவற்றை இவர் இயற்றியுள்ள நூல்களின் வாயிலாக அறிந்து கடைப்பிடித்தொழுகி உய்தி பெறுவோமாக.

# காரைக்கால் அம்மையார்

சிவத்திரு மாணிக்கவாசகஞானதேசிக சுவாமிகள்
சிவராஜயோகமடம்
காவிரிப்பூம்பட்டினம் மேலையூர்

கோவலன் – கண்ணகி - இயற்பகையார் - பட்டினத்தார் என்ற இவர்கள் அனைவரும் பூம்புகார் நகரத்தில் தோன்றியவர்கள். இவர்கள் நகரத்தார் மரபினைச் சேர்ந்தவர்கள் எனக் கருதுவதில் தவறொன்றும் இல்லை. செல்வச் செழுமைக்கும் சிவபத்திக்கும் ஈடு எடுப்பற்ற பெருமரபு ஒன்று உண்டு என்றால் அது நகரத்தார் மரபினையே குறிப்பதாகும். அம்மரபினர் செய்த புண்ணியமெல்லாம் திரண்டு ஒருருவாகத் தோன்றியது போல அம்மையார் காரைக்காலில் தோன்றினார்கள். சைவ சமயத் திருத்தொண்டர் அறுபத்து மூவருள் அம்மையாரும் ஒருவராவர்.

தஞ்சை மாவட்டத்தில் உள்ள கடற்கரை நகரமாகிய காரைக்காலில் தோன்றிய அம்மையார் இளமையிலேயே சிவபத்தி அடியார் பத்தியிற் சிறந்து விளங்கினார்கள். செல்வத்தால் செழித்த குடும்பத்தில் தோன்றிய அம்மையார் புனிதவதியார் என்னும் பிள்ளைத் திருநாமத்தோடு வளர்ந்து மணப் பருவத்தை அடைந்தார். அம்மையாரைப் பெற்றெடுத்த பெரியோர்கள் அக்கால வழக்கப்படி தக்கதொரு மைந்தனைத் தேடி மணம் முடித்து வைத்தார்கள். அம்மைந்தனோ தெய்வத்தைப் பற்றியோ திருவருளைப் பற்றியோ ஏதும் சிந்தித்தறியாதவனாக இருந்தான். ஆனால் புனிதவதியாரிடத்திலிருந்து சிவபத்தி நாளுக்குநாள் முதிர்ந்து வளர்வதாயிற்று.

ஒருநாள் கடைக்கு வந்த நண்பர்கள் இரண்டு மாம்பழங்களை அவ்வணிக மைந்தனிடம் கொடுத்தார்கள். அப்பழங்களை வீட்டுக்கு அனுப்பி வைத்தான் அவ்வணிகன். அப்போது முதிர்ந்த வயதினரான சிவனடியார் ஒருவர் மிகுந்த பசியோடு களைத்து வந்து சேர்ந்தார். அவரைக் கண்டதுமே அம்மையார் மிகுந்த பரிவோடு வரவேற்று முகமன் கூறி வீட்டில் சமையலாகியிருந்த திருஅமுதையும் மோரோடு சேர்த்துப் படைத்து மாம்பழங்களில் ஒன்றையும் உண்ணக் கொடுத்துப் பசி தீர்த்தார். வந்த முதியவர் பசி தீர்ந்த மகிழ்ச்சியோடு அம்மையாரை வாழ்த்தி விட்டுப் போனார்.

நண்பகலில் கடையிலிருந்து மனையகம் வந்த வணிகன் நீராடி உணவு கொண்டான். உணவு படைக்கும்போது எஞ்சியிருந்த மாம்பழம் ஒன்றையும் அம்மையார் இலையில் படைத்தார். அதனை உண்டு மகிழ்ந்தவன் 'இன்னொரு மாம்பழத்தையும் கொண்டு வா' எனக் கேட்டான். அந்த மாங்கனியைச் சிவனடியாருக்குப் படைத்ததனை வணிகனிடம் சொல்லவும் மனம் இல்லை. மாங்கனியும் கையிலில்லை. இந்நிலையில் என்ன செய்வது என்று மனம் கலங்கிய அம்மையார் மெய்ம்மறந்து நின்று இறைவன் திருவருளைச் சிந்தித்தார். இறைவன் அங்கொரு மாங்கனியைத் தோற்றுவித்தான். கடவுள் காப்பாற்றினார் என்ற மகிழ்ச்சியோடு அம்மாங்கனியைக் கொண்டு வந்து பரிகலத்தில் படைத்தார். அதனைச் சுவைத்து உண்ட வணிகன் அப்பழம் இவ்வுலகத்து மாம்பழங்களில் எல்லாம் இல்லாத ஓர் அதிசயமான சுவையுடையதாக உணர்ந்தான். அதனால் அம்மையாரை நோக்கி,

... ... ... மற்றிதுதான்
முற்றருமாங் கனியன்று
மூவுலகில் பெறற்கரிதால்
பெற்றதுவே றெங்கென்று''

வினவினான். இப்போது அம்மையாருடைய நிலை முன்னையினும் சங்கடமாகி விட்டது. இறைவனருளால் மாங்கனி கிடைத்த விவரத்தை வெளியிடுதல் கூடாது. சொன்னாலும் அவன் அதனைப் புரிந்து கொள்ள மாட்டான். கற்பு நெறியில் நிற்கின்றவள் கணவனிடத்தில் பொய் சொல்லுதல் கூடாது. இப்படிப்பட்ட நிலையில் என்ன செய்வது என்று மனம் திகைத்து ஒரு கணம் அம்மையார் செய்வதறியாது நின்றார். இதற்குள் வணிகன் மீண்டும் "எய்த அரும் கனி அளித்தார் யார்'' என்று கடுமையாக வினவினான்.

ஒருவாறு அம்மையாரும் மனம் துணிந்து நடந்த விவரத்தைத் தெரிவித்தார். வணிகன் அதனைக் கேட்டு அவர் மொழியில் நம்பிக்கை ஒரு புறமும் சந்தேகம் ஒரு புறமுமாக மனம் மயங்கி மீண்டும் அம்மையாரைப் பார்த்து,

... ... ... "மற்றிது தான்
தேசுடைய சடைப்பெருமான்
திருவருளே லின்னமுமோர்
ஆசில்கனி அவனருளா லழைத்தளிப்பாய்''

எனக் கட்டளையிட்டான். என்ன செய்வார் அம்மையார்! இறைவனையே சிந்தித்து,

" ஈங்கிது அளித் தருளீரேல்
என்னுரை பொய்யாம்''

என்று வேண்டினார். மாங்கனியும் வந்தது. அதனைக் கொண்டு வந்து வணிகனிடம் கொடுத்தார். அவன் கையில் வாங்கியதும் மறுகணமே அக்கனி மறைந்தது. சோதனைக் காகத்தானே மாங்கனி கேட்டான். முன்பு உண்பதற்காகக் கேட்டான். உண்ணக் கிடைத்தது அக்கனி. இப்போது சோதனைக்காகக் காட்சி தந்தது. இவ்வளவு தொந்தரவும் கொடுத்த பின்னர் அம்மையாரிடம் ஏதோ தெய்வீகம் இருப்பது உண்மையெனத் தெளிந்து கொண்டான் அவ்வணிகன். ஆதலால் அம்மையாரைத் தனது மனைவியாக நடத்த அவன் மனம் துணியவில்லை. எப்படிப் பிரிந்து போவது என்று சரியான சமயம் பார்த்துக் கொண்டு நீண்ட நாட்கள் காத்திருந்தான். தங்கள் மரபின் கடமைக்கேற்பக் கடல் கடந்து வாணிப நிமித்தம் போவதற்கு ஏற்பாடு செய்து வெளிநாடு சென்ற அவ்வணிகன் திரும்பிக் காரைக்காலுக்கு வராமல் மதுரை மாநகரம் சென்று தங்கி விட்டான். தங்கியதோடல்லாமல் அங்கே ஒரு பெண்ணை மணந்து கொண்டு ஒரு பெண் மகவையும் ஈன்றெடுத்தான். தான் முதலில் மணந்து கொண்ட அம்மையாரிடம் தனக்குள்ள பெருமதிப்பிற்கு அடையாளமாக இப்பெண் குழந்தைக்குப் புனிதவதி என்றே பெயரும் வைத்தான்.

அம்மையாரின் பெற்றோர்கட்கு நாளடைவில் மதுரையில் இவன் தங்கி வாழ்க்கை நடத்தும் விவரம் எல்லாம் தெரியவந்தது. உடனே அம்மையாரை அழைத்துக்கொண்டு மதுரைக்குச் சென்றார்கள். இவர்கள் வரும் விவரத்தை அறிந்து கொண்ட அவ்வணிகன், தனது இரண்டாவது மனைவியோடும் பெண் குழந்தையோடும் வந்து அம்மையாரை வணங்கி எழுந்து நின்றான். பெற்றோர்கள் ஒன்றும் புரியாமல் திகைத்து நின்றார்கள். அப்போது,

... ... ... மானுடம் இவர்தாம் அல்லர்
நற்பெரும் தெய்வமாதல்
நானறிந் தகன்ற பின்பு
பெற்றஇம் மகவு தன்னைப்
பேரிட் டேன தலாலே
பொற்பதம் பணிந்தேன் நீரும்
போற்றுதல் புரிமின்''

என்று கூறினான். அம்மையார் சிவபெருமான் திருவடிகளைச் சிந்தித்தார். "இறைவனே, இவனுக்காக இந்தத் தசைப் பொதியாகிய என் உடம்பினை இதுகாறும் சுமந்து வந்தேன். இவன் மனம் மாறிவிட்டான். இனி எனக்கு அழகு பொருந்திய இவ்வுடம்பு வேண்டுவதில்லை. உனது திருவடிகளைப் போற்றி வணங்க எலும்பு உருவமே எனக்குப் போதியது'' என்று அம்மையார் மனமுருகி நின்று வேண்டினார். வேண்டுவார் வேண்டுவதே ஈயும் பெருமான் அவ்வாறே அருள, வானமும் மண்ணுமெல்லாம் வணங்கத்தக்க பேய் வடி

## ஈப்போ விசாகத் திருவிழா

ஈப்போ, நாட்டுக்கோட்டைச் செட்டியார்களால் கட்டப்பட்டது தண்டாயுதபாணி கோயில். இக்கோயில் 1904-ம் ஆண்டில் நிறுவப்பெற்றது. இதில் நகரத்தார்கள் வைகாசி விசாகத்தன்று விழா நடத்துகிறார்கள். இவ்விழாவை ஆரம்பித்த அன்று முதல் 3 நாள் வரை பக்தர்களுக்கு அன்னமளிக்கப்பெறும். விசாகத்தன்று வேலன் இரதமேறிப் பவனி வருவான். அன்று மாலையும் மறுநாளும் ஆலயத்துக்கு ஏராள மான ஆங்கிலேயர்களும் உத்தியோகஸ்தர்களும் வந்து கண்டு களிப்பர். அவ் விழாவை நகரத்தார் மற்ற ஊர்களிற் போலவே கொண்டாடுவார்கள். இதற்கு அயலூர் களில் இருந்து பலரும் வருவார்கள். இவ்விழாவை நடத்தும் இவர்களால் ஆலயத்துக்கு அண்மையில் நகரத்தாருக்குச் சொந்தமாக உள்ள பங்களாவில் தமிழ்க் கல்வி நிலையம் ஒன்று நிறுவப் பெற்றிருக்கிறது. இதில் இலவசமாகக் கல்வி போதிக்கப் பெறுவதால் பல மாணவர்கள் படிக்கிறார்கள். இப்பள்ளிக்கூடத்தை நகரத்தார் மிகச் சிரத்தையோடு நடத்துவது போற்றக் கூடியவைகளில் ஒன்று.

—சுங்குரும்பை திரு. பெ. நா. மு. முத்துப்பழநியப்ப செட்டியார், ஜே. பி.
அவர்கள் இயற்றிய ‘மலாயாவின் தோற்றம்’ பக். 239.

வத்தை அம்மையார் பெற்றார். ஞானப் பேரூற்று அம்மையார் திருவுள்ளத்தினின்றும் பொங்கியெழுந்தது. அப்பேரூற்று அற்புதத் திருவந்தாதி என்ற பெயரோடு இனிய செந் தமிழ்த் தோத்திர மாலையாகி இறைவனருட் புகழை விளக்குவதாயிற்று.

இவ்வாறு என்புக் கோலத்தோடு அம்மை யார் மதுரையிலிருந்து நடந்து கயிலைக்குச் செல்கிறார். என்பு வடிவம் ஒன்று தலையால் நடந்து செல்லுவதைக் கண்ட உலக மாந்தர் சிலர் அஞ்சி ஓடினர். சிலர் ஏளனமாக வார்த்தை கூறினார்கள். அம்மையார்,

“ அண்டர்தம் பிரானு ரென்னை
அறிவரே லறியா வாய்மை
எண்டிசை மாக்களுக் கியான்
எவ்வுருவாய் என்”

என்று இறைவன் தன்னை ஏற்றுக் கொண்ட பெருமையையே நினைந்து மகிழ்ச்சியோடும் சென்றார். கைலை மாமலையும் நெருங்கி வந்தது. மலையேறி பெருமான் வீற்றிருக்கும் கரத்திற்கு நெருங்கிச் செல்லும்போது அம்பிகையின் திருக் கண் பார்வை என்புக் கோலத்தின்மீது விழு கின்றது. அம்பிகையும் இறைவனைப் பார்த்து என்புக் கோலம் ஒன்று தலையால் நடந்து வரு வதன் உண்மையென்ன என்று வினவினார்.

“ வரும் இவள் நம்மைப் பேணும்
அம்மைகாண் உமையே மற்றிப்
பெருமைசேர் வடிவும் வேண்டிப்
பெற்றனள் ”

என்று இறைவன் திருவாயால் அம்மை என்று எடுத்துக் கூறப் பெற்றபின் புனிதவதியார் அம்மையார் என்று அழைக்கப் பெற்றார்.

தனது சந்நிதியை வந்தடைந்த அம்மை யாரை நோக்கி, “நீ வேண்டும் வரம் யாது?” என இறைவன் வினவினார். அப்போது அம்மையார், “அழியாத இன்பத்தில் எனது

அன்பு பதியுமாறும் பிறவி ஒழியுமாறும் நீ அருள் புரியவேண்டும் எனக்கு மீண்டும் பிறவி இருக்குமானால் உன்னை மறவாதிருக்க வேண்டும். இறைவனே இன்னும் நான் வேண்டிக் கொள்வதொன்று உண்டு. அதாவது நீ ஆனந்தக் கூத்தாடும்போது நினதுதிருவடிக் கீழ்த் தங்கியிருக்கும் பெரும்பேறு பெறவேண்டும்'' என்று தனது உள்ளக் கருத்தை வெளியிட்டார். இறைவனும் அதற்கிசைந்து, ''திருவாலங் காட்டில் நமது நடனத் திருக்கோலத்தைக் கண்டு பின்னர்த் திருவடிப் பேற்றினைப் பெறுவாயாக'' என அருளிச் செய்தார்.

அவ்வாறே திருவாலங் காட்டிற்கு மீண்டும் வந்து இறைவனது திருநடனத்தைக் கண்டு மகிழ்ந்து மூத்த திருப்பதிகம் முதலிய பதிகங்களைப் பாடி இறைவன் திருவடியிற் கலந்து இறவாத இன்ப வாழ்வில் வாழ்வாராயினர். சைவத் தமிழ் ஞாலம் செய்த தவப்பயனாகத் தோன்றியவர் அம்மையார். அம்மை தலையால் மிதித்துச் சென்ற பதிபாதலால் திருவாலங் காட்டில் கால்வைத்து நடக்கலாகாது என அஞ்சித் திருஞானசம்பந்தப் பெருமானே பழையாலங் காட்டில் தங்கினர் என அவர் வரலாறு கூறுகின்றது. அம்மையாரின் பெருமைக்கு இதைவிட வேறென்ன சான்று வேண்டும்.

அம்மையார் தோன்றிய மரபு நகரத்தார் திருமரபாகும். தேவகோட்டை காரைக்குடிப் பக்கம்தான் அவர்கள் தற்காலம் வாழ்ந்து வருகிறார்கள். வெளிநாடுகளிற் சென்று பொருளீட்டுவதையும் தமிழ் நாட்டிற்கு வந்து சிவதருமங்களைப் புரிவதையும் அவர்கள் கடமையாகக் கொண்டிருப்பவர்கள். தாங்கள் ஈட்டிய உண் பொருளில் ஒரு பகுதியைச் சிவதருமத்திற்கென ஒதுக்கி விடுவதும், அத்தொகை எத்தனை இலட்சமானாலும் அதனைச் சிவதருமத்திற்கே செலவிடுவதும் அவர்களுடைய சீரிய பண்பு என்பதை உலகறியும். சோழர்கள் காலத்திற்குப்பின் பாடல்பெற்ற தலங்கள் நூற்றுக்கணக்கானவற்றைத் திருப்பணி குடமுழுக்கு விழா நிறைவேற்றியும் நித்திய வழிபாடுகட்குக் கட்டளை வைத்தும்-தேவார பாடசாலை-வேத பாடசாலை-பசுமடங்கள் நிறுவியும் கோடிக் கணக்காகச் செலவு செய்த அம்மரபினர்க்குச் சைவத் தமிழ்ஞாலம் என்றும்கடப்பாடுடையது.

காவிரிப்பூம்பட்டினம் மேலையூரில் இருக்கும் சிவராஜயோக மடம் என்ற திருத்தொண்டர் குருபூஜைமடம் சிகப்பி ஆச்சி என்ற ஒருவரால் வசூலித்துக் கொடுக்கப்பட்ட நிதியிலிருந்து தோன்றிய தாகும்.

அண்மையில் நெற்குப்பை சா. பழ. மு. சா. நாச்சம்மை ஆச்சியும் அவர்கள் மகளார் கல்யாணி ஆச்சியும், ஒரு துறவியின் சமாதி மீது கோயில்கட்டி காசியிலிருந்து இலிங்கம் கொண்டு வந்து பிரதிட்டை செய்து கும்பாபிடேகம் நிகழச் செய்தனர் என அறிகின்றோம். காஞ்சிபுரம் நாராயண சேவாஸ்ரமத்திலும் ஆச்சிமார்கள் கொடையால் பல இல்லங்கள் தோன்றியுள்ளன. எத்துணையோ கோயில்களில் ஆச்சிமார்களின் சிவபக்திப் பெருக்கின் சின்னங்கள் காணப்படுகின்றன, இவ்வாறு சிவதருமத்திற்கே தங்களை ஆட்படுத்திக் கொண்ட நகரத்தார் திருமரபு செல்வச் செழுமையாலும் சிவபக்தி மேன்மையாலும் சிறந்து நீடுவாழ்வதாக. வாழ்க காரைக்காலம்மையார் திருவடிகள்! வாழ்க சைவம்!! வாழ்க உலகெலாம்.!!!

இடர்களையா ரேனும் எமக்கிரங்கா ரேனும்
படரும் நெறிபணியா ரேனும் – சுடருருவில்
என்பருக் கோலத் தெரியாடும் யெம்மரபினர்க்(கு)
அன்பரு தென்னெஞ் சவர்க்கு

—காரைக்காலம்மையார்



# தாரகேசுவரம்

அரு. சொக்கலிங்கம்
கல்கத்தா

தாரகேசுவரம் என்பது மேற்கு வங்கத்தில் ஒரு புனிதமான சிவஸ்தலமாக மதிக்கப் படுகிறது. இது, கிழக்கு ரெயில்வே கிளைப் பாதையில் கல்கத்தாவிலிருந்து மேற்கே 36 மைல்கள் அல்லது 58 கிலோ மீட்டர் தொலை வில் உள்ளது. இதற்கு பஸ் வசதியும் மின்சார ரயில் வசதியும் உண்டு. இத்தலத்திற்கு ஒவ்வொரு நாளும் பக்தர்கள், கூட்டம் கூட்ட மாகச்சென்று வந்தாலும் சிராவண் மாதம் என்ற ஆவணி மாத முழுவதிலும் சரி, சிவராத்திரியை விசேஷமாகக் கொண்ட மாசி மாதம் முழுதி லும் சரி, சைத்ர சங்கராந்தி என்று சொல்லப் படுகின்ற சித்திரை வருடப் பிறப்பிற்கு முந்திய பங்குனி மாதம் முழுதிலும் சரி, பக்த கோடிகள் ஆயிரக்கணக்கில் சென்று வருவது வழக்கம்.

வட நாட்டில் திருவிழாவை ''மேளா'' என்று அழைப்பது கண்கூடு. சிராவண் மாத விழாவை மார்வாரிகள் விசேஷிப்பதால் அது 'மார்வாரி மேளா' வென சிறப்புப் பெயர் பெற் றுள்ளது. சைத்ர சங்கராந்தி விழாவில் ஒரு மாதம் வரை தலைக்கு எண்ணெய் இட்டுக் கொள்ளாமலும், காய்கனிகளையும், கங்கா தீர்த் தத்தையும் மட்டும் அருந்தி, அரைப் பட்டினி கிடந்து, காயாசம் உடுத்திப் பிரார்த்தனை செலுத்துவதால் அதை 'சன்னியாசி மேளா' என்றும், மாசியில் நிகழும் சிவராத்திரி விழாவை காவடி செலுத்தும் முக்கிய மேளா வாகவும் கொள்ளப் படுகின்றது.

மேலே விவரித்த மூன்று மேளாக்களைக் கொண்ட வருடத்தின் மூன்று மாதங்களிலும் சரி, மற்ற மாதங்களிலும் சரி திங்கட்கிழமையை சிவனுக்கு உகந்த நாளாகக் கொண்டு அன்று சூரிய உதயத்திலிருந்து, மறைவு வரை தண்ணீர் கூடக் குடிக்காமலிருந்து, கங் கையில் அல்லது குளத்தில் நீராடிப்பொழுது சாயும் வேளையில், பழங்களும் கங்கா தீர்த்தமும் உட்கொண்டு விரதத்தை பூர்த்தி செய்துகொள் வது 'தாரக நாதரின்' பக்தர்களுக்கு வழக்க மாக இருந்து வருகின்றது.

இத் தலத்தை வங்காளிகள் அதிகமாகச் சிறப்பிக்கிறார்கள். கல்கத்தா மக்கள் தொகைக் கேற்ப 'தாரக நாதரின்' விழாக் காலங்களில் பக்தர்களின் கூட்டமும் பெருக்கெடுத்து ஓடு வதில் வியப்பில்லை.

கல்கத்தா காளி கட்டத்திலுள்ள ஆதி கங்கை என்ற ஹூக்ளி நதி தீரத்திலுள்ள சிற் ருற்றின் நீரை இரு செம்புகளில் நிரப்பி ஒரு மூங்கில் கொம்பினால் காவடியாக அமைத்து அதைத் தோளில் தாங்கிக் கொண்டு, எங்கும் நிற்காமல் கால் நடையாகவும், விரைவாகவும் ''போலோ பம்,'' ''தாரகா பம்'' என்று சிவ நாமங்கள் அத்தனையும் சொல்லிக் கொண்டு ஒரே சிந்தனையில் திரும்பிப் பாராமல் சட்டை வேட்டியின்றி, காஷாயம் அல்லதுமஞ்சள் நீரில் துவைத்த ஒரு முண்டை மட்டும் கட்டிக் கொண்டு பாதரட்சையின்றி, வெயில், மழை என்று பாராமலும், இரவு பகல் என யோசியா மலும், ஆணும் சரி பெண்ணும் சரி தாரகேசு வரம் சென்று தாரக நாதர் என்று சொல்லப் படும் சுயம்புலிங்கத்தைத் தாங்கள் கொண்டு செல்லும் நீரால் திருமுழுக்காட்டிப் புளகாங்கி தம் அடைகின்றனர்.

காளி கட்டத்திலிருந்து தாரகேசுவரத்திற்குச் சாலைமார்க்கமாகச்சென்றால் சுமார் நாற்பத்திரண்டு மைல்கள் கடக்கவேண்டும். வயோதிகர் அல்லது சக்தி குன்றியவர்கள் 'சௌராபள்ளி' என்ற கிராமத்தில் வந்து கலக்கும் கங்கை நீரை மொண்டு காவடியில் ஏந்தித்தாரகேசுவரம் செல்வதும் உண்டு. இது தூரத்தைக் குறைக்கக் கையாளும் முறையாகும். இவ்வழி பதினாறு மைல்கள் தான் இருக்கும். காவடியைக் கொண்டு செல்பவர்கள் அதைத் தரையில் இறக்கி வைக்கக்கூடாது. நீராடிச் சுத்தமாகக் காணப்பெறும் ஒருவரின் கையில் கொடுத்து அல்லது இதற்கெனச் சாலையில் அமைக்கப் பெற்றிருக்கும் சுமைதாங்கியில் தொங்கவைத்து விட்டுத்தான் வேறு எச்செயலையும் செய்ய வேண்டும். அப்படியின்றித் தரையில் வைத்தால் காவடியில் உள்ள நீரின் புனிதத்தன்மை கெட்டு விடுவதாக ஐதீகம்.

காவடியைத்தாங்கிச்செல்லுங்காலத்திலும், அதற்கு முன்பு சில நாட்கள் விரதமாக இருக்கும் பொழுதும் இவர்கள் வழக்கம்போல் கண்ட பொருட்களையெல்லாம் உண்ணக்கூடாது. புதிய மண் பாண்டங்களில் பச்சரிசியைக் கொண்டு சோறாக்கிச் சாப்பிடலாம், பசும்பால் அல்லது பசு நெய்விட்டுக் கொள்ளலாம். கரும்புவெல்லம் சேர்த்தும் உட்கொள்ளலாம், பச்சையாகத் தின்னக்கூடிய காய்கள், பழங்கள் இவைகளை உண்ணலாம். கங்கை மண்ணை உடம்பெல்லாம் அப்பிக் கொள்வதும், சந்தனத்தை உடம்பில் பூசிக் கொள்வதும் புனிதமாகக் கருதப்படுகிறது. புது ஆடை மிகச் சிறப்பானது. கிழங்கு வகைகளும், வெங்காயம், பூண்டுவகைகளும் தள்ளத் தக்கனவாகும். தாரகேசுவரத்திற்குக் காவடி செலுத்துவதில் பாதிக்கு மேல் பெண்களே பங்கு பெறுகின்றனர். காவடி செலுத்துபவர்களில் சிறுகப் படித்தவர்களும், முரட்டு சுபாவமுள்ளவர்களும், ஆசாபாசம் மிக்குடையவர்களும், ஏழை எளியவர்களும், வாழ்க்கையில் தோல்வியையே கண்டவர்களும் வழுக்கி விழுந்தவர்களும் நிறையப் பங்கு பெறுகின்றனர். போதையுடன் பிரார்த்தனையில் கலந்து கொள்பவர்களை வட நாட்டார் வெறுப்பதில்லை.

தாரகேசுவரத்தில் தாரக நாதரின் கோவிலில் கங்கை நீரை அபிஷேகிப்பதோடு மட்டும் பிரார்த்தனை தீர்ந்து விடுவதில்லை. ஆண்களும் சரி, பெண்களும் சரி, குளத்தில் மூழ்கி எழுந்து ஈர ஆடையுடன் கோவிலைச் சுற்றி 'கும்பிடுதனம்' செலுத்தி வலம் வருவதுமுண்டு. குளத்திலிருந்து ஆரம்பித்து குளத்தில் வந்து முடியும் இந்தப் பிரார்த்தனை பல மணி நேரங்களில் முடிந்துவிடும். ஆனாலும், உடல் உழைப்பு நிறைந்தது. மற்றொரு பிரார்த்தனை இங்கு சிறப்புறத் தக்கதாகத் திகழ்கிறது. ஒரு பக்தர் எதையாகிலும் நினைத்துக்கொண்டு அதில் சித்திபெற வேண்டுமென எண்ணினால், கோவிலைச் சேர்ந்த 'மஹந்து'வின் பிரதிநிதியிடம் ஒரு ரூபாயும் ஒரு காலணாவும் செலுத்தினால் சந்நதிமுன் தவங்கிடக்க அனுமதிச் சீட்டு வழங்குகிறார். அதைப் பெற்ற பக்தர் ஆணோ, பெண்ணோ சந்நிதானத்தின் முன்னுள்ள மண்டபத்தில், நீராடிக் காவியுடை அணிந்து முதல் நாள் பால், பழம் மட்டும் அருந்தித் தவங்கிடக்க வேண்டும். அந்த நாள் சித்திக்காவிட்டால் மூன்று நாட்கள் வரையிலோ, அல்லது அவர் இச்சைப்படும் நாள் வரையிலோ எவ்வித ஆகாரமுமின்றிக் கிடக்க வேண்டிவரும். நாட் செல்லச் செல்லத் தண்ணீர் அருந்துவதைக்கூடத் தவிர்க்கும் வைராக்கிய சித்தராகி விடுகின்றார். அவர் தினம் பல தடவை நீராட வேண்டியது கட்டாயம். இப்படிக் கிடக்கும் சமயம் 'தாரகநாத்' கனவில் வந்து வேண்டிய வரத்தை அருள்கின்றார் என்பது மரபு. நாட் செல்லச் செல்லத் தவங்கிடக்கும் பக்தர் சோம்பித் துவண்டு உலகநினையற்ற நிலையைக்கூட அடைந்து விடுவதுண்டு. அந்த நிர்விகர்ப்ப நிலையில் பகவான் அவர்கள் எண்ணத்திற்குத் தக்க வரத்தை அருள்கின்றார் என்பது ஒரு பிரமையாக மாறி அது அவர்கள் மனதில் பதிந்து திருப்தியடைகின்றார்கள். அவரவர் நம்பிக்கையைப் பொறுத்து சித்தி பெற்றதாகவே திடமாக நம்புகின்றார்கள். நம்பிக்கையற்றவர்கள்கூட அவர்கள் துவண்டு கிடக்கும் இந்த யக்ஞத்தைப் பார்த்து மனம் இளகி விடுவதும் உண்டு.

குழந்தைகளும், பெரியோர்களும் 'மஹந்து' விடம் காணிக்கை செலுத்தி முடி நீக்கிக் கொள்வதும் இங்கு வழக்கமாகத் திகழ்கிறது.

மற்ருெரு விநோதப் பிரார்த்தனையும் உண்டு. குழந்தையில்லாதவர்கள், அல்லது புத்திசாலிக் குழந்தைகளைப் பெற நினைக்கும் பெண்கள் அதிகாலையில் எழுந்து ஆண்கள் கண்களில் படாமல், தம் சீலைத் தலைப்பின் ஓரத்தைக் கிழித்து அதில் ஒரு செங்கல் துண்டை முடிந்து தீர்த்தத் தொட்டியின் ஓரமுள்ள கம்பத்தில் கட்டிவிடுவது பழங்காலந் தொட்டு வழக்கத்திலுள்ளது. இப்பொழுது குழந்தைப் பேறு மக்களிடத்தில் பெருகப்பெருக வேறு காரியங்கள் சித்தியாவதற்காக இந்த வழக்கம் மாற்றப் பெற்று நடந்து வருகின்றது. செடிகளில் துணியைக் கிழித்துக் கட்டுவது. தேவதையை திருப்திப் படுத்துமென்பது தமிழ் நாட்டு வழக்கிலும் உண்டு.

இத்தலம் ஏற்பட்டு 800 ஆண்டுகள் ஆகின்றன. இங்கு சமஸ்கிருத மகா வித்யாலயமும், ஆயுர்வேத வித்தியாலயமும், சாதுக்களின் சங்கமும், 'கோ' சாலைகளும் இக்கோயிலுக்கு தர்மகர்த்தாவான மஹந்துவால் நடத்தப்பட்டு வருகின்றன. வரி வசூலிக்கும் உரிமைகளும் இப்பொழுது தேவஸ்தான போர்டில் சேர்ந்து விட்டபோதிலும், இக்கோயிலின் பூசைத் திருப்பணிகளும் அதன் மேற்பார்வையும், தர்ம நிலையங்களும், கோவிலில் வரும் ஒரு மஹந்துவின் நிர்வாகத்தின் கீழ்தான் இருந்து வருகின்றன. அம்மஹந்து ஆதி சங்கரர் பரம்பரையைச் சேர்ந்தவரென்றே சொல்லிக் கொள்கிருர். ஆதி சங்கராச்சாரியாரின் மடங்களுக்கும், இந்த மஹந்துக்கும் எந்த விதத் தொடர்பும் இல்லையாளுலும் 'அத்வைத' அநுஷ்டானி



தாரகநாதர் கோயில்

படம் உதவியவர்: சோம. சுப்பிரமணியம், கல்கத்தா.

களாகவே திகழ்கிருர்கள். இந்த மஹந்து பரம்பரை சங்கராச்சாரியார் வகுத்த பத்துவித சந்நியாசிப் பிரிவுகளில் ஒன்ருகிய 'கிரி' சம்பிரதாயத்தைச் சேர்ந்ததாகக் காணப்படுகின்றது.

புகழ் மிகப் பெற்ற இந்தச் சிவத்தலத்தின் பெயர் தாரக நாதரின் பெயரைக்கொண்டு

## காசிநகரின்

| ஏற்றுமதிகளும் | இறக்குமதிகளும் |
|---|---|
| கங்கை நீர் | இராமேசுவரம் கோடித்தீர்த்தம் |
| பித்தளைப் பாத்திரம் | காசியில் இறப்பதற்கு முதுமைக் காலத்தில் வருவோர் |
| பட்டுத் துணி | கங்கைக் கரையில் எரிப்பதற்கு இறந்தவர்கள் உடல் |
| வயிரவர் கயிறு | |
| அபிஷேகத் திருநீறு, சந்தனம், குங்குமம் | |

தாரகேசுவரம் என வழங்கப் பெறுகிறது. இதே பெயரில் பம்பாய்ப் பக்கத்திலும் ஒரு தலம் இருப்பதாகத் தெரிகிறது. காடாக மண்டிக் கிடந்த ஒரு இடம் புனிதத்தலமாக மாறியதற்கு 'முகுந்த கோஷ்' என்ற மாடு மேய்க்கும் பையன்தான் காரணமாகத் தெரிகின்றது. பட்டுப்போன பனைமரத்தூரில் தன் பசுமாடு தன் மடியில் சுரக்கும்பாலைத் தினமும் சொரிந்து விட்டு வெற்றுப் பசுவாகத் திரும்பியதை நோட்டம் பார்க்கச் சென்ற முகுந்த கோஷ் என்ற மாடு மேய்க்கி பால் சொரிந்த இடத்தில் ஒரு இலிங்கம் தென்படுவதைக் கண்டான். ஓடோடிச் சென்று ஊராருக்கு அறிவித்தான். கூட்டம் திரண்டு அதள பாதாளம்வரை தோண்டிப் பார்த்தது. இலிங்கத்தின் அடியைக் காணமுடியாத நிலை ஏற்பட்டது. பிறகு ஒரு பிராமணர் கனவில் தாரகநாதர் தோன்றித்தன் நிலையை உணர்த்திய பிறகு தோண்டும் வேலை நிறுத்தப்பட்டு, இராம் நகர் என்ற பக்கத்து கிராமத்து இராஜா 'ராய் பாராமல்' என்பவருக்கு அறிவிக்க, அவர் கோவில் எழுப்பினுர் என்றும் இப்பொழுது உள்ள கோவில் மூன்ருவது முறை செப்பனிடப்பட்ட கோவில் என்றும் கூறப்படுகின்றது. தாரகா நாதனின் சரித்திரத்தையும் ராஜா பாராமல் வரலாற்றையும் மஹந்துகளின் பரம்பரையையும் விவரிக்கப் புகுந்தால் மிக விரிவடையும்.

பெரிய போர்களும், படையெடுப்புக்களும் நடந்த பிரதேசமான வங்கத்தின் மண்ணிலுள்ள இச்சின்னஞ் சிறிய கோவில் எல்லாப் படையெடுப்புகளுக்கும் தப்பிப் பிழைத்தது இதன் சிறிய தோற்றத்தின் காரணத்தாலா? அல்லது தாரக நாதனின் புனிதத் தன்மையாலா? என்பதை அறிய முடியவில்லை. இதன் பக்தர்களைக் கேட்டால் படையெடுத்து வந்த மகமதியருங்கூட இக்கோவிலுக்குக்காணிக்கை செலுத்தியும் மானியம் வழங்கியுமுள்ளனர் என்றும் இன்றுகூட அக்கம் பக்கமுள்ள மகமதியர்கள், பால் கொண்டு வந்து செலுத்துகின்றனர் என்றும் சொல்லுகிருர்கள்.

ஒரே சமயத்தில் பதினைந்து பேர்களைக் கூட உள்ளடக்கிக் கொள்ள முடியாத கோவில் கர்ப்பக் கிரஹத்தின் உள் வாயில் அதற்குத் தகுந்த அளவு சிறியதாகவே காணப்படுகின்றது. ஆண்கள் சட்டை அணிந்து செல்லக் கூடாதென்பது வழக்கத்திலிருந்து வருகின்றது. நாற்புறமும் சுவர் எழுப்பப்பட்டு ஒரு சிறிய வழியை உடைய காற்றுப் புகமுடியாத கர்ப்பக் கிரஹத்தினுள் பூசாரிகள் பக்தர்களை ஆண், பெண் வித்தியாசமின்றி இடித்து முழக்கிக் கொண்டு அழைத்துச் சென்று ஒருவர் முகம் ஒருவர் அறியாத, ஆண்டவனும் நம்மை அறியாத இருட்டறையைப் போன்ற மண்டபத்திற்குள் சங்கற்பம் சொல்லி, அபிஷேகம் செய்து ஆராதிக்க வைப்பது ஒரு நூதன அநுபவமாகவே இருக்கும். பக்தர்களும் திணறி பகவானும் திணறுகின்ற சமயத்தில் யாருக்கு யார் சங்கற்பம் செய்து வைக்கிருர்கள் எந்தப் பக்தனைச் சேர்ந்த எந்தப் பூசாரி வாயிலிருந்து சங்கற்பம் வந்ததென்பதைக்கூட அறிந்துகொள்ள முடியாத ஒரு குகை வாழ்க்கையில் சில நிமிடங்கள் தவழ்ந்த பக்தர்கள், வெளியே வந்தால் போதும் என்ற நிலையில் வியர்த்து விறுவிறுத்து வெளியில் வந்ததும், வராததுமாக தங்களைத் தொடர்ந்து வரும் பூசாரிக்குக் காணிக்கையைச் செலுத்திவிட்டு பக்தர் விடுதலை அடையப் பார்த்தால் பூசாரி சுலபமாகவா விட்டு விடுவார்! பக்தரின் பாதாதி கேசம்வரை பூசாரியால் வர்ணித்து, முடிந்தவரை பணம்பிடுங்கிய பிறகு தான் பூசாரி பக்தரை மோட்ச வழி செல்ல அநுமதிப்பார்.

தாரகேசுவரத்தில் மார்வாரிகளுக்குப் பல சத்திரங்கள் உண்டு. நாட்டுக்கோட்டை நகரத்தார் அறுபது வருடங்களுக்கு முன்பாகவே அங்கு ஒரு மடம் எழுப்பி இதில் தங்குவதற்கு யாத்திரை வாசிகளுக்கு சௌகரியம் செய்து கொடுத்து இருக்கிருர்கள். யாத்திரையை கல்கத்தாவில் முடிக்கும் செட்டி நாட்டு ஆச்சிமார்கள் தாரகேசுவரத்தை மிகப் புனிதத்தலமாகவே கருதுகிருர்கள். காரணம் தாரகநாதன் ஒரு சுயம்புலிங்கம் என்பதும், இந்த சுயம்பு லிங்கத்தின் கர்ண பரம்பரைக் கதை தமிழ் நாட்டு சுயம்பு லிங்கங்களின் கதைகளை ஒத்திருப்பதாலும் தமிழ்நாட்டுக் கோவில்களைப் போல், காவடி எடுப்பது, முடியிறக்குதல், முதலிய பிரார்த்தனைகள் மிளிர்வதாலும், ஆச்சிமார்கள் பக்தி பூண்டதில் ஆச்சரியமில்லை.

பாவா தாரகாநாத்கி ஜே!

# நகரத்தார் செய் நற்றொண்டு

பாகனேரி வெ. பெரி. பழ. மு. காசிவிசுவநாதன் செட்டியார்

நயத்தக்க நாகரிக வாழ்க்கை நடத்துவோர் வாழும் திருவூர் நகரம் எனப்படும். அங்கு வாழ்வோர் நகரத்தாராவர். நாகரிகம் என்பது எல்லார்க்கும் பல்லாற்றானும் பேருதவி புரிந்து நாளும் பயன்பட்டு வரும் பண்பாகும். அப் பண்பு எல்லாரிடையுங் காணப்படினும் சிறப்பாக நகரத்தார்பால் மிக விரிந்தபான்மையில் உள்நாடு வெளிநாடுகள் அனைத்திலும் இடையறாது ஒருங்கு காணப்படும்.

அவர்கள் முறைசேர் வணிகத்தால் நிறை பொருளீட்டி அறம்பல புரிந்து நேர்மையராய் ஒழுகி வருகின்றனர். அதற்கு ஒரு பெருங் காரணம் சிவனடி மறவாச் சிந்தையும் அவனருண் மொழியாம் செந்தமிழோம்பும் சீர்மையுமாகும். வெண்ணீறுங் கண்மணியும் விரவா மாந்தரை நகரத்தார் மக்கள் இரு பாலாருள் யாண்டுங் காண்டலரிது. மேலும் கடவுள் வழிபாடின்றி எதுவுங் கைக்கொள்ளாக் கடப்பாட்டினர். அவர்கட்குக் குலதெய்வம் தமிழ்த் தெய்வமாகிய திருமுருகச் செவ்வேளாகும்.

செவ்வேளருளால் வெற்றியும் புகழும் உற்ற நற்றிருவும், நோயில் வாழ்வும்ஒழுக்கமும் வாய்மையும், உள்ளத்தூரனும், கள்ளமில் வாழ்க்கையும், கரவா ஈகையும், மறவாப் பத்தியும் பெற்று மக்கட்குதவியாய் மாண்புடன் வாழ்ந்து வருகின்றனர்.

முடியுடை வேந்தர் மூவர்க்குப்பின் யாண்டும் திருக்கோவில்களைப் பழுதுபார்த்துச் செப்பனிட்டும், பாடல் பெற்ற திருக்கோவில்களை வனப்பும் புதுமையும் வாய்ப்பக் கற்றளியாக முகவொளி தோன்றும் எழிலமை கருங்கற்களால் முற்றும் புதிதாக எடுப்பித்துமுள்ளார்கள்.

திருக்கோவிலுக்கு இரு கண்ணனைத்த நந்தவனங்களும், பசு மடங்களும் நலமுற அமைத்துள்ளனர். பேரூர் சிற்றூர் முதலிய எல்லா ஊர்களிலும் நகரத்தார் விடுதியை நன்கு காணலாம். திருவாசக மடங்கள், திருத் தேவாரப் பாடசாலைகள், அறுபத்து மூவர் குருபூசை மடங்கள் ஆங்காங்கு அழகுற அமைக்கப்பட்டு அரும்பணி புரிந்து வருகின்றன.

தெய்வத் திருநகர் ஏழனுள் ஒன்றாகிய காசியம் பதியில் நூறு ஆண்டுகளுக்குமுன் நிறுவப் பெற்ற நகரவிடுதி அன்று தொட்டு இன்று காறுந் தன் திருப்பணியினை முட்டின்றிச் செய்து வருகின்றது. அப்பணியாவன: நறுமணங் கமழும் பல்வகைப் பூக்கள் நிறைந்த பெரு நந்தனவனமும், காசி விசுவநாதர் திருக்கோவிலுக்கு வைகறை, நண்பகல், நள்ளிருள் வழிபாடுகளில் திருமுழுக்குக்குப் பாலும் படைப்பும் பூசையும் முதலாயின. இவை என்றும் இப்படியே நிகழ்ந்து வரத் திருவருள் துணை நிற்கும் என்பதில் எட்டுணையும் ஐயமின்று.

காசியம்பதியில் ஏறத்தாழ மூன்று நூற்றாண்டுகளுக்கு முன் குமரகுருபர முனிவரால் நிறுவப் பெற்றுள்ள திருக்கோவில், திருமடம் முதலியன செய்து வரும் திருத் தொண்டுகளும் அளப்பில. அவை என்றும் சிறப்புற நிகழ்ந்து வருவன போன்று அதன் பின்றோன்றிய நகர விடுதியும் அது போன்று என்றும் நின்று பணியாற்றும் என்பது உறுதி.

நகர விடுதி நூற்றாண்டு விழா மணிமடலில் நகரத்தாருள் ஒருவனாகிய அடியேனின் சிறிய கட்டுரையும் இடம் பெறுவது கண்டு மகிழ்கின்றேன். அஃதடியேனுடைய கட்டுரைச் சிறப்பாலன்று, கடமைத் தொண்டுரிமையானென்க.

# நாட்டுக்கோட்டைச் சத்திரத்தின் வித்தியாதானம்

பண்டிட் சுப்பிரமணிய சாஸ்திரி
மீமாம்ச வேதாந்த ஆச்சாரி
சமஸ்கிருத வித்தியாலய்ம், காசி இந்துப் பல்கலைக் கழகம், வாரணசி.

**தா**னங்கள் எத்தனையோ உண்டு. அவற்றுள் வித்தியாதானம், அன்னதானம், கன்னிகாதானம் மூன்றும் மகாதானங்களாகப் பெரியவர்களால் வகுக்கப்பட்டிருக்கின்றன.

இவற்றிலும்கூட, அன்னதானம் விசேஷமானது. ஏன் என்றல், அது உடனே அந்தத் தானத்தைப் பெற்றவனுக்கு சந்தோஷத்தையும் மனத் திருப்தியையும் கொடுக்கும்.

பசி உள்ளவனுக்குப் போடப்படுகிற அன்னதானத்தைவிட, படிப்பவனுக்குப் போடுவது தான் சிலாகிக்கத்தக்கது. அதிலும் வேதம் படிப்பவனுக்கு அன்னதானம் செய்வதும், வேத சாஸ்திரம் பயில்பவர்களுக்கும் சாதுக்களுக்கும் அன்னம் போடுவதும் மகா புண்ணியமாகும்.

அன்னதானம் செய்கிற இடங்கள் எத்தனையோ உண்டு. எனக்குத் தெரிய தஸ அஸ்வமேத கட்டத்திலிருந்து அசிவரை 500 சத்திரங்கள் இருந்தன. அவற்றுள் பெரும்பாலானவை இப்போது வீடுகளாக மாறிவிட்டன. ஆனல், நாட்டுக்கோட்டை நகரச் சத்திரம் இன்னமும் நல்ல முறையில் நடந்து விஸ்வேஸ்வர பூஜா கைங்கரியங்களைச் செய்து வருகிறது. மற்ருெரு விஷயம், இந்தச் சத்திரத்தில் எந்த விதமான நிபந்தனையும் இல்லாமல் வித்யார்த்திகளுக்கு ஆதரவு காட்டப்பட்டு வந்தது ஆகும். வேண்டிய வசதிகளும் விசேஷமான செளகரியங்களும் செய்துகொடுக்கப்பட்டதால், இந்த ஸ்தாபனத்தில் ஜாகை வைத்துக்கொண்டு அன்னதானம் பெற்று நூற்றுக் கணக்கான வித்யார்த்திகள் பெரும் புகழ் பெற்றிருக்கிருர்கள். அத்தகைய மேதைகளில் சிலர் :

1. பண்டித ருத்ரம்பட்.

இவர் ரிக் வேதம், எதிர் வேதம் படித்தார். கோகர்ணத்தைச் சேர்ந்தவர். 40 வருஷங்கள் இந்தச் சத்திரத்தில் இவர் ஆதரிக்கப்பட்டார். வேத சாஸ்திரங்களில் எவ்வளவு பிரஸ்தானங்கள் உண்டோ அவை எல்லாவற்றிலும் கரை கண்டவர். சாக்த மதத்தர். திபேத்துக்குப் போய் பௌத்த சமய சாஸ்திரங்களைப் பயின்றவர்.

2. பிரதாபம் சீத்தாராம சாஸ்திரி நியாயாச்சாரிய.

நியாயம், வேதாந்தம், தர்ம சாத்திரங்களில் வித்வத்வம் உள்ளவர். தமிழ் நாட்டிலிருந்து பலபேர் காசிக்கு வந்து இவரிடத்தில் நியாயம் வேதாந்தம் தர்ம சாஸ்திரங்களைப் பயின்ருர்கள். இவர் சில காலம் காசியில் சிருங்கேரி மடத்தின் மானேஜராக வேலை பார்த்தார்.

3. காசி வேங்கடாசல சாஸ்திரிகள்.

இவர் சம்ஸ்கிருதத்தில் மகா பாண்டித்தியம் பெற்றவர். எல்லா சாஸ்திரங்களிலும் அபாரமான புலமை இருந்ததால் வித்வத் சபைகளில் அக்ர ஸ்தானம் வகித்தார்.

4. சிந்தாமணி சுப்பிரமணிய ஐயர்.

இவர் காசி ஹிந்து சர்வகலாசாலையில் டீச்சர்ஸ் டிரெயினிங் காலேஜில் புரபசராக இருந்தார்.

5. ஆணேகு வெங்கட்ரமண மூர்த்தி, வேதாந்தப் பேராசிரியர், கவர்மெண்டு சம்ஸ்கிருத காலேஜ், கல்கத்தா.

அதிர்ஷ்டவசமாக இன்னும் நம்மிடையே வாழ்ந்துவருகிற அறிஞர்களை, இனி, குறிப்பிடவேண்டும்.

6. தர்ப்பா சுப்பிரமணியம் எம். ஏ., ரிட்டையர்டு லைபரேரியன், சென்ட்ரல் லைபரேரி,காசி ஹிந்து சர்வகலாசாலை.

நாட்டுக்கோட்டைச் சத்திரத்தின் ஆதரவு பெற்றவர்கள் சம்ஸ்கிருதம் மட்டும் அல்லாமல் மற்ற துறைகளிலும் பிரசித்தி பெற்றது இதனுல் தெரியவரும். இவர் படித்த காலம் முழுவதும் சத்திரத்திலேயே இருந்தார்.

7. மாஸ்டர் சிவராமராவ், ரிட்டையர்டு ஆசிரியர், சநாதன தர்ம ஹைஸ்கூல்.

8. பண்டித நரசிம்ம சிரவுதி.

வேதம் வியாகரணம் பயின்றவர். இப்போது ஆந்திர நாட்டில் இருந்துவருகிருர்.

9. தர்மாலா சுப்பராய சாஸ்திரி.

வியாக்கரண வேதாந்த தீர்தத பிரதான அத்யாபக், பொன்னூர், பாபட்லா தாலுகா, ஆந்திரப் பிரதேஷ்.

10. காசி கிருஷ்ணமாச்சாரி, குண்டூர்,

இவர் ஆந்திர தேசத்தில் சம்ஸ்கிருதத்தில் மகா மேதையாகக் கருதப்பட்டு பிரபலமாக இருந்துவருகிருர்.

11. துரி சுப்பிரமணிய சாஸ்திரி வியாக்கரண ஆச்சாரிய, காக்கிநாடா.

12. மத்வாச்சாரி வேதாந்த மீமாம்ஸ ஆச்சாரியா.

இவர் காசியில் டாக்டர் வி.எஸ்.அகர்வல் ஆராய்ச்சி ஸ்தாபனத்தில் வேலைசெய்து வருகிருர்.

13. அனந்தாச்சாரி தேவளி

இவர் ஹைதராபாத்தில் உஸ்மானியா சர்வகலாசாலையில் லைபரேரியனுக இருந்துவருகிருர்.

14. நரசிங்க தேவலி

இவர் பூனு, டெக்கான் காலேஜ் போஸ்ட் கிராஜுவேட் ரீசர்ச் இன்ஸ்ட்டியூட்டில் ஆராய்ச்சியாளராக இருந்துவருகிருர்.

15. புரபசர் பி. டி. ராஜு,

ஹெட் ஆப் தி டிப்பார்ட்மெண்டு ஆப் பிலாசபி, யுனிவர்சிடி ஆப் ஜெய்பூர், ராஜஸ்தான்.

16. மாதவாச்சாரியா, சம்ஸ்கிருத பண்டிதர், உடுப்பி.

17. கிருஷ்ண ராவ் பி.ஏ., சென்ட்ரல் பேங்கு, வாரணுசி.

18. ஜெயராமச்சந்திர சாஸ்திரி, டில்லி.

19. வெங்கட்ரமண பட், வேதாந்த சிகாமணி, பெங்களூர்.

20. வாசுதேவ ஜோஷி, வாயி, ஆந்திரா.

எனக்குத் தெரியாதவர்கள் எத்தனையோ பேர் இருக்கிருர்கள். நான் 1930 முதல், 1938 வரை இந்தச் சத்திரத்தில் தங்கி சத்திரத்தின் ஆதரவால் இன்றைய நிலையை அடைந்திருக்கிறேன் என்பதைப் பெருமையோடும் நன்றியுணர்ச்சியோடும் சொல்லிக்கொள்ளுவது என் கடமை.

சத்திரத்தால் பிரயோஜனம் அடைந்த இவ்வளவுபேரும் வாழ்க்கையில் மேம்பட்டிருப்பதால் இந்தப் புண்ணியம் 96 ஊர் நகரத்தார்களைச் சேரும். எனக்குத்தெரிய தினசரி 200 பேருக்கு அன்னதானம் போடப்பட்டு வந்தது. அது சத்திரத்தின் மகா உன்னத காலம். மீண்டும் அப்படிப்பட்ட மகா உன்னத காலம் ஏற்பட்டு நகரத்தார்கள் க்ஷேமமாக இருக்கவும் சத்திரம் நீடுழி வாழவும் எல்லாம் வல்ல சர்வ ஈஸ்வரனை மனப்பூர்வமாய்ப் பிரார்த்திக்கிறேன்.

# காசித் திருப்புகழ்

தார ணிக்கதி பாவி யாய்வெகு
சூது மெத்திய மூட னுய்மன
சாத னைக்கள வாணி யாயுறு மதிமோக
தாப மிக்குளவீண னுய்பொரு
வேல்வி ழிச்சிய ராகு மாதர்கள்
தாமு யச்செயு மேது தேடிய நினைவாகிப்

பூர ணச்சிவ ஞான காவிய
மோது தற்புணர் வான நேயர்கள்
பூசு மெய்த்திரு நீறி டாஇரு வினையேனைப்
பூசி மெய்ப்பத மான சேவடி
காண வைத்தருள் ஞான மாகிய
போத கத்தினை யேயு மாறருள் புரிவாயே

வார ணத்தினை யேக ராவுமு
னேவ னைத்திடு போது மேவிய
மாய வற்கித மாக வீறிய மருகோனே
வாழு முப்புர வீற தானது
நீறெ ழப்புகை யாக வேசெய்த
மாம திப்பிறை வேணி யாரருள் புதல்வோனே

கார ணக்குறி யான நீதிய
ரான வர்க்குமு னைகவேநெறி
காவி யச்சிவ நூலை யோதிய கதிர்வேலா
கான கக்குற மாதை மேவிய
ஞான சொற்கும ராப ராபர
காசி யிற்பிர தாப மாயுறை பெருமாளே,

❋ ❋ ❋

மங்கைக் கணவனும் வாழ்சிவ னுமையல்
பங்கப் படமிசை யேபனி போல்பதம்
வந்துட் பெருகிட வேவிதி யானவ னருள்மேவி
வண்டுத் தடிகைபொ லாகியெ நாள்பல
பந்துப் பனைபழ மோடிள நீர்குட
மண்டிப் பலபல வாய்வினை கோலும வழியாலே

திங்கட் பதுசெல் வேதலை கீழுற
வந்துப் புவிதனி லேமத லாயென
சிந்தைக் குழவியெ னுவனே தாதையு மருள்கூரச்
செம்பொற் றடமுலை பால்குடி நாள்பல
பண்புத் தவழ்நடை போய்வித மாய்பல
சிங்கிப் பெருவிழி யாரவ மாயதி லழிவேனோ

அங்கைத் தரியென வேயொரு பாலக
னின்பக் கிருபைய தாயொரு தூண்மிசை
அம்பற் கொடுவரி யாயிரண் யாசுர னுடல்பீறி
அண்டர்க் கருள்பெரு மான்முதி ராவணி
சங்குத் திகிரிக ரோனரி நாரவ
ரங்கத் திருவணை மேல்துயில் நாரணன்
மருகோனே

கங்கைச் சடைமுடி யோனிட மேவிய
தங்கப் பவளொளி பால்மதி போல்முக
கங்குற் றரிகுழ லாள்பர மேஸ்வரி யருள்பாலா
கந்துப் பரிமயில் வாகன மீதிரு
கொங்கைக் குறமக ளாசையொ டேமகிழ்
கங்கைப் பதிநதி காசியில் மேவிய பெருமாளே.

❋ ❋ ❋

வேழ முண்ட விளாகனி யதுபோல
மேனி கொண்டு வியாபக மயலூறி
நாளு மிண்டர்கள் போல்மிக அயர்வாகி
நானு நைந்து விடாதருள் புரிவாயே
மாள அன்றம ணீசர்கள் கழுவேற
வாதில் வென்ற சிகாமணி மயில்வீரா
காள கண்ட னுமாபதி தருபாலா
காசி கங்கையில் மேவிய பெருமாளே.

— அருணகிரிநாதர்

# வேலைப் பணிவதே வேலை!



காரைக்குடி, C. N. நாச்சியப்பன்

" வேலுண்டு வினையில்லை,
மயிலுண்டு பயமில்லை."

இது ஆன்றோர் வாக்கு.வேலைப் பணிந்தால் முற் பிறப்பில் செய்த தீய வினைகள் இப்பிறப்பில் நம்மை வந்து சார்ந்து துன்புறுத்தாது என்பது கருத்து.

"முந்தை வினையே வ்ராமற் போக" என்று பாடுகிறார் அருணகிரிநாத சுவாமிகள்.

"உன் கால்பட்டு அழிந்தது அயன்றன் கையெழுத்தே!" என்றும் பேசுகிறார்.முருகனது திருவடிகள் பிரம்மன் எழுதிய தலையெழுத்தை யும் அழித்து விடுமாம்.

அத்தகையு ஆற்றல் படைத்த தெய்வம் முருகன். வேண்டுவோர்க்கு வேண்டியதை வழங்கும் வெற்றி வடிவேலன் அவன். நினைத் தவர் மனத்தைக் கோவிலாய்க் கொள்ளும் குமரன் அவன். அடியார்களின் திரு உள்ளத் திலேயே அல்லும் பகலும் வீற்றிருக்கும் ஆண்டிப் பண்டாரம் அவன்.

அவன் வைத்திருக்கும் வேல் வெற்றி வடிவேல்.

" வீரவேல் தாரைவேல் விண்ணோர்
சிறைமீட்ட
தீரவேல் செவ்வேள் திருக்கைவேல்-வாரி
குளித்த வேல் கொற்றவேல்
சூர் மார்புங் குன்றும்
துளைத்த வேல் உண்டே துணை"

என்று பாடுகிறார் நக்கீரர்.

சூரபத்மன் அகங்காரத்தின் காரணமாகத் தேவர்களைச் சிறைப் பிடித்தான். இந்திரனின் மகனையும், இன்னும் பல விண்ணோர்களையும் படாதபாடு படுத்தினான். அடாத செயல்கள் பல செய்யச் சொன்னான்.

அரக்கர்களுக்கு மீன் சுமந்து செல்லுவது தான் தேவர்கள் செய்த வேலை. இந்த வேலையி லிருந்து விடுபட வேலைப் பணிந்தார்கள் தேவர்கள். வேல் அவர்களை விடுவித்தது. வெற்றி பெற்றது. விடுதலை தேடிக் கொடுத்தது.

குமரக்கடவுள் தோன்றிச் சூரனையும் அவன் கூட்டத்தாரையும் மறக்கருணை புரிந்து ஆட் கொண்டார். தேவர்களுக்கு அறக்கருணை புரிந்து அருள் செய்தார்.

" வானோர் கொடிய வினை
தீர்த்து அருளும் வேலப்பா!"

என்று முருகனை அழைக்கிறார் நக்கீரர்.

வினையைத் தீர்ப்பதற்காகவே தோன்றியது வேல்.

வெல் என்ற சொல்லிலிருந்து வேல் என்ற சொல் பிறந்தது. வெல் என்றால் வெல்லுதல் என்று பொருள். வினையை வெல் லுதலே வேலின் வேலை!

தேவர்களைச் சிறைமீட்ட வேல் நம் குறை யையும் தீர்க்காதா? நிச்சயமாகத் தீர்க்கும்.

## நகரத்தார் சிற்பவன்மை

சரித்திர வல்லரசுகள் தமிழ்நாட்டில் இறைவனுக்குக் கணக்கற்ற கோயில்களைக் கட்டி, மக்களின் பக்திக்கும், கலை நோக்கத்திற்கும் இலக்காகினர். அவர்களது காலத்திற்குப் பின்னர், பழந்தமிழ்க் குடிகளாகிய நகரத்தார்கள் அவ்விறை பணியை ஏற்றனர். பொதுவாக மக்களின் மனப்பான்மை ஒரு புதுக்கோயிலை எடுப்பதிலும், பழங்கோயிலைப் புதுப்பிப்பதில் சிறந்த மாட்சியும், புண்ணியப் பலன்களும் உண்டென்பது. தமிழ்நாட்டில் ஆதிப் பழங்கோயில்கள் பலப்பல இந்நகரத்தார்களின் சீரிய பக்தியினால் பல முறைகள் பழுதுபார்க்கப்பட்டன. திருவாவினன்குடி, கொடுமுடி போன்ற சங்க இலக்கிய தேவாரச் சிறப்புப்பெற்ற கோயில்கள் பல முழுதும் கற்பணியாகச் செய்யப்பட்டன. நகரத்தார் சீமையிலும் மிக அருமையும் சிற்ப நுணுக்கமும் பொருந்திய கோயில்கள் எழுப்பப்பெற்றன.

இவை யாவும் முற்போந்த பேரரசர்களின் சிற்ப முறையினைப் பெரும்பாலும் தழுவியனவாகவே யிருப்பன. மற்றும் திருவானைக்காவல், மாயூரம், திருவையாறு போன்ற தலங்களில் அவர்களால் செய்யப்பட்டுவரும் சிற்பப்பணிகள் நாற்பது ஐம்பது ஆண்டுகளாக நடைபெற்று சில முற்றுப்பெற்றும், இன்னும் சில இன்றும் நடந்து கொண்டும் உள்ளன. பொதுவாக இவர்களது இச்சிறந்த நாட்டம், சமயாச்சாரியார்களால் பாடப் பெற்ற தலங்களின்மீதே யாகும். இருப்பினும், இவர்கள் இறைபணி என்றும் போற்றத் தக்கவையாம்.

—ஜே. எம். சோமசுந்தரம் பி.ஏ., பி.எல்.,
சிற்பமும் கலைவாழ்வும். பக். 66-67

---

" அடியேன் வதனம்
அழகு வேல் காக்க
பொடி புனை நெற்றியைப்
புனித வேல் காக்க
கதிர் வேல் இரண்டு
கண்ணினைக் காக்க
விதி செவி இரண்டு
வேல வர் காக்க
நாசிகள் இரண்டு
நல்வேல் காக்க
பேசிய வாய் தனைப்
பெரு வேல் காக்க
முப்பத்திரு பல்
முனை வேல் காக்க
செப்பிய நாவைச்
செவ்வேள் காக்க
கன்ன மிரண்டும்
கதிர் வேல் காக்க
எப்பொழுதும் எனை
எதிர் வேல் காக்க "

என்று பேசுகிறது கந்தர் சஷ்டிக் கவசம். முருகனின் பெருமையைப் பேசும் மந்திரம் போன்ற கவசத்தில் வேலின் வேலையைக் குறிக்கும் ஒரு பகுதி இது.

வேலின் நுனி கூர்மையாகவும், நடுவில் பரந்து அகலமாகவும், இறுதியில் நீளமாகவும்- அதாவது ஆழமாகவும் இருப்பதைக் காணலாம். முருகன் வைத்திருக்கும் வேல் ஞான வேலாகும். ஞானம் என்றால் அறிவு என்று பொருள். அறிவானது வேலைப்போல் கூர்மையாகவும் பரந்தும், ஆழமான சிந்தனை உடையதாகவும் இருக்க வேண்டும் என்பது பொருள்.

இப்படிப்பட்ட வேலைப் பணிவதையே வேலையாகக் கொள்ளுவது தானே கடமை. கடமையே மனித தருமம் அல்லவா? முருகனுடைய வெற்றி வடிவேலை வணங்கி, வாழ்க்கையிலும் வெற்றி பெறுவதே இலட்சியமாகும்.

# நகரத்தார் வாழும் ஊர்களுக்கு அருகே உள்ள பாடல் பெற்ற சிவத் தலங்கள்

| எண் | தலம் | இறைவன், இறைவி | பாடல் | குறிப்பு |
|---|---|---|---|---|
| 1 | திருப்பெருந்துறை (ஆவுடையார் கோயில்) | ஆத்மநாதர் (ஆவுடையார்) யோகாம்பிகை | மாணிக்கவாசகர் | சிற்பச் சிறப்பும் வரலாற்றுப் பெருமையும் மாணிக்கவாசகர் சந்நிதியும் உடைய புகழ் பெற்ற கோவில். |
| 2 | திருப்பூவனம் | பூவனநாதர் மின்னனையாளம்மை | சம்பந்தர், அப்பர் சுந்தரர் | பொன்னனையாள் என்னுந் தாசிக்காக சுவாமி எழுந்தருளி வந்து இரசவாதஞ் செய்து கொடுத்த பொன்னைக் கொண்டு அவள் சுவாமியின் திருவுருவம் செய்து மகிழ்ந்த தலம். |
| 3 | திருவாடானை | ஆடானைநாதர் அன்பாயியம்மை | சம்பந்தர் | நீல ரத்தினத்தால் சிவலிங்கம் செய்து சூரியன் வழிபட்ட தலம். வருணனுடைய புதல்வன் (வாருணி) துருவாசருக்கு மரியாதை செய்யாமையால் அவரால் ஆட்டுத் தலையும், யானையின் உடலும் அடைந்து அந்தச் சாபம் இத்தலத்தில் நிவாரணமாயிற்று. |
| 4 | திருக்கானப்பேர் (காளையார் கோவில்) | காளையீசுவரர் சொர்ணவல்லி | சம்பந்தர், அப்பர் | சுவாமி காளை வடிவங்கொண்டு சுந்தர மூர்த்திக்கும், சேரமான் பெருமாள் நாயனருக்கும் திருச்சுழியிலிருந்து அழைத்துப்போய் தரிசனம் கொடுத்த தலம். மூன்று சந்நிதிகள் (சோமேசுவரர்-சௌந்தரநாயகி, காளீசுவரர் - சொர்ணவல்லி, சுந்தரேசுவரர்—மீனாட்சி) உண்டு. |
| 5 | திருப்பத்தூர் | திருத்தளிநாதர் சிவகாமியம்மை | சம்பந்தர், அப்பர் | இலக்குமி பூசை செய்த தலம். வயிரவர் சந்நிதி சிறப்பானது. குன்றக்குடி சுப்பிரமணியத் தலம், இதனருகே இருக்கிறது. |
| 6 | திருக்கொடுங்குன்றம் (பிரான்மலை) | கொடுங்குன்றீசுவரர் குயிலமிர்தநாயகி | சம்பந்தர் | பாடல் பெற்ற கோயில் அடிவாரத்திலிருக்கிறது. மலைமீதுள்ள சந்நிதியில் சுவாமி கல்யாண கோலமாய் இருக்கின்றார். திருப்புகழ் பெற்ற தலம். மகோதர ரிஷி, நாகராஜன் முதலியோர் வழிபட்ட தலம். |
| 7 | திருப்புனல்வாயில் | பழம்பதிநாதர் கருணைநாயகி | சம்பந்தர், சுந்தரர் | பாண்டி 14 தலமும் இங்கு இருப்பதாக ஐதீகம், மூலலிங்கமும், ஆவுடையாரும் மிகப் பெரியன. குலச்சிறை நாயனருடைய அவதார தலமான மணற்குடி பக்கத்தில் இருக்கிறது. இத்தலம் கடற்கரையருகே அமைந்தது. |

# விக்கிரக வார்ப்புக் கலை

அரு. இலக்குவன், எம். ஏ.
விரிவுரையாளர், பழநி ஆண்டவர்
ஓரியண்டல் கல்லூரி, பழநி.

நம்முடைய நாட்டில் உலோகத்தில் விக்கிரகங்களை வார்க்கும் கலை புராதன காலத்திலிருந்து இன்று வரையுள்ளது. நாலாயிரத்து ஐந்நூறு ஆண்டுகளுக்கு முந்திய சிந்து நதி நாகரிககாலத்தில் இக்கலை சிறப்புடன் இருந்ததற்குச் சான்றாக நடனமிடும் பெண்ணின் உருவச்சிலைஒன்று மோகன்சோதாரோவில் கண்டு பிடிக்கப்பட்டுள்ளது. இந்தச் சிலையானது மெழுகால் முதலில் செய்யப்பட்டுப் பின் அச்சில் அமைத்துமெழுகை உருக்கிவெளியேற்றிய பின் உலோகக்குழம்பை ஊற்றி வார்க்கும் முறையில் (Lost Wax process) செய்யப்பட்டுள்ளது. இது போன்ற சாதனை, எத்தனையோ ஆயிரம் ஆண்டுகள் செய்து பழகிய பழக்கத்தின் விளைவாகும்.

இந்தியாவில் இக் கலைக்குத் தங்கம் வெள்ளி, செம்பு, பித்தளை, வெண்கலம் முதலிய உலோகங்கள் சரித்திர காலத்திலிருந்து அதாவது இரண்டாயிரத்து ஐந்நூறு ஆண்டுகளாகஉபயோகப் படுத்தப்பட்டு வருவதாகத் தெரிகிறது. விலையுயர்ந்த உலோகத்தில் செய்யப்பட்ட சிலைகள் நாளடைவில் கைமாறி உரு மாறின. செம்பு, பித்தளை, வெண்கலம் இவைகளால் செய்யப்பட்ட சிலைகள் ஆங்காங்கே பூமியிலிருந்து தோண்டி எடுக்கப்பட்டன. குப்தர்கள் காலத்திற்குப் பிந்தியவைகள் நிறையக் கிடைத்துள்ளன. தென் இந்தியாவில் சோழர்கள் காலத்திய வார்ப்புக் கலை மிகவும் முக்கியத்துவம் வாய்ந்தது. இக்கலை கடல் கடந்து சென்றது. இக்காலத்திய சில விக்கிரகங்கள் ஜீவ கலையுள்ளதாகவும் நளினமாகவும் இருக்கின்றன. விஜய நகர காலத்திய விக்கிரகங்களில் ஓர் அழுத்தத் தன்மை (Rigidity) காணப்படுகிறது. குறிப்பிட்ட வரையறைக்கு உட்பட்டு இவைகள் வார்க்கப் பட்டிருக்கின்றன. சிற்பியின் உள்ளெழுச்சிக்கு இடமில்லாது இவைகளில் ஜீவ கலை குன்றிக்காணப் படுகிறது. இவைகளில் இலாவகமில்லை.

திருக்கோயில்களில் இறைவனுடைய திரு உருவம் "துருவபேரா" (மூலவர்) ஆகவும் "உத்ஸவபேரா" (உத்ஸவவிக்கிரகம்) ஆகவும் "ஸ்னப்ன பேரா" (திருமஞ்சன மூர்த்தி) ஆகவும் அமைந்துள்ளது. மூல அறையில் உள்ள விக்கிரகம் பெரும்பாலும்கல்லில் செதுக்கப்பட்டிருக்கும். உலோகத்தில் வார்க்கப்பட்ட விக்கிரகங்கள் உத்ஸவ விக்கிரகங்களாகவும் திருமஞ்சன மூர்த்தியாகவும் அமைந்துள்ளன.

சோழர்கள் சிவனையும் பார்வதியையும் வணங்கிவந்ததால் இந்தத்தெய்வீக ஜோடியின் உட்கார்ந்த அல்லது நின்ற திருக்கோல விக்கிரகம் எல்லாச் சிவாலயங்களிலும் காணப்படுகிறது. உட்கார்ந்த திருக்கோலத்தில் சிவனுக்கு இடக்கைப் பக்கத்தில் பார்வதியை வடித்திருக்கிறார்கள். இறைவனுக்கும் அம்பிகைக்கும் இடையே பால முருகனின் சிறு உருவம் அமைந்துள்ளது. இச்சிறு உருவம் இல்லாத மூர்த்திக்கு "சுகாசன மூர்த்தி"யென்றும், அமையப்பெற்ற மூர்த்திக்கு "சோமாஸ்கந்த மூர்த்தி" என்றும் பெயர். பொதுவாக சோமாஸ்கந்த மூர்த்திக்கு அருகே வலக்கைப் பக்கத்தில் அம்பிகையின் தனித்திரு உருவம் நின்ற கோலத்தில் காணப்படுகிறது. இதே போல் கூத்தப் பெருமானின் விக்கிரகமும்

அதற்கு வலது புறத்தே சிவகாமிஅம்பிகையின் உருவமும் எல்லாக் கோயில்களிலும் அமைந் துள்ளன. இவ்விக்கிரகங்கள் அமைந்துள்ள இடத்துக்கு அம்பலம் என்று பெயர். மதுரை தில்லை முதலிய தலங்களில் ஐந்து அம்பலங் கள் உள்ளன. ஆனித் திருமஞ்சனத்தின் தின் பொழுதும்,மார்கழித் திங்கள் திருவாதிரை நாளன்றும் ஐந்து கூத்தப்பெருமானின் மூர்த்தி களும் வீதிகளில் திரு உலா வருகின்றன. இம் மூர்த்திகளைத் தவிர விநாயகர், வள்ளி தெய்வ யானை உடன் கூடிய முருகப் பெருமான், சண்டி கேசுவரர் இவர்களுடைய விக்கிரகங்களும் பெரும்பான்மையான சிவன் கோயில்களில் காணப்படுகின்றன.

விஷ்ணு ஆலயங்களில் பெருமானின் நின்ற திருக்கோலம் இராமர், இளையவர், சீதை, ஆஞ்சனேயர், கருடன் முதலிய விக்கிரகங்கள் காணப்படுகின்றன. இவைகளைத் தவிர தீர்த்த வாரிக்காக, சகல கோயில்களிலும் திருமஞ்சன மூர்த்தியுள்ளது.

பண்டைக் காலத்திலிருந்துமக்கள் ஆண்ட வனுடைய தொண்டில் ஈடுபாடுஉடையவர்கள். சன்னிதிக்கு எதிரில் விளக்கு எரிவதைப் பெரி தும் விரும்பினர். அவ்விளக்கு தங்கள் பிரதி நிதியாக நிற்கும் பதுமையின் கையில் இருக்க வேண்டு மென்றும் விரும்பினர். இக்கருத்தைக் கொண்டதே கோயில்களில் காணப்படும் "தீப இலக்குமிகள்" அல்லது பாவை விளக்குகள். இவ்விக்கிரகங்கள் பெரும்பாலும் பெண் பதுமை யாக இருக்கும்; சில இடங்களில் பெண்களுக்கு அருகே ஆண்பதுமையும் காணப்படுகிறது.

வெளிநாட்டுச் சிற்பிகளைப் போல அல்லாது இந்தியச் சிற்பி கவிஞனின் கண் நோக்கோடு விக்கிரகங்களை வார்க்கிறன். கிரேக்க நாட்டில் இக்கலையில் உடற்கட் டமைப்புக்கு முக்கியத்துவம் தரப்படுகிறது. ஆனல் இங்கு அவயவங்களோடு உவமையாகச் சொல்லப்படும் பொருள்களைக் கருத்தே கொண்டு சிற்பி சிலைகளை வார்க்கிறன். மேலும் ஒரு மூர்த்தியின் சக்தியையும் வீரத்தையும் வெளிப்படுத்த இரு கைகளுக்குப் பதிலாக நான்கு ஆறு எட்டு இவற்றிற்கு அதிகமான கைகளையும் அவைகளில் ஆயுதங்களையும் அமைக்கிறன். இவைகளைக் கண்ணுற்றதும் நம்மையறியாமலேயே இம்மூர்த்திகளின்பால் நாம் ஈர்க்கப்படுகிறேம்.

இந்திய விக்கிரகங்களில் காணப்படும் முத்திரைகள் விசேஷமானவை. இம்முத்திரை களைக் கொண்டே மூர்த்தியின் முக்கியத் துவத்தைக் கூறிவிடலாம். அபயவரத,தியான, வியாக்கியான முத்திரைகள் நாம் அடிக்கடி காணக்கூடிய முத்திரைகள். பொதுவான முத்திரைகள் வேதகாலத்திற்கு முன்பிருந்தே உபயோகத்தில் இருந்து வருகின்றன. வாய் பேசாது இவைகளைக் கொண்டே ஒருவருக்கு இன்னெருவர் தம் கருத்தைத் தெரிவித்து விடலாம்.

வட இந்தியாவில் "அஷ்டட்தாது" என்று சொல்லப்பட்ட எட்டு உலோகங்கள் (தங்கம், வெள்ளி, இரும்பு, டின், ஈயம், ரசம், செம்பு, துத்தநாகம்) சேர்ந்த கலவையும், தென் இந்தி யாவில் பஞ்ச லோகம் என்று சொல்லப்பட்ட ஐந்து உலோகங்கள் (தங்கம், வெள்ளி, செம்பு, பித்தளை, ஈயம்) சேர்ந்த கலவையும் விக்கிரக வார்ப்புக் கலையில் விசேஷமாக உபயோகப் படுத்தப்பட்டுள்ளன. உருவங்கள் முதலில்மெழு கில்செய்யப்பட்டு, பின் அவற்றின் அச்சை உரு வாக்கி அதிலே விக்கிரகங்களை வார்ப்பதைப் பற்றி பழைய கிரந்தங்களில் எழுதப்பட்டிருக் கிறது.இவைகளைப் பின்பற்றியே தென் இந்தியா வில்இப்பொழுதும் விக்கிரகங்கள் செய்யப் படுகின்றன.

மன்னர்களுக்குப் பின் வந்தோர் எனக் கருதப்படும் நாட்டுக்கோட்டை நகரத்தார்கள் ஆலயத்திருப்பணிகளில் அதிக ஈடுபாடுஉடைய வர்களாகையால் விக்கிரக வார்ப்புக் கலைக்கு பத்தொன்பதாம் நூற்றுண்டு இறுதியிலும் இருபதாம் நூற்றுண்டிலும் வெகுவாக ஊக்க மளித்து வந்துள்ளனர். தென் இந்தியாவில் இக் கலை இன்னும் நடைமுறையில் இருந்து வருவதற்கு இவர்களின் சென்ற கால ஆதரவு ஒரு காரணம். இந்த ஆதரவு வருங்காலத் திலும் நீடிக்கவேண்டும். பெரும் தனவந்தர்கள் இதில் ஈடுபாடு உடையவர்களானல் இந்தப் புராதனக் கலை மேன்மேலும் வளர்ந்து, தமிழ் நாகரிகத்துக்குப் புகழ் தரும்.

# காசி காண்டம் பாடிய காவலர்

திரு. வடிவேல் முதலியார்
தமிழ்ப் பண்டிதர், சிறுமதுரை.

திருவளர்ந்தோங்கும் செந்தமிழ் நாடு சேர சோழ பாண்டியர் என்னும் தமிழ் மூவேந்தர் களால் ஆட்சி செய்யப்பெற்று வந்தது.

கி. பி. 15-ஆம் நூற்றுண்டில் பாண்டிய நாட்டை ஆண்டு வந்தவர்களில் கல்வியறிவும், செங்கோன் முறைமை தவறுமையும் ஒருங்கே அமையப்பெற்றவர், ''வரதுங்க பாண்டியன்'' என்பவராவர்.

வரதுங்க பாண்டியரின் கல்வியறிவைக் காண அவர் இயற்றிய, ''பிரமோத்தர காண்டம்'' என்னும் நூலே போதிய சான்ருகும்.

ஒரு சமயம், வரதுங்க பாண்டியனுர் அரசாங்க வேலை மிகுதியால் அந்தப்புரம் செல்லாமல் இருந்து விட்டனர். அதனுல் பாண்டிமா தேவியார், தன் கணவர் காதல் வயப்பட்டுப் பொதுமகளிர் இல்லத்தில் தங்கி இருக்க வேண்டும் என எண்ணி ஊடல் கொண்டார். அதனுல் அரசரை நேரிற் கண்ட போது சீற்றம் மிகுதியாயிற்று தன்னைத் தீண்டக்கூடாதெனப் பின் வரும் பாடலைப் பாடலானுர்.

''வேண்டியபோ தின்பம்
விரும்பும் மடந்தையரைத்
தீண்டியகை யாலென்னைத்
தீண்டாதே—பாண்டியா
முல்லைக் கதிபா முகம்பார்த் தகல நின்று
சொல்லக் கடவதெல்லாம் சொல்'',

''கலையான் முலைமுடி கண்வ லைக்குள்ளாக்கும்
விலைமாதர் தாம்வரவிட் டாரோ—விலை மாதர்
கொங்கையிலே தோய்ந்தகுறைதீர தூயசிவ
கங்கையிலே நீராடி வா''

எனக் கூறினுர் என அவர்கள் வரலாற்றில் காணக் கிடக்கின்றன. இது கொண்டு பாண்டிமாதேவியின் கல்வியறிவும் வெளியாகின்றது.

வரதுங்க பாண்டியருக்கு உடன் பிறந்த சகோதரர் ஒருவர் இருந்தனர். அவர் பெயர் ''அதிவீர ராம பாண்டியர்'' என்பதாகும். அவருக்கு இளமையில் வரதுங்க பாண்டியரும், அவரது மனைவியாருமே கல்வி போதித்தனர். வயது வந்த பின், சாமிநாத தேவர் என்பவர் அதி வீர ராமபாண்டியருக்கு வித்யா குருவானுர்.

வரதுங்க பாண்டியர் தென்பாண்டி நாட்டில் ''கொற்கை'' என்னும் பதியிலிருந்து ஆட்சி செலுத்தி வந்தார்.

அதிவீர ராம பாண்டியர் தென்காசியிலிருந்து ஆட்சி செய்து வரலானுர். ''அகோர சிவாசாரியார்'' என்பவர் அவருக்குத் தீட்சா குருவாக இருந்தனர்.

''யாப்பருங்கலக் காரிகை''யைக் கசடறக் கற்றபின், செய்யுளில் ஒரு நூல் இயற்ற வேண்டுமெனும் ஆர்வம் உண்டாயது. வடமொழி அறிவும் அவருக்கு இருந்தமையால், ''நைஷதம்''என்னும் வடமொழியிலுள்ள நளன் சரிதையைத் தமிழில் பாடத் தொடங்கினுர்.

அன்றியும், தமயந்தியைப் பற்றிக் கூறிய தம்வருணனைகளை அண்ணியார் கண்டால் மகிழ்வார்கள் என எண்ணி அதனைக் காட்ட மதுரையை அடைந்து அண்ணியாரிடம் அந்நூலைக் காண்பித்தார்.

பாண்டிமா தேவியார் அதனை முழுவதும் கூர்ந்து படித்தனர். பாடல்கள் முழுவதும் கடினமாகவும், முழுவதும் வெளிப்படையாக வும் இருப்பது நன்றல்ல. பாடல் வெளிப்படை யாக இராமலும் இடையிடையே கடின பதங்கள் கலந்தும் இருக்குமாயின் மிக நல்லது என்றும் கூறினர்.

நற்சான்று பெறஎண்ணி வந்தவருக்கு அது ஏமாற்றத்தை உண்டாக்கி விட்டது. பின்னர் அண்ணனிடம் கொண்டு போய்க் காட்டினர். அவர் அப்பாடல்களைப் படித்து வெகுவாகப் பாராட்டினர். 'இது புலவர்கட்கு அவுடதம் போல் தோன்றுகிறது'' என்று பாராட்டினர்.

அத்துடன் நில்லாமல் இத்தகைய அரிய நூல் கடவுளைப் பற்றியிருந்தால் எத்துணைச் சிறந் ததாக விளங்கும். அன்றியும் திருமணம் வரை யில் விரிவாகச் சென்ற நூல் பின்னர் மிகவும் சுருங்கி விட்டதால், 'சென்று தேய்ந்து இறுதல்' என்ற குற்றமும் இதற்கு உண்டு எனக் கூறினர்.

தன் வில்லைப் பழித்த தருமர்மீது விசயன் கோபம் கொண்டது போல், தன் சொல்லைப் பழித்த தன் அண்ணன் மீது கோபம் கொண்டு போரிடத் துணிந்து, அவ்வெண்ணத்தை ஒற் றர்கள் மூலம் அண்ணனுக்கு அறிவித்தான். அதை அறிந்த வரதுங்க பாண்டியர், தம் பிக்கு அறிவு புகட்ட எண்ணிப் பின்வரும் பாடலை எழுதி அனுப்பினர்.

''செஞ்சுடரோன் மைந்தனையும்
தென்னிலங்கை வேந்தனையும்
பஞ்சவரிற் பார்த்தனையும் பாராதே
—விஞ்சி
விரதந் தனைப்பூண்டு மேதினியை
ஆண்ட
பரதனையும் ராமனையும் பார்''

''சூரிய குமாரனாகியசுக்கிரீவன் தன் அண் ணனாகிய வாலியைக் கொல்ல உதவி செய்த வன். தென்னிலங்கை வேந்தனாகவுள்ள விபீ டணன் தன் அண்ணனாகிய இராவணனைக் கொல்ல உதவி புரிந்தவன். பஞ்ச பாண்ட வரில் விசயன் தன் அண்ணனாகிய கர்ணனைக் கொன்றவன். எனவே, இவர்கள் மூவரும் சகோதரத் துரோகிகள். ஆகையால் அவர் களைப் போல் நடந்து கொள்ளாதே. தன் அண்ணனாகிய ஸ்ரீராமபிரான் வருமளவும் அயோத்தியை விட்டு 'நந்தி கிராமத்தில்' தங்கியிருந்து அவரது வருகையை நோக்கி விரதமிருந்த பரதன் போல் நீ நடந்து கொள் வாயாயின் அதுவே சகோதர வாஞ்சையாகும்'' எனக் குறிப்பிட்டிருப்பதை அதி வீர ராம பாண் டியன் கண்டனன்.

தான் போரிட்டுச் சகோதரனைக் கொல்ல நினைத்தது மகாபாபமாகும் என்னும் உணர்ச்சி கைவரப் பெற்றவராய், மதுரை வந்து, அண் ணன் காலில் விழுந்து நமஸ்கரித்து, அந்தப் பாபத்தைப் பரிகரிக்கும் பொருட்டுக் காசி சென்று கங்கையில் நீராடி அங்குச் சில நாள் தங்கினர்.

உலகிலுள்ள அனைவரும் காசி க்ஷேத்திரத் திற்கு வந்து, அங்குள்ள கங்கையில் நீராடி, பாபம் நீங்கப் பெற்றுப் பரிசுத்தவான்களாகத் திகழ வேண்டுமென எண்ணிக் ''காசி காண் டம்'' என்னும் நூலை இயற்றினர். அதனோடு அமையாது பின்னர் நாடு வந்த பின் இலிங்க புராணம், கூர்ம புராணம், திருக்கருவை பதிற்றுப் பத்தந்தாதி, திருக்கருவை வெண்பா வந்தாதி, நறுந்தொகை, வெற்றி வேற்கை முத லிய நூல்களையும் இயற்றினர்.

நைடதம் போல் வெற்றிவேற்கையும் சிறப் புடையதென்பதை உணர்ந்து ''பயிலர்'' என் னும் பாதிரியார் அதனை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்துள்ளனர்.

காசி மகாக்ஷேத்திரத்தின் மகிமையை அனைவரும் உணர ''காசி காண்டம்'' என்னும் நூலை இயற்றிய காவலனைப் பாராட்டி, அந் நூலைப் பயின்று, அதன்படி நடந்து பலரும் உய் வார்களாக.

---

# நம் சமூகமும் எதிர்காலமும்

அ. பழனியப்பன், செற்குப்பை.
செயலாளர், தனவைசிய இளைஞர்
சங்கம், இரங்கூன்.

திரைகடலோடியும் திரவியம் தேடு என்ற முதுமொழிக்கிணங்க அன்றைய நாளில் நம் சமூகத்தினர் கடல் கடந்து – குறிப்பாக பர்மா, மலேயா, சிங்கப்பூர், இலங்கை போன்ற நாடுகளுக்குச் சென்று, அந்நாட்டு மக்களோடு ஒன்றிப்பழகி, கொடுக்கல் வாங்கல் மூலமாக, அந்தந்த நாட்டுத் தரிசு நிலங்களை யெல்லாம் பொன் விளையும் பூமிகளாகவும், தேயிலை, ரப்பர்த் தோட்டங்களாகவும் மாற்றி, அவற்றிலிருந்து கிடைத்தவருவாயில், எல்லோரும்இன்புற்றிருக்க வேண்டுமென்ற பரந்த எண்ணத்தில், அறநிலையங்களும், கோவில்களும், பள்ளிக்கூடங்களும் கட்டி, சீரோடும் சிறப்போடும் வாழ்ந்து வந்திருக்கிறார்கள்.

இரண்டாவது உலகப் போருக்குப்பின் நம் சமூகத்தினரின் நிலையிலே ஒரு பெரிய மாறுதல் ஏற்பட்டு விட்டது. பிறர்க்குதவியாக அவர்கள் முன்னேறிச் செல்வதற்கு 'ஏணி' யாக இருந்த நாம், பிறரை யெல்லாம் முன்னேற்றி விட்டு கடல் கடந்த நாடுகளிலே உள்ளவர்கள், தாய் நாடு திரும்ப வேண்டிய பரிதாப நிலையிலும் இருந்து வருகின்றோம்!

காவிரிப்பூம் பட்டினத்தி லிருந்த நம் மூதாதையர்கள் அங்கு அடிக்கடி ஏற்பட்ட கடல் கொந்தளிப்பு, கடல் கோள் முதலான தொந்தரவுகளால், காவிரிப்பூம் பட்டினத்தை விட்டு இடம் பெயர்ந்து, மேட்டுப் பாங்கான இராமநாதபுர மாவட்டத்தை வந்தடைந்திருக்கிறார்கள்! கடல் கடந்த நாடுகளிலிருந்து நல்ல வருவாய் வந்த காலத்தில், வசதிக்குறைவான மேட்டுப் பாங்கான பூமியிலிருந்தாலும், எந்தக் கஷ்டமும் தெரியாமல் மாட மாளிகைகள் கட்டி வாழ்ந்து வந்திருக்கிறார்கள். ஆனால் பர்மாவில் நம்மவர்களுக்குச் சொந்தமான நிலங்களெல்லாம் தேசீய மயமாக்கப்பட்டு, அதன் தொடர் நிழலாக இன்று ஓரளவு வருவாய் தந்து வந்த வட்டித் தொழிலையும், தொடர்ந்து நடத்த முடியாதபடி பர்மிய அரசு தடைசெய்து விட்டது. இலங்கையிலிருந்தும் நம்மவர்கள் பெரும்பான்மையாகத் தாயகம் வந்து சேர்ந்து விட்டார்கள். வெளி நாட்டிலிருந்து இனிநாம் எந்த வருமானத்தையும் எதிர்பார்ப்பதற்கில்லை. இந்த நிலையிலும் நாமிருக்கும் மேட்டுப் பாங்கான பூமியில்தான் தொடர்ந்து வாழ்ந்துவர எண்ணாமல் பாரதகண்டம் முழுவதிலும் நாம் சென்று பொருளீட்ட முயல வேண்டும்.

செட்டியார்களென்றாலே வட்டிக்குக் கொடுத்து வாங்குபவர்கள் என்று தான் நம்மை எல்லோரும் எண்ணிக் கொண்டிருக்கிறார்கள். இந்த அவல நிலையை அடியோடு இனி நாம் மாற்றிக் கொள்ள முயற்சிக்க வேண்டும். நம் சமூகத்திலே எழுதப் படிக்கத் தெரியாத ஆண்களே இல்லை யென்பது எல்லோரும் அறிந்த ஒன்று. இன்று நம்மிடையே ஓரளவு விழிப்புணர்ச்சி ஏற்பட்டு, பட்டம் பெற்ற மாணவ மாணவிகளின் எண்ணிக்கை உயர்ந்து கொண்டு வருகின்றது. எப்படி நம்மிடையே படிக்காத ஆண்களே இல்லையோ, அதுபோன்று வருங்காலத்தில்

நம்மில் பட்டம் பெருத ஆண், பெண்ணே இல்லை என்ற நிலை ஏற்படவேண்டும்.

பரந்து விரிந்த 45 கோடிமக்கள் வாழும் பாரத பூமியின் ஒரு மூலையில், இராமநாதபுர மாவட்டத்திலும் புதுக்கோட்டைப் பகுதியிலும் மிகவும் குறைந்த எண்ணிக்கையோடு வாழ்ந்து வரும் நாம், நம்முடைய அறிவாலும் ஆற்றலாலும் அறம் செய்யும் தொண்டாலும், உலகமக்களுக் கெல்லாம் அறிமுகமாகி இருக்கின்ருேம். பர்மா, செய்கோன் மலேயா, சிங்கப்பூர், இலங்கை போன்ற நாடுகளில், தென்னிந்தியச்சிற்ப, ஓவியக்கலைகளில் உருவாகிய, நெடிதுயர்ந்த எத்தனை, எத்தனையோ கலைக் கோவில்கள் நம்முடைய தொண்டின் சிறப்பைப் பறைசாற்றிக் கொண்டிருக்கின்றன. அவைகளை இன்னும் நம்மவர்கள் தொடர்ந்து நடத்தி வருகிருர்கள். ''இரங்கூன் நாட்டுக் கோட்டைச் செட்டியார்களின் கோவில்கள் தர்ம பரிபாலன சபை'' யாரின் நன் முயற்சியில் இப்பொழுதும்கூட ஒரு தண்டாயுதபாணி கோவில், இரங்கூன் பசுமந்தானில் பெரும் பொருட் செலவில் புதுப்பிக்கப்பட்டு வருகின்றது.

நம் முன்னேர்கள் செய்த அறத் தொண்டின் வரப் பிரசாதமாக, நம்மவர்கள் எந்தத் துறையில் நுழைந்தாலும், பிறரைக் காட்டிலும், சீக்கிரமே முன்னேற்ற மடைந்து, பிரகாசித்துக் கொண்டு வருவது கண்கூடு. வட்டித் தொழிலையே இளைஞர்களும் தொடர்ந்து செய்ய எண்ணுமல், எல்லாத் துறைகளிலும் ஈடுபட வேண்டும்.

செட்டியார்கள் என்ருல் செட்டாக வாழ்பவர்கள் என்றுதான் நம்மை எல்லோரும் எண்ணுகிருர்கள். ஒருமுறை நம் திருமண வைபவத்தில் வந்து கலந்து கொண்டு, அதில் நாம் செய்யும் ஆடம்பரச் செலவுகளைப் பார்த்தால், மூர்ச்சித்து விடுவார்கள்! பிற எல்லாவற்றிலும், எல்லோரும் எண்ணுவது போல் செட்டாக வாழ்ந்து விட்டு, ஒருநாள் திருமண வைபவத்தில் - உற்ருர், உறவினர்களுக்காக ஒரு பங்கும், உழைக்கவரும் ஊழியர்களுக்காக இரண்டுபங்கும் உணவுப்பொருள்கள் வாங்கி, வீண் விரயம் செய்வது இன்றைய நடைமுறைக்கு ஒவ்வாதது. பெரியோர்கள் ஒவ்வொருவரும் இதில் மிகவும் கவனம் செலுத்தி, அவரவர்கள் வீட்டு வைபவங்களில் ஆடம்பரங்களைக் குறைத்தால், அது நம் சமூகம் முன்னேற எவ்வளவோ உதவியாக இருக்கும்.

நம் பெண்கள் கல்வியறிவில் முன்னேற்றமடைய நாம் பாடுபட வேண்டும். நம் பெண்கள் கேள்வி அறிவாலும், உலக அனுபவத்தாலும், தங்கள் குழந்தைகளைத் தாலாட்டும் போதும், துக்க வீட்டில் ஒப்பாரி பாடும்போதும், நல்ல கருத்துக்களை வைத்து, கவிதை நயத்தோடு பாடும் பாடல்களைப் போய்க் கேட்டுப் கவிஞர்கள் பலர் பாராட்டி இருக்கின்ருர்கள். இயற்கையிலேயே அவர்கள் பெற்றிருக்கும் ஆற்றலை வெளிக்கொணர்வதற்கு, நம் பெண்கள் ஒவ்வொருவரும் இன்றைய கல்வியில் தேர்ச்சிபெற நாம் வழி வகை செய்யவேண்டும். அதற்குக் கொப்பனுபட்டியிலுள்ள 'கலைமகள் கல்லூரி' போலப் பல கல்லூரிகள் ஏற்பட வழிகாண வேண்டும்.

நம்மை முன்னேறிய வகுப்பினராகச் சென்னை அரசு 1936-ம் ஆண்டளவில் தேர்ந்தெடுத் திருப்பதும் அதற்குக் காரணமாக இருந்த சூழ்நிலையும் வருந்துதற்குரியன. நம் மாணவ, மாணவிகள் மருத்துவக் கல்வி பயில நம் பெரியோர்கள் ஆவன செய்ய வேண்டும்.

பட்டம் பெற்ற நம் மாணவர்கள் எல்லோரும், உத்தியோகம் பார்க்கும் நோக்கிலேயே செல்ல நினையாமல், நம் பெயருக்கேற்ப 'வணிக'த் துறையிலே சென்று, முன்னேர்களிருந்தசெல்வ நிலையை அடைய வேண்டும்.

இன்று நாம் பிறர்க்கு எழுத்தறிவிக்கும் இறைத் தொண்டிலிருந்து, தொழில் அதிபர்களாகவும், பள்ளி நிர்வாகிகளாகவும், மருத்துவப் பணி புரிபவர்களாகவும், பத்திரிகை ஆசிரியர்களாகவும், பொறி இயல் வல்லுனர்களாகவும், கவிஞர்களாவும் ஓரளவுதான் இருந்து வருகின்ருேம். இந்த ஓரளவை முழுமையாக்க நாம் முயல வேண்டும்.

இருமொழிப் புலமை பெற்ற பண்டித மணி மு. கதிரேசச் செட்டியார், அண்ணுமலைப் பல்

உ

சிவமயம்

**ஆர். ராமனுதன் செட்டியார், எம். பி.** வாரணுசி

காஞெடுகாத்தான் 21-4-63

ஸ்ரீகாசியிலிருக்கும் நம் நகரச் சத்திரம் ஏற்பட்டு நூறு வருஷம் ஆவதைத் தெரிந்து மகிழ்ச்சி அடைகிறேன். இதேபோன்று நாட்டுக்கும் மக்களுக்கும் சந்திர சூரியன் உள்ளவரை நல்ல தொண்டு செய்ய எல்லாம்வல்ல இறைவனைப் பிரார்த்திக்கிறேன்.

**ராம. ராமனுதன்**

கலைக்கழகம் என்னும் அறிவாலயத்தை ஏற்படுத்திய செட்டி நாட்டரசர், செட்டி நாட்டிற்குள்ளேயே சிறந்த கல்லூரிகள் நிறுவிய டாக்டர் அழகப்பச் செட்டியார் போன்றோர்கள் நம்மிலே பலர் உருவாக வேண்டும். இன்று மதுரையம் பதியிலே கல்லூரி பல அமைத்துத் தமிழைப் பேணி வளர்ப்பதோடு, தொழில் அதிபராகவும் இருக்கும் அறிஞர் கருமுத்து தியாகராசச் செட்டியார், ராஜாசர் முத்தையா செட்டியார், மு. சித. முத்தையா செட்டியார், அ. மு. மு. முருகப்பச் செட்டியார் போன்ற தொழிலதிபர்கள் நம்மிலே பலர் பெருகவேண்டு மென்ற பேரவாவோடும், "...வேல் வணிகர் வீடுகட்கு அன்றைக்கு வந்த எங்கள் அம்மா இலக்குமி நீ என்றைக்கும் நீங்கா திரு" என்று பாடுவார் முத்தப்ப செட்டியாரவர்கள் பாடியது போல் கலைமகளும், திருமகளும், என்றென்றும் நம்மோடிருக்க நாம் ஒவ்வொருவரும் பாடுபட்டுழைக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

இன்றைய ஜனநாயக உலகத்தில் பொது வாழ்வில் (அரசியலில்) விரல் விட்டு எண்ணக்கூடிய ஒரு சிலரே நம்மில் ஈடுபட்டிருக்கின்றோம். அரசியலில் செல்வாக்குள்ளவர்களின் சமூகங்கள், எத்தனையோ முன்னணிக்கு வந்துள்ளதை நாம் கண்டு வருகின்றோம். நம்மில் பலர் அரசியல் வாழ்வில் பங்கு கொண்டு ஏன் முன்னேறக் கூடாது? அரசியலில் செல்வாக்கிருந்தால் நாம் விரைந்து முன்னேற்ற மடைவதோடு, நம் நாட்டிற்கும், உலகத்திற்கும் சேவை செய்ய வாய்ப்புண்டு. படித்த மாணவ, மாணவிகள், அரசியல், இராணுவம், விமானப்படை, கப்பல் படை முதலியவைகளிலும் சேர்ந்து முன்னேறவேண்டும்.

சிவத்தலங்களிலேயே தலைசிறந்ததாக உள்ள காசியம்பதியில் எழுந்தருளியிருக்கும் விசுவேசுவரர் - விசாலாட்சி அம்பாளுக்கு நடை பெற்று வரும் நான்கு கால பூசைகளில் மூன்று கால பூசைகளை நம்மவர்கள் தென்னுட்டு முறைப்படி, நூறு ஆண்டுகளுக்கு மேலாகச் செய்து வருவது போல், தொடர்ந்து பல நூற்றுண்டுகள் இந்நற்பணியைச் செய்து வரவும், இது போல் இன்னும் பல சிவத்தலங்களில் அறப்பணிகள் செய்யவும் நமக்குஎல்லாச் செல்வங்களையும் தந்தருள வேண்டுமாய் காசி விசுவேசுவரர் - விசாலாட்சி அம்பாள் திருவடிகளை வணங்கி வேண்டிக் கொள்கிறேன்.

# தெய்வப் பணி

என். அருணசலம் M. P , தேவகோட்டை

பாரத புண்ணிய பூமியாகிய நமது இந்திய நாட்டில் (இராமேசுவரம் அருகில்) தென் பகுதியில் வாழ்ந்து வரும் தொண்ணூற்றுறு ஊர் நாட்டுக்கோட்டை நகரத்தார் களாகிய மகுட தன வைசிய நாட்டுக்கோட்டை நகரத்தார்களான செட்டியார்கள், இன்றுபோல் போக்குவரத்து வசதி இல்லாத பல்லாண்டுகளுக்கு முன்னரே, சுமார் 152 ஆண்டுகளுக்கு முன்னதாக தங்களின் தெய்வ பக்தியும், திருப்பணித் தொண்டும், தர்ம சிந்தையும் நிறைந்த இயல்புக்கேற்ப வடநாட்டைச் சேர்ந்த ஸ்ரீ காசியில் அறநிலையமாக நகரச் சத்திரம் ஏற்படுத்தியிருப்பதுடன், மற்றும் புண்ணிய ஸ்தலங் களான பிரயாகை, அயோத்தியா, கயா, தாடகேஸ்வரம், கோதாவரி, கல்கத்தா, காளிகாட், பஞ்சவடி (நாஸிக்) போன்ற பல்வேறு இடங்களிலும் நகரச் சத்திரங்கள் நிறுவி அவ்விடங்களுக்கு யாத்திரை நிமித்தம் தொடர்ந்து போய் வந்து கொண்டிருப்பது இன்றைய தேசீய ஒருமைப்பாட்டின் எடுத்துக் காட்டு என்றே கூறவேண்டும். காசி முதல் ராமேஸ்வரம் வரை என்னும் வழக்கச் சொல்லுக்கேற்ப இந்த மேலான நோக்கத் தைத் தங்களின் செயல் மூலம் முன்பே நம் நகரத்தார் சமூகத்தினர் தங்களின் தர்ம உணர்ச்சியின் மூலம் வெளிப்படுத்தியிருக்கும் தன்மைக்கு நாம் என்றும் கடமைப்பட்ட வர்களாவோம்.

சமீப காலம் வரை கிழக்காசிய நாடுகளான பர்மா, மலேயா, சிலோன், இந்தோ சைனு போன்ற கடல் கடந்த நாடுகளிலும், பாரதத்தின் பல்வேறு திசைகளிலும் தொழில் புரிந்து தேடிய திரவியத்தின் பெரும்பகுதியை நம் நகரத்தார் சமூகம் ஆலய நிர்மாணம், சத்திரம், சாவடி, பசுமடம், நந்தவனம், அன்னசத்திரம் போன்ற அரிய பெரிய திருப் பணிகளிலும், மற்றும் ஏராளமான தெய்வப்பணிகளிலும் செலவு செய்து நம் நாட்டின் ஏனைய பிற பகுதியினர் சமூகத்தவர்களின் வாழ்த்துதலுக்கும் போற்றுதலுக்கும் உரியவர் களாக இருந்து வருகிறோம்.

தற்சமயம் உலக நிலை மாற்றத்தால் நம் நாட்டுக்கோட்டைச் செட்டியார்களின் குடும்பங்களில் பெரும்பாலானவர்கள் வருவாய்க்கு யாதொரு வழியுமின்றி அவதிப்பட்டு ஏங்கி நிற்கும் அவல நிலை மாற கடந்த நூறு ஆண்டுகளாக நம் குலத்தவர்களின் வழிபாட்டுக்கும் வந்தனைக்கும் உரியவராக இருந்து வரும் ஸ்ரீ காசி விஸ்வநாதர்— விசாலாட்சி கிருபை செய்து அருள்பாலிக்க வேண்டுமாய்ப் பிரார்த்திப்பதுடன் பெரும் புகழுக்கு உரிய இந்த நூற்றுண்டு விழாவைக் கொண்டாடும் பர்மாவிலுள்ள ரெங்கோன் ஸ்ரீகாசி நாட்டுக்கோட்டை நகரச் சத்திரம் மானேஜிங் சொசைட்டியாரையும் இந்த நூற்றுண்டு விழா மலரைச் சிறப்பாக வெளியிடும் பணியை ஏற்றுக்கொண்டுள்ள உலகம் சுற்றிய தமிழர் திரு. சோம. லெ. லெட்சுமணன் செட்டியார் அவர்களையும் பெரிதும் வாழ்த்துகின்றேன்.

# சிவ புண்ணியச் சிறப்பு

பழ. சிவ. சிவராமன்
சிவபூசைச் செல்வன், உலகம்பட்டி.

**நிலைபெறுமா றெண்ணுதியேல் நெஞ்சே நீவா
நித்தலும் எம்பிரானுடைய கோயில் புக்குப்
புலர்வதன்முன் அலகிட்டு மெழுக்கு மிட்டுப்
பூமாலை புனைந்தேத்திப் புகழ்ந்து பாடித்
தலையாரக் கும்பிட்டுக் கூத்தும் ஆடிச்
சங்கரா சயபோற்றி போற்றி யென்றும்
அலைபுனல்சேர் செஞ்சடையெம் ஆதீ யென்றும்
ஆரூரா என்றென்றே அலறு நில்லே.**

புண்ணிய பூமியாகிய நம் இந்திய நாட்டில் மூர்த்தி, தலம், தீர்த்தம் மூன்றும் முறையே திகழப்பெற்று விளங்கும் வாரணுசி என்னும் காசியம்பதியின் பெருமை அளவிடற்கரிது. அச் சிறந்த பதியில் எழுந்தருளி இருக்கும் ஸ்ரீ விஸ்வேஸ்வரப் பெருமானுக்கு, கண்மணி நீறு கவினுறப் புனைந்து ஐந்தெழுத்தோதும் நந்தன வணிகப் பெருமக்கள் "மாநுடப்பிறவி தானும் வகுத்தது மனவாக்காயம் ஆனிடத் தைந்தும் ஆடும் அரன் பணிக்காக வன்றோ" என்பதை நினைவு கூர்ந்து பல்லாண்டுகட்கு முன்பிருந்தே நித்திய பூசை முதலியன நடத்தியும் பெரும் பொருட் செலவில் சத்திரம் அமைத்து அன்பர்கட்கு உணவாதி முதலியன வழங்கியும் சத்திரத்தினுள் இலிங்கப் பிரதிஷ்டை செய்து பூசித்தும் மலர்வனம் வைத்து மாலை சாத்தியும் வருவது மிகமிகச் சிறந்த சிவ புண்ணியமாகும்.

இப் புண்ணியம் பல சென்மங்களில் தருமம் தவம் இயற்றியவர்க்கே கிட்டும் என்பதை "ஆயிரஞ்சனனம் எடுத்துமுன் தருமம் அருந் தவம் ஆற்றுநர்க் கன்றோ — பாயுமால் விடை யோற் கற்புதமாகப் பகர்சிவ புண்ணியம் பலிக்கும்" என்ற ஆன்றோர் வாக்கு வலியுறுத்து கின்றது.

ஸ்ரீ விஸ்வேஸ்வரர் பூசையில் பால் அபிஷேகம் கண்டு களிப்பது பெரும் பாக்கிய மாகும். அபிஷேகிப்போர்பால், பெருமான் மகிழ்ச்சி உற்று அருள்பாலிப்பார். "மண்டுபே ரன்பி னுன்பான் மணிமுடிக் காட்டுவோர்பால் அண்டர்தம் பெருமான் மேன்மேல் அளவிலா மகிழ்ச்சி கூரும்" என்பது பெரியோர் திரு வாக்கு.

சிவ புண்ணியச் சீலர்களாகிய நகரத் தார்கள் வடநாட்டில் உள்ள பிரயாகை, அயோத்தி, கயா, தாடகேஸ்வரம், கோதாவரி, கல்கத்தா, காளிகாட், பஞ்சவடி முதலிய இடங் களில் சத்திரம் அமைத்து ஆவன செய்து வருவது சாலச் சிறந்த சிவ புண்ணியமாகும்.

இத்துணைப் பெரும் சிவ புண்ணியங்கள் என்றென்றும் நிலைத்து நடைபெறவும், நூற்றுண்டு விழாச் சிறப்புற்றேங்கவும், அதன் ஞாபகார்த்தமான மலர் வெளிவந்து அன்பர் கட்கு இன்பம் பயக்கவும், திருவருள் புரிய வேண்டுமாய் ஸ்ரீ விஸ்வேஸ்வரப் பெருமான் திருவடிக்கமலங்களை மன மொழி மெய்களால் வந்தித்து வாழ்த்தி வணங்குகின்றேன்.

**செப்பிய வொப்பி லாத சிவதரு மங்கள் தம்மைத்
தப்பற நினைப்போம் யாமுஞ் சந்திகள் தோறும் யாரும்
இப்படியெண்ணு வார்முன் யிட்டிய வினைகள் ஓட்டி
ஒப்பிலா உமையாள் பாகன் புரத்தினி துறைவ ரன்றே.**

**சிவ புண்ணியம் சிறந்து ஓங்குக.**

# அறம் சிறந்த திருநகரம்

வித்துவான் வே. சுப்பிரமணியன்,
விரிவுரையாளர்
ஸ்ரீமத் சிவஞான பாலய சுவாமிகள் தமிழ்க்கல்லூரி,
மயிலம், தென்னார்க்காடு மாவட்டம்.

உலகம் நிலைபெறுவது உயிர்கள் நலம் பெறுவதற்காக. ஆண்டவன் தனது திருவருள் வலிமையை அறிந்து அதைத் தேடிக்கொள்ளும் வாயிலாகவே இவ்வுலகை உயிர்களுக்கு நல்கி யுள்ளான். ஏனைய கருவிகளையும் போகப் பொருள்களையும் தந்துள்ளான். இத்தனையும் கொண்டு இவ்வுயிர்கள் ஆண்டவனுக்குப் பணி செய்ய வேண்டும். தூய உள்ளத்தோடு செய்யும் பக்திப் பணியால் ஆண்டவனது திரு வருள் உயிர்கட்கு வாய்க்கும்.

இறைவன் திருவருள் பெறுதற்கு வாயில் உலகம் என்றால் உலகில் நடைபெறும் ஒவ் வொரு நிகழ்ச்சியும் அவனருளை நமக்கு அறிவிக்கும் வாயிலே ஆகும். இறைவன் தூய அறிவே வடிவானவன். அவன் எல்லா உயிர் களிடத்தும் நிறைந்துள்ளான். இறைவனுக்குப் பணி செய்தல் என்றால் இவ்வுலகத்துள்ள உயிர் கட்குப் பணி செய்தலே ஆகும். இவ்வுலகில் உள்ள உயிர்களிடத்தில் அன்பு செலுத்தி வாழ்வதே இறைபணி என்று சுருக்கமாகக் கூறலாம்.

**"ஈசனுக்கன்பில்லார் அடியவர்க் கன்பில்லார்**
**எவ்வுயிர்க்கும் அன்பில்லார் தமக்கும்**
**அன்பில்லார்"**

எனவரும் சிவஞான சித்தியாரும் இக் கருத்துப் பற்றியதே.

அன்பே சிவம் என்பது திருமூலர் திரு மொழி. அன்பு என்னும் அடிப்படைக் கல்வியைக் கற்றுத் தருவது இல்வாழ்க்கை என்னும் பள்ளிக்கூடம் ஆகும். அன்பு என்னும் சொல்லுக்கே ஒரு தனிச் சிறப்புண்டு. அன்பு என்னும் சொல்லின் முதல் இரண்டு எழுத்துக் களிலே அகர முதல் னகர இறுதிவரை உள்ள தமிழ் நெடுங்கணக்கு அடங்கிவிடவில்லையா?

ஆணும் பெண்ணும் கூட, தலைவனும் தலைவியுமாக ஆவது எதற்காக?

**"இருந்தோம்பி இல்வாழ்வ தெல்லாம்**
**விருந்தோம்பி**
**வேளாண்மை செய்தற் பொருட்டு."**

என்றார் வள்ளுவர். இல்லறத்தில் அன்பு படிப் படியாக வளர்கிறது என்பது பற்றியே அன்பை வளர்க்கும் இல்லறத்தை முதலில் வைத்தார். இல்வாழ்க்கை, வாழ்க்கைத் துணைநலம், புதல் வரைப் பெறுதல் இவற்றால் அன்புடைமை பிறக்கிறது. அவ்வன்புடைமையின் பயன் விருந்தோம்புதல் என்பதனை இல்லறவியல் அதிகார அடைவு தெளிவுறக் காட்டுகிறது. இல்லறத்தின் கனியாக முதிர்ந்து துறவறம் என்னும் பெருமரத்தின் வித்தாகத் திகழ்வது இவ்வன்பாகும்.

கம்பர் நாட்டுப்படலத்தில்,

"அற்பின் நின்றன அறங்கள்" என்றார். அன்பு இல்லாத அறம் பயனற்றது. அன்பின் வழித்தாய்ச் செய்யப்படுவதே அறம். அறம் என்றால் என்ன?

அறம் என்பதற்கு இருபொருள் கூறலாம். கடமை என்று சொல்வது ஒன்று. 'சுதர்மம்' என்று பகவத்கீதை கூறும். பிறர்க்கு ஒன்று உதவுதலாகிய ஈகை என்னும் தொழிலையும் அறம் என்பர். "ஈதல் அறம்" ஔவை வாக்கு. ஒருவன் தன் கடமையைச் செய்வது தானே உயிர்களுக்கு உதவுவதாகிறது. கடமையைச் செய்யாது சோம்பேறியாகக் கிடந்து பிறர் உழைப்பால் உண்டுகொண்

டிருப்பின் அவன் பிறர்க்கு உதவி செய்வதற்கு மாருகப் பிறர் உதவியை எதிர்பார்ப்பவன் ஆகிருன். நாவுக்கரசர் பெருமான், "என் கடன் பணி செய்து கிடப்பதே'' என்று கூறியதும் இக் கருத்துப் பற்றியே. 'கிடப்பதே' என்றது, 'பணி செய்து' என்று கூறியது சிந்தித்தற்குரியது. ஒவ்வொருவரும் தம் தம் வேலையைத் தளராது செய்யவே அது உலகத்திற் குதவுவதாக அமைகிறது. இனி பிறர்க்கு ஒன்று கொடுப்பதைச் செய்பவர்கள் நேரடி யாகவே உதவுபவர்கள் ஆகிருர்கள். இதனுல் இரண்டுமே அறம் என்னும் பொதுச் சொல் பெறுதற்குரிய பொதுத்தன்மை உடைய தாகிறது. "அறம் செய விரும்பு'' என்னும் ஆத்திசூடிக்கு இவ்விரு பொருளும் கூறுவர்.

ஆண்டவன் அருள் திருமேனி கொண்டு இவ்வுலகில் திருக்கோயில் கொண்டு எழுந் தருளிய தலங்களுள் மிகச் சிறப்புடையது 'காசி' என்னும் புண்ணியப் பதியாகும். 'காசி' என்பதை மாற்றிக் கூறின் 'சிகா' என்று ஆகும். அதாவது 'முடி' என்று பொருள். காசியே தலையாயது என்பது அதன் விளக்கம். இறக்க முத்திதரும் தலம் காசி என்பது வழக்கு. காசியில் இறந்தார்க்கு மறு பிறவியில்லை என்பர். சித்தாந்தப் பெரு நூல்களில் அருட்குருவால் ஞானுபதேசம் பெற்றன்றி வீடுபெறுதல் கூடா தென்று சொல்லியிருப்ப இறந்தோர்க்கெல்லாம் முத்தி பெறுதல் எங்ஙனம் சாத்தியமாகும் என்று கேட்கலாம். கந்தபுராணத்தில்,

**"காசி தன்னிடை முடிபவர்க் கெம்பிரான் கழறும்**

**ஆசில் தாரகப் பிரமமாம் அதன் பொருள்''**

என்று கூறினர். காசியில் இறக்கின்றவர்களுக் கெல்லாம் இறைவனே அருட்குருவான பிரணவ ஞானுபதேசம் செய்கிருன் என்ருல் அதைவிடச் சிறந்த பேறு நல்கும் தலம் வேறென்று உண்டோ? தர்மத்துக்கெல்லாம் தலைவனுகத் தரும விடையினை ஊர்ந்துவரும் பெருமான் அவன். அவன் அடியை அடை விக்க வல்லது அத் தருமமே அன்ருே. அதனுலேயே அன்று முதல் இன்றுவரை காசி தருமத்துக்குச் சிறப்பிடம் ஆயிற்று. காசிக்குச் செல்கிறவர்கள் கங்கைக் கரையில் தர்மம் செய்வர்.

ஆடவன் ஒருவன் ஒரு பெண்ணைக் காதலித்தான். கனவில் கூடினுன். பின்னர் அவளை மீண்டும் மீண்டும் சந்தித்தான். சந்திப்பதற்கு உதவியாக அந்தப் பெண்ணின் தோழியைத் துணையாக்கிக்கொள்ள நினைத் தான். அவளிடத்திலே சென்று தன்னுடைய குறையைத் தெரிவித்துக்கொண்டான். அந்தப் பெண்ணும் இவ்விருவருடைய களவுக் கூட்டத் தைக் குறிப்பாக அறிந்துகொண்டவள். அதனுல் முதலில் சிறிது அவனுக்கு மறுத்தாற் போலப் பேசினுள். பின்னர் அவன் மேலும் வேண்டினுன். அவன் குறையை அவன் காதலிபால் சொல்வதாக ஒப்புக்கொண்டாள் தோழி. எல்லாம் தெரிந்து முடிக்க நிற்பவள் அவள். எல்லாவற்றிலும் விருப்பம் இருந்தும் தோழிக்குத் தெரிந்ததுபோல் காட்டிக்கொள் ளாமல் ஒதுங்கி நடக்கிருள் அத் தலைவி.

ஒரு நாள் அத் தலைவன், தலைவியும் தோழியும் சேர்ந்து இருந்த நேரத்தில் வந்தான். தலைவியை நோக்கினுன். பின்னர்த் தோழி யிடம் "கண்ணுக்கு நிறைந்த அழகுடைய மகளிரைக் கண்டவர்களுக்கு அப் பெண்டிர் நிறைந்த இன்பத்தைத் தராது காமநோயை மிகுவித்து உயிர்போகும் துயரைச் செய்தல் பெண் தன்மையல்ல'' என்று சொல்லி உருகி நடுங்கினுன். மனம் உடைந்து உள்ளே உள்ளே உருகுகின்றவன் போல் இருந்தான். இதனைக் கண்ட தோழி தலைவியிடத்து "இவன் இங்கு வந்து என்ன காரியம் செய்தான். நாம் இவனுக்கு உதவ வேண்டாமா'' என்று கேட்டாள்.

அதற்கு அந்தத் தலைவி "யாரோ ஒருவன், நமக்கும் அவனுக்கும் யாதொரு தொடர்பும் இல்லை. துன்பப்படுகிருன்; நம்மாலே அவன் துன்பப்படுவதாக நினைத்து உதவ வேண்டும் என்று சொல்கின்ருயே. இது யாருடைய வேலை. ஒரு தொடர்பும் இல்லாத புதியவர்கள் துன்புற்ருல் அவர்களது துன்பத்தை நீக்கி உண்டியும் உறையுளும் கொடுத்துப் பாது காப்பது காசியில் உள்ளவர்கள் செயல் அல்லவா? அவ்வாறு காசியில் உள்ளவர் களுக்குச் சொந்தமான பெரிய அருளுடை மையை நீயும் நினக்கு உரியதாக்கிக்கொண்டு உனக்குச் சம்பந்தம் இல்லாதவற்றையெல்லாம்

**கோ. பூவராகன்**

செய்தித்துறை அமைச்சர்

செயின்ட் ஜார்ஜ் கோட்டை
சென்னை-9
15-7-1963

விடாமுயற்சியுடன் முனைந்து பொருளீட்டுவதிலும், தேடிய பொருளைத் திருப்பணிகளுக்கும் அறப்பணிகளுக்கும் செலவிடுவதிலும் நாட்டுக்கோட்டைச் செட்டியார்கள் முன்னணியில் நிற்கின்றனர். ஸ்ரீ காசியம்பதியில் நகரச் சத்திரம் ஏற்படுத்தி, மூன்று காலப் பூஜைக்கும் உணவுக்கும் வகை செய்து அதனை நூறு ஆண்டு காலமாகச் சிறப்பாக நடத்தி வருவது, அவர்களது திருப்பணிகள் அனைத்திலும் தனிச் சிறப்பு வாய்ந்ததாகும்.

காசி, இராமேஸ்வரம் போன்றவை இந்த நாட்டின் மிகப் புனிதமான திருத்தலங்கள் மட்டுமல்ல; இமயம் முதல் குமரி வரை பரந்துள்ள இந்த நாட்டின் பல்வேறு பகுதிகளையும் சேர்ந்த மக்கள் வந்து சந்திக்கும் மையமாகவும், இப் புண்ணிய நாட்டின் பொது ஆன்மநேயத்தை உணர்த்தும் கேந்திரங்களாகவும் இவை விளங்குகின்றன. வட இந்தியாவில் தற்சமயம் ஒன்பது திருத்தலங்களில் நகரச் சத்திரங்கள் இருந்து வருகின்றன. மக்களிடையே ஒற்றுமையும், அருள் உணர்வும் வளர இந்த அமைப்புகள் வெகுவாக உதவக்கூடியவை.

ஸ்ரீ காசி நாட்டுக்கோட்டை நகரச் சத்திர நூற்றாண்டு விழா மங்களகரமாக நிறைவேறவும் இத் திருப்பணியும், இதுபோன்ற வேறு திருப்பணிகளும் மேலும் மேலும் வளரவும், ஸ்ரீ காசி விஸ்வநாதர் அருள் முன்னின்று உதவப் பிரார்த்திக் கிறேன்.

**கோ. பூவராகன்**

உன் மேற்கொள்கின்றாயே? இது என்ன" என்றாள்.

**" தெருவின் கண்,**
**காரணமின்றிக் கலங்குவார்க் கண்டுநீ**
**வாரணவாசிப் பதம் பெயர்த்தல் ஏதில**
**நீ நின்மேற் கொள்வ தெவன் "**

(கலி, 60, 12-15)

வாரணவாசி என்பது காசியின் மறுபெயர். வாரணாசி எனவும் கூறுவர்.

அறத்துக்குச் சிறப்பிடம் காசி என்பதும், காசியில் உள்ளவர்கள் பெரிய அருளாளர்கள் என்பதும், அவர்கள் பிறர் நோயும் தம் நோய் போற் போற்றி அறனறியும் சான்றவர்கள் என்பதும், தம்மோடு ஒரு சிறிதும் தொடர்பில்லாதவர்களுக்கும் உதவி செய்யும் இயல்பு படைத்தவர்கள் என்பதும், சங்க நூல்களில் ஒன்றான கற்றறிந்தார் ஏத்தும் கலியில், கபிலர் என்னும் புலவர் பெருமான் அருளிச் செய்த குறிஞ்சித்திணைப் பாடலில் சொல்லப்பட்டதிலிருந்து விளங்குகிறது.

சங்க காலத்தே தமிழ் மக்களால் காசி எவ்வாறு அறியப்பெற்றது என்பதற்கு இவ்வொரு சான்றே போதும். அறத்தின் சிறப்பிடம் காசி என்று மற்றவர்கள் சொன்னால் அவ்வளவு சிறப்பாகாது. அறத்தின் பிறப்பிடமாக விளங்கும் தமிழக மக்கள் கூறுவது மிகவும் சிறப்புடையதாகும். தமிழ் மக்களை 'அரவர்' என வழங்கியதற்குப் பலர் கூறும் காரணங்களைக் குறிப்பிடும் வகையில் கால்டுவெல் "அறம் மலிந்த நாட்டில் வாழ்ந்த மக்கள் ஆதலின் அரவர்கள் என்று அழைக்கப்பட்டார்கள் என்று சிலர் கூறுவர்" என்று எழுதியுள்ளமையும் கருதுக. அறம் என்னும் கயிறு காசியையும் இராமேசுவரத்தையும் பிணைக்கிறது.

அன்பு வளர்ந்தால் அறம் வளரும். அறம் வளர்ந்தால் அருள் செழிக்கும். அருள் செழித்தால் பேரருளாளனாகிய இறைவனின் திருவருள் பழுத்து நமக்கு அனுபவம் ஆகும். செம்மை சான்ற சிவபோகப் பெருவாழ்வை அளிக்க வல்ல காசியைத் தமிழ்நாடும் தமிழக மக்களும் அன்றும், இன்றும், என்றும் ஏற்றிப் போற்றுவர். ★

## குமுதம் சந்தா விவரம்

| | இந்தியா. | இலங்கை. | பர்மா, மலாயா, வெளிநாடு. |
|---|---|---|---|
| ஒரு வருடம் | ரூ. 12—00 | ரூ. 15—00 | ரூ. 18—00 |
| ஆறு மாதம் | ரூ. 6—00 | ரூ. 7—50 | ரூ. 9—00 |

மூன்று மாதச் சந்தா கிடையாது.

**குமுதம்,** தபால் பெட்டி 1008, சென்னை-10.

# श्री काशी नाट्टुकोट्टै नगर छत्रम् वाराणसी का संक्षिप्त परिचय

शस्य श्यामला भव्य भारत के तमिलनाड़ (मद्रास) में नाट्टुकोट्टै चेट्टियार या नगरत्तार एक धनिक वर्ग है, जिनका मुख्य व्यवसाय व्यापार है, जो समस्त भारत तथा सुदूर पूर्व के देशों से सम्बन्धित है। यह नगरत्तार वर्ग ही दक्षिण भारत के मन्दिरों का निर्माता माना जाता है।

सन् १९२० से ही नाट्टुकोट्टै चेट्टियार भगवान् विश्वनाथ की दिन में तीन बार क्रमशः ४ बजे, ११ बजे, और ९ बजे सुन्दर भावभरी पूजा करते हैं। छत्रम् ने विश्वनाथ भगवान् की उपासना के लिए एक धर्मार्थ संस्था इसी निमित्त स्थापित की है। यह उपासना इतनी प्रसिद्ध हुई कि भक्त विश्वनाथजी के दर्शनों के साथ साथ सायंकालीन आरती (बड पूजा या अर्थ पूजा) में उपस्थित होते हैं।

उपरोक्त त्रिकाल पूजा, विश्वनाथ और मठेश्वरी अन्नपूर्णा की उपासना १५० वर्षों से अभी तक निर्विघ्न रूप में ही सम्पन्न की जाती है। इसकी निरन्तरता का प्रमाण इस बात से ही पता लग जाता है कि १९४२ 'के भारत छोड़ो' आन्दोलन या बनारस के कर्फ्यू के दिनों में भी इस संस्थाने जिलाधीश से विशेष आज्ञा प्राप्त कर अपने विभागीय व्यक्तियों को मन्दिर में जाने की सुविधा प्राप्त की थी। आरती से पूर्व दूध, घी, शहद, चन्दन तथा गुलाबजल आदि वस्तुओं से अभिषेक किया जाता है। उपासना काल में नादस्वरम् या दक्षिण भारतीय शहनाई का प्रयोग किया जाता है। यह एक अनोखा वाद्य यन्त्र दक्षिण भारतीय मंदिरों में बहुत बजाया जाता है। इस उपासना की निरन्तरता के लिए छत्रम् ने सवेतन भारतीय ब्राह्मणों और अन्यों का एक विभाग खोल रखा है। छत्रम् के द्वारा नाट्टुकोट्टै चेट्टियारों ने विश्वनाथ मंदिर को रजतपात्र, साज सामग्री, बहु-मूल्य आभूषण दान में दिये हैं। भगवान् का दैनिक भोज (चढ़ावा) शोभायात्रा के रूप में लाया जाता है। छत्रम् के कोष से ही विश्वनाथ मंदिर के भोजनालय का निर्माण किया गया है। नाट्टु-कोट्टै चेट्टियारों की दानशीलता और भक्ति का परिचायक विशालाक्षि मंदिर है जिसके निमित्त काशी नरेश ने एक प्लाट दान में दिया, जिस पर आज यह मंदिर स्थित है।

विश्वनाथ मंदिर में भेंट स्वरूप चढ़ाये जानेवाले फूलों की दैनिक पूर्ति के लिए छत्रम् एक पुष्प वाटिका का संचालन करती है। एक गौशाला शताब्दी से चलाई जा रही है। १९४१ से पूर्व देव के अभिषेक के लिए नियमानुसार अच्छा दूध एक दूधिया दे जाता था।

छत्रम् का अपना शानदार भवन बनारस के समीप गोदौलिया में है जिसका भव्य समारोह २४ अगस्त १८६३ को किया गया था। उसका शताब्दी महोत्सव अब मनाया जायेगा।

साधु, सन्यासी, स्वामी तथा गरीबों को प्रतिदिन भोजन कराने का छत्रम् का नियमित कार्य बहुत अच्छे रूप में होता था, परन्तु १९४२ में भारत और बर्मा के बीच आवागमन अवरुद्ध होने से

रंगून से चेट्टियारों से प्राप्त होनेवाली दानधारा भी बन्द हो गई। उसके बाद भी स्थिति उपयुक्त न होने से अन्नदान अब छोटे रूप में किया जाता है। किन्तु अन्य सभी कार्य उसी रूप में किये जाते हैं।

छत्रम् के सीमा-प्रान्त में ही तमिलनाड़ के मंदिरों की भांति नरेश्वर मंदिर स्थापित है। यहाँ प्रत्येक मास के कार्तिक के दिन भक्तों को दर्शन देने के लिए भगवान् सुब्रमण्यम् बाहन चांदी के मोर पर स्थापित किये जाते हैं।

युगों से भारत तथा अन्य संसार के हिन्दू काशी के प्रति आकर्षित रहे हैं। आवागमन की सुविधा से मद्रास तथा लंका के हजारों यात्री इस पवित्र नगरी में आते हैं। नाट्टुकोट्टै छत्रम् उन सभी यात्रियों के लिए एक घर के समान है जो साल भर तक बड़ी भारी संख्या में यहाँ एकत्रित होते हैं।

छत्रम् के आवास स्थान, भोजनालय, भोजनशाला, प्रार्थना भवन, प्रांगण हैं जहां भगवान् विश्वनाथ के अभिषेक के लिए शुद्ध गंगा का पानी प्रयाग से लाकर एकत्रित किया जाता है।

यात्रियों के अतिरिक्त हिन्दु विद्यार्थियों को भी छत्रम् में आवास का स्थान दिया जाता है, जो बनारस हिन्दू विश्वविद्यालय की वैदिक हिन्दी तथा अन्य विषयों की परीक्षाओं में बैठते हैं, कुछ निर्धन छात्र जिनका छत्रम् ने पोषण किया था, अब विश्वविद्यालय में प्रसिद्ध विद्वानों के नाते संस्कृत तथा भाषा विभाग में कार्य कर रहे हैं। यह छत्रम् मद्रासवासियों के विभिन्न कार्यों और समारोहों (पितरों को श्रद्धाञ्जलि अर्पित) को सम्पन्न कराने में सहायक होता है। छत्रम् द्वारा गंगा का स्वच्छ पानी तमिलनाड़ के अनेक देवालयों तथा व्यक्तिगत रूप मे भारत तथा विदेश भेजा जाता है।

विश्वनाथ मन्दिर के लिए दान के रूप में छत्रम् की अपनी ५० लाख की सम्पत्ति है। मंदिर के नाना विवादों को सुलझाने का कार्य भी १९३० में छत्रम् ने किया। दोनों दलों की प्रार्थना पर छत्रम् ने ६ साल इसके कार्यों का अवलोकन किया।

बनारस के सिवाय छत्रम् की अन्य शाखायें उत्तरप्रदेश में अयोध्या, प्रयाग, बिहार में गया, पश्चिमी बंगाल में कलकत्ता, कालीघाट और तारकेश्वर महाराष्ट्र में नासिक, पंचवटी और आंध्रप्रदेश में गोदावरी (राजमुंदरी) हैं। युद्ध के दिनों में हरिद्वार में एक किराये के मकान में छत्रम् की स्थापना की गई थी।

यह छत्रम् एक राष्ट्रीय महत्व की संस्था है और राष्ट्रीय एकता में सहायक है। छत्रम् का प्रबन्ध कलकत्ते के चेट्टियारों द्वारा किया जाता है। १९३४ में रंगून में एक प्रबन्ध कर्तृ सभा अंकित की गई। परन्तु युद्ध के दिनों में छत्रम् का प्रबन्ध काराइकुड़ी की स्थानीय समिति करती थी। भेंट और उपहार सैगोन, मलाया और बर्मा के चेट्टियार व्यापारियों से भी प्राप्त होते हैं।

सारा धन निश्चित कार्यक्रमों में लगा दिया जाता है। काशी के करुणालय, विनयी विश्वनाथ से यही कामना है कि वह नाट्टूकोट्टै नगर छत्रम् के कार्यों तथा उपासना को सदा समृद्ध करे और हमारी उससे करबद्ध यही प्रार्थना है कि वह इस को विकसित करे क्योंकि यह सम्पूर्ण संस्था केवल उसकी करुणा और कृपा पर स्थित है।

—: * :—

# माननीय श्री प्रकाशम जी की संदेश

श्री नाट्टुकोट्टै नाम का सत्र काशी में बहुत दिनों से प्रसिद्ध रहा है। तमिलनाड की प्रतिष्ठित जातियों में से नाट्टुकोट्टै है, और इसकी तरफ़ से सारे देश में बहुत से धार्मिक कृत्य होते रहते हैं। आज से करीब डेढ़ सौ वर्ष पहले काशी में इस सत्र की स्थापना हुई और आजतक नियमित रूपसे प्रातःकाल, मध्याह्न और सायंकाल के समय काशी विश्वनाथ जी में इसकी तरफ से पूजा, आरति आदि का सुप्रबंध चला आ रहा है। अपने देश में परम्पराएँ बहुत जल्दी टूट जाती हैं, और यह विशेष संतोष और प्रसन्नता की बात है कि जब तक इस नगर सत्र का प्रबंध सुव्यवस्थित रूपसे इतने दिनों से बिना किसी व्यतिक्रमके जारी रहा।

आज से सौ वर्ष पहले अर्थात् १८६३ में काशी के गोदौलिया नामके स्थान पर सत्र का भवन बना था, और उसकी शताब्दी मनायी जा रही है। इस शुभ अवसर पर मैं इनके कार्यकर्ताओं को हार्दिक बधाई देता हूँ, और मेरी यही शुभ-कामना है कि इनका कार्य दिन प्रतिदिन उन्नत होता रहे, और इसके द्वारा अधि-काधिक नर-नारियों को लाभ सदा पहुँचे।

यद्यपि भारत में बहुत सी भाषाएँ बोली जाती हैं, और विविध प्रकार के आचार-विचार प्रचलित हैं, पर इसकी आन्तरिक और सांस्कृतिक एकता और समता युग युगान्तरों से चली आ रही है। काशी में सुदूर दक्षिण के नाट्टुकोट्टैवालों का सत्र इसका प्रमाण है। काशी की महिमा दक्षिण में बहुत है। थेनकाशी, शिवकाशी आदि नाम इसके नगरों के हैं। तमिलनाड के निवासियों की यही इच्छा रहती है कि यदि काशी में मृत्यु न हो तो मरणोपरान्त उनकी अस्थियों का विसर्जन काशी की गंगा में ही किया जाय। जो इसका तिरुक्कुकुन्ड्रम् नामका प्रसिद्ध देवस्थान है वहाँ प्रति दिन मध्याह्न में दो सफेद चील्हें आती हैं, और भोजन पाकर चली जाती हैं। वहाँ के स्थलपुराण के अनुसार यहाँ के लोगों का यह विश्वास है कि प्रतिदिन यह पक्षी प्रातःकाल काशी से चलते हैं, और मध्यान्ह का भोजन तिरुक्कु-कुन्ड्रम में कर रामेश्वर चले जाते हैं। यह अद्भुत दृश्य प्रति दिन देखा जा सकता है। ऐसी कितनी ही कथाएँ स्थान स्थान पर प्रसिद्ध हैं। यह सत्र अपने देश की वास्तविक एकता को सिद्ध करती हैं।

मेरी आज यही हार्दिक अभिलाषा है कि काशी के नाट्टुकोट्टै सत्र के द्वारा इन सुन्दर भावों का सदा प्रसार और प्रचार होता रहे, और काशीनिवासी भी यह अनुभव करें कि दूर दक्षिण से हमारे धार्मिक भाईयों ने काशी के विश्वनाथजी की दिन प्रतिदिन की पूजा अर्चना का सुप्रबंध किया है। हमें उनके प्रति अनुगृहीत होना चाहिए, और उनका उदाहरण ग्रहण कर हमें भी दक्षिण के प्रति हार्दिक सद्भाव रखते हुए कुछ ऐसा काम स्थायी रूपसे करना चाहिए जिससे वे हमें अपना ही समझें। ईश्वर नाट्टुकोट्टै नगर सत्र के कार्यकर्ताओं को प्रसन्न और स्वस्थ रखें, और उनके द्वारा हमारे धर्म, देश और समाज की पुष्टि और समृद्धि होती रहे।

९, बल्लूपुर,
देहरादून।

श्री प्रकाश

दिनांक ६ जून १९६३.

# गोदावरी

**"गङ्गा च यमुनाचैव गोदावरि सरस्वती ।**
**नर्मदा सिन्धु कावेरी....    ....    ...." ॥**

इन सात पुण्य नदियों में गोदावरी एक है। जैसे उत्तर भारत में गङ्गा वैसे ही दक्षिण में गोदावरी पवित्र मानी जाती है। यह महाराष्ट्र में नासिका - त्र्यंबक के पास पैदा होकर आंध्रदेश को अपने पवित्र स्पर्श से स्वर्ण भूमि बनाती हुई पूरब के बंगाल की खाडी में मिल जाती है। शबरी, किन्नेरसानि, इन्द्रावती आदि इसकी उपनदियाँ हैं।

जीवन शब्द के संस्कृत में दो अर्थ हैं, प्राण और पानी। प्राणियों को ज़िंदा रखने में हवा के बाद पानी का प्रमुख स्थान सर्वविदित है। नदियां प्राणियों को जीवनदान करती हैं, अर्थात पानी भी देती हैं और साथ साथ जीवन थी। इस दृष्टि से देखा जाय तो सभी नदियां प्राणियों को इहलोक संबंधी यात्रा (जीवनयात्रा) में एक रास्ता दिखाती ही हैं। गङ्गा, गोदावरी आदि कुछ पुण्य नदियाँ तो इहलोक में रास्ता दिखाने के अलावा परलोक की भी पथप्रदर्शिका होती हैं।

तेलुगु में एक कहावत है कि—"ए दारि अंटे गोदारि" अर्थात जीवन में ठीक रास्ता न पाकर भटकनेवालों को गोदावरी ही शरण्य व पथप्रदर्शिका है। गङ्गा तो गोदावरी की तरह मुक्तिप्रदात्री तो है मगर जितना गोदावरी का जल खेतों तक पहुँच कर धरती को सस्यश्यामला बनाता है उतना गङ्गाजी का नहीं। इस प्रकार गोदावरी के बारे में यह कहावत सर्वथा सार्थक है।

राजमहेंद्रवरम के पास विज्जेश्वरम, बोब्बरिलंका, और धवलेश्वर मनामक स्थलों पर इस नदी पर एक विराट बांध का निर्माण हुआ। यहां तक अखण्ड गौतमी है। इस स्थान से विभिन्न स्थलों पर गोदावरी सात शाखाओं में अलग होकर समुद्र में मिलती है। यही सप्तगोदावरी कहलाती है वसिष्ठा, गौतमी, कौशिकी, वैनतेया आदि कुछ प्रमुख शाखाएं हैं। इस नदीजल के कारण इस प्रान्त में धान्य प्रचुरमात्रा में पैदा होते हैं। अथवा यों कहें कि गोदावरी मिट्टी से सोना निकाल कर इस सारे प्रान्त को स्वर्णभूमि बना देती है।

अपनी प्राकृतिक शोभा के कारण भारत का नाम सर्वोपरि है। पूरब और पश्चिम की पर्वत पंक्तियां, दण्डकारण्य और गोदावरी मिलकर जिस अपूर्व प्राकृतिक सौंदर्य का समावेश हुआ वह असीम सौंदर्य कलम और कागज की सीमाओं में कभी बंदी होनेवाला नहीं है। अगर कोई ऐसा प्रयत्न भी करे तो वह उसकी उसके प्रति भक्ति और श्रद्धा का ही द्योतक हो सकता है अन्यथा वह धृष्टता ही होगा।

समर्थ और सज्जन व्यक्ति को खुद संकटों को पार कर साथ साथ दूसरों को भी पार कराना चाहिए। इसी से कहा गया कि—

"स्वयं तीर्णः परांस्तारयेत्"

नदियाँ अपनी गति में वेग के साथ आगे बढ़ती हैं और अन्त में सागर संगम रूपी चरमलक्ष्य की सिद्ध भी उनको प्राप्त होती है। ये जलदान से प्राणियों की जीवनयात्रा में सहारा देती हैं और साथ साथ अपनी पवित्रता के कारण सकल सृष्टि गम्य उस विश्वेश्वर की अनन्त ज्योति तक उनको पापों से मुक्त कराकर, संकटों को पार कराकर पहुँचाती हैं। तीर्थराज प्रयाग में त्रिवेणी संगम की महत्ता, वाराणसी के पास गङ्गाजी की विशिष्टता और दक्षाराम के निकट सप्तगोदावरी की सर्वोत्तमता आदि इस तथ्य के साक्षी हैं।

पहले नदियों के ही किनारे गांवों का निर्माण हुआ। कुछ स्थान पवित्र माने जाने के कारण तीर्थस्थान बन कर विख्यात हो गये हैं। गङ्गा के किनारे वरणासी, जमुना के किनारे मथुरा, गोदावरी के किनारे दक्षाराम आदि अति पवित्र तीर्थस्थान हैं।

गोदावरी के किनारे भी कई तीर्थस्थान हैं। इन में दक्षाराम नामक शैवक्षेत्र और भद्राचलम नामक वैष्णवक्षेत्र प्रधान हैं। अखण्डगौतमी के किनारे भद्राद्रिरामालय है। राजमहेंद्रवरम के पास कोटिलिङ्गघाट के यहा कोटिलिङ्गेश्वर का आलय है। निरतान्नदान और ईश्वर का नित्ययोग आदि इस स्थान के विशेष गुण हैं। गौतमी के पूर्वी किनारे पर क्षणमुक्तेश्वर और पश्चिमी किनारे पर कोटिफलि (कोटिपल्लि) नामक क्षेत्र हैं। काकिनाडा के पास गौतमी जहाँ समुंदर में मिलती है, वहाँ चोल्लंगि नामक क्षेत्र है। हर साल पुष्य बदी अमावास्या को इधर बडा भारी उत्सव होता है। इन्द्रावती और गोदावरी जहां मिलती हैं वहाँ कालेश्वर का मंदिर है। सब से विशिष्ट क्षेत्र है दक्षारम, जहां सप्तगोदावरी अन्तर्वाहिनी होकर बहती है।

दक्षाराम नाम सम्बंधी एक पौराणिक कथा है। एक बार शिवजी ने कैलास पर सभी देवताओं की सभा की। सभापरिसमाप्ति के बाद सारे देवता सम्मानपूर्वक अपने अपने स्थान भेजे गये। मगर शिवजी ने अपने ससुर दक्षप्रजापति के बारे में इस विषय में कुछ उपेक्षा की। दक्ष को यह अपमान सा लगा और उसने उसका प्रतीकार करना चाहा। बाद में दक्ष ने एक विराट यज्ञ किया, शिवजी के सिवा सभी बुलाये गये। दक्ष की पुत्री और महादेव की पत्नी सती देवी भी यज्ञ देखने आयी। सब के बीच सती के आगे दक्षने शिवजी की निन्दा की। पतिव्रता-शिरोमणि सतीदेवी पति निन्दा कानों में पड़ने के कारण योगाग्नि में भस्म हो गयी। क्रुद्ध ईश्वर की क्रोधाग्नि से वीरभद्र का जन्म हुआ और उसने दक्षयज्ञ का सर्वनाश कर दिया। तब दक्ष ने अपनी भूल और ईश्वर की महत्ता को समझ कर पश्चात्ताप के साथ शिवजी के प्रति तप किया और अपने नाम से दक्षेश्वरलिङ्ग की प्रतिष्ठा भी की। दक्ष तो नाम से दक्ष हो सकता है मगर ईश्वर की शक्ति के सामने उसकी दक्षता की गणना ही क्या है! समुद्रलंघनकारी हनुमानजी से उछलने कूदने में स्पर्धा कौन करे।

उपर्युक्त दक्षसम्बंधी कहानी का रंगस्थल होने के कारण ही वह स्थान दक्षाराम नाम से प्रसिद्ध हुआ।

दक्षाराम की विशिष्टता बहुत प्रसिद्ध है। पहले कहा जा चुका है कि इस क्षेत्र में सप्तगोदावरी अन्तर्वाहिनी होकर बहती है। यह दक्षिणकाशी कहा गया है। मुनिवर अगस्त्य और व्यास को जब कारणवश काशी छोड़ कर दक्षिण में जाना पड़ा तब काशीवासत्याग में उनको बहुत खेद हुआ। उन मुनियों के व्यथित हृदय को सांत्वना देने में यही दक्षिणकाशी दक्षाराम समर्थ हुआ।

गोदावरीखण्ड और काशीखण्ड स्कन्दपुराण के अन्तर्गत हैं। इन दोनों को क्रमशः भीमखण्ड और काशी खण्ड के नाम से श्रीनाथ महाकवि ने तेलुगु भाषा में अनुवाद किया। गोदावरी प्रान्त से सम्बद्ध होने के कारण यह गोदावरीखण्ड कहा गया और अनुवाद में दक्षाराम के भीमेश्वर की महत्ता के प्राधान्य से यही भीमखण्ड-नामांकित हुआ।

एकबार व्यासजी ने कई दिन भिक्षा न पाकर काशी की निन्दा की। इसी से कहा गया कि—

" बुभुक्षितः किं न करोति पापम् "

शिवसम्मानिता काशी की निन्दा करने के कारण व्यासजी को काशी छोड़नी पडी। व्यथित हृदय व्यास कष्ट से काशी छोडकर दक्षिण मे चला गया। उधर अगस्त्यमुनि ने दक्षिण काशी दक्षाराम की महिमा का वर्णन कर उनको सान्त्वना दी। एक तरह से दक्षारम और काशी में कोई अंतर ही नहीं दीखता है।

दक्षाराम का भीमेश्वर ही काशीवासी विश्वेश्वर है, उधर की सप्तगोदावरी ही गङ्गा है। दक्षारम के गणपति दण्डपाणीश और भैरव क्रमशः काशी के ढुंढिविनायक, दण्डपाणीश्वर और कालभैरव हैं। अब दक्षाराम और काशी में अंतर ही क्या रहा गया। दोनों समान ही हैं।

मेरुगिरि से स्पर्धा करके विन्ध्याद्रि एक बार बेरोकटोक बढ़ने लगा। उसके कारण सूर्य, चन्द्र आदि की गति में बाधा हुई और सारी सृष्टि में हलचल पैदा हुई। उस हालत में उस विन्ध्य के गर्वापहरण के लिये सारे देवताओं से अगस्त्य ही समर्थ माना गया। विबुध-प्रार्थित अगस्त्य काशी छोडने में बहुत दुःखी होते हुए भी परहितभावना से प्रेरित होकर दक्षिण की ओर रवाना हुआ। उनके शिष्यरूपी विन्ध्यगिरिने ने उनके आगमन के समय नतमस्तक होकर प्रणाम किया। तब अगस्त्य ने उससे कहा कि " जब तक मैं लौट आऊँ तब तक इसी तरह (नतमस्तक) रहो।" ऐसा कह कर अगस्त्य ने नाना तीर्थों का संदर्शन करते दक्षिणकाशी दक्षाराम पहुँचा। दक्षिणकाशी को देखते ही काशी-परित्यागजनित उनका संताप सारा निर्मूल होकर उनको शान्ति मिली।

अगस्त्य तीर्थयात्रा प्रसंग में इसमें भी गोदावरी प्रान्त के कई तीर्थस्थानों का प्रचुर वर्णन मिलता है।

गोदावरी तीर के भद्राचलक्षेत्र के बारे में भी एक छोटी सी कहानी है। वनवास के समय एकबार दण्डकारण्य में थके हुए रामचन्द्र को विश्रामप्रदान के रूप में एक पाषाण ने उपकार किया। प्रसन्नचित्त रामचन्द्र से उसने रामभक्त होने का वर मांगा। फलतः वह मेरु की सन्तान होकर पैदा हुआ। उसका नाम 'भद्र' रखा गया। भद्र ने राम के प्रति तपस्या की। रामचन्द्र प्रसन्न हुए। भद्र भद्राचल हुआ। और उस भक्त की कामना के अनुसार तब से उस भद्राचल पर

श्रीरामचन्द्र सीता और लक्ष्मण के साथ रहने लगे। हर साल इधर रामनवमी को सीताराम-विवाह का उत्सव बहुत वैभव से किया जाता है।

गोल्कोण्डा के बादशाह तानीषा के यहाँ कर्मचारी कंचेर्ल गोपन्न ने रामभक्त होकर इस भद्राद्रि के राम, सीता और लक्ष्मण को कई गहनें बनवाये। सरकारी खजाने के रुपये खर्च करने के कारण वह बादशाह से दंडित होकर कैद किया जाता है। तब भक्तवत्सल राम और लक्ष्मण ने वेष बदलकर तानीषा के पास जाकर उसका धन अपने भक्त की ओर से वापस दे दिया। वही गोपन्न रामदास के नाम से विख्यात हुआ। रामभक्ति से ओतप्रोत उनके गीत आज भी भक्त-जन-प्रिय होकर प्रचार में हैं।

ऐसे पुण्यक्षेत्रों से युक्त यह गोदावरी जगद्रक्षक श्रीरामचन्द्रजी के वनवास के समय सीता, राम और लक्ष्मण के सुख-दुःखों की साक्षी भी रही। प्रख्यात नाटककार भवभूति के उत्तररामचरित में इसका विस्तृत वर्णन है। राम का पंचवटी में भी रहना, उनसे जनस्थान में राक्षसों का संहार होना आदि सभी इसी नदी के पर्यवेक्षण हुये थे।

पंचवटी में राम के वनवास का समय गुजर-गया। रावण आदि के संहार के अनन्तर सीता-सहित राम अयोध्या पहुँच गया। बाद में मिथ्यापवाद के कारण रामचन्द्रजी ने सीता का परित्याग कर दिया।

एकबार रामचन्द्र के राज्य में एक ब्राह्मण-बालक की अकालमृत्यु हो गयी। धर्मानुगामी राजा के राज्य में ऐसी दुर्घटनाओं की सम्भावना होती नहीं। इसलिए इसका राजा का कोई अज्ञात अपचार ही कारण माना गया। जनस्थान के प्रान्त में शम्बूक नामक एक शूद्र धूमपान करता हुआ तप कर रहा था। शूद्र का तप करना निषिद्ध है। राजा रामचन्द्र ने गोदावरी प्रान्त के उन जंगलों में जाकर ब्राह्मणशिशु के पुनरूज्जीवन के लिए शूद्र का संहार किया।

"रे हस्त, दक्षिण मृतस्य शिशोर्द्विजस्य  
जीवातवे विसृज शूद्रमुनौ कृपाणम्  
रामस्य गात्रमसि निर्भरगर्भखिन्न  
सीताविवासनपटोः करुणा कुतस्ते।"

वही दण्डका, जनस्थान, पंचवटी, गोदावरी आदि का पुनर्दर्शनावकाश राम को इस प्रसंग से मिला।

खड्गहत होते ही शम्बूक शापविमुक्त होकर एक दिव्यपुरुष बन गया। उसने रामचन्द्र को प्रणाम करके जनस्थानादि का निर्देश करके दिखाया। जिन स्थानों में राम ने सीता के साथ बनवासकाल में विचरण किया उनको अब सीता विरहित होकर देखने में उनका मन व्यथित हो गया।

"यत्र द्रुमा अपि मृगा अपि बान्धवा मे  
यानि प्रियासहचरश्चिर मध्यवात्सम्।  
एतानि तानि बहुकन्दरनिर्झराणि  
गोदावरी परिसरस्य गिरेस्तटानि॥"

जब जनस्थानवनदेवता वासन्ती ने रामचन्द्र से सीता संस्मरणकारी प्रसंग करने लगी तब वहीं तिरस्करिणीरूप में स्थिता सीता ने कहा—

"स एवार्यपुत्रः, तदेव पंचवटीवनम्, सैव-प्रियसखी वासन्ती, त एव विविध विस्रम्य साक्षिणो गोदावरीकाननोद्देशाः।"

